டாக்டர் நா. மகாலிங்கம்

ஆதிசங்கரர்



குமரகுருபரர்



அருணகிரியார்



# ஞானபரம்பரை

தொகுதி 10

வர்த்தமானன்

அருட்செல்வர்

டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள்

வழங்கும்

# ஞான பரம்பரை

அருளாளப் பெருமக்களின்

வாழ்வு - வாக்கு - பணி

பற்றிய நூல் தொகுப்பு

## தொகுதி பத்து

வர்த்தமானன் பதிப்பகம்

சென்னை - 17.

முதற் பதிப்பு : 2006
*(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)*

இரண்டாம் பதிப்பு : 2009
*(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)*

மூன்றாம் பதிப்பு : 2014
*(வர்த்தமானன் பதிப்பகம்)*

பத்து தொகுதிகளும் சேர்த்து
**விலை ரூ. 2500/-**

*வெளியீடு :*
வர்த்தமானன் பதிப்பகம்
21, இராமகிருஷ்ணா தெரு, சென்னை -17.

*அச்சிடல் :*
அருணா கிராபிக்ஸ், சென்னை -17. போன் : 24345058
ஈஸ்வரி ஆப்செட், சென்னை -5. போன் : 28480481, 42157817

# அருட்செல்வர் முன்னுரை

ஞானம் என்றால் என்ன?

மெய்யுணர்வினை – செம்பொருளைக் கட்டிக்காப்பது ஞானம். ஞாத்தல் என்றால் கட்டுதல். ஞாண் கட்டும் கயிறு என்று பொருள்படுவதைக் காணலாம்.

ஐம்புலன்களைக் கட்டி உள்ளத்தை ஓரிடத்தே நிறுத்துவது ஞானம்.

திருவள்ளுவர்,

*"சென்ற இடத்தால் செலவிடா தீது ஒரீஇ*
*நன்றின்பால் உய்ப்பது அறிவு"*

என்கிறார்.

புலன்களை அவை மேயும் பக்கமெல்லாம் அலையவிடாமல் தடுத்து, ஒரு நல்ல குறிக்கோளோடு பிணைப்பது அறிவு என்பது இத்திருக்குறளின் பொருள்.

ஆன்மிகவாதிகளின் குறிக்கோள் "பிரமத்தில் - பரம்பொருளில் லயிப்பது - ஒன்றுவது"; அறிவியல்வாதிகளின் குறிக்கோள் "ஒரு பௌதீகப் பொருளின் அல்லது நிகழ்வின் காரண காரியங்களை ஆராய்ந்து அவற்றை உறுதிசெய்து உலக நன்மைக்குப் பயன்படுத்துவது."

ஆன்மிகம்கூட அறிவியலின் ஒரு பகுதியே என்பார்கள். களங்கள் வேறானாலும் நோக்கம், சமுதாய நன்மையாகவே முடியவேண்டும்.

பாரதியார் மிக அழகாகக் கூறினார்:

*"ஊருக்கு உழைத்திடல் யோகம் - நலம்*
*ஓங்கிடுமாறு வருந்துதல் யாகம்*
*போருக்கு நின்றிடும்போதும் - உளம்*
*பொங்கல் இலாத அமைதி மெய்ஞ்ஞானம்."*

உள்ளுணர்வாகிய மெய்யுணர்வால் உலக ஈடேற்றத்தைப் பற்றி சிந்திப்பது ஞானம்.

அவ்வறிவால் காணப்படுவது செம்பொருள். ஆகையால், ஞானியருடைய உபதேச மொழிகளைச் செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் என்பர்.

பாரதியார் கூறும் மெய்ஞ்ஞானம் வாய்க்கவேண்டுமானால் ஒருவன் தன் புலன்கள்மீது முழு அதிகாரம் செலுத்த வல்லவனாக வேண்டும்.

கண்ணபிரான் போர்க்களத்தில் பார்த்தனுக்குக் கீதையைப் போதித்தான். போர் தொடங்க ஆயத்தமாய் அணிவகுத்திருந்த போது 18 அத்தியாயம் கொண்ட முழு நூலைப் போதிப்பது சாத்தியமா எனில், சாத்தியமே! சீடனோ புலன்களை வென்ற புண்ணியன். ஆசிரியனோ கடவுளின் அவதாரம். அருளாளர்களுக்குக் காலம் இடம் அவர் வசத்திற்கு உள்ளாகும். ஒரு நொடியில் மாணவன் உள்ளத்தில் எழுந்த கேள்வி களுக்கெல்லாம் விடையும் கிடைத்தது, விளக்கம் கிடைத்தது.

கல்லால மரத்தின்கீழ் மௌனத்திலேயே கைவிரல் காட்டிக் குறிப்பினால் விளங்கவைக்கும் உபதேசம் மாணவர்களுக்குக் கிடைத்தது. வள்ளற்பெருமான் தமக்கு ஒரு நொடிப்பொழுதிலே இறைவன் சாகாக்கலையை உணர்த்தினாரெனக் கூறுவார்.

ஆக, மெய்ஞ்ஞானிகள் ஐந்தவித்தவர் என்பதும் அருள் ஞான வித்தகர்கள் என்பதும் அவர்கள் காலத்தையும் இடத்தையும் கட்டியாள வல்லவர்கள் என்பதும் தம் அனுபவங்களைத் தம் மாணவப் பரம்பரை வாயிலாக இன்றுவரை உலகிற்கு வழங்கி வருகின்றனர் என்பதும் நாம் உணரலாம்.

இந்திய நாட்டில் அப்படி என்னதான் இருக்கிறது என்று கேட்டால், பாரதியார் கூறிய உரை நம் நினைவில் நிற்க வேண்டும்:

*பல்விதமாயின சாத்திரத்தின் மணம்*
*பாரெங்கும் வீசும் தமிழ்நாடு,*

*பன்னரும் உபநிட நூல் எங்கள் நூலே,*
*பார்மிசை ஏதொரு நூலிது போலே!*

*பூரண ஞானம் பொலிந்த நன்னாடு*
*புத்தர் பிரானருள் பொங்கிய நாடு.*
*பாரத நாடு பழம்பெரு நாடு.*
*பாடுவம் இஃதை எமக்கில்லை ஈடே*

என்று போற்றுகிறார்.

இன்றைய நிலை என்ன?

*புத்தம் புதிய கலைகள் - பஞ்ச*
*பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்*
*மெத்த வளருது மேற்கே*
*அந்த மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை*

என்பது ஓரளவு உண்மைதான். அறிவியல் மேற்கே தோன்றி வாழ்க்கை நிலை மெத்தவும் உயர்ந்துவருகிறது. எங்கும் தொழில்கள் வளர்கின்றன. செல்வம் கொழிக்கும் ஐரோப்பிய நாடுகளுக்கும் அமெரிக்காவிற்கும் ஆஸ்திரேலியாவுக்கும் நம் இளைஞர்கள் தங்கள் வாழ்க்கை முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு, 'விமானமே வீடுபேற்றுக்குரிய தவம்' என்று காத்துள்ளனர்.

எல்லாமிருந்தும் அங்கே வழிகாட்டுவாரில்லை! வாழ்வில் எல்லாப் போகங்களையும் அனுபவிக்க அங்கே வசதி இருக்கிறது. அந்த இன்பங்கள் நிறைவளிக்காமல் மக்கள் மன இறுக்கத்தால் அவதிப்படுகிறார்கள். அதிகார போதை ஒரு புறம். மித மிஞ்சிய போகத்தால் குடும்ப வாழ்க்கை சீர்குலைந்து போவது ஒருபுறம். அன்புப் பிணைப்பு அறவே மாறி, வெற்று முகமன் வார்த்தைகளாக அவற்றின் முகவரி அமைந்துவிட்டது.

இதனால்தான் மகான்களைத் தேடி இந்தியா நோக்கி வருகிறார்கள் வெளி நாட்டவர்கள். அப்படியானால் இந்துமதம் என்று சொல்லப்படுகிற இந்தியப் பண்பாட்டினைக் காலங்காலமாகக் கட்டிக் காத்து வருகிறவர்கள் யார்? அதுதான் நமது ஞான பரம்பரை. 'ஞானம் என்ற சொல்லுக்கே கட்டிக்காத்தல் என்றுதான் பொருள்' என்று முன்பு சொன்னோம்.

திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரைச் சமய குரவர் என்கிறோம். குரவர் என்றால் முதல்நிலையில் பெற்றோர்கள் என்று பொருள்படும். இரு முதுகுரவர் என்றால் தாய் தந்தையர் என்று பொருள்.

அடுத்த நிலையில் ஆசிரியன் குரவனாகிறான். குரவன்தான் குரு. பெரியவன் என்று பொருள். அருமையாகக் கிடைப்பதுதான் பெருமை. ஆகையால் அருமையுடையன் ஆசிரியன் ஆகிறான். ஆசிரியன் = குரு.

இந்தியப் பண்பாடு குருவைப் போற்றுவது

*தெளிவு குருவின் திருமேனி காண்டல்*
*தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்*
*தெளிவு குருவின் திருநாமம் செப்பல்*
*தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே*

என்று திருமந்திரம் கூறுகிறது.

தெளிவு என்பது அறிவு - தெள்ளிய அறிவு - குற்றங்களைந்து இதுவென்று அறிந்து குணம் கொள்ளும் அறிவு - அதாவது ஞானம். ஆசிரியன் ஞானத்தைத் தருகிறான். எழுத்தறிவித்தவன் இறைவன் என்று கூறுவார்கள்.

*கல்வி கொடுத்தவன் வித்தியா குரு*
*தீக்கை அளிப்பவன் தீட்சா குரு*
*ஞானம் அளிப்பவன் ஞான குரு*

தீட்சா குரு தனிப்பட்டவனுக்கு ஞானம் அளிப்பவன். ஞான குருமார் சந்ததிகளுக்கே ஞானம் அளிப்பவர்கள். அவர்கள் உலக குரு என்றே சொல்லப்படுபவர்கள். புத்த பெருமான், திருஞானசம்பந்தர், ஏசு பெருமான், நபிகள் நாயகம், வள்ளற் பெருமான் முதலியயாவரும் உலக குருக்கள்.

மெய்கண்டார் முதலியவர்களைச் சந்தான குரவர் என்கிறோம். சந்தானம் என்பது தொடர்ச்சி. நமது மரபு தொடர்வது பிள்ளைகளால்தானே! ஆகையால், பிள்ளைகளுக்குச் சந்தானம் என்று பெயர்.

சந்தான ஆசாரியார்கள் சைவ சமய குரவர்களின் கருத்துக்களைத் தந்தை > மகன் என்னும் உறவுவழியே பரப்புவதை மேற்கொண்டார்கள். ஆழ்வார்கள் கூறிய கருத்துக்களை ஆச்சாரியர்கள் மக்களிடையே பரப்பினார்கள்.

இந்த ஞானத்தை இறையருளால் பெற்ற சான்றோர்கள் தங்கள் மாணவர்களுக்குச் சொன்னார்கள். அவர்கள் ஞானத்தைப் பெறக் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறைகளைப் பரம்பரையில் காப்பாற்றிவந்தார்கள். இந்தப் பரம்பரையில் வந்தவர்களில் சிலர் மடங்களை உருவாக்கினார்கள். வைணவர்களும், சைவர்களும் இவர்களில் அடங்குவார்கள்; நூல்களை இயற்றினார்கள். போதனைகள் செய்தார்கள். சமுதாயத் தொண்டுகள் செய்தார்கள். சிலர் இயக்கங்களையே உருவாக்கினார்கள். குரு நானக் சீக்கிய இயக்கம் தோன்றக் காரணமானார். குரு கோவிந்த சிங் முதலாக இந்த இயக்கம் ஒரு சமயமாகவே உருவாகிவிட்டது. வள்ளற்பெருமான் அவ்வாறு ஓர் இயக்கத்தை உருவாக்கியவர்தான்.

பகவான் ரமணர் முதலியவர்களின் கொள்கை உலகெங்கும் பரவினாலும் மடங்களாக - இயக்கங்களாக மாறாமலேயே ஆன்மிக நாட்டமுடையவர்களுக்கு வழிகாட்டி வருகின்றது.

எப்படியிருந்த போதிலும் பாரதப் பெரும் பண்பாடு என்னும் ஜீவ நதியில் தோய்ந்து நீராடித் திளைத்து மகிழும் துறைகளாக இந்த ஞான பரம்பரை விளங்குகிறது.

வள்ளற் பெருமான் 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ' என்று தம்மை அந்த ஞான பரம்பரையில் வந்தவராகக் காட்டிக்கொள்வதைக் காண்கின்றோம்.

பரம்பரையில் பெறுவதைத்தான் நாம் சிறப்பாக ஞானம் என்று கொள்கிறோம்.

பாரதியார் சொல்கிறார் : 'ஒரு தேசத்தின் நாகரிகத்துக்கு அந்தத் தேசத்தின் இலக்கியமே மேலான அடையாளம்.'

இந்திய நாட்டின் மிகப் பெரிய அறிவுக் கருவூலமாகப் பெரியோர்கள் செய்த இலக்கியங்கள் கொட்டிக் கிடக்கின்றன. வடமொழியிலும் தமிழிலும்தான் ஆயிரக்கணக்கான நூல்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வற்றாத அறிவூற்றாக விளங்கிவருகின்றன.

வேதம், உபநிடதம், அவைகளிலிருந்து பிறந்த அறிவாராய்ச்சி நூல்கள், மனித வாழ்க்கையின் படப்பிடிப்புக்களாகிய இலக்கியங்கள், தேவாரம், திவ்வியப்பிரபந்தம் முதலாகிய அருள் நூல்கள், தத்துவ சாத்திர நூல்கள், புராணங்கள், இதிகாசங்கள் என இந்நூல்கள் பல வகைப்படுகின்றன. பெரியவர்களின் வாக்குகள் அல்லாமல் அவர்கள் வாழ்க்கையும் இந்த இலக்கியங்களில் ஒரு பகுதியே. அவை பெரியபுராணம், பக்த விஜயம் முதலிய நூல்களாக அமைகின்றன.

இந்தியத் தத்துவ ஞானம் வேதங்களில் வேரூன்றி, உபநிடதமென்னும் மரமாய் வளர்ந்து, பல கிளைகளைப் பரப்பி, அரிய கனிகளை வழங்கிவந்துள்ளது. இந்த மரம் இன்னும் வேர்களையும் விழுதுகளையும் நெடுகப் பரப்பி இந்த நிலத்தின் பண்பாட்டைக் காப்பாற்றிவரும் என்பது உறுதி.

விவேகானந்தர் சிகாகோ மாநாட்டில் முழங்கினார்: ''ஒரு ஹிந்து நடந்து செல்கையில் அவன் தனியாக நடந்து செல்வதில்லை. அவனுக்குப் பின்னால் ஐந்தாயிரம் ஆண்டுக் கலாசாரம் அணிவகுத்துச் செல்கிறது'' என்றார்.

மாக்ஸ்முல்லர் கூறியதை இங்கு நாம் நினைவுகூர்வது நல்லது.

'மறுபிறப்பு என்று ஒன்று உண்டென்றால், நான் இந்தியாவில்தான் பிறக்க ஆசைப்படுகிறேன். அதுவும் ஒரு புழுவாகப் பிறந்தால் கூடப் போதும்.' தம் நண்பர்களிடம் இவ்வாறு எழுதிவைக்குமாறு அவர் கூறிச் சென்றார்.

இந்து மதம், மாணிக்கவாசகர் சொல்வதைப் போல், ''முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்; பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியது;'' என்றுமிருப்பது. அதனுடைய உலகளாவிய பொருள் தன்மையால் யாவரையும் தன் வசமாக்கும் இயல்புடையது. சத்தியம் எந்தத் திசையிலிருந்து வந்தாலும் அதை வரவேற்கத் தன் கதவுகளை அகலத்திறந்து வைத்துள்ளது. ஆகவே, நம் ஞானிகள் இந்தியாவுக்கு மட்டுமல்ல. உலகத்துக்கே சொந்தமானவர்கள்.

''இந்து தேசத்திலுள்ள ஜீவனை யுகயுகாந்தரங்களாக அழியாதபடி பாதுகாத்து வருவோர் அந்த யோகிகளே. கடூரமான கலியில் உலகம் தலைகீழாகக் கவிழ்ந்துபோகும் சமயத்தில்கூட இந்துஸ்தானம் அழியாமல் தானும் பிழைத்து மற்றவர்களையும் காக்கக்கூடிய ஜீவசக்தி இந்நாட்டிற்கு இருப்பது அந்த யோகிகளின் தபோபலத்தாலன்றி வேறில்லை.''

— குள்ளச்சாமியார் என்னும் சித்தர் வாக்காக இவ்வாறு சொல்லிக் கொண்டேவரும் பாரதியார், ''மனவலிமையும் பொருள் வலிமையுமற்ற இந்திய அரசர்களாலோ, வேதமந்திரங்களைப் பொருள் தெரியாமல் திரும்பத் திரும்பத் சொல்லிக்கொண்டிருக்கும் பிராமணர்களாலோ, கொடைக்குணம் மறந்த வணிகர்களாலோ, மூடத்தன்மை மிக்க மற்றவர்களாலோ இந்தியாவுக்கு அமரத்தன்மை கிடைக்கவில்லை'' என்கிறார்.

இந்து தர்மத்தின் பெருமையைச் சொல்ல வந்த பாரதியார்,

''எல்லா உயிர்களிலும் நானே யிருக்கிறேன் என்றுரைத்தான் கண்ணபெருமான். எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறையை இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் ஆம் இந்தியா உலகிற்களிக்கும். வாழ்க'' என்று கூறினார்.

அமர கவியின் கண்களில் நமது ஞானபரம்பரை ஒன்றே சர்வ மத சமரசத்தைப் பேணிப் பாதுகாக்க வல்லது; அது ஒன்றே உலகிற்குத் தலைமை தாங்கி வழிகாட்டி உலகையே வாழ்விக்க வல்லது என்ற உண்மை தெரிகிறது.

அவரது வாக்குப் பொய்க்கவில்லை. பிற நாடுகளுக்கு நம் பெரியோர்கள் சென்றார்கள். சுவாமி விவேகானந்தர், சுவாமி இராமதீர்த்தர், பரஹம்ஸ யோகானந்த கிரி, இன்று மகேஷ் யோகி, முக்தானந்தர், பிரபுபாத பக்திவேதாந்த மகராஜ், சுவாமி சச்சிதானந்தர், பகவான் ரஜனீஷ், ரவிசங்கர், சின்மயாநந்தர், வேதாத்திரி மஹரிஷி ... என்று எத்தனை எத்தனை பேர்!

இவர்கள் சென்று ஆன்மிக ஒளியைப் பரப்பினார்கள். இங்கிருந்தவாறே தம் கதிரொளி பாய்ச்சியவர்களில் ரமண மகரிஷி, அரவிந்தர், சிவானந்தர், சத்திய சாயி இவர்களைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். எண்ணற்ற வெளிநாட்டவர்கள் தங்கள் ஒளியிழந்து, வாழ்க்கைக் களையிழந்து, மன இறுக்கத்தின் பிடியிலிருந்து விடுபட வேண்டுமானால் இந்தியாவே கதி என்று இங்கு வருகிறார்கள்.

சுவாமி சச்சிதானந்தர் இரண்டு லட்சத்திற்கு மேலான அமெரிக்கர்களின் வாழ்க்கைமுறையைச் செம்மைப்படுத்தியிருக்கிறார்கள். வெளிநாட்டு உபதேசியார்கள் பொதுவாகக் கடைப்பிடிக்கும் மதமாற்ற வேலையை இவர்கள் செய்வதில்லை. ஒழுக்கம், இறையுண்மை, சமுதாயத் தொண்டுணர்வு என்பனவற்றில் மட்டும் அவர்களுடைய மனம் செல்லும் வண்ணம் மடை மாற்றினார்கள்.

ஞான பரம்பரையைக் காத்துவந்த நல்லாசிரியர்கள் வாழ்ந்த காலத்தைப் பலவாறு ஆராய்ந்து நிர்ணயித்துள்ளார்கள். புத்தர் முதல் சேக்கிழார்வரை இந்த நிலையே நீடிக்கிறது. பெரியோர்களின் வாழ்க்கை வரலாறு காலநெறிப்படி முறையாக எழுதப்படாத காரணமென்ன? இதற்கு முக்கியக் காரணம் ஒன்றைச் சொல்லலாம். மனிதர்கள் வாழ்வைக் காட்டிலும் மனிதர்களின் வாக்கு அல்லது அவர்கள் கடைப்பிடித்த நெறிகளே மேலானவையாக நம் முன்னோர்க்குத் தோன்றியிருக்க வேண்டும். புத்தருடைய வாழ்வைவிட அவர் போதனைகளே நாம் நினைவில் வைக்க வேண்டியவை. இராமானுஜர் செய்த அற்புதங்களைவிட அவர் தொண்டே நாம் போற்ற வேண்டியது. எனினும், பெரும்பாலும் உலகத்தின் ஏனைய பகுதிகளில் பெரியோர்களின் வாழ்க்கைகளைக் கால முறைப்படி நன்கு கணித்துப் பதிவு செய்திருக்கிறார்கள். நாம் அதுபோல நம் பெரியோர்களின் வரலாற்றைச் செம்மையாகப் பதிவு செய்து வைப்பது இன்றைய நிலையில் கட்டாயமானதுதான்.

இவர்களுடைய கால வரலாற்றின் பின்னணியில் நமது இதிகாச புராண வரலாறுகளின் காலங்கள் மறு ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இந்த மறு ஆய்வு அடிப்படையில் சங்க காலச் சான்றோர்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் காலங்களை வரையறுத்து நிறுவும் முயற்சியையும் நாம் இப்போது செய்துகொண்டுவருகிறோம் என்பதைத் தெரியப்படுத்திக்கொள்கிறேன்.

நம் பெரியோர்கள் வானத்தில் சப்தரிஷி நட்சத்திரங்களின் இயக்கத்தைக் கவனித்து, வைவஸ்தவ மனுகாலத்திலிருந்து கணக்கிட்டுவந்திருக்கிறார்கள்.

சப்தரிஷி மண்டலத்தின் இயக்கத்தை வைத்தே சப்தரிஷி சகாப்தம் என்பது வைவஸ்தவ மனுவின் காலத்தில் தொடங்கப்பட்டது. அது கி.மு. 15261 ஆகும்.

இதனடிப்படையில் வழக்கத்தில் உள்ள யுகக்கணக்கு முறையில் திருத்தம் காண முடிந்தது. இப்போது நடைபெறுவதாக நாம் சொல்லும் கலியுகம் என்றோ முடிந்துவிட்டது. கிருதயுகம் முடிந்து, உண்மையில் இப்போது திரேதாயுகம்தான் நடைபெறுகிறது.

சென்னையில் நாம் அமைத்துள்ள அனைத்துலகத் தொன்மை வரலாற்று ஆய்வுக் கழகத்தின்மூலம் இந்த ஆய்வுகள் செய்யப் பட்டுவருகின்றன. அதன்மூலம் பழைய ஆய்வு முடிவுகள் திருத்தம் பெற்றன.

ஆதிசங்கரருடைய காலம் கி.மு. 509 என்றும், ஒரு சதுர்யுகம் 12160 ஆண்டுகள் கொண்டது என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

ஆழ்வார்களில் ஐந்து பேர் கிருஷ்ண பரமாத்மாவுக்கு முந்தியவர் என்று தெரிகிறது. சப்தரிஷி மண்டலம் (Great Bear) பற்றி இதுவரை வான நூலுள் விரிவான ஆய்வு செய்யப்படவில்லை. நாம் இப்போது அந்த ஆய்வுக்கு ஏற்பாடு செய்துள்ளோம். கூடிய விரைவில் சரியான கணக்குகள் நிர்ணயம் செய்யப்படும்.

பொள்ளாச்சி நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி வாயிலாக நூல் வெளியீட்டுப் பணி மிகச் சிறப்பாக நடந்துவருகிறது.

மாணவர்களுக்கு நமது இந்தியப் பண்பாடு நாகரிகம் குறித்த பாடத் திட்டத்தைப் பத்து ஆண்டுகளுக்குமுன் நடைமுறைப்படுத்தி, அதற்கான சிறுசிறு நூல்களைத் தக்கவர்களைக் கொண்டு அக்கல்லூரி வெளியிட்டது. அப்புத்தகங்கள் வேறு சில கல்லூரிகளுக்கு முன் மாதிரியாக அமைந்தன.

பழனியப்பா பிரதர்ஸ் நிறுவனத்தினர் நம்முடைய தேசியத் தலைவர்கள், விடுதலைப் போராட்ட வீரர்கள், பெரியோர்கள் வரலாறுகளைச் சிறுசிறு நூல்களாக வெளியிட்டார்கள்.

ஈரோடு திரு. ஸ்டாலின் குணசேகரன் அவர்கள் சுதந்திரப் போராட்ட வரலாற்று வீரர்களின் சரித்திரத்தை இரண்டு தொகுதிகளாக வெளியிட்டார்கள். அதுபோல் நமது இந்திய ஞான பரம்பரையைச் சேர்ந்த அருளாளர்கள் வரலாற்றைச் சிறு நூல்களாகக் கொண்டு வரவேண்டுமென்ற எனது விருப்பத்தைத் தமிழ்ச் சான்றோரும்

பேரறிஞருமாகிய டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களிடம் கூறி, நிறைவேற்றித் தருமாறு வேண்டினேன்.

என்னுடைய வேண்டுகோளை ஏற்று, மூதறிஞர் ம.ரா.போ. குருசாமி அவர்கள் நமது ஞான பரம்பரையைச் சேர்ந்த 30 அருளாளர்கள் - காரைக்காலம்மையார் முதல் சித்பவானந்தர் வரை - வாழ்க்கை பற்றியும் அவர்களின் வாக்குகள் பற்றியும் பல நல்லறிஞர்களைக் கொண்டு எழுதுவித்து, அரிய முறையில் மேற்பார்த்துத் தொகுத்து நூல்கள் வெளிவரச் சிறந்த முறையில் உதவியிருக்கிறார்கள்.

டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். நூல்களை அரிய முறையில் எழுதியுதவிய அறிஞர் பெருமக்களைப் பாராட்டுகிறேன்.

இந்த வரலாறுகளை ஐந்து தொகுதிகளாக* அழகிய முறையில் முதல் பதிப்பாக வெளியிட்ட பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், பதிப்புத்துறையில் உதவிசெய்த ஏனையோர்களுக்கும் எனது நன்றி.

முதல் பதிப்பு வந்து சில மாதங்களிலேயே பிரதிகள் தீர்ந்து விட்டன. இப்போது இரண்டாம் பதிப்பு எனது தலைமையில் இயங்கும் இராமானந்த அடிகளார் அறக்கட்டளை ஆதரவாலும் அந்த அறக்கட்டளையின் மூலம் நடைபெறும் குமரகுரு பொறியியல் கல்லூரியின் உதவியாலும் வெளிவருகிறது.

நூல்களை அற்புதமாக அச்சிட்டு முடித்த ருக்மணி அச்சக மேலாளர் திரு. பாலசண்முகம் அவர்களுக்கும், வேண்டிய படங்களைப் பயன்படுத்திக்கொள்ள உதவிய பெரியோர் களுக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

தமிழ் உலகமும், இளைஞர் சமுதாயமும் இதனை வரவேற்றுப் பயனடைய வேண்டும் என்பது என் பேரவா.

நா. மகாலிங்கம்

*முதற் பதிப்பிற்கானது

# பதிப்புரை

முதற் பதிப்பிற்கானது

மாணவர்களின் முழுமையான ஆளுமை வளர்ச்சிக்கு வெறும் ஏட்டுக்கல்விமட்டும் போதாது. அதனுடன் விழுப்பொருள் உணர்வும் (sense for higher values) மாணவர்களிடையே பதிந்திட வேண்டும் என்பது எங்கள் நிர்வாகத்தின் லட்சியமாகும். இந்தக் குறிக்கோளை முன் நிறுத்தி அறவியல் மற்றும் சமயம் முதலான செவ்வியல் கருத்துக்களை மாணவர்களிடையே பரப்பி வருகிறோம்.

அந்தப் பணியின் வளர்நிலையில் தமிழ் ஞானிகள் முப்பதுபேர்பற்றி நூல்கள் வெளியிட வேண்டும் என்று அருட்செல்வரவர்கள் விரும்பினார்கள். எங்களை எல்லா வகையிலும் வழிநடத்துகின்ற அருட்செல்வரவர்களின் விருப் பத்தை முழுமனத்தோடு ஏற்று, இந்த நூல்வரிசையை வெளியிடுவதில் எம் அறக்கட்டளை பெருமை கொள்கிறது.

இந்தப் பணியில் உறுதுணையாக இருந்து பணியாற்றிய பேராசிரியர் ம.ரா.போ. குருசாமிக்கும், அவருக்கு உதவியாகப் பிழைதிருத்தம் முதலான பணிகளை உவப்போடு செய்த பேராசிரியர் இருசுப் பிள்ளை, புலவர்மணியன், பேராசிரியர் தரணி பாஸ்கர், முனைவர் மனோன்மணி ஆகியோர்க்கும் எம் நன்றி உரியது.

வெளியிட்டுள்ள நூல்களை இளைஞர் உலகம் ஏற்றுப் போற்ற வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறோம்.

இராமானந்த அடிகளார் அறக்கட்டளை
கோயமுத்தூர்

## நுழையுமுன் ஒரு சொல்

நரை திரை இன்றி இளமை நலத்தோடு விளங்கிய முதியவர் பிசிராந்தையார்; அவர் தம் இளமைத் தோற்றத்துக்குப் பல காரணம் சொல்லியுள்ளார். அவற்றுள் ஒன்று: 'சான்றோர் பலர் யான் வாழும் ஊரே!' அதாவது, 'நான் வாழும் ஊரில் சான்றோர்கள் பலர் வாழ்கின்றனர்; அதனால் நரை திரை மூப்புத் தோன்றாமல் நான் வாழ்கிறேன்' என்கிறார். வாழும் முறையாலும் வழங்கும் மொழிகளாலும் மனநலம் காத்தவர்கள் அந்தச் சான்றோர்கள். அவர்களுடைய வாழ்க்கையைப் பார்த்தும் வாசகங்களைக் கேட்டும் பிசிர் என்ற ஊரில் இருந்தவர்கள் மனவளம் பெற்றிருந்தார்கள். மனவளம் பெற்றமையால் வாழ்க்கையில் நிறைவு இருந்தது. பொறாமை, பொய் போன்ற தீமைகள் சாராமல் அன்பு, அருள், அறம் போன்ற நல்லவற்றில் நாட்டம் கொண்டவர்களுக்கு முதுமை நோய் வாராது. இது பெரியோர் அனுபவ மொழி.

அத்தகைய சான்றோர்களின் வாக்கு, வாழ்வு, வழிகளைத் தெரிந்து போற்றினால், சமூக வாழ்வு சிறக்கும்; குறிப்பாக, இளைஞர்கள் நலம் பெற்று, நாட்டை நன்கு வளர்ப்பார்கள்.

இந்தக் குறிக்கோளை நெஞ்சில் நிறுத்தித் தமிழகத்துச் சான்றோர் சிலரைப் பற்றி நூல்கள் வெளியிடும் முயற்சியில் உருவானது இது.

நல்லிளைஞர் மனவளம் பெற்று - அறிவு, அறம், அன்பு, பண்பாடு ஆகியவற்றைப் பேணி, நாட்டுக்கு நலம் செய்வர் என்ற நம்பிக்கையோடு அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள் இந்த நூல் வரிசை பற்றித் திட்ட மிட்டார். அவர் தந்த திட்டத்தின் பயன் மக்களைச் சென்று அடைய நூல்களை வெளியிடும் பொறுப்பைப் பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி* நிர்வாகம் ஏற்றுக் கொண்டது.

பயன் பெறுக! பயன் பெறுக!

ம.ரா.போ. குருசாமி
ஒருங்கிணைப்பாளர்

---

*முதற் பதிப்பிற்கான செய்தி

சங்கரரின் அறிவுக் கூர்மையும், உடையவரின் இதயக் கனிவும் பாரதப் பண்பாட்டு வரலாற்றின் இரு கண்கள். அறிவு வாதத்துக்கு இன்னொருவர் பிறந்தால்தான் இரண்டாம் சங்கராச்சாரியர் என அடையாளப்படுத்த முடியும், ஆதிசங்கரரைப் பக்தியரங்கிலும் காண முடியும்.

ஆதி சங்கரரையும், அவர் நூல் வடிவிலும் உபதேச வடிவிலும் அருளிய கொடை வளத்தையும் விளக்கி நூல் உதவியவர், பல கலை வினோதராகிய திரு. எஸ். வைத்தியநாத கிருஷ்ணன். தொழிலால் வழக்கறிஞர்; தொண்டால் கலைச் சேவகர்; பல கலையும் பல மொழியும் அறிந்தவர். தம் அறிவைப் பயன்படுத்திப் பண்பட்டவர் திரு. எஸ். வைத்தியநாத கிருஷ்ணன்.

'வாக்குக்கு அருணகிரி' என்பது அருணகிரி நாதரின் செல்வாக்குக்குச் சான்றோர் தந்த இலக்கணச் சூத்திரம். தமிழால் வைதாரையும் வாழ வைப்பான் என்று முருகப் பெருமானை வருணித்த வகையால் தமிழ்ப் பற்றுக்கு ஒரு புதிய பரிமாணத்தை அருளியவர் அருணகிரி நாதர். 'எந்தை அருணகிரி' எனத் தாயுமானவரால் போற்றப்பட்ட அருட்கவிஞர் - முருகப் பெருமானை நெஞ்சில் நிறுத்தி வைக்கிற ஆற்றலுடையது அவருடைய இசையும் சந்தமும் இயைந்து கொஞ்சும் பாடல்கள். பக்திக்குத் திருப்புகழும் ஆன்ம அனுபவத்துக்குக் கந்தரனுபூதியும் களஞ்சியங்களாகும்.

அருணகிரிப் பெருமானின் வாழ்வும் பணியும் பற்றி நூல் எழுதி வழங்கியுள்ள முனைவர் கு.வெ. பாலசுப்பிரமணியன் தமிழ் ஆய்வரங்கில் முத்திரை பதித்த பேராசிரியர். ஆசிரியத் திறத்தை வகுப்பிலும் எழுத்திலும் நிலைநாட்டிய இவர், தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் இலக்கியத்துறைத் தலைவராகவும், அப்பல்கலைக்கழகப் பதிவாளராகவும் பணியாற்றியவர்; பணியிலிருந்து ஓய்வு பெற்ற பின்னும் சிறப்பு நிலை ஆய்வுப் பேராசிரியராகத் தொண்டு செய்து வருகிறார்.

தென்பாண்டி நாட்டில் குழந்தைப் பருவத்திலேயே பழுத்த ஞானிகளாய்த் தமிழுக்கு அணி செய்த அருளாளர்கள் இருவர். ஒருவர் நம்மாழ்வார்; அவர் தோன்றிய குருகூரை (ஆழ்வார் திருநகரி) அடுத்துள்ள ஸ்ரீவைகுண்டத்தின் கைலாயபுரத்தில் தோன்றிய குமரகுருபரர் மற்றொருவர். பிறந்ததிலிருந்து ஐந்தாம் வயது வரை பேசாமலிருந்த குமரகுருபரர் ஐந்தாம் வயதில் முதன்முதலாகப் பேசியது கந்தர் கலிவெண்பாவாக அமைந்தது; இந்த அற்புதம் விளைந்தது திருச்செந்தூர் ஆண்டவன் சன்னிதியிலே. அந்தப் பாடலிலே தமக்குப் பழுத்த தமிழ்ப் புலமை பாலித்திட வேண்டுமென வரம் கேட்டார்; கிடைத்து விட்டது. அவருடைய சதுரப்பாட்டை விளக்குவதற்காகவே அவரைச் சிங்க வாகனராகக் காட்டினர் முன்னோர்.

குமரகுருபரரிடம் கல்லூரிப் பருவத்திலேயே மனம் திறை கொடுத்த பேராசிரியர் முனைவர் இரா. மோகன், குமரகுருபரரைப் பற்றி அரிய நூலை உருவாக்கி உதவினார். தமிழ் மொழியின் மூலத்தானம் எனத் தக்க மதுரையார் இவர்; மதுரைக் காமராசர் பல்கலைக்கழகப் பேராசிரியர். தென் தமிழகத்தில் இவர் பேசாத மேடை இல்லை; பேச்சிற் போலவே எழுத்திலும் வல்லவர் டாக்டர் மோகன்; பன்னூலாசிரியர்; மு.வ.வின் செல்லப் பிள்ளை.



## தொகுதி பத்து

### ஆதி சங்கரர்

திரு எஸ்.வைத்தியநாத கிருஷ்ணன்

### அருணகிரியார்

முனைவர் கு.வெ. பாலசுப்பிரம்மணியன்

### குமரகுருபரர்

முனைவர் இரா.மோகன்

# ஆதி சங்கரர்

## பொருளடக்கம்

# ஆதி சங்கரர்

## 1. நூன்முகம்

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்திலிருந்தே நம் நாடு நாகரிகத்தின் கலங்கரை விளக்கமாய்த் திகழ்ந்து வந்திருக்கிறது. பல துறைகளிலும் சிறந்த சான்றோர்கள் வாழ்ந்து நாட்டிற்கும், அதன் கலாசாரத்திற்கும் சிறப்புச் சேர்த்திருக்கிறார்கள். வேதங்களும் உபநிடதங்களும் இன்றளவும் நிலையாக நின்று நமது பண்பாட்டைப் பறைசாற்றி வருகின்றன. இதை மனத்தில் கொண்டு மகாகவி பாரதியார்

" பன்னரும் உபநிட நூலெங்கள் நூலே
பார்மிசை யேதொரு நூலிது போலே
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
மாரத வீரர் மலிந்தநன் னாடு
மாமுனி வோர்பலர் வாழ்ந்தபொன் னாடு
நாரத கானம் நலந்திகழ் நாடு
நல்லன யாவையும் நாடுறு நாடு
பாரத நாடு பழம்பெரும் நாடே
பாடுவம் இஃதை எமக்கிலை ஈடே "

என்று பாடினார்.

ஒவ்வொரு துறையிலும் பல மாமேதைகள் இருந்திருக்கிறார்கள். மனு, மாந்தாதா, சிபி, தசரதர், ஜனகர், அசோகர், கனிஷ்கர், சேர, சோழ, பாண்டிய, பல்லவ மன்னர்கள், காளிதாஸன், பவபூதி, போஜ மன்னன் முதலிய கவிகள், இளங்கோவடிகள், திருவள்ளுவர், கம்பன் போன்ற புலவர்கள், வராஹமிஹிரர் முதலிய வான சாஸ்த்ர விற்பன்னர்கள், பரதர், இளங்கோவடிகள்,

சாரங்கதேவர் முதலிய இசைத்துறை வல்லுநர்கள், சங்கரர், ராமானுஜர், மத்வர் முதலிய ஆசார்யர்கள், ரவிவர்மா முதலிய சிறந்த ஓவியர்கள், சிற்பிகள் என்று இந்த வரிசை நீண்டு கொண்டே போகும். ஒவ்வொருவரும் தமது துறையில் சிறந்தவராவர். அவர்கள் நமக்கு விட்டுச்சென்ற செல்வங்கள் என்றும் அழியாதவை.

கால வெள்ளத்தின் வேகம் கலாசாரக் குன்றுகளையும் சரித்திரச் சான்றுகளையும் வரலாற்றுச் சின்னங்களையும் அடித்துச் செல்லும் தன்மையுடையது. இந்த வெள்ளத்தின் அரிப்பைச் சமாளித்து இன்றும் நம்மிடையே எஞ்சி நிற்கும் பண்டைய கலாசாரங்களும், நூல்களும் கலைகளும் நமக்குக் கிடைத்த விலைமதிப்பற்ற செல்வங்களாகும்.

இறையன்பு குன்றி, பொருளாசை பெருகும்பொழுது, சுயநலம் மேலிட்டு, பொதுநலம் மிகவும் பாதிக்கப்படும். சமுதாயத்தில் பகை மூண்டு நிம்மதி குலையும்.

இந்த நியதிக்கேற்ப நம் நாட்டில் மதத்தின் பெயரால் பலவிதமான விரும்பத்தகாத நிகழ்வுகள் ஏற்பட்டுச் சமுதாயம் சீர்கேடடைந்தது. மனவமைதிக்காக ஏற்பட்ட சடங்குகளும் வழிபாடுகளும் மக்களை அச்சுறுத்தி வாட்டி வதைப்பவைகளாயின. வேதங்கள், ஆகமங்கள் முதலியவற்றில் கூறப்பட்ட வழிபாட்டு முறைகள் பணம் பறிக்கும் சாதனங்களாக மாறின. தெய்வ வழிபாட்டு முறைகளும் குரூரமாக ஆக்கப்பட்டன. தெய்வத்திற்குக் கோர உருவம் கொடுத்து, அதற்கு மண்டையோட்டு மாலைகள் சூட்டி, பிராணிகளைப் பலி கொடுத்து, இறைச்சிகள் முதலியவற்றைப் படைத்துக் கொடூரமான முறையில் வழிபடலாயினர்.

வேதங்களில் கூறியவற்றைத் திரித்துக் கூறி மக்களை மிகுந்த துன்பத்திற்காளாக்கினார்கள். இதனால் ஜனங்கள் இந்து மதத்திலும், வேதம் கூறிய நெறியிலும் நம்பிக்கை இழந்து புத்த, சமண மதங்களைத் தழுவினர். நாடு மிகவும் சீர்கேடடைந்தது. நலிவடைந்த இந்தச் சமுதாயத்தில் அறிவழிந்து, தரங்கெட்டுப் பாமரராய் விலங்குகளாய் அலமந்து நின்ற மக்களைச் 'செல்வம், குடிமையிலுயர்வு, கல்வி ஞானமும் கூடியோங்கிப் படிமிசை தலைமையெய்தும்' படி செய்த பெருமகன் ஆதிசங்கரராவர்.

அவர் வாழ்ந்த காலம் முப்பத்திரண்டு ஆண்டுகளேயாகும். அக்குறுகிய காலத்தில் குமரிமுதல் இமயம் வரை கால்நடையாகச் சென்று பிற மதத்தவர்களை வாதத்தில் வென்று, இந்து மதத்தின்

மேன்மையை எல்லோரும் உணரும்படி செய்து, மக்களை வேத நெறிக்குத் திருப்பி அழைத்துவந்த பெருமை சங்கரரையே சாரும். அவர் இயற்றிய நூல்கள், ஏற்படுத்திய வழிபாட்டு முறைகள் இன்றளவும் நிலைநின்று எல்லோராலும் போற்றப்படுகின்றன. அவர் அஹிம்சைத் தத்துவத்தை உலகிற்குப் போதித்த தலைசிறந்த ஆசான். அவரது வாழ்க்கை வரலாறும், அவர் இயற்றிய நூல்களும், அவரது உபதேசங்களும் இன்றளவும் நமக்குச் சிறந்த வழிகாட்டிகளாக இருந்துவருகின்றன. அவரது வாழ்க்கை நெறியையும் உபதேசங்களின் மேன்மையையும் அனைவரும் புரிந்துகொள்ளும்படிச் செய்வதே இந்நூலின் நோக்கமாகும்.



# 2. சங்கரரின் வரலாறு

சங்கரர் பிறந்த தேதியைப் பற்றியும், அவர் வாழ்ந்த காலத்தைப் பற்றியும் மாறுபட்ட கருத்துக்கள் உள்ளன. அவர் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு (கி.மு. 545) தோன்றினார் என்று சில ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். வேறு சிலர் அவரது காலம் கி.பி. எட்டாவது நூற்றாண்டு என்று கருதுகின்றனர். சங்கரரது நூல்களில், அவரைப் பற்றியோ, அவரது குடும்பச் சூழ்நிலையைப் பற்றியோ அவரது ஆசான்களைப் பற்றியோ எந்தவிதமான குறிப்புகளோ, தகவல்களோ இல்லை. அவர் பிறந்த தேதி, வாழ்ந்த காலம் என்ன என்று ஆராய்வதைவிட அவர் தமது வாழ்வில் என்ன சாதனைகள் புரிந்தார், அவர் செய்த நல்லுபதேசங்கள் யாவை என்பதை அறிய விழைவது பயனுள்ளதாக இருக்கும்.

சங்கரருடைய வரலாற்றைப் பல சான்றோர்கள் எழுதியிருக்கிறார்கள். ஆனந்தீய சங்கர விஜயம், சித்விலாசீய சங்கர விஜயம், கேரளீய சங்கர விஜயம், வியாஸாசலீய சங்கர விஜயம், சங்கராப்₄யுத₃யம், சங்கரமந்தா₃ரஸௌரப₄ம், கு₃ருவம்ச காவ்யம், கு₃ருரத்னமாலாஸ்தவம் போன்ற பல நூல்கள் சங்கரரின் வரலாற்றைக் கூறுகின்றன. இவை அனைத்துமே சங்கரரது காலத்திற்குப் பிறகுதான் எழுதப்பட்டன. அவரது சமகாலத்திலோ அல்லது அவருடன் இருந்த சீடர்களாலோ எழுதப்படாததால், நமக்குக் கிடைத்த வரலாறுகளில் பல முரண்பாடுகள் உள்ளன. இதிஹாச நூல்களிலும் இத்தகைய வேறுபாடுகள் உள்ளன. இராமாயணத்தை, வால்மீகி, கம்பர், துளசீதாஸர், எழுத்தச்சன் என்று பலர் எழுதி யிருக்கிறார்கள். அவைகளிலும் சில வேறுபாடுகள் உள்ளன. எனினும் இவ்வேறுபாடுகள் ராமாயணத்தின்பால் மக்களுக்கு உள்ள மதிப்பையோ, ராமனது உயர்வையோ, மக்களது ராமபக்தியையோ எந்த விதத்திலும் பாதித்துவிடவில்லை. அது போல் சங்கரர் பிறந்த காலம் பற்றியும், அவர் வாழ்வில் நிகழ்ந்த

சம்பவங்களைப் பற்றியும் வேறுபட்ட கருத்துக்கள் இருந்தாலும், அவருடைய உபதேசங்கள், இயற்றிய நூல்கள் இவற்றைப்பற்றிப் பெரும்பாலும் ஒருமித்த கருத்துக்கள்தான் நிலவுகின்றன.

இந்தியாவின் தென்கோடியில் உள்ள இன்றய கேரள நாட்டில்தான் சங்கரர் அவதரித்தார். இது கடலும், மலையும், பள்ளத்தாக்குகளும், நதிகளும் நிறைந்த அழகான பகுதியாகும். அங்குப் பூர்ணா என்ற நதி உண்டு. பூர்ணா என்பதற்கு முழுமை, நிறைவு என்று பொருள். இதற்குச் சூ$_2$ர்ணீ என்ற மற்றொரு பெயரும் உண்டு. தன்து பிரவாகத்தின் வேகத்தினால் எல்லாவற்றையும் பொடியாக்கும் தன்மை கொண்டதால் சூர்ணீ என்று அழைக்கப்படலாயிற்று. இது ஆல்வாய் என்ற ஊரின் அருகாமையில் ஓடுவதால் இதை ''ஆல்வாய்ப்பொழை'' என்றும் கூறுவர். ஆல்வாயிலிருந்து சுமார் 15 கிலோமீட்டர் தொலைவில் **காலடி** என்ற ஊர் அமைந்துள்ளது. *ஷி*வரஹஸ்ய புராணத்தில் இந்த ஊர் *சசலா* என்று குறிப்பிடப்பட்டுள்ளது. முயல்கள் நிறைந்துள்ள இடம் என்பதால் *சசலா* எனப்பெயர் வழங்கலாயிற்று.

அநேகமாக, சங்கர விஜய நூல்களெல்லாவற்றிலும் சங்கரர் பிறந்த ஊர் காலடி என்றுதான் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தச் சிற்றூர், நெல் வயல்களாலும், மாந்தோப்புகளாலும், மூங்கிற் புதர்களாலும் சூழப்பட்டுப் பசுமையாக விளங்கியது. இங்கு அறிவிற்சிறந்த நம்பூதிரிகள் எனப்படுகிற அந்தண வகுப்பினர் வசித்து வந்தனர். அவர்களது வீடுகளுக்கு ''இல்லங்கள்'' என்று பொதுப் பெயர் உண்டு. ஒவ்வொரு வீட்டிற்கும் தனித்தனிப் பெயர்கள் உண்டு. அவைகளில் கைப்பில்லி என்று அழைக்கப்படும் இல்லத்தில் 'அத்ரி' கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் வசித்துவந்தனர். அவர்கள் சமூகத்தில் அனைவராலும் நன்கு மதிக்கப்பட்டவர்களாக இருந்தனர். கைப்பில்லி இல்லத்தில் வித்$_3$யாதி$_4$ ராஜா என்ற பண்பாளர் இருந்தார். அவருடைய குமாரர் சிவகுரு என்பவர் சிறந்த கல்வியாளர். அவர் குருகுலவாசம் முடித்து வீடு திரும்பியதும், பெற்றோர்கள் அவருக்கு ஆர்யாம்பா என்ற பெண்ணைத் திருமணம் செய்துவைத்தனர். இல்லறத்தைச் செவ்வனே நடத்திய அத்தம்பதியருக்கு மகப்பேறு ஏற்படவில்லை. அங்குள்ள சான்றோர்கள் சிவகுரு தம்பதியினரை அருகிலுள்ள (திருச்சூர் என்று இப்போது அழைக்கப்படும்) திருசிவபுரம் எனும் சிவத்தலத்திற்குச் சென்று வழிபட்டால் குலம் தழைக்க வழியுண்டாகும் என்று கூறினர். சிவகுருவும் ஆர்யாம்பாளும் திருச்சூர் சென்று அங்கே கோவில் கொண்டிருக்கும்

வடக்குநாதப் பெருமானை வழிபட்டனர் - திருச்சூருக்கு வ்ருஷாசலம் என்ற பெயரும் உண்டு.

மனிதர்களைப் போலத் தெய்வங்களுக்கும் சில பொருள்களின் பால் விருப்பம் அதிகம் உள்ளதாகக் காணப்படுகிறது. திருப்பதியில் உறையும் திருவேங்கடமுடையானைப் பணத்தால்தான் மகிழ்வடையச் செய்ய முடியும். அதனால்தான் அவனது உண்டியல் எப்பொழுதும் நிரம்பி வழிந்துகொண்டிருக்கிறது. பழனி யாண்டவனுக்குப் பஞ்சாமிருத அபிஷேகத்தைத் தவிர வேறு எந்த உபசாரமும் மகிழ்ச்சி அளிக்காது. பாகவதத்தைக் கேட்பது ஒன்றே குருவாயூரப்பனுக்கு மகிழ்ச்சி தரக்கூடிய செயலாகும். ஆதலால்தான் அவனது சன்னிதானத்தில் இடைவிடாமல் பாகவத பாராயணம் நடந்துவருகிறது. சிவபெருமானுக்கு வில்வமும், திருமாலுக்குத் துளசியும், கண்ணனுக்கு வெண்ணெயும் உகந்த பொருள்களாகும். அதே போல் வடக்குநாதருக்கு நெய் அபிஷேகம் செய்து கொள்வதில் மிகுந்த மகிழ்ச்சி. அபிஷேகம் செய்த நெய் அகற்றப்படுவதில்லை. உறைந்த நெய்க்குன்றின் நடுவில் விளங்கும் வடக்குநாதரது கோலம் நமக்கு வெள்ளிப்பனி சூழ்ந்த கைலாயத்தில் உறையும் சிவபெருமானை நினைவூட்டுவதாக இருக்கிறது. இந்த உறைந்த நெய்யானது தீராத நோய்களைக் குணப்படுத்தும் தன்மை கொண்டது. ஆயுர்வேத மருந்துகள் தயாரிப்பதற்காகப் பெருமளவில் இந்த நெய் மருத்துவ மனைகளில் உபயோகிக்கப்படுகிறது.

வடக்குநாதர் கோவிலில் செய்யும் வழிபாட்டிற்கு பஜனம் என்று பெயர். தூய மனத்துடன் வழிபட்ட சிவகுரு தம்பதிகளின் கனவில் இறைவன் தோன்றி, 'உங்களுக்கு அறிவு மழுங்கிய நீண்ட ஆயுளையுடைய பல குழந்தைகள் வேண்டுமா, அல்லது அறிவிற் சிறந்தவனும், அற்ப ஆயுளுடையவனுமான ஒரே மகன் வேண்டுமா?' என்று கேட்டதாகவும், அதற்கு அந்தத் தம்பதிகள் தங்களுக்கு அறிவொளிமிக்க ஒரே புதல்வன் வேண்டும் என்று விடையளித்ததாகவும் வரலாறு கூறுகிறது. இறைவனது அருள் பெற்றுச் சிவநேசச் செல்வர்கள் காலடியைச் சென்றடைந்தனர். இறைவனின் அருளாலே ஆர்யாம்பாள் கருத்தரித்து உரிய காலத்தில் ஓர் ஆண்மகவைப் பெற்றெடுத்தார். அந்தக் குழந்தை நந்தன வருடத்தில், வைகாசி மாதம், சுக்ல பக்ஷ பஞ்சமியில் புனர்வசு நக்ஷத்திரத்தில் பிறந்ததாகக் கூறப்படுகிறது. அது கி.மு. ஐந்தாவது நூற்றாண்டா (கி.மு. 509) அல்லது கி.பி. எட்டாவது நூற்றாண்டா (கி.பி. 788) என்று அறுதியிட்டுக் கூறமுடியவில்லை. இதற்குப்

போதுமான அகச்சான்றுகளோ, சரித்திர சம்பந்தமான ஆவணங்களோ, குறிப்புகளோ இல்லை.

குழந்தையின் பெற்றோர்கள் மகிழ்ச்சியில் திளைத்தனர். தெய்வத்தின் அருளால் பிறந்த குழந்தையாதலால், அது ஒரு விசேஷப் பொலிவுடன் விளங்கியது. பெற்றோர்களால் அநேக தானதர்மங்கள் செய்யப்பட்டன. குழந்தைக்குச் சங்கரன் என்ற பெயர் இடப்பட்டது. ஐந்து வயதானதும் சங்கரனுக்குக் குலவழக்கப்படி பூணூல் போட்டு, காயத்ரீ உபதேசம் செய்து வைக்கப்பட்டது. இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு சிவகுரு காலமானார். மிக்க மனவருத்தமடைந்த ஆர்யாம்பாளை அங்கிருந்த உற்றாரும் உறவினரும் ஆறுதல் சொல்லித் தேற்றினர். தம் மகனின் முகம் பார்த்து ஆர்யாம்பாள் தம் துயரை மறக்க முயன்றார்.

காயத்ரீ உபதேசம் பெற்ற சங்கரன் வேதம் பயிலுவதற்காகக் குருகுலம் சென்றான். மிகக்குறுகிய காலத்தில் இந்தத் தெய்வக் குழந்தை, வடமொழி, வேதம், சாஸ்திரம், உபநிடதங்கள் எல்லாவற்றிலும் மிகச் சிறந்த தேர்ச்சி பெற்றுப் பொலிவுடன் திகழ்ந்தான். சங்கரரது குருகுல வாசத்தின்போது ஓர் அதிசயம் நடந்ததாகக் கூறப்படுகிறது. குருகுலத்தில் பயிலும் மாணவர்கள் அருகிலுள்ள வீடுகளுக்குச் சென்று உணவு வகைகளை இரந்து பெற்றுக் கொண்டு வந்து, குருவையும் உண்பித்துத் தாங்களும் உண்ண வேண்டும் என்பது நியதி. அதன்படி ஒரு நாள் சங்கரர் ஒரு வீட்டின் முன்பு சென்று, 'தாயே! எனக்கு உணவளியுங்கள்' - ப₄வதீ பி₄க்ஷாம் த₃த₃ாது' என்று கேட்டார். வீட்டின் வாயிலுக்கு வந்த அந்த வீட்டின் தலைவி, அறிவொளியும், ஆன்ம ஒளியும் மிளிரும் ஓர் இளம் சிறுவனைக் கண்டாள். மிக்க மகிழ்ச்சி அடைந்தாள். ஆனால் அந்த மகிழ்ச்சியை அவளால் முற்றும் அனுபவிக்க முடியவில்லை. ஏனெனில், வீட்டில் வறுமை தாண்டவமாடியது. பிச்சை கேட்டு வந்த குழந்தைக்குக் கொடுப்பதற்கு வீட்டில் எந்தப் பொருளும் இருக்கவில்லை. மிகுந்த வருத்தமும், வெட்கமும் அடைந்தாள். வீட்டின் முன்பு வந்து யாசித்து நிற்கும் குழந்தைக்கு ஏதாவது கொடுக்க வேண்டும் என்பது நியதி. உலர்ந்த நெல்லிக்கனியைத் தவிர வேறு எந்தப் பொருளும் வீட்டில் இருக்கவில்லை. மிகுந்த தயக்கத்துடன் வீட்டுத்தலைவி அந்த நெல்லிக்கனியைச் சங்கரரின் பிக்ஷைப் பாத்திரத்தில் இட்டாள். ஒரு நொடியில் வீட்டில் நிலவும் வறுமையையும், வீட்டுத்தலைவியின் பரிதாபமான மன நிலையையும் உணர்ந்த சங்கரர், அந்தக் குடும்பம் தழைத்தோங்க அருள்புரியுமாறு திருமகளைக் 'கனகதாராஸ்தவம்' என்ற

தோத்திரத்தின் மூலம் துதித்தார். திருமகளும் மனம் மகிழ்ந்து அந்த வீட்டில் தங்க நெல்லிக்கனிகளை மழையாகப் பெய்யும்படிசெய்து அக்குடும்பத்தின் வறுமையைப் போக்கினாள் என்று சொல்லப்படுகிறது. இந்த நிகழ்ச்சி உண்மையா இல்லையா



என்பதை நாம் மனத்தில் கொள்ள வேண்டாம். இதிலிருந்து நாம் எதை அறிந்துகொள்ள வேண்டும் என்பதுதான் முக்கியம். வறுமையிலும் தருமநெறியைக் கடைப்பிடிக்க வேண்டும், தம்மிடம் இருப்பதை மகிழ்வுடன் பிறருக்குக் கொடுக்க வேண்டும், உலகில் போகப் பொருளை விரும்பாமல் இறைவனை உள்ளன்புடன் வழிபட்டால், தக்க தருணத்தில் இறைவன் அருள் பாலிப்பான் என்பவையே நாம் தெரிந்துகொள்ள வேண்டிய நீதிகளாகும்.

குருகுலத்தில் கல்வி பயின்றுவிட்டு வீடு திரும்பிய மகனைக் கண்டதும் ஆர்யாம்பாள் மிக்க மகிழ்ச்சியெய்தினாள். விரைவில் அவனுக்குத் திருமணம் செய்துவைக்க வேண்டுமென எண்ணினாள். ஆனால், சங்கரருக்கு இல்வாழ்க்கையில் நாட்டமில்லை. தாம் இவ்வுலகிற்கு வந்த காரியம் கைகூட வேண்டுமென்றால் துறவு மேற்கொண்டே ஆகவேண்டும். அதற்குத் தாயாரிடம் எளிதில் அனுமதி பெற முடியாது.

தாயார் அனுமதி இல்லாமல் சந்நியாசம் வாங்கிக்கொள்ளவும் அவருக்கு விருப்பமில்லை.

இந்தக் குழப்பமான நிலையிலிருந்து விடுபடுவதற்கு என்ன வழி என்று தவித்த சங்கரருக்கு இறைவன் அருளால் ஒரு விடிவு ஏற்பட்டது. சங்கரரது தாயாருக்கு ஒவ்வொரு நாளும் நதியில் நீராட வேண்டும் என்ற பேராவல் இருந்தது. வயது முதிர்ந்த காரணத்தினால் வீட்டிலிருந்து சற்றுத் தொலைவில் இருந்த பூர்ணா நதிக்குச் சென்று நீராடுவதற்கு உடல் நிலை இடம் கொடுக்கவில்லை. தாயாரின் விருப்பம் நிறைவேறும் பொருட்டுத் தமது வீட்டின் அருகிலேயே பூர்ணா நதி வளைந்து ஓடுமாறு செய்தார் சங்கரர்.

ஒரு நாள் சங்கரர் பூர்ணா நதியில் நீராடும் பொழுது அவரது காலை ஒரு முதலை கவ்வியது. வலியால் துடித்த சங்கரர் மற்றவர்களை உதவிக்காகக் கூவி அழைத்தார். மகனின் ஓலக்குரலைக் கேட்டு வெளியே வந்த தாய், மகனின் அவல



நிலையைக் கண்டு அதிர்ந்தார். செய்வ தறியாது தவித்தார். இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தித் தம் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள நினைத்த சங்கரர். தம் தாயாரிடம் தாம் தப்பு வதற்குண்டான ஒரு வழியைச் சொன்னார். 'அம்மா! நான் துறவறம் மேற்கொண்டால் மறுபிறவி எடுத்ததற்குச் சமமாகும். இந்தப்

பிறவியிலிருந்து விடுபட்டு விட்டால் முதலையால் இறக்க வேண்டும் என்ற தலைவிதியும் மாறிவிட வாய்ப்பிருக்கிறதல்லவா? எனவே நான் துறவு பூணத் தாங்கள் அனுமதி கொடுத்தால் நான் பிழைப்பதற்குண்டான சாத்தியக் கூறுகள் அதிகம்' என்று கூறினார். துடித்துக்கொண்டிருக்கும் தாயுள்ளத்திற்கு இது சற்று ஆறுதலளித்தது. துறவியாக வாழ்ந்தாலும் தம் மகன் உயிருடன் இருப்பான் என்ற நம்பிக்கை துளிரலாயிற்று. இதன் விளைவாகத் தம் மகன் துறவியாவதற்கு அனுமதியளித்தார். அப்பொழுது தம் மகனிடம் அவன் எங்கிருந்தாலும் தாம் இறக்கும் தருவாயில் தம்மருகில் வந்திருந்து தமக்கு ஈமச்சடங்குகள் செய்து தம்மைக் கடைத்தேற்ற வேண்டும் என்ற வாக்குறுதியைப் பெற்றுக் கொண்டார். துறவறம் பெற்றுக்கொண்ட சங்கரருக்கு அது இரண்டாவது பிறவியானதால் அவரது ஆயுள் இரண்டு மடங்காயிற்று. 16 வயது வரை வாழும் வாய்ப்பு ஏற்பட்டது.



தம் தாயாரை கவனித்துக்கொள்ளத் தகுந்த ஏற்பாடுகள் செய்துவிட்டு, தேசயாத்திரை செய்யும் பொருட்டு வடக்குத் திசையை நோக்கித் தம் பயணத்தைத் தொடங்கினார். இவர் மேற்கொண்டது முறையான துறவறமன்று. குருவில்லாமல் ஏற்றுக்கொண்ட சந்நியாசமாகும். இந்த முறைக்கு ஆபத்சந்நியாசம் என்று பெயர். எனவே, முறைப்படி சந்நியாசம் மேற்கொள்ள ஒரு குருவைத் தேடிச் செல்ல வேண்டியதாயிற்று.

சங்கரர் பரமசிவனது அவதாரம் என்று கருதப்படுவதால், இவர் சந்நி யாசம் பெற்றுக் கொள்வ தற்காக ஏன் ஒரு குருவைத் தேட வேண்டும் என்ற வினா எழுவது இயற்கை. அவர் பரமசிவனாகவே இருந்த போதிலும் மனித னாகப் பிறவி எடுத்த பிறகு அந்தப் பிறவியில் கடைப் பிடிக்க வேண்டிய நெறிகளைப் பின்பற்ற வேண்டுமல்லவா? தரும நெறிகளைப் பின்பற்றி மற்றவர்களுக்கு ஒரு வழிகாட்டியாக விளங்குவதே ஆசார்யனின் தலையாய கடமை.

வடதிசை நோக்கிச் சென்ற சங்கரர் விந்தியமலைச்சாரலில், நர்மதை நதிக்கரையில் கோவிந்த பகவத்பாதர் என்ற மகானைத் தரிசித்தார். அவர் கோவிந்தவனம் என்ற காட்டில் ஒரு குகையில் தங்கியிருந்தார். அந்தக் குகையை மூன்று முறை வலம் வந்து, அதன் வாயிலில் விழுந்து வணங்கிவிட்டுத் தம்மைச் சீடனாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று இறைஞ்சினார். உள்ளே இருந்த கோவிந்தபாதர் சங்கரரை 'நீ யார்?' என்று வினவினார். சங்கரர் அளித்த விடையைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த குருவானவர், வந்திருப்பவர் சிவபெருமானின் அவதாரம் என்பதையுணர்ந்து, அவரைத் தம் சீடராக ஏற்றார். குருவினிடம் பயிலும் பொழுது மாணவன் கடைப்பிடிக்க வேண்டிய வழிமுறைகளில், சிரவணம், மனனம், நிதி₃த்₄யாஸனம் என்பவை முக்கியமானவை. சிரவணம் என்றால் ஆசானிடம் பாடம் கேட்பது. மனனம் என்றால் தான் ஏற்கனவே கற்றவற்றை நினைவுபடுத்திக் கொள்வது. நிதி₃த்₄யாஸனம் என்றால் படித்த பாடங்களில் உள்ள உட்கருத்தை ஆராய்ந்து உண்மையான பொருளைத் தெரிந்துகொள்வது. சங்கரரின் அறிவின் முதிர்ச்சியைக் கண்டு அவரது ஆசான் மிக்க மகிழ்ச்சியெய்தினார்.

## ஆசார்ய பரம்பரை

சங்கரரின் ஆசான்களின் வரிசையைப் (குருபரம்பரையைப்) பற்றித் தெரிந்துகொள்வது பயனுள்ளதாக இருக்கும். இந்தப் பரம்பரையில் முதல் குரு ஸ்ரீமந் நாராயணர், பிறகு பிரம்மா, வசிஷ்டர், சக்தி, பராசரர், வியாசர், சுகர், கௌடபாதர், கோவிந்தபாதர், ஆதிசங்கரர் என்ற வரிசை உண்டாயிற்று. இந்த வரிசையில் ஸ்ரீமந் நாராயணர் முதல் சுகர் வரை, தந்தை தனயன் என்ற முறையில் (புத்திர பரம்பரையாக) இந்தத் தலைமுறை தொடர்ந்தது. சுகர் (சுப்பிரம்மம் - பாகவத புராணத்தை உபதேசித்தவர்) பிறவி ஞானி, உலக வாழ்க்கையில் நாட்டம் கொள்ளாமல் இருந்ததால் அவருக்குச்

சந்ததியால் ஏற்படும் பரம்பரை மாறி, சிஷ்ய பரம்பரை தோன்றியது. சங்கரரிடமிருந்து தோன்றிய சிஷ்ய பரம்பரை இன்றளவும் அவர் தோற்றுவித்த மடங்களின் மூலம் ஸனாதன தர்மத்தைப் பாதுகாத்தும், பரப்பியும் வருகின்றது.

வியாசரது மேலான பரம்பரை விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தில் இவ்வாறு குறிப்பிடப்படுகிறது : வ்யாஸம் வசிஷ்ட$_2$ நப்தாரம் ஶக்தே: பௌத்ரம் அகல்மஷம், பராஶராத்மஜம் வந்தே$_3$ சுகதாதம் தபோ நிதி$_4$ம்' - களங்கமற்றவரும், தவசீலருமான வியாசர், வசிஷ்ட 'நப்தாரம்' வசிஷ்டருடைய கொள்ளுப்பேரர், 'சக்தே : பௌத்ரம்' - சக்தி முனிவரின் பேரர், 'பராஶராத்மஜம்' - பராசரரின் குமாரர் (அத்துடன் நிற்காமல் அவருக்குப் பின்வந்த தலைமுறையும் கூறப்படுகிறது). 'ஶுகதாதம்' - சுகருடைய தந்தை.

இதில் நாம் கருத்தில் கொள்ள வேண்டியது என்னவென்றால் இறையருளை நாடிச் செய்யும் எந்தப் பணியிலும், செல்வத்திலோ வேறு போகப் பொருள்களிலோ மனம் நாட்டம் கொள்ளாது. மெய்ப்பொருளை நாடிச் செல்லும்பொழுது கீழான போகப் பொருள்கள் மதிப்பற்றவையாகிவிடும். அழியும் பொருள்களின் பால் உள்ள ஆசை அகன்றால்தான் அழியாப் பொருளை அடையமுடியும். ஆசையற்ற மனநிலை ஏற்பட்டுவிட்டால் வாரிசுச் சண்டை ஏற்படும் சாத்தியக் கூறே இல்லை.

அரசியலில் தன்னலமற்ற தொண்டு மனப்பான்மையோடு உள்ளவர்கள் இல்லை என்ற அளவிற்குத் தரம் தாழ்ந்துவிட்டது. இதனால் அரசியலில் விரும்பத்தகாத பலவிளைவுகள் ஏற்பட்டு நாடு நலிவுப் பாதையில் சென்று கொண்டிருக்கிறது. மதச்சார்புள்ள சில அமைப்புகளிலும் இந்த விரும்பத்தகாத நிலை ஏற்பட்டு வருவது மிகவும் வருந்தத்தக்கது.

இந்த ஆசான்களின் வரிசையில் சுகர் வரை உள்ளவர்களைப் பற்றி எல்லோரும் அறிந்திருக்கக் கூடும். புராணங்களிலும், இதிகாசங்களிலும் அவர்களைப் பற்றிய தகவல்கள் மிகுதியாக உள்ளன. சுகருக்குப் பிறகு வந்த கௌடபாதர், கோவிந்தபாதர் ஆகிய இருவரைப்பற்றிய விவரங்கள் அநேகருக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. எனவே அவர்களைப் பற்றி இங்குக் கூறுவது அவசியமாகிறது.

'அஷ்டாத்$_4$யாயீ' என்ற பாணினியின் வடமொழி இலக்கணத்திற்கு மஹாப$_4$ாஷ்யம் எழுதியவர் பதஞ்சலி என்ற

பெருமகனார். அவரிடம் கௌடபாதர் என்றொரு சீடர் இருந்தார். அவர் ஒரு சமயம் குருவின் கட்டளையை மீறியதாலே குருவினால் சபிக்கப்பட்டார். அதன்படி அவர் ஒரு பிரம்மராக்ஷஸன் உருவில் விந்திய மலைக்காடுகளில் திரிய வேண்டியதாயிற்று. தம் தவற்றை உணர்ந்த சீடர் தம் சாபம் எப்பொழுது விலகும் என்று கேட்டார். குருவானவர், 'இலக்கணத்தில் நீ கேட்கும் கடினமான கேள்விகளுக்கு யாரேனுமொரு மாணவர் சரியான விடையளிக்கும் பொழுது உன் சாபம் நீங்கி நீ மனித உருவைப் பெறுவாய்' என்று கூறினார். நீண்ட நாட்களாகியும் கௌடபாதரது சாபம் நீங்கும் தருணம் வரவில்லை.

பதஞ்சலியாக அவதரித்திருந்த ஆதிசேடன் கௌடபாதரின் மேல் இரக்கம் கொண்டு உஜ்ஜயினியில் ஓர் அந்தணராகப் பிறந்தார். அவரது பெயர் சந்திரசர்மா. அவர் இலக்கணம் பயிலுவதற்காகத் தெற்கு நோக்கிச் செல்லும் பொழுது கௌடபாதர் திரியும் காட்டின் வழியாகப் போக நேரிட்டது. பிரம்மராக்கத வடிவத்திலிருந்த கௌடபாதர் கேட்ட கேள்விகளுக்குச் சந்திரசர்மா சரியான பதில் அளித்ததும் கௌடபாதர் சாபம் நீங்கித் தம் சுயஉருவை அடைந்தார். மகிழ்ச்சி மேலிட்ட அவர் சந்திரசர்மாவுக்குப் பதஞ்சலியின் இலக்கணத்தை முழுமையாகக் கற்பித்தார். பிறகு பதரிகாசிரமம் சென்று சுகருடைய அருளால் துறவறம் பூண்டு தவம் செய்யலானார். சந்திரசர்மா உஜ்ஜயினிக்குச் சென்று திருமணம் புரிந்துகொண்டு மணவாழ்க்கை நடத்தலானார். அவருடைய புதல்வர்களில் ஒருவரான பர்த்ருஹரி பதஞ்சலிக்குப் பிறகு ஒரு சிறந்த இலக்கண மேதையாகத் திகழ்ந்தார். சிறிது காலத்திற்குப் பிறகு சந்திரசர்மா பதரிக்குச் சென்று தம் குருவான கௌடபாதரது உபதேசம் பெற்றுத் துறவியானார். தம் குருவின் மூத்த குருவான வியாசரின் ஆணைப்படி விந்தியமலைச் சாரலில் நர்மதை நதிக்கரைக்கு வந்து அங்குச் சங்கரரின் வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்தார்.

சங்கரர் துறவுமேற்கொண்டதும் குருவினிடம் பாடம் கேட்டு, பிரம்மசூத்திரத்திலும் உபநிடதங்களிலும் மிகுந்த தேர்ச்சியைப் பெற்றார். சங்கரர் நர்மதை நதிக்கரையில் வசித்தபொழுது ஓர் ஆச்சரியமான நிகழ்ச்சி ஏற்பட்டது. கோவிந்தபாதர் ஆழ்ந்த தவத்திலிருந்தார். நர்மதையில் வெள்ளம் கரைபுரண்டு ஓடிக்கொண்டிருந்தது. கட்டுக்கடங்காத நீர்ப்பெருக்கு கோவிந்த பாதரையே அடித்துச் செல்லும் நிலை ஏற்பட்டதும் சில

மந்திரங்களை உச்சரித்துத் தம்மிடமுள்ள கமண்டலத்தை நீரில் அமிழ்த்தினார் சங்கரர். என்ன ஆச்சரியம்! பொங்கி வந்த நீர்ப்பெருக்கு அடங்கி நர்மதையும் மெதுவாக ஓடத் தொடங்கியது. தவம் கலைந்து தம் நிலைக்கு வந்த கோவிந்தபாதர் சீடர்கள் மூலம் அங்கு நடந்த நிகழ்ச்சிகளைக் கேட்டு மகிழ்வெய்தினார். சங்கரரை வாழ்த்தி, காசிக்குச் சென்று, பிரம்ம சூத்திரம், உபநிடதங்கள், பகவத் கீதை இவற்றிற்குச் சிறந்த உரை எழுதி அதை அனைவருக்கும் கற்பிப்பதுடன் அத்துவைதக் கோட்பாடுகளையும் பரப்பும்படி அன்புக் கட்டளையிட்டார். சங்கரரும் தம் ஆசானின் ஆணையை ஏற்றுக் காசிக்குச் சென்றார்.

பாரத நாட்டில் உள்ள நகரங்களில் காசி மிகச் சிறந்ததாக விளங்கியது. கங்கை, வருணை ஆகிய நதிகள் கூடுமிடத்தில் அமைந்ததால் அது வாரணாசி என அழைக்கப்படலாயிற்று. அங்கே கல்வியிற் சிறந்த பல சான்றோர்கள் இருந்தனர். நாட்டின் பல



பாகங்களிலிருந்தும் பண்டிதர்கள் அங்கு வந்து இலக்கியச் சர்ச்சைகளும், ஆராய்ச்சிகளும் செய்துவந்தனர். குமரகுருபர சுவாமிகள் காசியில் வாழ்ந்ததாகவும் அங்கு சகலகலாவல்லி மாலை என்ற நூலை இயற்றியதாகவும் நாம் அறிகிறோம். கர்னாடக சங்கீத

மும்மணிகளில் ஒருவரான முத்துசாமி தீக்ஷிதர் தம் குருவுடன் பலகாலம் தங்கி யிருந்து வேதசாஸ்திரங்களைக் கற்றார். அத்துடன் இந்துஸ்தானி சங்கீதத்தின் நுணுக்கங்களையும் அறிந்துகொண்டார் என்பதற்குச் சான்றுகள் உள்ளன. அவரது கிருதிகள் சில வடக்கத்திய இசையைச் சார்ந்த ராகங்களில் உள்ளன. நம்முடைய மகாகவி பாரதியாரும் காசியில் கல்வி பயின்றிருக்கிறார்.

காசியில் வசித்த காலத்தில் சங்கரருக்குப் பல சீடர்கள் ஏற்பட்டனர். அவர்களில் ஸனந்தனர் என்பவர் ஒருவர். அவரது இயற்பெயர் விஷ்ணுசர்மா. அவர் சோழநாட்டைச் சேர்ந்தவர். அவரது நேர்மையையும் பக்தியையும் கண்டு மகிழ்ந்த சங்கரர், அவரைத் தம் சீடராக ஏற்றுக்கொண்டு அவருக்கு ஸனந்தனர் என்ற துறவுப் பெயரை (தீக்ஷா நாமம்) அளித்தார். அவர் சிறந்த அறிவாளி. அவருடைய தேர்ச்சியையும் அறிவாற்றலையும் கண்ட மற்றச் சீடர்கள் மிகுந்த பொறாமையடைந்தனர். அவர்கள் ஸனந்தனரின் பெருமைகளை அறிந்துகொள்ள வேண்டும் என்று சங்கரர் விரும்பினார். அதற்கான சந்தர்ப்பமும் வாய்த்தது. ஒரு சமயம் கங்கை பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. சங்கரர் ஒரு கரையிலும் ஸனந்தனர் எதிர்க்கரையிலும் இருந்தனர். அப்பொழுது நீராடி முடித்த சங்கரர், 'ஸனந்தனா! என்னுடைய ஆடைகளை எடுத்து வா' என்று கட்டளையிட்டார். கங்கையின் நீர்ப்பெருக்கு அவரது கண்களுக்குப் புலப்படவில்லை. ஆசானின் கட்டளைதான் காதில் ஒலித்துக்கொண்டிருந்தது. உடனே குருவின் ஆடைகளை எடுத்துக் கொண்டு கங்கையின் மேல் நடந்து அக்கரைக்குச் செல்ல முயன்றார். இவரது குருபக்தியைக் கண்டு மகிழ்ந்த கங்காதேவி அவர் கால் வைக்கும் இடங்களில் எல்லாம் தாமரை மலர்களை வைத்து அவரது பாதங்கள் நீரில் அமிழ்ந்து விடாமல் தாங்கும்படி செய்தாள். ஸனந்தனரும் விரைவில் எதிர்க்கரையை அடைந்து குருவினிடம் ஆடைகளைக் கொடுத்தார். தாமரைகளால் தாங்கப் பெற்ற பாதங்களை உடையவராதலின் அவர் பத்மபாதர் என்று அழைக்கப்படலானார். சங்கரரின் மற்றச் சீடர்கள் பத்மபாதரின் அறிவையும், மேலான சீலத்தையும், குருபக்தியையும் நன்கு உணர்ந்துகொண்டனர்.

ஒரு நாள் சங்கரர் ஒரு தெருவில் நடந்து வரும்பொழுது வயது முதிர்ந்த ஒருவர் கடினமான இலக்கண சூத்திரங்களை மனப்பாடம் செய்துகொண்டிருந்தார். முதிர்ந்த வயதில் மனத்தை இறைவன் பால் செலுத்தாமல் இலக்கணத்தை ஆராய்வதில் நாட்டம் கொண்டுள்ளாரே என அவரது நிலையைக் கண்டு பரிதாபப்பட்ட

சங்கரர், அவரிடம் சென்று 'ஐயா! நீங்கள் கோவிந்தன் நாமத்தைச் சொல்லுங்கள். காலன் வரும் சமயம் அதுதான் உங்களைக் காப்பாற்றும், இலக்கணப் புலமை உங்களை காப்பாற்றாது' என்று அறிவுரை சொல்லும் வாயிலாக ப₄ஜகோவிந்த₃ம் என்னும் சுலோகத் தொகுப்பைப் பாடியதாகக் கூறப்படுகிறது.

" ப₄ஜ கோ₃விந்த₃ம் ப₄ஜ கோவிந்த₃ம் கோ₃விந்த₃ம் ப₄ஜ மூட₄மதே |
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதே காலே நஹி ரக்ஷதி டு₃க்ருஞ்கரணே நஹி || "

ஏ மூடமதியே, கோவிந்தனைத் துதிப்பாயாக! அதுதான் உன்னை இறுதிக்காலத்தில் காப்பாற்றும், இலக்கண அறிவு அதைச் செய்யாது.

இதில் கோவிந்தனைத் துதி என்ற பதத்தில் 'கோவிந்தன்' என்ற வார்த்தை, திருமாலையும், சங்கரருடைய குருவாகிய கோவிந்த பகவத் பாதரையும் குறிக்கும் வகையில் அமைந்துள்ளது.

சங்கரர் காசியில் இருந்த சமயம் காசி விசுவநாதப் பெருமாள் ஓர் அற்புதத்தை நிகழ்த்தி, இறைவனுடைய படைப்பிலுண்டான எல்லா ஜீவராசிகளும் சமமானவை, அவற்றிற்குள் எந்தவிதமான ஏற்றத் தாழ்வுகளுமில்லை என்பதை எல்லோரும் உணரும்படி செய்ததாக ஒரு வரலாறு உண்டு. ஒரு நாள் சங்கரர் கங்கையில் நீராடி விட்டு வரும் பொழுது எதிரில் தீண்டத்தகாதவன் ஒருவன் நான்கு நாய்களுடன் வந்து கொண்டிருந்தான். அவனைக் கண்டதும், சங்கரர் 'நீ சற்று விலகிச் செல்' என்றார். அதற்கு அந்த மனிதன், 'ஐயா! நீர் எதை விலகிப் போ என்று சொல்கிறீர்கள்? 'அன்னமயாத்3 அன்னமயம்' சோற்றை உண்டு அதனால் வளர்க்கப்பட்ட தேகத்தையா, அல்லது 'சைதன்யமேவ சைதன்யாத்', அந்த உடம்பிற்குள் இருக்கும் ஆத்மாவையா (சைதன்யத்தையா)?' என்று மறுமொழி கூறினான். 'நீங்கள் சீடர்களுக்குக் கற்பிக்கும் பாடங்களில் அவன் வேறு, இவன் வேறு என்று உடலிலும், உயிரிலும் வேறுபாடுகள் உள்ளதாகக் கூறப்பட்டுள்ளதா?' என்று கேள்விக்கணைகளால் சங்கரரைத் திணறச் செய்தான். தம்முடன் வாதம் செய்பவன் சாதாரண மனிதன் அல்லன், ஞானம் மிக்க ஒரு பெருந்தகை என்பதை உணர்ந்த சங்கரர், 'ஆழ்ந்த ஞானத்தை யுடையவர் யாராக இருந்தாலும் அவர் வணக்கத்திற்குரியவர். (ஞானம்) யாரிடம் இருக்கிறதோ அவன் தாழ்ந்த ஜாதிக்காரனாக இருந்தாலும், அந்தணனாக இருந்தாலும் அவனே என் குரு' என்பதை விளக்கி 'மனீஷாபஞ்சகம்' என்ற பஞ்சகத்தைப் பாடினார்.

பாடியபின் எதிரிலிருந்தவரின் பாதங்களைப் பணிந்ததும் சங்கரர் அங்குக் காசி விசுவநாதரையே கண்டார். அவருடன் கூட வந்த நான்கு நாய்களும் நான்கு வேதங்கள் என்று அறிந்துகொண்டார்.

உலகத்தில் உள்ள எல்லா ஜீவராசிகளையும் தாமாகப் பார்க்கும் தன்மை எவருக்கும் எளிதில் வந்துவிடாது. அந்த நிலையைச் சங்கரரைப் போன்ற ஞானிகளே அடைய முடியும். மனப்பக்குவம் பெற்றவர்கள் எந்த ஜாதியைச் சேர்ந்தவராக இருந்தாலும் வணங்கப்பட வேண்டியவர்கள். பிறப்பால் தாழ்ந்தவன் உயர்ந்தவன் என்ற தகுதி வந்துவிடாது. அவரவரது நடத்தையும் செய்யும் தொழிலுமே உயர்வு தாழ்வுகளை நிர்ணயிக்கக் கூடியவை. இதைத்தான் பகவத் கீதையும் சொல்லுகிறது.

" சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் கு$_3$ணகர்மவிபா$_4$க$_3$ஶ: "

மனிதன் மனம் பக்குவமடையும் வரை எல்லா வகையான வேறுபாடுகளும் இருந்துகொண்டேதான் இருக்கும். மேலான ஞான நிலையையடைந்த பிறகுதான் இவை அகலும். ஆத்ம ஞானம் பெற்ற ஞானிகளுக்கு எந்தவிதமான விதிமுறைகளும் தேவையில்லை. அவர்களின் மனத்தில், அவர்கள் பார்வையில் படும் தீய நிகழ்ச்சிகள் எந்த வகையான தடுமாற்றத்தையும் ஏற்படுத்தா. ஆனால், சாதாரண மக்கள் இந்த நிலையை அடையும்வரை அறநெறிகளை அனுசரித்து ஏற்பட்ட சில கட்டுப்பாடுகளைக் கடைப்பிடித்தால் தான் சமூகத்தில் அமைதி நிலவும்.

தீண்டத்தகாதவர் உருவத்தில் வந்த காசி விசுவநாதர் சங்கரரை ஆசீர்வதித்து, அவரைப் பிரம்மசூத்திரம், உபநிஷத்துக்கள், பகவத் கீதை ஆகியவற்றிற்கு விளக்கவுரை (பாஷ்யம்) இயற்றி அவைகளை அனைவருக்கும் கற்பிக்குமாறு கூறி மறைந்து விட்டார். அவரிடம் கேட்ட உபதேசங்களினால் சங்கரரின் மனத்தில் இருந்த பலப்பல ஐயங்கள் நீங்கின. தம் கோட்பாடுகளில் முன்னிலும் அதிகமான உறுதி ஏற்பட்டது. தம் குருவான கோவிந்தபாதர் இட்ட கட்டளையை உடனே நிறைவேற்ற வேண்டும் என்பதில் மிகுந்த ஆர்வம் உண்டாயிற்று. இந்தப் பணிகளை நிறைவேற்றுவதற்காகச் சங்கரர் தம் சீடர்களுடன் பதரிகாசிரமம் சென்றார். அங்குச் செல்லும் பொழுது அவருக்கு வயது பன்னிரண்டு. தம் குருவான கோவிந்தபாதரை மீண்டும் சந்திக்க நேர்ந்ததால் மிக்க மகிழ்வெய்தினார். வயது முதிர்ச்சி காரணமான கோவிந்தபாதருக்கு

இமயமலையின் கடுங்குளிரைத் தாங்குவதற்கு ஏற்ற உடல் வலிமை இல்லாமல் போய்விட்டது. எனவே, தம் ஆசான் நீராடுவதற்காக வெந்நீர் ஊற்றொன்றை ஏற்படுத்தினார் சங்கரர். அதில் இன்றளவும் மக்கள் நீராடி வருகின்றனர்.



பதரிகாசிரமத்தில் இருந்தபொழுது சங்கரருக்கு மேலும் சில சீடர்கள் உண்டாயினர். அவர்களில் கேரளத்தில் பயிலும்பொழுது வகுப்புத் தோழர்களாக இருந்த விஷ்ணு சர்மா எனப்படும் சித்சுகரும், அக்னிசர்மா என்பவரும் முக்கியமானவர்கள்.

நாரதகுண்டம் என்ற இடத்தில் அலகனந்தா நதியில் சங்கரருக்குத் திருமாலின் உருவச்சிலை (விக்ரஹம்) ஒன்று கிடைத்தது. பதரியில் ஓர் ஆலயம் எழுப்பி அந்தச் சிலையை அங்குப் பிரதிஷ்டை செய்து அதற்குப் பதரி நாராயணர் என்று பெயரிட்டார். அங்கு நடைபெற வேண்டிய வழிபாட்டு முறையை நிர்ணயித்துத் தம் சீடரான அக்னி சர்மாவைக் கோவில் அர்ச்சகராக நியமித்தார். அன்று தொடங்கி இன்று வரை பதரிநாராயணர் கோவிலில் அக்னி சர்மாவின் வம்சத்தில் வந்த நம்பூதிரி அந்தண வம்சத்தவர்களே பூஜை செய்து வருகிறார்கள். அங்கு வழிபாடு செய்பவருக்கு ராவல்

என்று பெயர். இந்த ஏற்பாடு நாட்டின் ஒற்றுமையைக் காப்பதற்குச் சங்கரர் செய்த மிகச் சிறந்த தொண்டாகும். நாட்டின் தென்கோடியிலிருந்து வந்த வம்சத்தினரைக் கொண்டு வட கோடியிலுள்ள கோவிலில் வழிபாடு நடத்தும் ஏற்பாட்டைச் செய்தது பாராட்டத்தக்க செயலாகும். நம் நாட்டிலுள்ள வழிபாட்டு முறைகள் அனைத்துமே தேச ஒற்றுமையை வளர்க்கும் விதத்தில்தான் அமைந்துள்ளன. தென் பகுதியிலுள்ள ராமேச்வரத்திலிருந்து மணல் எடுத்துக் கொண்டு காசிக்கும் சென்று விசுவநாதரை வழிபட்டு விட்டு, அங்குள்ள கங்கை நீரை எடுத்துக் கொண்டுவந்து ராமேசுவரத்திலுள்ள ராமநாதனுக்கு அபிஷேகம் செய்ய வேண்டும் என்ற நியதி இன்றளவும் கடைப்பிடிக்கப்படுகிறது.

பதரியில் சங்கரர் நான்கு வருடங்கள் தங்கியதாகத் தெரிகிறது. அந்தக் காலத்தில் அவர் அங்கிருந்த பெரியோர்களிடம் கலந்து உரையாடி, சர்ச்சை செய்து, நல்ல முறையில் பாஷ்யங்களை எழுதி முடித்தார். அங்கு அவர் கீழ்க்கண்டவற்றுக்குப் பாஷ்யங்கள் இயற்றினார் என்று கூறப்படுகிறது :

| | | |
|---|---|---|
| உபநிஷத்துக்கள் | - | 11 |
| பகவத் கீதை | - | 1 |
| பிரம்ம சூத்திரம் | - | 1 |
| ஸனத்ஸுஜாதீயம் | - | 1 |
| விஷ்ணு ஸஹஸ்ர நாமம் | - | 1 |
| | | 15 |

பிரம்ம சூத்திரம், உபநிஷத்துக்கள், பகவத்கீதை ஆகிய மூன்றையும் ப்ரஸ்தானத்ரயம் என்று கூறுவர். பிரம்ம சூத்திரங்களை 'ந்யாயப்ரஸ்தானம்' என்றும், உபநிஷத்துக்களை 'ச்ருதிப்ரஸ்தானம்' என்றும், பகவத் கீதையை 'ஸ்ம்ருதிப்ரஸ்தானம்' என்றும் குறிப்பிடுவதுண்டு. இந்த பாஷ்யங்களை சங்கரர் தம் குருவான கோவிந்தபாதர், அவருடைய குருவான கௌடபாதர் ஆகியவர்களிடம் சமர்ப்பித்தார். அதைப் படித்த அவ்விருவரும் மிகுந்த மகிழ்ச்சியடைந்தனர். அத்தோடு அங்கிருந்த சான்றோரும், கல்விமான்களும் சங்கரரின் படைப்புக்களை நன்கு படித்து ஆராய்ந்து, மிகவும் பாராட்டினர். அவரது விசாலமான அறிவும், தம்

கருத்துக்களை அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் வெளிப்படுத்தியிருக்கும் பாங்கும் எல்லோரது மனத்தையும் கவர்ந்தன. அப்பொழுது சங்கரருக்கு வயது பதினாறு. இந்த பாஷ்யங்களின் பயனை அனைத்து மக்களும் அனுபவித்து மகிழ வேண்டும் என்று வியாசர் விரும்பினார். அவர், ஒரு வயது முதிர்ந்த அந்தணரது உருவில் வந்து சங்கரர் எழுதிய சூத்திர (விளக்கங்களை) பாஷ்யங்களைப் பற்றி அவரிடம் வாதம் செய்யலானார். இந்தச் சர்ச்சை பல அறிஞர்களின் கவனத்தைக் கவர்ந்தது. முதியவர் எழுப்பிய ஐயங்களுக்கு சங்கரர் சிறந்த முறையில் விடையளித்தார். தம் குருவான சங்கரரிடம் இப்படிச் சிறந்த முறையில் வாதம் செய்து கொண்டிருப்பவர் சாதாரண மனிதராக இருக்க முடியாது என்று பத்மபாதர் நினைத்தார்.

" ஸங்கர : ஸங்கர : ஸாக்ஷாத் வ்யாஸோ நாராயண : ஸ்வயம் |
தயோ விவாதே$_3$ ஸம்ப்ராப்தே கிங்கர : கிம் கரோம்யஹம் || "

'ஆசார்ய சங்கரர் சிவபெருமானின் அவதாரம், வியாஸர் நாராயணனின் அவதாரம். இறையம்சமுடைய இந்த இருவரும் இப்படித் தொடர்ந்து வாதம் செய்துகொண்டே யிருந்தால், தொண்டனான நான் என்ன செய்ய முடியும்?' என்று எண்ணி வாதம் செய்துகொண்டிருக்கும் வயோதிகரிடம் சென்று 'தாங்கள் யார் என்பதைக் கருணை கூர்ந்து தெரிவிக்க வேண்டும்' என்று பத்மபாதர் வேண்டினார். இந்த வேண்டுகோளை ஏற்ற வியாசர் தம் சுயஉருவைக் காட்டி எல்லோரையும் ஆசீர்வதித்தார். வியாசரை வணங்கிய சங்கரர் தமக்குப் பதினாறு ஆண்டுகள் முடிந்து இவ்வுலக வாழ்க்கையை முடித்துக் கொள்ளும் தருணம் வந்து விட்டதால் தம்மை ஆசீர்வதிக்கும்படி கோரினார். 'நீ வந்த காரியம் இன்னும் முடிவடையவில்லை. ஆதலால் உனக்கு மேலும் பதினாறு ஆண்டுகள் வாழ ஆயுளை நீட்டிக்கிறேன்' என்று ஆசீர்வதித்தார். அத்துடன் நில்லாமல், 'நீ பிரஸ்த$_2$ானத்ரயங்களுக்கு பாஷ்யம் எழுதியது மட்டும் போதாது. அவைகளில் சொல்லப்பட்டுள்ள மேலான கருத்துக்களை நாடு முழுவதும் பரவச் செய்ய வேண்டும். மேலும் நாட்டின் பல பகுதிகளுக்கும் சென்று தீயமதவாதிகளை வாதத்தில் வென்று மக்களை வேத நெறியைப் பின்பற்றும்படி செய்ய வேண்டும்', என்று அன்புக் கட்டளையிட்டுவிட்டு மறைந்தார்.

வியாசரின் கட்டளையை மேற்கொண்டு சங்கரர் திக்விஜயம் செய்யப்புறப்பட்டார். இந்த யாத்திரையின்போது பிரம்ம சூத்திரம் முதலியவற்றிற்குத் தாம் எழுதிய விளக்கங்களை எல்லோருக்கும்

கற்பிப்பதுடன் அத்துவைதக் கோட்பாடுகளையும் நாடு முழுவதும் பரவும்படி செய்ய வேண்டும் என்ற எண்ணங் கொண்டார். காசியிலிருந்து பிரயாகை சென்று அங்குக் குமாரில பட்டரைத் தரிசிக்க வேண்டும் என்று எண்ணினார்.

வேதத்தில் பூர்வ மீமாம்ஸை, உத்தர மீமாம்ஸை என்று இரண்டு பகுதிகள் உண்டு. பூர்வ மீமாம்ஸையைக் கர்மகாண்டம் என்றும் உத்தர மீமாம்ஸையை ஞானகாண்டம் என்றும் கூறுவர். கர்மகாண்டம் என்பது சடங்குகளைப் பற்றிக் கூறுவது. சடங்குகள் மூன்று வகைப்பட்டவை. அவை, நித்தியம், நைமித்திகம், காம்யம் என்று பிரிக்கப்பட்டிருக்கின்றன. அனுதினமும் விடாமல் செய்ய வேண்டிய சடங்குகள் நித்ய கர்மாக்கள் எனப்படும். குறிப்பிட்ட சில நேரங்களிலும் நோன்புகளின் போதும் செய்ய வேண்டியவை நைமித்திக கர்மாக்கள் எனப்படும். குறிப்பிட்ட பலன்களை எதிர்பார்த்துச் செய்யும் காரியங்கள் காம்ய கர்மாக்கள் எனப்படும். சுயநலத்தைக் காப்பதற்கும், பொது நலத்தைப் பேணவும் இந்தக் கர்மாக்கள் செய்யப்படுவது உண்டு. வீட்டில் செய்யும் பூஜைகள் தன்னலத்திற்காகச் செய்யப்படுபவை. கோவில்களிலோ, பொது இடங்களிலோ செய்யப்படும் வேள்விகள் பொது நலத்தைப் பேணும் நோக்கம் கொண்டவை. கிராமங்களிலோ, நகரங்களிலோ பரவியிருக்கும் நோய்களிலிருந்து நிவாரணம் பெறவோ, அல்லது மழையை வேண்டியோ செய்யப்படும் ஜபங்கள் முதலியவை காம்ய வகையைச் சேர்ந்தவை.

குமாரில பட்டர், மண்டன மிஸ்ரர், ஜைமினி ஆகியவர்கள் கர்ம மார்க்கத்தில் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டவர்கள். வேதத்தில் கூறிய கர்மகாண்டத்தையே முக்கியமாகக் கருதி அதையே பின்பற்றி நடந்து மற்றவர்களுக்கும் அந்த நெறியையே உபதேசித்தனர். இதற்குப் பூர்வ மீமாம்ஸா மதம் என்று பெயர். அவர்களது கோட்பாடுகளின்படி, கடவுள் இருக்கிறாரா இல்லையா என்ற ஆராய்ச்சி தேவையற்றது. வேதத்தில் விதித்திருக்கும் சடங்குகளை எல்லோரும் தவறாமல் செய்ய வேண்டும். அவைகளைச் செய்பவர்களுக்கு மிகுந்த நற்பலன்கள் உண்டாகும். விதிக்கப்பட்ட கர்மாக்களைச் செய்து அவற்றிற்குண்டான நற்பலன்களைப் பெற்று மக்கள் நல்வாழ்வு பெறமுடியும். இதில் கடவுள் செயல் ஒன்றுமில்லை. எனவே, கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பது தேவையற்ற வாதம் என்பது அவர்களது கருத்து. துறவிகளுக்குக் கர்மாக்கள் கிடையாது. கர்மாக்கள்

செய்யாமல் இருப்பது மிகப் பெரிய தவறு. எனவே, துறவியாவது அங்கீகரிக்கப்பட்ட செயலல்ல. இப்படிப்பட்ட கோட்பாடுகளில் மிக உறுதியாக இருக்கும் பூர்வ மீமாம்ஸகர்களுக்குத் துறவிகளின் பால் ஒரு விரோத மனப்பான்மை ஏற்பட்டது.

இந்தக் கொள்கையில் உள்ள ஒரு நெருடலைப் பூர்வ மீமாம்ஸகர்கள் உணரவில்லை. கர்மாவையே செய்துகொண்டு இருப்பவர்களுக்கு வாழ்க்கையிலுள்ள சாதாரண இன்பங்களே கிடைக்கும். நித்தியமான இன்பம் கிடைக்காது.

அவர்கள் திரும்பத் திரும்பப் பிறப்புகள் எடுத்துக்கொண்டு இவ்வுலகிலேயே உழல வேண்டும். இதைத்தான் சங்கரர்

" புனரபி ஜனனம் புனரபி மரணம்
புனரபி ஜனனீஜடரே சயனம்
இஹஸம் ஸாரே ப$^{3}$ஹுது$^{3}$ஸ்தாரே
க்ருபயா பாரே பாஹிமுராரே "

என்று ப$_{4}$ஜகோ$_{3}$விந்த$_{3}$த்தில் குறிப்பிடுகிறார். மீண்டும் மீண்டும் பிறப்பு, இறப்பு, தாயின் கருப்பையில் வாசம் என்ற சுழற்சியில் சிக்கி உழலுகிறோம். இந்த ஸம்ஸாரமென்னும் கடலைக் கடப்பதற்கு, முரனைக் கொன்ற திருமாலே, மனமிரங்கி அருள்புரிவாயாக என்று வேண்டுகிறார். நிலையில்லாத உலக வாழ்வே நிலையானது என்று நம்பி வாழும் மக்களிடம் நிலையான இன்பம் எது என்பதை உணரச் செய்து அவர்களைக் கடைத்தேறச் செய்வது தமது கடமை என்று சங்கரர் எண்ணினார்.

இந்தக் குறிக்கோளுடன் சங்கரர் குமாரிலபட்டரைச் சந்திக்க விழைந்தார். ஆனால், சங்கரர் சென்ற சமயம் குமாரிலபட்டர் வாதம் செய்யும் நிலையிலிருக்கவில்லை. அவர் துஷாக்னிப்ரவேசம் செய்து தம் உடலை மாய்த்துக்கொண்டிருந்தார். அதாவது உமியினால் உண்டாக்கப்பட்ட தீயில் வெந்து கொண்டிருந்தார். இவரது இந்தச் செய்கை நமக்கு ஒரு மேலான நடைமுறையைப் புகட்டுகிறது.

பூர்வ மீமாம்சகர்கள் புத்தமதக் கோடபாடுகளை ஏற்றுக் கொள்ளவில்லை. அக்கொள்கைகளைக் கண்டித்து வேதக் கோட்பாடுகளுக்குட்பட்ட மதத்தை நிலைநிறுத்துவதே அவர்களது நோக்கம். புத்தமதத்தைக் கண்டனம் செய்ய வேண்டுமென்றால் அந்தக் கோட்பாடுகளை நன்கு அறிந்துகொள்ள வேண்டும். பௌத்தர்கள் தமது மதக் கொள்கைகளை, புத்தமதத்தைச் சேர்ந்தவர்களைத் தவிர மற்றவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க

மாட்டார்கள். எனவே, குமாரிலபட்டர் பௌத்தத் துறவியைப் போல் வேடமணிந்து புத்த விகாரத்திற்குச் சென்று அவர்களுடன் வாழ்ந்து அம்மதத் தத்துவங்களை நன்கு தெரிந்து கொண்டார். சிறிது காலத்திற்குப் பிறகு உண்மை வெளிப்பட்டது. அங்கிருந்த புத்தர்கள் குமாரிலபட்டரைக் கொல்லும் முயற்சியில் அவரைப் புத்த விகாரத்திலிருந்து கீழே தள்ளிவிட்டனர். வேதத்தில் அவருக்கிருந்த அசைக்க முடியாத நம்பிக்கை அவரைச் சாகாமல் காப்பாற்றிவிட்டது. எனினும், அவருக்கு ஒரு கண் போய்விட்டது. பொய் சொல்லிப் புத்தர்களை ஏமாற்றியது மிகப்பெருந்தவறு என்று மனம் நொந்த குமாரிலபட்டர் உயிர் வாழ விரும்பவில்லை. அணுஅணுவாகத் துடித்துச் சாவதே அவர் செய்த தவற்றிற்குண்டான கழுவாயாகும் எனக் கருதி அவர் உமியைக் கொண்டு தீ மூட்டி அதில் தம்மைப் புதைத்துக் கொண்டு உயிரை மாய்த்துக்கொள்ளும் முயற்சியில் தீவிரமாக ஈடுபடலானார். இது சங்கரரது காலத்தில், நமது நாட்டில், உண்மையும், அறநெறியும் எவ்வளவு மேலானவைகளாக மதிக்கப்பட்டு வந்தன என்று நமக்கு உணர்த்துகிறது.

இறக்கும் தருவாயில் இருந்த குமாரில பட்டர் சங்கரரை நோக்கி, 'ஐயா! நான் தங்களிடம் வாதம் செய்யும் நிலையில் இல்லை. நீர் மண்டனமிச்ரர் என்ற கர்ம மார்க்கக்காரரிடம் சென்று வாதம் செய்து அவர் மனத்தை மாற்றுங்கள்' என்று கூறினார்.

மண்டனமிச்ரர் மாயாவாதமான புத்த மதக்கோட்பாடுகளைக் கண்டித்து மக்களை வேத நெறிக்குத் திருப்பியவர் என்றாலும், அவர் கடைப்பிடிக்கும் கர்மமார்க்கம், மக்களுக்குப் பேரின்ப நிலையை அடைவதற்குப் பயன்படாது என்று நன்குணர்ந்த சங்கரர் மண்டனமிச்ரருடன் வாதம் செய்து அவரை இறையுணர்வின் மேன்மையை அறியும்படி செய்து ஞானமார்க்கத்தைப் பின்பற்றச் செய்ய வேண்டும் என விரும்பினார். எனவே, மண்டனமிச்ரரைக் காணும் பொருட்டுச் சங்கரர் மாஹிஷ்மதி நகரத்திற்குச் சென்றார். அங்குத் தண்ணீர் சுமந்துவந்த சில பெண்களிடம் 'மண்டனமிச்ரரின் வீடு எங்குள்ளது?' என்று கேட்டார். அந்த ஊரில் உள்ள பெண்களும் அறிவிற்சிறந்தவர்களாக இருந்தனர். அவர்கள் ஒரு சுலோகத்தின் மூலமாகச் சங்கரரின் கேள்விக்கு விடையளித்தனர். 'எந்த வீட்டில் கிளிகள் சிறந்த தத்துவங்களைப்பற்றி வாதம் செய்து கொண்டிருக்கின்றனவோ அதுதான் மண்டனமிச்ரரின் வீடு' என்று கூறினார். சங்கரர் மண்டனமிச்ரரின் வீட்டை அடைந்தபொழுது வெளிக்கதவு தாளிடப்பட்டிருந்தது. வீட்டின் உள்ளே ஒரு சிராத்தம்

(திதி) நடந்துகொண்டிருந்தது. கர்மகாண்டத்தில் மிகுந்த பற்றுடையவராய் இருந்த மண்டமிச்ரர் சிராத்தத்தை மிகவும் நியமத்துடன் செய்வதில் கவனமாய் இருந்தார். வாயிற்கதவு மூடப்பட்டிருந்ததால் சங்கரர் அவ்வீட்டின் முற்றத்தின் வழியாக உள்ளே இறங்கினார். சிராத்தத்தின் நடுவில் துறவி வீட்டிற்குள் வந்ததும் மண்டனமிச்ரர் மிகவும் கோபம் கொண்டு சங்கரரைக் கடிந்து கொண்டார். அங்குச் சிராத்தத்தை நடத்தி வைத்து உணவு கொள்வதற்காக வந்திருந்த வியாசர், ஜைமினி போன்றவர்கள் மண்டனமிச்ரரை அமைதியுடன் இருந்து மேலோர்கடனை (சிராத்தத்தை) நல்ல முறையில் நடத்தி முடிக்கும்படி அறிவுறுத்தினர். சடங்கு முடிந்தபிறகு சங்கரருக்கும் மண்டனமிச்ரருக்கும் இடையே வாதம் தொடங்கியது.

வாதம் என்றால் என்ன? கருத்து முரண்பாடு தோன்றும் போது சாத்திரங்கள் மூலமும், மேற்கோள்களின் வாயிலாகவும் பேசிக் கருத்துப் பரிமாற்றம் செய்து நல்ல முறையில் உண்மைப் பொருளை உணர்ந்துகொள்வதற்காகக் செய்யப்படும் சொற்போர் புரிதல் இது 'வாதம்' எனப்படும். தாம் சொல்வது தான் சரி, மற்றவர்கள் சொல்வது தவறு என்று நிலைநாட்ட விழைவது 'ஜல்பம்' எனப்படும். தாம் எதையும் சொல்லி விளக்க முற்படாமல், எதிர்த்தரப்பினர் கூறுவது தவறு என்று நிலைநிறுத்த முற்படுவது 'விதண்டா' எனப்படும்.

மூன்று வகைச் சொற்போர்களுக்கிடையே வாதத்தின் சிறப்பு பகவத்கீதையில் கூறப்பட்டுள்ளது. (அத்யாயம் 10. சுலோகம் 32).

" ஸர்கா$_3$ ணாமாதி$_3$ ரந்தச்ச மத்$_4$யம் சைவாஹமர்ஜுன |
அத்3யாத்மவித்$_3$யா வித்$_3$யானாம் வாத$_3$ : ப்ரவத$_3$தாமஹம் || "

(உயிருள்ளது, உயிரற்றது) ஆகிய எல்லாப் படைப்புகளிலும் நான் ஆரம்பமாகவும், முடிவாகவும், நடுவாகவும் இருக்கிறேன். வித்தைகளுக்குள், அத்யாத்ம வித்தையாகவும், சொற்போர் புரிபவர்களிடம் (உண்மையை அறிந்து கொள்வதற்காகச்) செய்யப்படும் வாதமாகவும் நான் இருக்கிறேன் என்று கண்ணன் அர்ஜுனனிடம் கூறுகிறார்.

இதில் கருத்தில் கொள்ளவேண்டியது என்னவென்றால், ஜல்பத்தினாலும், விதண்டாவினாலும் விரோதம், கோபம், பிறருக்குத் துன்பம் விளைவிப்பது, கர்வம் முதலிய தீயகுணங்களே வளரும். ஆனால், வாதத்தினால் உண்மை உணரப்பட்டு

எல்லோருக்கும் மகிழ்ச்சி உண்டாகும். எனவே, வாதத்தின் சிறப்பை உலகோர் அறியும் பொருட்டு, இறைவனாகிய கண்ணன் தானே வாதவடிவமாக இருப்பதாகக் கூறுகிறான்.

கருத்தினால் மிகவும் வேறுபட்டவர்களானாலும், சங்கரரும், மண்டனமித்ரரும் செய்தது தர்ம நெறிக்குட்பட்ட வாதமேயாகும்.

வாதம் என்றால் அதற்கொரு நடுவர் வேண்டுமல்லவா? நடுவரது நியமனத்தில் இருசாராருக்கும் எந்தவிதமான இடர்ப்பாடும் ஏற்படவில்லை. மண்டனமித்ரரின் துணைவியாரான ஸரஸவாணி மிகச்சிறந்த அறிவாளி (கலைமகளின் அவதாரம் என்று கூறப்படுபவர்). எனவே, அவரை வாதத்திற்கு நடுவராக நியமிக்க இருசாராரும் ஒப்புதலை அளித்தனர். வாதத்தின் நடுவராக இருப்பவர் வாதாடுபவர்களில் ஒருவருடைய மனைவி. அவர் நடுநிலையில் நின்று நியாயம் வழங்குவாரா என்ற ஐயப்பாடு எழுவது இயல்பு. ஆனால், சங்கரர் வாழ்ந்த காலத்தில் மக்களிடம் நேர்மையும் சீலமும் மிகுந்திருந்தன. வேண்டியவர், வேண்டாதவர் என்ற பாகுபாடின்றி நியாயம் வழங்கும் தெய்வத்தன்மையை உடையவர்களா யிருந்தனர்.

ஸரஸவாணியின் கணவர் மண்டனமித்ரர். கணவர் தோற்று விட்டார் என்று கூறுவது மனைவிக்கு ஒரு தருமசங்கடமான நிலையைத் தோற்றுவிக்கும் என்பதனால் ஓர் உபாயம் மேற் கொள்ளப்பட்டது. வாதம் செய்பவர் ஒவ்வொருவர் கழுத்திலும் ஒவ்வொரு மாலையை இடுவது; அதில் எவர் கழுத்திலுள்ள மாலை வாடுகிறதோ அவர் தோற்றவராவார் என்று ஒப்புக்கொள்ளப் பட்டது. வாதம் தொடர்ந்து 21 நாட்கள் நடந்தது. இருவரும் சளைக்காமல் வியப்படையும் வகையில் உன்னத நிலையில் நின்று வாதம் செய்தனர். வாதத்திற்குண்டான நியதி என்னவென்றால், மண்டனமித்ரர் தோற்றால் அவர் துறவறம் பூண்டு சங்கரரின் சீடா ஆகிவிடவேண்டும். சங்கரர் தோற்றுவிட்டால் அவர் துறவறத்தை நீத்து இல்லறத்தை மேற்கொள்ள வேண்டும் என்பதாகும்.

ஒவ்வொரு நாளும் வாதம் முடிந்ததும் ஸரஸவாணி வாதம் புரிபவர் இருவரையும் உணவருந்த அழைப்பார். இறுதி நாளன்று மண்டனமித்ரரது கழுத்திலிருந்த மாலை வாடிவிட்டதால், சங்கரரை நோக்கி 'தாங்கள் தங்கள் சீடருடன் உணவருந்த வாருங்கள்' என அழைத்தாராம். இதில் அந்த மாதர்குலவிளக்கின் சீலமும், தீர்ப்புச் சொல்லிய மேலான பாங்கும் வெளிப்படுகின்றன. பந்தய விதிகளின்படி மண்டனமித்ரர் துறவறம் பூண்டு, ஸுரேச்வரர் என்ற

பெயருடன் சங்கரரின் சீடரானார். அவரைச் சிருங்கேரி மடத்தின் முதல் பீடாதிபதியாகச் சங்கரர் நியமித்தார். மண்டனமித்ரர் துறவியானதும் அவருடைய மனைவியான ஸரஸவாணி (மாஹிஷ்மதி நகரத்திலிருந்து) வேறு இடத்திற்குச் செல்ல முற்பட்டாள். சங்கரர் அத்தெய்வமங்கையை நோக்கி 'அம்மா! நீ எங்கும் செல்ல வேண்டாம். சிருங்கேரியில் சாரதையாகக் கோவில் கொண்டு அருள்பாலித்திட வேண்டும்!' என்று வேண்டிக் கொண்டார். ஸரஸவாணியும் அதற்கிணங்கினாள். எனவே, சிருங்கேரி பீடமானது சாரதாபீடம் என வழங்கலாயிற்று.

சீடரான ஸுரேச்வரரை அழைத்துக்கொண்டு சங்கரர் கைலாயம் சென்றார். சிவபெருமானது அருளால் அவருக்கு அங்கு ஐந்து ஸ்படிக லிங்கங்கள் கிடைத்தன. பிறகு பதரி, கேதாரம் முதலிய திருத்தலங்களுக்குச் சென்று வணங்கினார். பிறகு நாடு முழுவதும் சென்று வேதாந்த விசாரம் செய்து மக்களை நல்வழிக்குத் திருப்ப அவாக் கொண்டார்.

மரணப்படுக்கையிலிருந்த ஆசார்யரின் தாயார் தம் மகனை நினைத்தார். ஞானதிருஷ்டியினால் இதை உணர்ந்த சங்கரர் தமது யோக சக்தியால் உடனே தாயாரின் இருப்பிடத்தை அடைந்தார். தாம் துறவறம் மேற்கொள்ளும்போது தாயாரின் இறுதிக்காலத்தில்



அவரது அருகாமையிலிருந்து அவருக்கு மகன் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்வதாக வாக்குக் கொடுத்திருந்தார். அதன்படி தாயாரின் அருகில் இருந்துகொண்டு தாயாரின்

பரகதிக்காகப் பல தோத்திரங்களைப் பாடினார். தாயாரது உயிர் பிரிந்த பிறகு அங்கிருந்தவர்கள் துறவி தாயாருக்கு ஈமக் கடன்களைச் செய்யக்கூடாது என்று எதிர்ப்புத் தெரிவித்தனர். உடலை அப்புறப்படுத்துவதற்கு உதவ மறுத்தனர். எனவே, சங்கரர் தம் தாயாரது உட்லை வீட்டின் பின்புறமே தகனம் செய்துவிட்டார். இந்த வழிமுறை இன்றளவும் கேரள நம்பூதிரி குடும்பங்களில் கடைப்பிடிக்கப்படுகிறது். மூடக்கொள்கைகளையும் ஏற்க முடியாத மதக் கோட்பாடுகளையும் சங்கரர் உடைந்தெறிந்ததற்கு இது ஒரு சான்றாகும்.

துறவியாக இருந்தாலும் தாயாரின் பிரிவைத் தாங்குவது மிகவும் கடினம். தாயார் தம்மை வயிற்றிலே சுமந்தபொழுது எத்துணைத் துன்பங்களை அனுபவித்திருப்பார், எத்தகைய தியாகங்களைச் செய்திருப்பார் என்று அவைகளை நினைவு கூர்ந்து 'மாத்ருகா பஞ்சகம்' என்ற சுலோகத்தைப் பாடியி ருக்கிறார். அதில் மகன் தாயாருக்கு எவ்வளவு கடமைப்பட்டவனா யிருக்கிறான் என்பதை நன்கு விளக்கியிருக்கிறார். முதியோர் இல்லங்களில் வயதான பெற்றோர்கள் வாழும் கலாசாரம் பெருகியிருக்கும் இந்தக் காலத்தில் அனைவரும் சங்கரர் மாத்ருகா பஞ்சகத்தில் கூறியவைகளைப் புரிந்துகொண்டால் நலமாக இருக்கும்.

தாயாருக்குச் செய்ய வேண்டிய கடமைகளை முடித்துவிட்டு ஆசார்யர் தம் சீடர்களை அழைத்துக்கொண்டு தேசயாத்திரை செய்யலானார். அவர் இந்தியாவில் தெற்கே ராமேச்வரத்திலிருந்து வடக்கே காஷ்மீர் வரையிலும், மேற்கே துவாரகையிலிருந்து கிழக்கே பூரி வரையிலுமுள்ள எல்லாப் புண்ணியத் தலங்களுக்கும் சென்று அங்குள்ள மூர்த்திகளைப் பாடிப் பரவியதோடு, ஸனாதன தர்மத்தையும், அத்வைதக் கொள்கைகளையும் அனைவருக்கும் போதித்தார். பிற மதத்தவர்களையும், கபாலிகர்களையும் வாதத்தில் வென்று அனைவரையும் வேதக் கோட்பாடுகளை ஏற்கும்படி செய்தார். அவர் சென்றதாகக் கூறப்படும் திருத்தலங்களைப் பற்றியும், அங்கு அவர் நிகழ்த்திய அற்புதங்களையும், அந்தத் தலங்களுடன் தொடர்புள்ள தோத்திரங்களைப் பற்றியும் தெரிந்து கொள்வது மிகப் பயனுள்ளதாக இருக்கும். அவருடைய உபதேசங்களைக் கேட்டுப் பாமரரும் பண்டிதரும் மிக்க பயனும் மகிழ்ச்சியும் அடைந்தனர். அவரது திக் விஜயத்தைப் பற்றிய

விவரங்கள் 'சங்கரரின் திக்விஜயம்' என்ற பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

திக்விஜயம் என்பதற்கு எல்லாத் திக்குகளையும் (திசைகளையும்) வெல்வது என்பது பொருள். திக்கை வெல்வது என்றால் திக்கில் உள்ளவர்களை யெல்லாம் ஜெயிப்பது என்று அறிந்துகொள்ள வேண்டும். சங்கரர் தாம் சென்றவிடங்களில் எல்லாம் தாம் அறிந்தவற்றை மற்றவர்களுக்குப் போதித்து, பண்டிதர்களிடம் நல்ல முறையில் வாதம் செய்து தமது ஆழ்ந்த புலமையை நிலை நாட்டினார். வடமொழியிலும், வேதங்களிலும் மேலான தேர்ச்சி பெற்று, எல்லாம் அறிந்தவரை வடமொழியில் ஸர்வஜ்ஞர் என்று கூறுவர். அவர்களே ஸர்வஜ்ஞ பீடத்தில் ஏறத் தகுதி உள்ளவர்கள். அத்தகைய பீடங்கள் காச்மீரத்திலும், காஞ்சியிலும் இருந்தன. சங்கரர் அப்பேற்றைக் காஞ்சியில். அடைந்தாரா அல்லது காச்மீரத்தில் பெற்றாரா என்பதில் கருத்து வேறுபாடுகள் இருந்தபோதிலும், சங்கரர் ஸர்வஜ்ஞ பீடத்தில் ஏறினார் என்பதை அனைவரும் ஒப்புக்கொள்கின்றனர். அவர் அப்படிப்பட்ட ஒப்புயர்வற்ற அறிஞராவார்.

### சங்கரரின் இறுதி நாட்கள்

பூமியில் பிறந்த அனைவரும் ஒருநாள் மறைய வேண்டும். அந்த நியதிப்படி 32 ஆண்டுகளையே ஆயுளாகப் பெற்ற நம்முடைய ஆசார்யரும் தமது பூத உடலைத் துறக்க நேரிட்டது. அவர் எங்குத் தம் பூத உடலை நீத்தார் என்பதை உறுதியாகக் கூறமுடியவில்லை.

ஆனந்தகிரியும் மற்றும் சிலரும், சங்கரர் காஞ்சியில்தான் முக்தி அடைந்தார் என்று கூறுகிறார்கள். மற்றும் சிலர் அவர் கேதார்நாத்தில் சிவனுடன் இணைந்ததாகக் கருதுகிறார்கள். சித்விலாஸர் என்பவர் சங்கரர் பதரியில் மறைந்ததாகக் குறிப்பிட்டுள்ளார். மேலும் நேபாளத்திலுள்ள ஸித்தேச்வரி என்ற இடத்திலிருந்து சங்கரர் கிளம்பி தத்தாத்ரேய ஆச்ரமத்திற்கு வந்து அங்குத் தண்டத்தையும், கமண்டலத்தையும் விட்டுவிட்டு அங்கிருந்து சென்றுவிட்டார் என்று லக்ஷ்மண சாஸ்த்ரிகள் கருத்துத் தெரிவித்திருக்கிறார். அதற்குப் பிறகு என்ன நிகழ்ந்தது என்பதை அவர் சொல்லவில்லை. திருச்சூரில் அவர் மறைந்ததாக ஒரு சாரார் கூறுகின்றனர்.

சங்கரர் எந்த இடத்தில் மறைந்தார் என்ற கேள்விக்கு விடை காண்பது எளிதான காரியமன்று. இந்த விவாதத்தைத் தொடர்வதால் நாம் எந்தப் பயனையும் அடையப் போவதில்லை. இந்தச் சர்ச்சையின் விளைவுகள் சங்கரரையும் எந்த விதத்திலும் பாதிக்கா.

அவர் செய்த நற்பணிகளும், அவர் இயற்றிய நூல்களும், அவர் செய்த உபதேசங்களும் அவரது புகழை நிலைநிறுத்தப் போதுமானவை.

## சமுதாயச் சீர்திருத்தத்தில் சங்கரரது பங்கும் அவர் ஆற்றிய மேலான தொண்டும்

சங்கரர் தோன்றுவதற்கு முன்பு நமது நாட்டில் 72 மதங்கள் இருந்தன. அவை ஒன்றுக்கொன்று முரண்பாடானவை. சில மதங்கள் கொடூரமான வழிபாட்டு முறைகளைக் கொண்டவை. தெய் வத்திற்கு அச்சம் தரும் வடிவத்தை அமைத்து அதற்குக் கொடூரமான முகங்கள், பற்கள், இவற்றை அமைத்து மண்டையோட்டு மாலை அணிவித்து, வில், வாள், ஈட்டி, சூலம் முதலிய கொடிய ஆயுதங்களைக் கொடுத்து, விலங்குகளைப் பலியிட்டுக் கொடூரமான வழியில் வழிபட்டுவந்தனர். மேலும் மதத்தின் பெயரால் சண்டைகள் மலிந்து, மனிதர்களை ஒன்றுபடுத்தும் நெறியாக இல்லாமல், மதங்கள் வேறுபாடு விளைவிக்கும் விஷப் பாதைகளாக இருந்தன. சக்தி வழிபாட்டில் வாமாசாரம் என்ற முறை நிலவிவந்தது. இது வங்காளத்திலும் அதைச் சார்ந்த பிரதேசங்களிலும் மிகுதியாகக் கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. ஆதிசங்கரர் இவற்றையெல்லாம் மாற்றி இறைவனைச் சாத்துவிகமான முறையில் வழிபாடு செய்யும் நெறியை ஏற்படுத்திக்கொடுத்தார். சக்திக்கு எல்லோரையும் வசீகரிக்கும் முறையில் உருவம் ஏற்படுத்தி, மேலான ஆடை ஆபரணங்களை அணிவித்து, நறுமண மலர்களைக் கொண்டு அலங்காரம் செய்து, பால், பழம், தேன், அன்னம், சர்க்கரைப் பொங்கல் முதலியவைகளை நிவேதனம் செய்து மகிழ்ச்சிகரமாக வழிபடும் எளிய முறையை ஏற்படுத்திக் கொடுத்தார். இந்த அஹிம்ஸா வழிபாட்டு முறைக்குச் சமயாசாரம் என்று பெயர். இது எல்லோரும் ஏற்றுக்கொண்டு எளிதில் பின்பற்றக்கூடிய கோட்பாடாக உள்ளது. மேலும் அனைவருக்கும் மகிழ்ச்சியளிக்கக் கூடிய மேலான வழிபாட்டு முறையாகவும் இருக்கிறது.

சக்தி வழிபாட்டை நெறிப்படுத்தி, ஸ்ரீ சக்ரம் என்ற எந்திரத்தை நிறுவி, அதன் மூலம் உலகமனைத்திற்கும் தாயாகிய தேவியை ஆராதிக்கும் முறையை வகுத்து மகோன்னதமாகச் செய்த பெருமை சங்கரரையே சாரும்.

'ஸ்ரீகாஞ்சி காமாக்ஷி ஸந்நிதியில் ஸ்ரீசக்ர ஸ்தாபனம் செய்தார். அன்னையின் உக்கிரத்துவத்தைக் குறைத்து, சாந்தமாக்கினார். திருவொற்றியூரில் ஒரு துஷ்ட கிரகத்தைக் கிணற்றில் அடக்கி, ஆண்டுக்கொரு நாள் அதற்கு வழிபாடியற்றவும் செய்தார். மூகாம்பிகை க்ஷேத்ரத்தில் ஸ்ரீசக்ர பிரதிஷ்டை செய்தார். ஜம்புகேசுவரத்தில் (திருவானைக்கா) அகிலாண்டேசுவரியின் உக்ரக்கலையைக் குறைக்க, சிவசக்கரம், ஸ்ரீசக்கரம் இரண்டையும் தாடங்கமாகச் (காதணி) செய்து அன்னைக்கு அணிவித்துச் சாந்த சொரூபிணியாக்கினார்'. சக்தி வழிபாட்டு முறைகளைச் சாந்தமயமானதாக மாற்றியதற்கு இவையே சான்றுகள்.

மேலும் உலகில் பல மதங்கள் இருக்கின்றன. நமது இந்து மதத்தைத் தவிர வேறு எந்த மதத்திலும் இறைவனைத் தாயாராக வழிபடும் முறை காணப்படவில்லை. தாயைப் போன்ற கருணை உள்ளம் படைத்தவர்கள் எங்கும் இல்லை. 'குபுத்ரோ ஜாயேத' - கெட்ட மதியுடைய குழந்தைகள் இருந்திருக்கிறார்கள், ஆனால் 'க்வசிதபி குமாதா ந பவதி' கொடூரமான தாய் எங்குமே இருந்ததில்லை என்பது வழக்கு. தாயன்பிற்கு ஈடு இணை இல்லை. இவ்வளவு மேன்மை பொருந்திய தாயை வழிபடுவதும், அவளிடம் மனச்சுமையைக் கூறி அமைதியைப் பெறுவதும் எளிதல்லவா? இறைவி உலகத்திற்கே அன்னையாதலால், பல பக்தர்களும் மகான்களும் அவளை வழிபட்டு வரம் பெற்று மகிழ்ந்திருக்கிறார்கள். சங்கரர் உலகமனைத்திற்கும் தாயாகிய பரதேவதையை ஸௌந்தர்யலஹரீ என்ற நூலில் நூறு சுலோகங்களால் துதித்திருக்கிறார். இதில் தேவியின் எல்லையற்ற கருணையும், அளவற்ற அருளாற்றலும் மிக அழகாகக் கூறப்படுகின்றன. தேவியினது தலையிலிருந்து கால்கள் வரை உள்ள எல்லா அவயவங்களின் அழகும், வரமளித்து வாழ்விக்கும் பாங்கும் விவரிக்கப்படுகின்றன. ஒவ்வொரு சுலோகத்திற்கும் ஒவ்வொரு தனித்தன்மை உண்டு; பலன் உண்டு. அவைகளைப் பாராயணம் செய்வதால் வேண்டுபவர்களுக்கு வேண்டிய பலன் கிடைக்கும் என்பது பலரின் அனுபவம். நமக்கு வேண்டிய பலவிதமான காரிய ஸித்திகளைப் பெறும் வழிமுறைகள் கூறப்பட்டுள்ளன. 'லஹரீ' என்பதற்கு வெள்ளம் (அலைகள்) என்று பொருள்.

ஸௌந்தர்யலஹரீ என்பதற்கு அழகு வெள்ளம் என்று பொருள். அழகு வெள்ளத்தோடு, அருள் வெள்ளத்தையும் பெருக் கெடுத்தோடச் செய்து பராசக்தியானவள் பக்தர்களை (இன்றளவும்) காப்பாற்றிக்கொண்டிருக்கிறாள்.

ஆதிசங்கரர் எந்த மதத்தையும் நிறுவவில்லை. அத்வைதம் என்பது ஒரு மதப்பிரிவன்று. ஆராய்ந்து அறிந்து கொள்ள வேண்டிய ஓர் உண்மை. 'அத்வைதம்' என்பதற்கு 'இரண்டாக இல்லாமல் இருப்பது' என்பது பொதுவாகச் சொல்லப்படும் பொருள். பரமாத்மா அல்லது பிரம்மம் என்பது அழிவில்லாதது. இந்த உலகமானது (அதாவது ஜகத்) அழியக் கூடியது. பிரம்மமும் ஜகத்தும் வெவ்வேறாக இருப்பதாகத் தோற்றமளிக்கிறதே தவிர அவை இரண்டும் ஒன்றே.

பகுத்தறிவினால், நல்லது - கெட்டது, செய்யக்கூடியது - செய்யக்கூடாதது, நிலையானது - நிலையற்றது எது என்பதை ஆராய்ந்து அறிந்துகொள்ளும் நிலையை அடைந்தவர்களே பிரம்மத்தை அறிந்துகொள்ள முடியும். முதிர்ந்த ஞானம் அடைந்தவர்களே இதைப் புரிந்துகொள்ள முடியும். சராசரி மனிதனிடம், 'நீ காண்பது எல்லாம் பொய், ஒரு மாயத்தோற்றம்' என்றால், அவனால் புரிந்துகொள்ள முடியாது. அவனது மனத்தைச் சிறிது சிறிதாகப் பக்குவப்படுத்தினால்தான் அவனால் அத்துவைதத் தத்துவத்தை அறிந்துகொள்ள முடியும். ஞானம் கடையில் வாங்கும் பொருளன்று. மாயவித்தைகளால் அறியக்கூடியதன்று. அறிவு முதிர்ச்சியினால்மட்டும் அடையக்கூடியது. ஞானம் அடைவதற்கு முதல்படி பக்தியாகும். பக்தியினால் மனம் படிப்படியாகப் பண்படும். மனித நெஞ்சத்திலே தீய எண்ணங்கள் என்னும் ஒரு கல் இருப்பதாக அருணகிரிநாதர் கூறுகிறார். (நெஞ்சக் கன கல்) அந்தக் கல்லானது, ஒவ்வொருவரும் தாம் செய்த தவற்றை நினைத்துக் கண்ணீர் மல்கிக் கசிந்து உருகினால்தான் நெகிழும். பிறவிக் கடலில் உழல்பவர்களது உடலில் கல் இருந்தால் அவர்கள் நீரில் முழுகிவிடுவார்கள். நெஞ்சக்கனகல்லானது நெகிழ்ந்து உருகினால்தான் நீரின்மேல் மிதக்க முடியும். நீரின் மேல் மிதப்பவர்கள்தான் இறைவனாகிய தெப்பத்தைப் பற்றிக்கொண்டு பிறவிக்கடலைக் கடக்க முடியும். உன்னுடைய பெயரைச் சொன்னதால் என் மனம் களங்கமற்றதாக ஆனது - 'நீ நாமமுசே நாமதி$_3$ நிர்மலமைனதி$_3$' என்று தியாகப்பிரம்மம் கூறுகிறார். பக்திக்கு முதற்படி மூர்த்தி வழிபாடாகும். ஏதாவது ஓர் உருவத்தின்பால் மனத்தைச் செலுத்தி வழிபட்டால்தான் மனத்தைக் கட்டுப்



3

பாட்டிற்குள் கொண்டுவர இயலும். ஆனால், இந்த உருவத்தைத் தேர்ந்தெடுப்பதில் ஒரு நடைமுறைச் சிக்கல் ஏற்படும் வாய்ப்பு இருக்கிறது. மனித இயல்பு என்னவென்றால், ஒருவர் சொல்வதை மற்றவர் ஏற்பது என்பது அவ்வளவு எளிதன்று. மற்றவர் சொல்வது ஏற்புடையதாக இருப்பினும் தன்மனத்தினுள் இயல்பாக இருக்கும் 'நான்' என்னும் அகந்தை மற்றவர் கருத்தை எளிதில் ஏற்றுக்கொள்ள இடம் கொடுக்காது. இப்பண்பை நன்குணர்ந்த சிறந்த மனவியல் நிபுணரான (Psycholosist) ஆதிசங்கரர் அனைவரும் ஏற்றுக் கொள்ளும்படியான ஒரு வழிமுறையை ஏற்படுத்தினார். அவரது காலத்திலே பலவித வழிபாட்டு முறைகள் இருந்தன. தெய்வங்கள் பல உருவங்களிலும், பெயர்களிலும் வழிபடப்பட்டன. அவை எல்லாவற்றையும் ஆராய்ந்து, நன்கு பாகுபாடு செய்து, ஆறுவிதமான தெய்வவழிபாட்டு முறைகளை ஏற்படுத்தினார். இவைகள் ஷண்மதங்கள் (ஆறுவிதமான மதங்கள்) என்று அழைக்கப்படலாயின. இறைவனை, கணபதி, முருகன், சிவன், விஷ்ணு, தேவி, சூரியன் ஆகிய ஆறு உருவங்களில் வழிபடலாம் என்று ஓர் அரிய சீர்திருத்தப் பாதையை அமைத்துக் கொடுத்தார். எந்த உருவத்தில் வழிபட்டாலும் இந்த ஆறு மூர்த்திகளும் பிரம்மத்தின் ஸ்வரூபங்களே என்ற தத்துவத்தின் அடிப்படையில் இந்த வழிபாட்டு முறையை ஏற்படுத்தினார். இந்த வழிபாட்டு முறை எல்லோருக்கும் ஏற்புடையதாக இருந்ததால் மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதனால் சங்கரர் மக்களால் 'ஷண்மத ஸ்தாபனாசார்யர்' என்று அழைக்கப்படலானார்.

மத சம்பந்தமான விஷயங்களில் ஒரே கடவுளைத்தான் வணங்க வேண்டும். அவரை ஒரே பெயரிட்டுத்தான் அழைக்க வேண்டும் என்கிற 'சர்வாதிகார'ப் போக்கைத் தவிர்த்து ஜனநாயக முறையைப் புகுத்தி வழிபாட்டுச் சுதந்திரத்தை அளித்த பெருமை சங்கரரையே சாரும். இது அவர் சமூகத்திற்குச் செய்த மிகச்சிறந்த தொண்டாகும். "Adi Sankara's concept of spiritualism is religious democracy".

## இந்த ஷண்மத அமைப்பின் சிறப்பு அம்சங்கள்

ஒவ்வொருவரும் தங்களுக்கு உகந்த தெய்வத்தை (ஆறு தெய்வங்களில் ஒன்றை) வழிபடலாம். அவருக்கு அந்தத் தெய்வமே பரம்பொருள். அந்தத் தெய்வத்தைத் தரிசிப்பவர்கள் எல்லோரும் உறவினர்கள். அவர்கள் வசிக்கும் தேசங்களெல்லாம் தமது தேசம், உதாரணமாக ஆதிசங்கரரின் அன்னபூர்ணாஷ்டகத்தை

எடுத்துக் கொள்வோம். அதில் சங்கரர் இந்தத் தத்துவத்தை நன்கு விளக்குகிறார்.

'மாதா ச பார்வதீ தேவீ' (எனக்கு) பார்வதி தேவியானவள் தாய், 'பிதா தே₃வோ மஹேச்வர:' ஈசுவரனானவர் தகப்பனார், 'பா₄ந்தவா: சிவப₄க்தாச்ச' சிவனடியார்கள் எல்லோரும் உறவினர்கள், 'ஸ்வதே₃சோ பு₄வனத்ரயம் - மூன்று உலகங்களும் தனது தேசம். அவர்களது தேசத்தில் தாய், தந்தையர், உறவினர்களுடன் எல்லோரும் மகிழ்வுடன் இருப்பது ஒரு பெரிய பேறாகும். இதே மனநிலையில் மற்றத் தெய்வங்களை வழிபடுபவர்களும் (விஷ்ணு, கணபதி, முருகன், தேவீ, சூரியன்) மகிழ்வுடன் இருக்க வழிகோலுவதே ஷண்மதஸ்தாபனத்தின் மேலான குறிக்கோளாகும்.

இந்த ஆறுவிதமான வழிபாட்டு முறைகளைக் கடைப் பிடிப்பவாகளும் முக்கியமாகக் கருத்தில் கொள்ள வேண்டியது என்னவென்றால், மற்றத் தெய்வங்களையோ, அவைகளை வழிபடுபவர்களையோ தங்களைவிடத் தாழ்ந்தவர்கள் என்று ஒரு பொழுதும் சொல்லக்கூடாது. எல்லாப் பிரிவினருக்கு மிடையே நன்கு இணைந்து வாழும் மனப்பக்குவம் இருக்க வேண்டும் (Peaceful Co-existence).

இந்த ஏற்பாட்டைச் சற்று விரிவுபடுத்துவோம். சங்கரர் ஏற்படுத்திய ஆறு தெய்வங்களுடன், இயேசு, அல்லா என்ற இரண்டு தெய்வங்களையும் சேர்த்து இந்த வழிபாட்டு முறையையும் அவர்களைக் கடைபிடிக்கச் செய்தால் உலகிலே மதத்தின் பெயரால் பிணக்குகள் ஏற்படாமல் தடுக்கலாம். அகில உலகும் ஓர் அமைதிப் பூங்காவாகத் திகழும். இந்த வகையில் உலக சகோதரத்துவத்திற்கு அடிகோலிய பெருமை சங்கரரையே சாரும். அவரது ஒப்புயர்வற்ற ஒரு சாதனையாகும் இது.

உலக சகோதரத்துவத்தை மக்களுக்கு உணர்த்தியது நம் பாரத நாடாகும். இதை உணர்த்திய பெருமகன் ராமாயண நாயகனான ராமன். ராமனுக்கு மூன்று சகோதரர்கள். அத்துடன் ராமன், வேடனான குகனையும், வானரனாகிய சுக்கிரீவனையபம், அரக்கனும் அயல் நாட்டவனுமாகிய வீபிஷணனையும் தன் சகோதரர்களாக ஏற்றான். உலக சகோதரத்துவத்திற்கு (Universal Brotherhood) இதைவிட வேறு சிறந்த சான்று இருக்க முடியுமா?

மக்களின் மனத்தில் பக்தி வளர்வதற்காகச் சங்கரர், இந்து மத நெறியில் சொல்லப்பட்ட எல்லாத் தெய்வங்களின் பெயரிலும் தோத்திரங்களை இயற்றியுள்ளார். கணேசபஞ்சரத்னம்,

சுப்பிரமணியபு$_4$ஜங்கம், மீனாக்ஷி பஞ்சரத்னம், அன்ன பூர்ணாஷ்டகம், கிருஷ்ணாஷ்டகம், திவபஞ்சாக்ஷரஸ்தோத்ரம் என்ற வகையில் காஷ்மீரம் முதல் கன்னியாகுமாரி வரையிலுள்ள எல்லாத் தெய்வங்களையும் குறித்து அனைவரும் எளிதில் பாராயணம் செய்யக்கூடிய அநேக சுலோகங்களை நமக்களித்திருக்கிறார். இது அவர் மனித குலத்திற்குச் செய்த மிகச் சிறந்த தொண்டாகும்.

சங்கரர் வேதத்தை நிந்தித்த மதக்காரர்களுடன் வாதம் செய்து அவர்கள் கடைப்பிடிக்கும் கொள்கைகள் சரியல்ல என்று சுட்டிக்காட்டி அவர்களையும் வேத நெறியைப் பின்பற்றும்படி செய்தார். அவர் செய்தது உண்மையை எல்லோரும் தெரிந்து கொள்வதற்காகச் செய்யப்பட்ட நேர்மையான வாதமேயல்லாது, வீண் சர்ச்சையல்ல.

சங்கரர் இந்து மதத்தில் தொன்று தொட்டு வழிபடப்பட்டு வந்த தெய்வங்களான திருமால், சிவன், கணபதி, முருகன், அம்பிகை இவர்களுக்குள் ஏற்றத்தாழ்வு ஏற்படுத்திக் குழப்பம் விளைவிக்கவில்லை. பரம்பொருள் ஒன்றேயாகும், அதை எந்த உருவத்திலும் வழிபடலாம், எப்பெயரிட்டும் அழைக்கலாம் என்று உபதேசித்தார். அவர் மக்களை வீண் விவாதங்களில் ஈடுபடச் செய்து அவர்களுக்குள் வேற்றுமையைத் தோற்றுவிக்கவில்லை.

மனிதன் உயர்வடைவதற்காக எடுத்துக்கொள்ளும் முயற்சிகளில் பக்திதான் முதல் படியாகும். சிவானந்த லஹரியில் பக்தியின் மேன்மையை விளக்குகிறார்.

" அங்கோலம் நிஜபீ$^3$ஜஸந்ததி - ரயஸ்காந்தோபலம் ஸூசிகா
ஸாத்$_4$வீ நைஜவிபு$_4$ம் லதா க்ஷிதிருஹம் ஸிந்து$_4$ஸ் ஸரித்$_3$வல்லப$_4$ம் |
ப்ராப்னோதீஹ யதா$_2$ ததா$_2$ பசுபதே : பாதா$_3$ரவிந்த$_3$த்$_3$வயம்
சேதோவ்ருத்தி-ருபேத்ய திஷ்ட$_2$தி ஸதா$_3$ ஸா ப$_4$க்திரித்-யுச்யதே || "

அங்கோலம் - ஏறழிஞ்சல் என்ற மரத்தை, நிஜ-அதனுடைய, பீ$_3$ஜ-ஸந்ததி : - விதை வரிசைகளும் ; அயஸ்-காந்தோபலம் - இருப்புக்காந்தக்கல்லை, ஸூசிகா-ஊசியும் ; நைஜ-தன்னுடைய, விபு$_4$ம் - நாயகனை, ஸாத்$_4$வீ - பதிவிரதையான பெண்ணும், க்ஷிதிருஹம் - (பூமியில் உற்பத்தியாகும்) மரத்தை, லதா-கொடியும், ஸரித்$_3$வல்லப$_4$ம்-ஸமுத்திரத்தை, ஸிந்து$_4$: - நதியும், யதா$_2$- எவ்வாறு இஹ - இவ்வுலகில், ப்ராப்னோதி - நாடிச்சென்று அடைகின்றதோ, ததா$_2$ - அவ்வாறு, சேதோவ்ருத்தி : - மனத்தின்

நாட்டம், பசுபதே : - பரமசிவனுடைய, பாதா$_3$ரவிந்த$_3$-த்$_3$வயம் - இரண்டு தாமரைப் பாதங்களையும், உபேத்ய - அடைந்து, ஸதா$_3$ - எப்போதும், திஷ்ட$_2$தி - நிலைபெற்றிருந்தால், ஸா - அதுதான், ப$_4$க்தி : இதி - பக்தி என்று, உச்யதே - கூறப்படுகிறது.

'ஜீவாத்மாவானது எப்போதும் பரமாத்மாவையே நினைத்து அதனிடம் ஒன்றியிருந்தால் அதுதான் பக்தி எனப்படும்' என்று பக்தியின் இலக்கணத்தைக் கூறுகிறார். இதை விளக்கும் முறை எல்லோரும் ஏற்கும் வண்ணம் அமைந்திருக்கிறது. இதைப் புரிந்து கொள்ள, பரமாத்மா, ஜீவாத்மா ஆகிய இரண்டு நிலைகள் கூறப்படுகின்றன. இதை விளக்க ஐந்து உதாரணங்களைக் கூறுகிறார். ஒவ்வொன்றிலும் இரண்டு நிலைப்பாடுகள் உள்ளன. அவையாவன : ஏறழிஞ்சல்மரம் - அதன்விதை, காந்தக்கல் - ஊசி, பதிவிரதை - கணவன், கொடி-மரம், நதி-சமுத்திரம், ஏறழிஞ்சல் மரத்தின் விதைகள் கீழே விழுந்தும் அவைகள் கொஞ்சம் கொஞ்சமாக நகர்ந்து சென்று மரத்துடன் ஒட்டிக்கொள்ளும் தன்மை கொண்டவை. பதிவிரதையானவள் பர்த்தாவை நாடிச் செல்பவள், கொடியானது மரத்தை நாடிச் சென்று சுற்றிக்கொள்ளும், நதியானது கடலை நோக்கி ஓடிச்செல்லும். இந்த நான்கு உபமானங்களிலும் ஜீவாத்மாவானது பரமாத்மாவைத் தேடிச் செல்வது குறிப்பிடப்பட்டுள்ளது. இதற்குப் பிரபத்திமார்க்கம் (சரணாகதி மார்க்கம்) என்று பெயர். இதைத் தாஸமார்க்கம் என்றும் கூறுவர். பக்தன் பரமாத்மாவைச் சரணடைந்து அவன் பாதத்தைப்பற்றிக் கொண்டுதான் முக்தியடைய முடியும் என்பது இக்கோட்பாடாகும். இதை எல்லோரும் கடைப்பிடிக்க வேண்டும் என்று வைணவ சமயம் கூறுகிறது. இதற்கு மர்கடக ந்யாயம் என்று பெயர். இதற்கு உதாரணம் குரங்குக் குட்டியானது தன் தாயை இறுகக் கட்டிக்கொள்வது, காந்தக்கல்-ஊசி உதாரணத்தில், காந்தக் கல்லானது ஊசியை இழுத்துக்கொள்கிறது. பரமாத்மா வானவன் ஜீவாத்மாவைத் தன்பால் ஈர்த்துக்கொள்கிறான். இதற்கு மார்ஜால ந்யாயம் என்று பெயர். அதாவது பூனை எங்குச் சென்றாலும் தன் குட்டியை வாயில் கௌவிக்கொண்டு செல்லும். (மர்கடகம் என்றால் குரங்கு, மார்ஜாலம் என்றால் பூனை).

இதில் மேலும் ஒருரசம், ஏறழிஞ்சல் மரம் - விதைகள், கொடி - மரம், காந்தக்கல் - ஊசி இவை ஒன்றோடொன்று சேர்ந்து இருந்தாலும் இரண்டும் தனித்தனியானவை என்ற தோற்றத்தை ஏற்படுத்தும். இது த்வைதிகளுக்கு ஏற்புடையது (மத்வசித்தாந்தம்). பதிவிரதை - கணவன் இருவரும் தோற்றத்தால் இரண்டு நபர்களாகத்

தோன்றினாலும் மனத்தால் ஒன்றுபட்டவர்கள். இது விஷிஷ்டாத் வைதம் (ராமானுஜ சித்தாந்தம்). நதியானது கடலில் கலந்துவிட்டால், இது நதி, இது கடல் என்று பிரிக்க முடியாது. இரண்டும் ஒன்றாகக் கலந்துவிடும். இது அத்துவைத நிலை. ஆதிசங்கரர் உதாரணங்கள் கூறி பக்தியை விளக்கும் முறை எல்லோருக்கும் ஏற்புடையதாக அமைந்துள்ளது. It is a definition acceptable to all and does not savour of any controversy.

எதிலுமே வேற்றுமையைத் தவிர்த்து அனைவரும் ஏற்கும் வகையில் அவர் தம் சித்தாந்தத்தை விளக்கியிருக்கிறார். இது அவரது மிகச் சிறந்த பண்பாகும்.

நமது நாட்டில் பல பெரியோர்கள் தோன்றியிருக்கிறார்கள். அவர்கள் ஆற்றிய பணியும் விட்டுச் சென்ற செல்வங்களும் விலைமதிப்பில்லாதவை. இவைகளே நமது நாட்டின் மிகச் சிறந்த செல்வங்கள். அவர்கள் பல பிராந்தியங்களில் தோன்றியவர் களாயினும் வெவ்வேறு மொழிகளில் இறைவனைப் பாடிப் பரவி வேதாந்தக் கருத்துக்களைக் கூறியிருந்தாலும் அவைகளில் இந்தியப் பண்பாடு என்ற இழை நடுநாயகமாய் விளங்குவதைக் காணலாம். இதைத்தான் மஹாகவி பாரதியார் 'செப்பு மொழி பதினெட்டுடை யாளெனிற் சிந்தனை ஒன்றுடையாள்' என்று கூறினார். சங்கரர் கூறிய கருத்துக்களின் எதிரொலியை நாம் அநேக தமிழ் நூல்களில் காணலாம். மொழிகள் வேறாயினும், தொழப்படும் தெய்வங்கள் எல்லோருக்கும் பொதுவானவையாகும். இறைத் தத்துவமும் பொதுவாழ்வில் மக்கள் கடைப்பிடிக்க வேண்டிய நெறிகளும் எல்லோருக்கும் பொருந்துவனவாக உள்ளன.

பக்திக்குத் தலைசிறந்த எடுத்துக்காட்டாகக் கண்ணப்பநாயனார் விளங்குகிறார். இதைச் சங்கரர் சிவானந்த லஹரியில் விவரிக்கிறார்.

" மார்க$^3$ாவத்திதபாது$^3$கா பசுபதே
ரங்க$^3$ஸ்ய கூர்ச்சாயதே
க$^3$ண்டூ$^3$ஷாம்பு$^3$நிஷேசனம் புரரிபோர்
தி$^3$வ்யாபி$^4$ஷேகாயதே |
கிஞ்சித்$^3$ப$^4$க்ஷிதமாம்ஸஷேஷகப$^3$லம்
நவ்யோபஹாராயதே
ப$^4$க்தி : கிம் ந கரோத்யஹோ வனசரோ
ப$^4$க்தாவதம்ஸாயதே || "

மார்கா₃ வர்த்தித பாது₃கா = (கண்ணப்பன்) வழி நடந்து நடந்து தேய்ந்த செருப்பு, பசுபதே : = பரமசிவனுடைய, அங்க₃ஸ்ய = மூர்த்திக்கு (உடலிற்கு - விக்ரஹத்திற்கு), கூர்ச் சாயதே = (அபிஷேகத்திற்கு முன் தலையில் வைக்கப்படும்) கூர்ச்சம் போலாகிறது : க₃ண்டூ₃ஷ - அம்பு = வாயிலிருந்து கொப்பளித்த நீரால், நிஷேசனம் = நனைத்தல், புரரிபோ : = திரிபுரத்தை அழித்த சிவபெருமானுக்கு, தி₃வ்ய - அபி₄ஷேகாயதே = மேலான அபிஷேகம் போலாகிறது ; கிஞ்சித் - ப₄க்ஷித = சிறிது கடித்து ருசிபார்க்கப்பட்ட, மாம்ஸ - தேஷ - கப₃லம் = இறைச்சியின் மிகுதியான துண்டம், நவ்ய - உபஹாராயதே = புதிதான சிற்றுண்டியைப் போலாகிறது. அஹோ = ஆச்சரியம்! வநசர : = காட்டில் திரியும் வேடன், ப₄க்த - அவதம்ஸாயதே = பக்தர்களில் சிறந்தவனாகிறான் ; ப₄க்தி : = பக்தியானது ; கிம் - எதைத்தான், ந கரோதி = செய்யாது.

கண்ணப்பன் பெருமையைத் திருநாவுக்கரசர் தமது தேவாரத்தில் இதே பாங்கில் விவரிக்கிறார். (அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்).

" காப்பதோர் வில்லும் அம்புங்
கையதோர் இறைச்சிப் பாரம்
தோற்பெருஞ் செருப்புத் தொட்டுத்
தூயவாய்க் கலசம் ஆட்டித்
தீப்பெருங் கண்கள் செய்ய
குருதிநீர் ஒழுகத் தன்கண்
கோப்பதும் பற்றிக் கொண்டார்
குறுக்கைவீ ரட்ட னாரே. "

அப்பரது இந்தப் பாடல், பக்தியின் சிறப்பைக் கூறும் சிவானந்த லஹரியின் 62 ஆவது சுலோகத்தின் பிரதிபலிப்பைப் போல் அமைந்துள்ளது. இந்த ஒப்புமை ஓர் ஆராய்ச்சிக்கு வழிகோலுவது போல் அமைந்துள்ளது.

தேவியினுடைய திருமுலைப்பாலின் உயர்வு சௌந்தர்ய லஹரியில் 75 ஆவது சுலோகத்தில் விவரிக்கப்படுகிறது.

" தவ ஸ்தன்யம் மந்யே த₄ரணித₄ரகன்யே ஹ்ருத₃யத :
பய : பாராவார : பரிவஹதி ஸாரஸ்வதமிவ |
த₃யாவத்யா த₃த்தம் த்₃ரவிட₃சிசு : ஆஸ்வாத்₃ய தவயத்
கவீனாம் ப்ரௌடா₃னாமஜனி கமநீய : கவயிதா || "

'ஹே! மலையரசன் மகளே! உன்னுடைய திருமார்பகத்தி லிருந்து பெருகும் பாலானது, இதயத்திலிருந்து உண்டான பாற்கடல்

போலவும், பேச்சு வெள்ளம் போலவும் பெருகுவதாக எண்ணுகிறேன். ஏனென்றால், உன்னுடைய திருமுலைப்பால் உண்ட திராவிடக்குழந்தை கல்விமான்கள் மதிக்கும் பண்டிதராக ஆகிவிட்டாரே' என்கிறது இந்தச் சுலோகம்.

இந்தச் சுலோகத்தில் வரும் 'த்₃ரவிட₃சிசு :' திராவிடக்குழந்தை என்பது திருஞானசம்பந்தரைக் குறிப்பிடுகிறது என்று சிலரும், சங்கரரைக் குறிப்பிடுகிறது என்று சிலரும் கருதுகின்றனர்.

சங்கரர் தோன்றியது எட்டாவது நூற்றாண்டில் (கி.பி. 788) என்று கூறுபவர்கள், ஞானசம்பந்தர் ஏழாவது நூற்றாண்டில் இருந்தவர் (637 கி.பி.) ஆதலால் இந்த சுலோகத்தில் சங்கரர் திராவிடசிசு என்ற பதத்தால் ஞானசம்பந்தரைத்தான் குறிப்பிடுகிறார் என்று கொள்ளவேண்டும் என்று கருதுகிறார்கள்.

இது ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல என்று கூறுபவர்களின் வாதம்:

1. சங்கரர் தோன்றியது கி.மு. 6-வது நூற்றாண்டு (கி.மு. 509) ;
2. ஸௌந்தர்யலஹரியை இயற்றியவர் காஞ்சி காமகோடி பீடத்தின் 38வது ஆசார்யராகிய விளங்கிய அபி⁴நவ சங்கரராவார் ;
3. தேவியிடம் திருமுலைப்பால் உண்டவர் ஆதிசங்கரர் என்று ஒரு வரலாறு உள்ளது.

சங்கரரின் தந்தை தினந்தோறும் கோவிலிலுள்ள தேவிக்குப் பாலை நிவேதனம் செய்துவிட்டு மற்றவர்களுக்குப் பிரசாதம் அளிப்பது வழக்கம். குழந்தை சங்கரர் தகப்பனார் கோவிலுக்குக் கொண்டு செல்லும் பாலைத் தேவியானவர் அருந்துவதாகவும் மீதமுள்ள பால் மற்றவர்களுக்குப் பிரசாதமாய் வழங்கப்படுவ தாகவும் எண்ணிக் கொண்டிருந்தார். ஒரு நாள் சிவகுரு வெளியூருக்குச் சென்றதால், ஆர்யாம்பாள் பாலைச் சங்கரர் கையில் கொடுத்து அதைத் தேவிக்கு நிவேதனம் செய்துவிட்டு வரும்படி பணித்தார். கோவிலுக்குச் சென்ற குழந்தை, பாலை தேவியின் சன்னிதியில் வைத்துவிட்டு அவள் அதை அருந்துவாள் என்று காத்திருந்தது. தேவி பாலைக் குடிக்காதது கண்டு வருந்தி அழ ஆரம்பித்தது. குழந்தையின் நிலையைக் கண்டு வருந்திய தேவி பாத்திரத்தில் இருந்த பால் முழுவதையும் குடித்துவிட்டாள். பாத்திரத்தில் தான் சாப்பிடுவதற்குண்டான பிரஸாதம் இல்லாதது

கண்டு குழந்தை மீண்டும் அழ ஆரம்பித்தது. குழந்தையைப் பிரசாதம் கொடுத்துச் சமாதானம் செய்யவேண்டுமென்னும் நோக்கத்துடன் தேவி பால சங்கரரைத் தன் மடியில் எடுத்து வைத்துக் கொண்டு பால் கொடுத்ததாக நம்பப்படுகிறது. அப்படி இருக்குமாயின் சௌந்தர்ய லஹரியில் குறிப்பிடப்பட்டிருக்கும் 'திராவிட சிசு' என்ற சொல் சங்கரரையே குறிக்கும் என்று கூற வாய்ப்புள்ளது.

இதை வேறு ஒரு கோணத்திலும் பார்ப்பதற்கு இடமிருக்கிறது. மேலே கண்ணப்பனைப் பற்றிய தேவாரம் ஞானசம்பந்தரால் பாடப்பட்டதாய் இருப்பின் 'திராவிட சிசு' என்ற சொல் ஞான சம்பந்தரைத் தான் குறிக்கிறது என்று தீர்மானம் செய்வதற்கான சாத்திய கூறுகள் அதிகம். ஆனால், இந்தத் தேவாரம் அப்பரால் பாடப்பட்டது. எனவே, ஆதிசங்கரர் ஸௌந்தர்ய லஹரியில் ஞானசம்பந்தரைப் பற்றிக் கூறியிருக்கிறார் என்று சொல்லும் வாதம் பொருத்தமாக இருப்பதாக எடுத்துக் கொள்ள முடியாது.

ஞானசம்பந்தரும், சங்கரரும் தேவியிடம் திருமுலைப்பால் அருந்தும் பேறு பெற்றவர்கள் ஆதலால் அவர்கள் இருவருக்கும் போற்றற்குரிய நாவன்மை ஏற்பட்டு ஆயிரக்கணக்கான தெய்வீகப் பாடல்களை இயற்ற முடிந்தது.

நேபாளத்தில் உள்ள கு$_3$ஹ்யகாளியின் மீது 'ரத்னபுஷ்பாஞ்சலி' என்ற தோத்திரத்தைச் சங்கரர் பாடியிருக்கிறார்.

" த்$_3$ராவிட$_3$சிசுயதிசங்கரநாமா
ஜ்ஞு$_{136}$னேஸ்த்வத்பத$_3$பங்கஜதாமா |
அஸ்ய தத$_2$ாபி யதி$_3$ ப$^4$வ ப$_3$ந்த$^4$:
தர்ஹி ஸமாதி$_4$ஸ்தேந்ருத ஸந்த$_4$ : " ||

சங்கரன் என்ற பெயர் கொண்ட இந்தத் திராவிடக் குழந்தை உன் பாதகமலங்களில் அடைக்கலம் கொண்டுள்ளது. இதன்பிறகும் நான் இந்தப் பிறப்பு, இறப்பு என்னும் சுழலிலிருந்து விடுபடவில்லை யானால், அது உன்னுடன் சமாதி அடையும் நிலையையே பொய்யாக்கிவிடும்.

இந்தச் சுலோகத்தில் சங்கரர் 'த்$_3$ராவிட$_3$சிசு என்று தம்மையே கூறிக்கொள்வதால் சௌந்தர்யலஹரியில் 72-ஆவது சுலோகத்தில் வரும் 'திராவிட$_3$சிசு' என்ற பதம் ஞானசம்பந்தரைக் குறிக்கும் என்று கூறுவது பொருத்தமாக இருக்காது.

ஆனால், இந்தத் 'திராவிடசிசு' என்ற சொல்லை எல்லோரும் ஏற்கும் வண்ணம் பொருள் கொள்வதற்கு ஒரு வழியுள்ளது. தென்னகம் முழுவதும் 'திராவிடதேசம்' என்று எடுத்துக் கொண்டால் அங்குப் பிறந்த எல்லாக் குழந்தைகளுமே 'திராவிட சிசுக்கள்' (திராவிடக் குழந்தைகள்) ஆகும். இந்த நாட்டிலே பிறந்த எல்லாக் குழந்தைகளுடைய எண்ண ஓட்டங்களும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கும். கண்ணப்பனைப் பற்றிச் சங்கரர், அப்பர் இவர்களோடு மாணிக்கவாசகரது கருத்தும் ஒத்திருக்கிறது (திருக்கோத்தும்பி).

" கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும்ஆட் கொண்டருளி
வண்ணப்பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் நீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ "

## இந்த ஒப்பீட்டுக்கு மேலும் சான்றுகள்

கண்ணப்பனது பாதுகையின் (தேய்ந்த செருப்பின்) பெருமை திருவிளையாடற் புராணத்திலும் எதிரொலிக்கிறது.

விறகு விற்ற படலத்தில், பாணபத்திரனது இசைப்பகை மாற்றச் சோமசுந்தரப் பெருமான் விறகுவெட்டி வேடத்தில் வந்து ஏமநாதனின் வீட்டுத் திண்ணையில் அமர்ந்து பாடி, அவனை (ஏமநாதனை) இரவோடிரவாக மதுரையை விட்டு விரட்டியாதாகக் கதை வழங்குகிறது. விறகு வெட்டியின் கோலத்தைக் கீழ்க்கண்ட பாடல் விவரிக்கிறது.

" அழுக்கு மூழ்கிய சிதரசைத் தவிர்சடை யமுதம்
ஒழுக்கு வெண்மதி வாங்கியே செருகிய தொப்ப
மழுக்கு கூனல்வெள் வாய்க்குயம் வலம்படச் செருகி
இழுக்கு தேய்..சருப் பருமறை கடந்த தாளேற்றி. "

சோமசுந்தரர், கந்தலான ஆடையை அணிந்து கொண்டு வளைந்த பிறைச் சந்திரனைப் போலுள்ள அரிவாளைத் தம் இடுப்பில் செருகிக் கொண்டு - தேய்ந்த செருப்பை அணிந்து கொண்டு விறகு - வெட்டி வேடத்தில் வந்ததாக வருணிக்கப்படுகிறது.

தேய்ந்த செருப்பானது சிவானந்த லஹரியில் சொல்லப்பட்ட ('மார்காவர்த்தித பாது, கா') வழி நடந்து தேய்ந்த செருப்பை நினைவூட்டுகிறது. இறைவன் பழைய செருப்பை உகந்து அணிந்திருப்பது கண்ணப்பனின் மேன்மையை உலகோருக்கு அறிவிக்கும் வண்ணம் அமைந்திருக்கிறது.

ப$_4$ஜ கோ$_3$விந்த$_3$ம்

" புனரபி ஜனனம் புனரபி மரணம்
புனரபி ஜனனீஜட$_2$ரே ஶயனம் |
இஹ ஸம்ஸாரே ப$_3$ஹுது$_3$ஸ்தாரே
க்ருபயாபாரே பாஹி முராரே ||" (ப)

மீண்டும் மீண்டும் பிறந்து, இறந்து, தாயின் கர்ப்பப்பையை அடைந்து வாழ்க்கைச் சுழலில் உழலும் என்னைக் கருணையோடு காப்பாயாக என்று சங்கரர் வேண்டுகிறார்.

நக்கீரரின் திருவிடைமருதூர் மும்மணிக் கோவை இக்கருத்துடன் மிகவும் ஒத்துப் போகிறது.

" மருதிடங் கொண்ட ஒருதனிக் கடவுள்நின்
திருவடி பரவுதும் யாமே நெடுநாள்
இறந்தும் பிறந்தும் இளைத்தனம் மறந்தும்
மறித்தும் புகாஅ வாழ்வுபெறற் பொருட்டே "

இது திராவிடக் குழந்தைகளின் கருத்தொற்றுமையைக் காட்டுகிறது.



# 3. சங்கரரின் திக்விஜயம்

அத்வைதக் கொள்கைகளைப் பரப்புவதற்காகச் சங்கரர் மூன்று முறை பாரத தேசத்தைச் சுற்றிவந்தார். அப்பொழுது வேதமார்க்கத்தில் நம்பிக்கை இல்லாதவர்களையும் கொடூரமான வழிபாட்டு முறைகளைக் கடைப்பிடித்தவர்களையும், வாதத்தில் வென்று அவர்களனைவரையும் ஸனாதன தர்மத்தைக் கடைப்பிடிக்கும்படி செய்தார். மேலும் பல புண்ணியத் தலங்களுக்குச் சென்று வழிபட்டதோடல்லாமல் ஆங்காங்கு நடந்து வந்த வழிபாட்டு முறைகளைச் சீர்திருத்தி அமைத்தார். தாம் தரிசித்த தெய்வங்களின் பேரில் பல தோத்திரங்களை இயற்றிப் பக்தர்கள் பாடிப் பரவுவதற்கு வழி செய்தார்.

அவர் எந்தெந்த இடங்களுக்குச் சென்றார், எப்பொழுது சென்றார் என்ற விவரங்கள் காலக்கிரம வரிசையில் (chronologial order) சொல்ல இயலாமல் இருக்கிறது. இருப்பினும் பல நூல்களிற் சொல்லப்பட்டிருக்கும் செய்திகளைக் கொண்டு அவர் சென்ற இடங்கள் எவையெவை, அந்த இடங்களுடன் இணைந்த நிகழ்ச்சிகள் யாவை என்பதை ஒருவாறு ஊகிக்கமுடிகிறது. அவர் சென்ற இடங்கள் இந்நூலின் முற்பகுதியில் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. மற்றும் சில இடங்கள்பற்றிய செய்திகள் இப்பகுதியில் கூறப்படுகின்றன.

## அகோபிலம்

இது ஆந்திர மாநிலத்தில் உள்ளது. இங்கு மலைமீது நரசிம்ம மூர்த்தியின் ஆலயம் உள்ளது. சங்கரர் அங்குச் சென்று வழிபட்டார். சங்கரரின் சீடரான பத்மபாதர் ஒரு நரசிம்ம உபாசகர். அதைப் பற்றிய விவரங்கள் மற்றோர் இடத்தில் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த மூர்த்தியின்பால் லக்ஷ்மீ நரசிம்ஹ பஞ்சரத்னம், லக்ஷ்மீ நரசிம்ஹ கராவலம்பன ஸ்தோத்ரம் என்ற தோத்திரங்கள் ஆதிசங்கரரால்

பாடப்பட்டதாக அறிகிறோம். பிற்காலத்தில் வைணவ ஆசார்யரான ஸ்ரீ ராமானுஜர் இங்கு ஒரு மடத்தை ஸ்தாபித்தார். அது இன்றளவும் வைணவர்களுக்கு ஒரு யாத்திரை ஸ்தலமாக விளங்குகிறது.

### பூரி ஜகந்நாத்

இது ஒரிஸா மாநிலத்தில் கிழக்குக் கடற்கரையோரம் அமைந்துள்ளது. சங்கரர் இங்குள்ள மடத்தை ஸ்தாபிக்கவில்லை என்று சிலர் கூறுகின்றனர். ஆனால், இந்தக் கருத்து ஏற்றுக் கொள்ளப்படத்தக்கதா யில்லை. சங்கரர் பூரிக்கு விஜயம் செய்ததற்குப் பல சான்றுகள் உள்ளதாகப் பல அறிஞர்கள் கூறுகிறார்கள். இங்குள்ள சில கல்வெட்டுகளும் பரம்பரையாக வழங்கிவரும் வரலாறுகளும் சங்கரர் பூரிக்கு வந்ததை உறுதி செய்வனவாக இருக்கின்றன. அவர் பூரி ஜகந்நாதப் பெருமானைத் துதித்து ஜகந்நாதாஷ்டகம் பாடி யிருக்கிறார்.

" பு$_4$ஜே ஸவ்யே வேணும் சிரஸி சிகிபிஞ்ச$_2$ம் கடிதடே
து$_3$கூலம் நேத்ராந்தே ஸஹசரகடாக்ஷம் ச விதே$_3$த$_4$த் |
ஸதா$_3$ ஸ்ரீமத் ப்$_3$ருந்தா$_3$வனவஸதிலீலாபரிசயோ
ஜக$^3$ந்நத$_2$ : ஸ்வாமீ நயனபத$_2$கா$_3$மி ப$_3$வதுமே " ||

'இடது கையில் புல்லாங்குழலும், தலையில் மயிற் பீலியும், இடையிற் பட்டாடையும், கண்களில் தயை நிறைந்த பார்வையும், எப்பொழுதும் பிருந்தாவனத்தில் லீலைகள் புரிந்து கொண்டிருப்பவனுமான ஏ! ஜகந்நாதா! எனக்கு உன் திருமேனியைக் காணும் பேற்றை அருள்வாயாக!'

சங்கரர் பூரிக்கு வந்ததைக் குறித்து மற்றொரு வரலாறு உள்ளது. சங்கரர் வந்த காலத்தில் அங்குக் கிருஷ்ணனை மட்டுமே ஆராதித்து வந்தனர். அங்குச் சைவர்களுக்கும் வைணவர்களுக்குமிடையே சமயச் சண்டைகள் நிகழ்ந்துகொண்டிருந்தன. அவர்களுக்குள் ஒற்றுமையை ஏற்படுத்துவதற்காகச் சங்கரர், அங்கு, பலபத்ரர், சுபத்திரை ஆகியவர்களுடைய விக்ரஹங்களைப் பிரதிஷ்டை செய்தார். அங்குள்ளவர்களிடம் பலபத்திரரானவர் சிவனுடைய அம்சம் பொருந்தியவர் என்றும் சுபத்திரையானவள் சக்திவடிவினள் என்றும் கூறி, சமய நல்லிணக்கத்திற்கு அடிகோலினார். மேலும் நேபாளத்திலிருந்து இரண்டு சாலக்ராமங்களைக் கொண்டுவரச் செய்து அவைகளைப் பலபத்திரர், சுபத்திரை ஆகியவர்களின் சந்நிதியில் ஸ்தாபனம் செய்தார். அத்துடன் அங்கு நடந்துவந்த

வழிபாட்டு முறைகளையும் சீர்ப்படுத்தி எல்லாப் பிரிவினர்களையும் (சமயத்தவர்களையும்) ஏற்றுக்கொள்ளும்படி செய்தார். அவர் புகுத்திய வழிபாட்டு முறைகளில் மூர்த்திகளைத் தேரில் ஏற்றி பவனிவரச் செய்ததும் ஒன்றாகும். அன்று தொடங்கி இன்று வரை பூரியில் ஒவ்வொரு வருடமும் தேர்த்திருவிழா மிக விமரிசையாக நடந்துவருகிறது. அதில் உலகின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் மக்கள் வந்து கலந்துகொள்கிறார்கள்.

ஜகந்நாதாஷ்டகத்தின் மூன்றாவது பாடலில் ‘ஸஹஜப$_3$லப$_4$த்$_3$ரேண ப$_3$லினா சுப$_3$த்$_3$ரா-மத்$_3$யஸ்த$_2$:’ என்று பலபத்திரர், சுபத்திரை ஆகியவர்களின் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன.

மேலும் ஐந்தாவது பாடலில் ‘ரதா$_2$ரூடோ$_4$ க$_3$ச்ச$_2$ன்பதி’ (தேரில் பவனி வருபவள்) என்று தேரில் பவனிவரும் காட்சி குறிப்பிடப்படுகிறது. எனவே, சங்கரர் பூரியில் பலபத்திரர், சுபத்திரை ஆகிய தெய்வங்களைப் பிரதிஷ்டை செய்ததுடன், தேரோட்டியதையும் ஆரம்பித்துவைத்தார் என்ற நம்புவதற்கு இடமிருக்கிறது. இங்கு முதலில் கிருஷ்ணனை மட்டும் வழிபட்டு வந்தது, பிறகு பலபத்திரர், சுபத்திரை முதலியவர்களது விக்ரஹங்கள் பிரதிஷ்டை செய்யப்பட்டது என்பவற்றைக் குறிக்கும் வகையில் அவரவர்கள் பெயர்கள் காலக்கிரமவரிசையில் இந்த சுலோகத்தில் சொல்லப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது.

### கோகர்ணம்

இது மேற்குக் கடற்கரை ஓரத்தில் மங்களூருக்கு வடக்கே இருக்கிறது. இங்குக் கோகர்ணேச்வரரின் கோவில் உள்ளது. இங்குள்ள லிங்கத்திற்கு இராவணன் பூஜை செய்ததாகக் கூறப்படுகிறது. சங்கரர் இங்குத் தங்கியிருந்தபொழுது நீலகண்டர் என்ற பண்டிதர் அவருடன் வாதம் புரிய வந்தார். அத்வைதத்தைக் காட்டிலும் சைவமே உயர்ந்தது என்பது நீலகண்டரின் கொள்கை. அவர் ‘படைப் பாளியான பரமாத்மாவும் அவனால் படைக்கப்பட்ட ஜீவாத்மாக்களும் ஒன்று என்பது ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று. மேலும் பரமாத்மா படைத்த மனிதர்களுக்குள்ளேயே பலவித வேறுபாடுகள் உள்ளன. அரசன், பிச்சைக்காரன் என்று இரு மாறுபட்ட நிலைகளில் உள்ளவர்களின் அனுபவங்கள் முற்றும் மாறுபட்டவையாக இருக்கும். அப்படி இருக்கையில் இருவரும் ஒன்றுதான் என்று கூறமுடியாது’ என்று வாதாடினார். அவருக்குப் பதிலளித்த சங்கரர், ‘நீங்கள் குறிப்பிட்ட மாறுபட்ட அனுபவங்கள்

உடலுக்குத்தான் ஏற்படுகின்றன, ஆத்மாவிற்கல்ல. உடல் அனுபவிக்கும் இன்பதுன்பங்கள் மாயையேயாகும். ஆத்மா அழிவற்றது. உடலுக்கு ஏற்படும் தாக்கங்களால் ஆத்மா எவ்விதத்திலும் பாதிக்கப்படுவது இல்லை' என்று கூறினார். வாதம் தொடர்ந்தது. முடிவில் நீலகண்டர் தம் தோல்வியை ஒப்புக் கொண்டு சங்கரரை வணங்கிவிட்டுச் சென்றார். இந்த நிகழ்ச்சியைக் கண்டவர்களும், கேட்டவர்களும் சங்கரரது மேன்மையை உணர்ந்து அவரைக் கொண்டாடினர்.

தற்காலம் அஸ்ஸாம் என்று அழைக்கப்படும் பிரதேசம் பண்டைக் காலத்தில் காமரூபம் என்ற பெயருடன் விளங்கியது. அங்கு அபிநவகுப்தர் என்ற சக்தி உபாசகர் இருந்தார். அவர் சங்கரருடன் வாதம் செய்ய வந்தார். வாதத்தில் தோற்றதும் சங்கரரிடம் சீடராக இருப்பது போல் நடித்தார். பொறாமை காரணமாக அவர் சங்கரருக்கு ஏவல் (செய்வினை) செய்துவிட்டார். அதனால் சங்கரருக்கு பா₃க₃ந்த₃ரா என்ற நோய் ஏற்பட்டது. இதையறிந்த பத்மபாதர் என்ற சீடர் கோபமடைந்து அந்த ஏவலை மாற்ற ஒரு மந்திர சிகிச்சை செய்தார். அந்தச் சிகிச்சையானது சங்கரரைக் குணப்படுத்தியதோடு அந்த நோயை ஏவிவிட்ட அபிநவ குப்தரையே கொன்றுவிட்டது.

சங்கரரது ஸுப்ரமண்ய புஜங்கத்திற்கு, சாஸ்த்ர ரத்னாகரம் தேதியூர் ஸ்ரீஸுப்ரமண்ய சாஸ்திரிகள் எழுதிய ஓர் அருமையான உரை உள்ளது. அதில் அவர் இந்த அபிநவகுப்தரால் சங்கரருக்கு ஏற்பட்ட துன்பத்தையும், அதிலிருந்து அவர் மீண்டதையும் வேறு விதமாகக் கூறுகிறார். கோகர்ண க்ஷேத்திரத்தில் இருந்தபொழுது அபிநவகுப்தரின் தீய செய்கையாலே ஆசார்யருக்கு க்ஷயரோகம் என்ற நோய் ஏற்பட்டது. அதனால் அவர் வருந்துவதைக் கண்டு மனமிரங்கிய கோகர்ணேச்வரர், சங்கரரின் கனவில் தோன்றி, ஸ்ரீஜயந்திபுரம் என்று அழைக்கப்படும் திருச்செந்தூர் சென்று அங்குள்ள முருகப்பெருமானை வழிபட்டால், அவரது நோய் குணமாகும் என்று கூறினார். அதன்படி சங்கரர் திருச்செந்தூர் சென்று கடலில் நீராடிவிட்டு முருகன் சந்நிதிக்குச் சென்றார். அங்கு ஆதிசேடன் முருகனுக்குப் பூஜை செய்வதைப் பார்க்கும் பேறு கிடைத்தது. ஆதிசேடன் பாம்பு என்பதால், பாம்பின் பெயரால் விளங்கும் பு₃ஜங்க₃ம் என்ற விருத்தத்தில் ஸுப்ரமண்ய புஜங்கம் என்ற தோத்திரத்தைப் பாடித் துதித்தார். அதைப் பாடியதும் சங்கரரது நோய் முற்றும் நீங்கிவிட்டது என்பது அவர் கூறும் வரலாறு.

" ஸதா$_3$ பா$_3$லரூபாபி விக்$_4$னாத்$_3$ரிஹந்த்ரீ
மஹாத$_3$ந்திவக்ராபி பஞ்சாஸ்யமான்யா |
விதீ$_4$ந்த்$_3$ராதி$_3$ம்ருக்யா க$_3$ணேசாபி$_4$தா$_4$ மே
வித$_4$த்தாம் ச்ரியம் காபி கல்யாணமூர்த்தி : ||"

எப்பொழுதும் குழந்தை உருவத்தில் இருப்பினும், இடையூறு களாகிய மலையைத் தகர்ப்பவரும், யானை முகத்துடன் விளங்குபவராக இருந்தாலும், சிங்கங்களால் பூஜிக்கப்படத் தக்கவராயும், நான்முகன், இந்திரன் முதலானவர்களால் (அவர்களது மனவிருப்பங்களைப் பூர்த்தி செய்து கொள்ளும் பொருட்டுத்) தேடப்படத் தகுந்தவராகவும், அளவற்ற மகிமை பொருந்திய வராகவும், மங்களத்தைக் கொடுக்கும் மூர்த்தி வடிவில் கணேசன் என்ற பெயருடன் விளங்கும் தெய்வம் எனக்கு மேலான பேறுகளை (ஐச்வர்யத்தை)க் கொடுக்கட்டும் (இது வினாயகர் துதி).

## புஜங்க விருத்தத்தின் அமைப்பு

'யமாதா யமாதா யமாதா யமாதா' என்று நான்கு வரிகள் கொண்டதாக இருக்கும்.

லகூகூ லகூகூ லகூகூ லகூகூ என்றும் இதைக் குறிப்பிடலாம். 'ல' என்பது 'லகு$_4$'விற்கு எடுத்துக்காட்டாகவும் 'கூ' என்பது 'கு$_3$ரு' விற்கு எடுத்துக்காட்டாகவும் தரப்பட்டுள்ளன. குறிலானது 'லகு$_4$' என்றும் நெடிலானது 'கு$_3$ரு' என்றும் அழைக்கப்படுகின்றன. லகு$_4$வானது ஒற்றடுத்துவரின், அதுவும் கு$_3$ரு என்று கொள்ளப்படும்.

இந்த புஜங்க விருத்தத்தில் சங்கரர் கீழ்க்கண்ட தோத்திரங் களையும் பாடியுள்ளார் :

" பவானீ புஜங்கம்
தேவீ புஜங்கம்
கணேச புஜங்கம்
ராம புஜங்கப்ரயாத ஸ்தோத்ரம்
சாரதா புஜங்கப்ரயாதாஷ்டகம்
திவ புஜங்கம்
வேதஸாரசிவ புஜங்கம்
விஷ்ணு புஜங்கப்ரயாதஸ்தோத்ரம் "

சுப்ரமண்ய புஜங்கத்தைக் கோயமுத்தூரைச் சேர்ந்த கவியரசு திரு. கு. நடேசக்கவுண்டர் என்ற பேரறிஞர் மிக அழகாகத் தமிழில் வடித்துள்ளார்.

ஸதா₃ ப₃ால ரூபாபி என்று தொடங்கும் சுலோகத்தின் தமிழ் வடிவம்:

" எந்நாளு மிளையோன் வினைக்குன் றழிப்பான்
இபமா முகன்பஞ்ச வதனன் மதிப்பான்
பொன்னகர் சுரர்நாடு புனிதன் கணேசன்
பொன்றாத திருவாள னருள்பேணு வோமே. "

இது போலத் திரு. நடேச கவுண்டர் அவர்கள் சங்கரரது, ஸௌந்தர் யலஹரீ, பாதாதி கேசாந்தவர்ணனம் முதலிய தோத்திரத் தொகுப்புகளை யாப்புடனமைந்த மிக அழகான தமிழில் பெயர்த்துள்ளார். இது போன்ற நூல்கள் இயற்றுவதற்குத் தமிழ், வடமொழி ஆகிய இரண்டிலும் நல்ல புலமை வேண்டும். இத்தகைய பெரும் புலவர் கோவையில் வாழ்ந்தார் என்பது இந்நகருக்குப் பெருமை சேர்ப்பதாகும்.

திருப்பதி சென்று வேங்கடேசப் பெருமானை வழிபட்டு. அங்குத் தனாகர்ஷண யந்திரத்தைப் பிரதிஷ்டை செய்தார் சங்கரர். தனாகர்ஷணம் என்பதற்குச் செல்வத்தை ஈர்ப்பது என்று பொருள். ஏழுமலையான் கோவிலிலுள்ள உண்டியல் எல்லா நாட்களிலும் நிரம்பி வழிவதை நாம் இன்றும் பார்க்க முடிகிறது.

### மத்யார்ஜுனம் (திருவிடைமருதூர்)

இந்தப் புண்ணியத்தலத்தில் சங்கரர் வழிபட்டதைக் குறித்து ஒரு வரலாறு உள்ளது. இங்குள்ள மகாலிங்கப் பெருமானைத் துதித்த சங்கரர், தமது அத்வைதக் கோட்பாடுகள் சரியானவையா என்பதைத் தெரிவிக்கும்படி வேண்டினார். அப்பொழுது அங்கு ஓர் அதிசயம் நடந்தது. லிங்கத்தின் மேல் ஒரு கை எழுந்து 'அத்வைதம் ஸத்யம்', 'அத்வைதம் ஸத்யம்', 'அத்வைதம் ஸத்யம்', (அத்வைதமானது உண்மையானது) என்று மூன்று முறை கூறி மறைந்தது. அங்கிருந்தவர்கள் சங்கரரது பெருமையை உணர்ந்து அவரைத் தங்களுடைய குருவாக ஏற்றனர்.

### மூகாம்பிகை

இங்கு உள்ள தேவியின் பெயரே இந்தத் தலத்திற்கும் பெயராக அமைந்துள்ளது. இந்தத் திருத்தலம் கர்னாடக மாநிலத்தில் உள்ளது. நதியும் சோலைகளும் சூழ்ந்த நல்ல இயற்கைச் சூழ்நிலை இந்த ஊருக்கு எழில் சேர்க்கிறது. இங்குள்ள தேவி கருணை வடிவாக இல்லாமல் உக்கிரமாய் இருப்பதாக அங்கிருந்தவர்கள் சங்கரரிடம் முறையிட்டார்கள். தேவியின் கொடூரத்தன்மையைப் போக்கி

அவளைச் சாந்த ஸ்வரூபிணீயாக ஆக்கும்பொருட்டு அங்கு ஸ்ரீசக்ரத்தைப் பிரதிஷ்டை செய்தார் சங்கரர்.

### காசி

காசியில் அவர் வாழ்ந்த விவரங்கள் அவரது வாழ்க்கை வரலாற்றுப் பகுதியில் இடம் பெற்றுள்ளன. காசியிலுள்ள தெய்வங்களின் பெயரில் அவர், காசீ பஞ்சகம், கங்காஷ்டகம், மணிகர்ணிகாஷ்டகம், விச்வனாதாஷ்டகம், காலபைரவாஷ்டகம், அன்னபூர்ணாஷ்டகம் என்ற துதிகளை இயற்றியுள்ளார்.

திருவாருருக்கருகில் குளிக்கரை என்ற ஸ்தலம் உள்ளது. அங்கு விசுவநாதப் பெருமானின் ஆலயம் உள்ளது. அங்கு விசாலாஷி, அன்னபூர்ணீ ஆகிய தெய்வங்களின் சந்நிதிகளும் உள்ளன. இங்குக் கோவில் கொண்டிருக்கும் அன்னபூர்ணியைத் துதித்து முத்துசாமி தீக்ஷிதர் சாமா ராகத்தில் 'அன்ன பூர்ணே விசாலாக்ஷி' என்ற கிருதியை இயற்றியுள்ளார். அநேகர் இது காசியிலுள்ள அன்னபூர்ணியைக் குறித்த க்ருதி என்று சொல்கிறார்கள். இது தவறு. இந்தக்கிருதியில் 'உன்னத க³ர்தா³தீர விஹாரிணி' (மேன்மையான கர்தா நதிக் கரையில் உறைபவளே) என்ற வார்த்தைகள் இவள் குளிக்கரையில் கோவில் கொண்டுள்ள அன்னபூர்ணி என்பதை உறுதி செய்கின்றன.

### பண்டரீபுரம்

துகாராம், நாமதேவர் போன்ற பக்தர்களின் பெயர்கள் இந்தத் தலத்துடன் பிரிக்க முடியாதபடி இணைந்துள்ளன. துகாரமின் அபங்கங்கள் நாடு முழுவதும் பாடப்பட்டுவருகின்றன. இந்த க்ஷேத்ரமானது சந்த்ரபாகா நதிக்கரையில் அமைந்துள்ளது. இந்த ஸ்தலம் மஹாராஷ்டிர மாநிலத்தில் உள்ளது. இங்கு எண்ணற்ற பஜனை கோஷ்டிகள் சென்று பாண்டுரங்கனையும், ருக்மிணீ தேவியையும் பாடிப் பரவசமுறுகின்றன.

சங்கரர் இங்குப் பாண்டுரங்கனை வழிபட்டுப் பாண்டு ரங்காஷ்டகம் பாடியுள்ளார்.

சங்கரர் நரபலி கொடுக்கும் கபாலிக மதத்தைக் கண்டித்ததால், அவர்கள் இவரைக் கொன்றுவிட வேண்டும் என்று முடிவு செய்தனர். சங்கரர் விதர்ப்ப தேசத்தில் பயணம் செய்து கொண்டிருக்கும் சமயம் 'க்ரகச்சன்' என்பவரின் தலைமையில் வந்து கொண்டிருந்த கூட்டம் அவரையும் அவருடைய சீடர்களையும் தாக்கியது. சங்கரருடன் வந்துகொண்டிருந்த சுதன்வா என்ற வில்வீரன் கபாலிகர்களைக் கொன்று குவிக்கலானான். இதைக் கண்டு

வெகுண்டெழுந்த ' 'க்ரகச்சன்' மந்திரம் ஜபித்து சங்கரரைக் கொல்லுமாறு கபால பைரவரை ஏவினான். அப்பொழுது அங்குத் தோன்றிய பைரவர் சங்கரரை ஒன்றும் செய்யாமல் க்ரக்ச்சனது தலையைக் கொய்துவிட்டார். 'என்னுடைய சிறந்த பக்தரான சங்கரரைக் கொல்லும் முயற்சியில் ஈடுபட்டதால் 'க்ரகச்சன்' மன்னிக்க முடியாத குற்றத்தைச் செய்து விட்டான். எனவே, அவன் மரணமடைய நேரிட்டது', என்று கூறி மறைந்துவிட்டார்.

அனந்தசயனம் (திருவனந்தபுரம்), இராமேசுவரம், மதுரை ஆகிய புண்ணியப்பதிகளும் சங்கரர் சென்று வழிபட்ட இடங்களாகும். இராமேசுவரத்தில் இராமநாதாஷ்டகம் பாடியதாகவும். மதுரையில் 'மீனாக்ஷீ பஞ்சரத்னம்' பாடியதாகவும் நம்பப்படுகிறது.

இவற்றைத் தவிர, சங்கரர் பஞ்சலிங்க ஸ்தலங்களான காஞ்சீபுரம் (ப்ருத்வி - பூமி), அருணாசலக்ஷேத்ரம் (திருவண்ணாமலை - அக்னி - நெருப்பு), காளஹஸ்தி (வாயு - காற்று), ஜம்புகேச்வரம் (திருவானைக்கோவில் - அப்பு - நீர்), சிதம்பரம் (ஆகாசம் - வான்வெளி) ஆகிய இடங்களுக்கும் சென்று வழிபட்டிருக்கிறார். ஆகாச க்ஷேத்திரமான சிதம்பரத்தில் ஆடல் வல்லானை தரிசித்துவிட்டுத் தாம் கைலாசத்திலிருந்து கொண்டுவந்த ஐந்து லிங்கங்களில் ஒன்றை அங்கு ஸ்தாபித்து, அதற்கு வழிபாடுகள் நடக்கும்படி செய்தார். அவர் கைலாசத்திலிருந்து கொண்டுவந்த ஐந்து ஸ்படிக லிங்கங்களின் பெயரும் அவை ஸ்தாபிக்கப்பட்ட இடங்களின் பெயர்களும் பின்வருமாறு :

| லிங்கத்தின் பெயர் | ஸ்தாபிக்கப்பட்ட இடம் |
|---|---|
| யோகலிங்கம் | காஞ்சி - காமகோடி பீடம் |
| போகலிங்கம் | சிருங்கேரி - சாரதா பீடம் |
| வரலிங்கம் | நீலகண்ட க்ஷேத்ரம் - நேபாளம் |
| முக்திலிங்கம் | கேதார்நாத் |
| மோக்ஷலிங்கம் | சிதம்பரம் |

இந்தப் பாரத புண்ணிய பூமியில் புகழ்பெற்று விளங்கும் அநேக க்ஷேத்திரங்களுக்குச் சங்கரர் சென்று வழிப்பட்டிருக்கிறார். ஏதேனும் ஒரு வழியில் சங்கரருக்கும் அவர் சென்று புண்ணியத் தலங்களுக்கும் ஒரு தொடர்பு இருப்பதைக் காணமுடிகிறது. அவர் ஏற்படுத்திக் கொடுத்த சமய நடைமுறைகளும் உபதேசங்களும் எல்லோராலும் கடைப்பிடிக்கப்பட்டும் பாராட்டப்பட்டும் வருகின்றன.



# 4. சங்கரரின் சீடர்கள்

சங்கரருக்குப் பல சீடர்கள் இருந்தபோதிலும், அவர்களில் ஸுரேச்வரர், பத்மபாதர், தோடகர், ஹஸ்தாமலகர் ஆகிய நால்வர் முக்கியமானவர்கள். அவர்கள் ஆசார்யரிடம் நெருக்கமாக இருந்து பாடம் கேட்டு, அவரோடு தேசத்தின் பல பாகங்களுக்கும் அவருடன் சென்று பலவிதமான மனிதர்களைச் சந்தித்து அவர்களிடம் பழகி மிகுந்த அனுபவ அறிவைப் பெற்றவர்கள். தாம் ஸ்தாபித்த மடங்களில் இந்த நால்வர்களைத்தான் முதலில் பொறுப்பேற்கச் செய்தார் சங்கரர். இவர்களைப் பற்றிய விவரங்கள் மிகவும் பயனுள்ளவையாக இருக்கும்.

## ஸுரேச்வரர்

இவரது இயற்பெயர் மண்டனமிச்ரர் என்பதாகும். இவர் தீவிர மீமாம்சகர்; மாஹிஷ்மதி என்ற ஊரைச் சேர்ந்தவர். சங்கரர் இவரை வாதத்தில் வென்று தம் சீடராக்கிக்கொண்டார். இவருடைய கொள்கைகள், சங்கரர் இவரை வாதத்தில் வென்றது ஆகிய செய்திகள் இந்நூலின் முற்பகுதியில் சொல்லப்பட்டிருக்கின்றன. மற்ற மூன்று சீடர்களைப் போலல்லாமல் இவர் சில கோணங்களில் வேறுபட்டு நிற்கிறார்.

இவர் இல்லறத்தி லிருந்து விட்டுத் துறவியானவர். சங்கரரை விட வயதில் மூத்தவர். தாமாக ஏற்காமல் ஒரு கட்டாயத்தினால் துறவு பூண்டவர். சங்கரரின் சீடராவதற்கு முன்னமேயே கல்வி கேள்விகளில் மிகுந்த தேர்ச்சி பெற்றுச் சங்கரருடன் சமநிலையில் இருந்து வாதம் செய்யும் ஆற்றல் பெற்றிருந்தவர்.

மற்ற மூன்று சீடர்களும் தாங்களாகவே வந்து சீடரானார்கள். சீடர்களான பிறகுதான் சாத்திரங்களைக் கற்றுத் தங்கள் அறிவைப் பெருக்கிக் கொண்டார்கள். இவர்கள் மூவரும் சங்கரரை விட வயதில் சிறியவர்கள். பிரம்மசாரிகளாகவே துறவறத்தை ஏற்றார்கள். (இல்லற வாழ்வில் ஈடுபடவில்லை).

ஸுரேச்வரரது வயதின் முதிர்ச்சியினாலும், அறிவினாலும் சங்கரருக்கு இவர்பால் ஒரு தனி மதிப்பு எற்பட்டது. இதனால் மற்ற மூன்று சீடர்களுக்கும் இவர்பால் பொறாமை ஏற்பட்டது. சங்கரர் சூத்திரபாஷ்யத்திற்கு ஸுரேச்வரரைக் கொண்டு வார்த்திகம் (விருத்தி உரை) எழுதச் சொல்ல வேண்டும் என்று எண்ணினார். இதை மற்ற மூவரும் விரும்பவில்லை. பல நாட்களாகக் கர்ம மார்க்கத்தை அனுசரிப்பவராக இருந்து பிறகு துறவு பூண்டவராதலாலே இவருக்குப் பிரம்ம சூத்திரத்திற்குச் சிறந்த உரை எழுதும் தகுதி கிடையாது என்று வாதிட்டனர். அவர்களது எண்ண ஓட்டத்தை உணர்ந்த சங்கரர் தம் எண்ணத்தை மாற்றிக்கொண்டார்.

அறிவாற்றல் மிக்க இவர், நைஷ்கர்ம்ய ஸித்$^{3}$தி$^{4}$ என்ற நூலையும், தைத்திரியோபநிஷத்$^{3}$பா$^{3}$ஷ்ய - வார்திகா, ப்ருஹத$^{3}$ரண்ய கோபநிஷத்$^{3}$பா$^{4}$ஷ்ண - வார்திகா என்ற இரண்டு விளக்க நூல்களையும் எழுதியுள்ளார். தம் சீடரது அறிவையும் ஆராய்வுத்திறனையும் கண்டு சங்கரர் மிக்க மகிழ்ச்சி எய்தினார்.

## பத்மபாதர்

இவரைப் பற்றியும் ஏற்கனவே குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் ஒரு சிறந்த நரசிம்ம உபாசகர். இதை விளக்கும் வகையில் வழக்கிலுள்ள இவரைப் பற்றிய பூர்வீக வரலாற்றைக் கூற வேண்டியுள்ளது. இவர் சோழ நாட்டில் பிறந்தார். ஒரு மகானிடம் நரசிம்ம மந்திரத்தை உபதேசம் பெற்றார். அதைக் கோடிக்கணக்கில் ஜபம் செய்து நரசிம்ம மூர்த்தியைத் தரிசிக்க வேண்டும் என்ற பேராவல் கொண்டார். தவம் செய்வதற்காகத் தனிமையை நாடி மலைத்தாழ்வரையிலுள்ள ஒரு கானகத்திற்குச் சென்று அங்கு நரசிம்மரைக் குறித்து ஜபம் செய்யலானார். அங்கிருந்த வேடனொருவன் இவரைப் பார்த்து இந்தக் காட்டுப் பிரதேசத்தில் தனியாக என்ன செய்கிறீர்கள் என்று கேட்டான். நான் நரசிம்மத்தைத் தேடிக் கொண்டு இங்கு வந்திருக்கிறேன் என்றார் இவர். அது எப்படி இருக்கும் என்றதும், அது இடுப்பிற்குக் கீழே மனித வடிவத்துடனும், இடுப்பிற்கு மேலே சிங்கத்தின் முகத்துடனும் இருக்கும் என்று பத்மபாதர் சொன்னார். ஐயா! நான் இந்தக் காட்டில் பல வருடங்களாக வசித்து வருகிறேன். ஆனால் நீங்கள் சொல்லிய உருவில் உள்ள விநோதமான மிருகத்தைப் பார்த்ததில்லை, அப்படிப் பார்க்க நேரிட்டால் அதை உங்களிடம் சேர்ப்பிக்கிறேன் என்று சொல்லிவிட்டு, அந்த மிருகத்தைத் தேடும் பணியில் ஈடுபட்டான். அவன் காடு, மலைகள் எல்லாவிடங்களிலும் அந்த

விந்தை மிருகத்தைத் தேடி அலைந்தான். ஆனால் அந்த மிருகம் அவன் கண்களுக்குத் தென்படவில்லை. தன் தோல்வியைத் தாங்காத அவன் ஒரு மரத்துடன் தன்னைப் பிணைத்துக் கொண்டு, பட்டினி கிடந்து உயிரை மாய்த்துக்கொள்ளத் தீர்மானித்தான். அவனது பரிதாப நிலையைக் கண்டு மனமிரங்கி நரசிம்ம மூர்த்தி அவனுக்கு எதிரில் தோன்றினார். பெருமகிழ்ச்சி கொண்ட வேடன் அந்த மிருகத்தைக் கொடிகளால் கட்டிப் பத்மபாதர் இருக்கும் குகைக்கு இழுத்து வந்தான். 'ஐயா! நான், நீங்கள் குறிப்பிட்ட மிருகத்தைக் கொண்டு வந்திருக்கிறேன், வந்து பாருங்கள்' என்றான். ஆனால் பத்மபாதர் கண்களுக்கு அந்த மிருகம் புலப்படவில்லை. அவர் மிக்க மனவருத்தமடைந்தார். ஒரு வேடனுக்குக் கிடைத்த பேறு தமக்குக் கிடைக்கவில்லையே என்று மிகவும் மனம் நொந்து அழுதார். அப்பொழுது விண்ணில் ஒரு குரல் ஒலித்தது. 'இந்த வேடன் இடைவிடாது என்னை உள்ளன்போடு நினைத்ததால் சித்தி அடைந்துவிட்டான். இவனுடன் தொடர்பு ஏற்பட்டதால் உனக்கு என் குரலைக் கேட்கும் பேறு கிடைத்தது. இதுவே உன் மந்திர ஜபத்திற்கு உண்டான பலனாகும். உன் வாழ்நாளில் என் உதவி எப்பொழுது தேவைப்படுமோ அப்பொழுது நான் உன்னிடம் வருகிறேன்' என்று அது கூறியது. இந்தச் சம்பவம் பத்மபாதர் ஆசார்யரிடம் சீடராவதற்கு முன்பே நிகழ்ந்தது.

பின் ஒரு சமயம் ஒரு நாள் ஒரு கபாலிகன் ஆசார்யரிடம் வந்து ஒரு வேண்டுகோள் விடுத்தான். 'ஐயா! நான் ஒரு கபாலிகன். என் தெய்வமான கபாலிக்குப் பலவிதமான பலிகளைக் கொடுத்துப் பூஜித்தும் எனக்கு அவனது தரிசனம் கிடைக்கவில்லை. உம்மைப் போன்ற சிறந்த துறவியின் தலையைப் பலி கொடுத்தால் என் எண்ணம் ஈடேறும்' என்றான். இதைக் கேட்ட சங்கரர் அவன் விருப்பத்தை நிறைவேற்றச் சம்மதித்தார். மேலும் அவர், 'அப்பா! ஒன்றுக்கும் உதவாத இந்தச் சரீரத்தினால் ஏதேனும் உபயோகம் இருக்குமானால் அது எனக்குப் பெருமகிழ்ச்சியை அளிக்கும். இந்தக் காரியத்திற்கு என் சீடர்கள் ஒப்புதல் அளிக்க மாட்டார்கள். எனவே, அவர்கள் இல்லாமல் நான் தனிமையில் இருக்கும்பொழுது வந்து என்னை அழைத்துப் போ' என்று கூறினார். கபாலிகன் மிக்க மகிழ்ச்சி அடைந்தான். பிறகு சீடர்கள் எவருமில்லாமல் சங்கரர் தனிமையில் தியானம் செய்து கொண்டிருந்தபொழுது கபாலிகன் அவரது அருகில் வந்து அவரை வெட்டுவதற்காக வாளை ஓங்கினான். அப்பொழுது பத்மபாதர் ஆவேசத்துடன் அங்கு ஓடி வந்தார். ஓ என்ற பேரிரைச்சல் கேட்டது. சங்கரர் கண்விழித்துப் பார்த்தபொழுது கபாலிகனின்

உடல் அங்கு இரண்டு துண்டாக விழுந்து கிடந்தது. அவனருகில் பத்மபாதர் கோபாவேசத்துடன் நின்றுகொண்டிருந்தார்.

அவர் சமநிலையை அடைந்ததும் சங்கரர் அங்கு என்ன நடந்தது என்று கேட்டார். அதற்குப் பத்மபாதர், 'நான் கங்கையில் நீராடிக் கொண்டிருந்த பொழுது திடீரென எனது உடலில் ஏதோ ஒரு சக்தி புகுவது போல் தோன்றியது. என் நிலை மறந்து இங்கு ஓடி வந்தேன். பிறகு என்ன நடந்தது என்று எனக்கு நினைவில்லை. இப்பொழுதுதான் நான் என் சுயநிலையை அடைந்தேன்' என்று பதிலுரைத்தார். அதைக் கேட்ட சங்கரர் 'உனக்கு நரசிம்ம மந்திரம் உபதேசம் ஆகி யிருக்கிறதா?' என்று வினவ, பத்மபாதர், முன்பு நடந்த நிகழ்ச்சிகைளக் கூறி, 'நரசிம்மர் எனக்களித்த வரத்தின்படி என்னெதிரில் வருவதற்கு இதைவிட வேறு நல்ல சமயம் இருக்க முடியாது' என்று கூறினார்.

இந்தப் புத்தகத்தின் மற்றொரு பகுதியில் (சங்கரரின் திக்விஜயம்) க்ரகச்சன் என்ற கபாலிகன் சங்கரரைக் கொல்ல வந்த சமயம் அவன் பைரவரால் கொல்லப்பட்டதாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. வேறு சிலர் க்ரகச்சனை வதைத்தது கபால பைரவரல்ல, பத்மபாதரேயாகும் என்று கருதுகிறார்கள். இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் ஒன்றா, அல்லது வெவ்வேறானவையா என்பதைத் தீர்மானமாகக் கூறமுடியவில்லை.

## தோடகர்

சங்கரரிடம் கிரி என்று அழைக்கப்பட்ட ஆனந்தகிரி என்ற சீடன் வந்து சேர்ந்தான். அவன் மந்த புத்தி உள்ளவன். படிப்பறிவில்லாதவன். எனினும், சங்கரரிடம் மிகவும் அன்பு பூண்டு அவருக்கு மிக அக்கறையுடனும் அன்புடனும் பணிவிடைகள் செய்துவந்தான். மற்றச் சீடர்கள் சங்கரரைச் சுற்றி நின்று பாடம் கேட்கும்பொழுதும், சர்ச்சைகள் செய்யும்பொழுதும் இவன் தொலைவில் நின்று பார்ப்பதைத் தவிர அவைகளில் பங்கு கொள்ளும் நிலையில் இல்லாமல் இருந்தான். சீடன் என்ற நிலை இல்லாமல் பணியாள் என்ற எளிய நிலையிலேயே இருந்து வந்தான். ஒரு நாள் இந்த மந்தபுத்தி படைத்தவன் மீது சங்கரரது அருட்பார்வை விழுந்தது. அந்தக் கணத்திலேயே அவனது அறியாமை நீங்கி ஞானம் சுரக்கலாயிற்று.

இந்த அருட்பார்வையின் மேன்மையப் பற்றிச் சங்கரர் சௌந்தர்யலஹரியில் இவ்வாறு கூறுகிறார் :

" த்3ருசா த்3ராகீ4யஸ்யா த3ரத3லித நீலோத்பலருசா
த3வீயாம்ஸம் தீ3னம் ஸ்னபய க்ருபயா மாமபி சிவே |
அநேநாயம் த4ன்யோ ப4வதி நசதே ஹாநிரியதா
வநே வா ஷர்ம்யே வா ஸமகர நிபாதோ ஹிமகர : ||"

சிவே = எல்லாவிதமான மங்களத்தையும் கொடுக்கக்கூடிய தாயே! நீலோத்பல மலரை ஒத்த காந்தியை உடையதும் காதுவரை நீண்டிருப்பதாயும் உள்ள (உன் கண்களின்) அருட்பார்வையினால் எளியவனான என்னை நீராட்டு. அதனால் நான் கடைத்தேறுவேன். இது உனக்கு எந்தக் குறைவையும் ஏற்படுத்தாது.

அம்பிகையின் அருட்பார்வைக்கு ஆசார்யரின் அருட்பார்வை எந்த வகையிலும் குறைந்ததல்ல. அவரது அருட்கடாக்ஷத்தால் கிரி சிறந்த கவியாக மாறினான். அவன் சங்கரரின் அருகில் அமர்ந்து ஆசார்யரைத் துதிக்கும் ஜகத்குரு அஷ்டகத்தைப் பாடினான். அது

" விதி3தாகி2ல தாஸ்த்ரஸுதா4 ஜலதே4
மஹிதோ பநிஷத் கதி2தார்த்த2 நிதே4|
ஹ்ருத3யே கலயே விமலம் சரணம்
ப4வ சங்கர தே3சிக மே சரணம் ||"

இது போன்ற எட்டுச் சுலோகங்களை உடையது. இது வடமொழியில் தோடகம் என்னும் ச2ந்தஸ் வகையைச் சேர்ந்தது. அது முதல் இவருக்குத் தோடகாசாரியர் எனப் பெயர் ஏற்பட்டது.

இந்தத் தோடக விருத்தமானது

" ஸகலம் ஸகலம் ஸகலம் ஸகலம் "

என்ற முறையில் நான்கு வரிகளைக் கொண்டது.

இதை லலகூ லலகூ லலகூ லலகூ என்றும் குறிப்பிடலாம்.

'ல' என்பது 'லகு4'வின் சுருக்கம். இது குறிலைக் குறிக்கும். 'கூ' என்பது 'குரு'விற்குதாரணம். இது நெடிலைக் குறிக்கும். லகுவை அடுத்து மெய்யெழுத்து வந்தால், அதனையும் 'குரு' என்று கொள்ள வேண்டும். இம்மாதிரிச் செய்யுட்கள் தமிழிலும் உண்டு. (உதாரணம் - கந்தரனு பூதி).

" உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே. "

" உருவாய் அருவாய் உளதாய் இலதாய் "
" ஸகலம் ஸகலம் ஸகலம் ஸகலம் "

தமிழ்யாப்பு மரபின்படி இந்த வகைப்பாடல்கள் கலிவிருத்தம் என்ற வகையில் அடங்கும். வடமொழி, தமிழ் ஆகிய இரண்டிலுமுள்ள யாப்பு அமைப்புகளை ஒப்பு நோக்குவது ஒரு பயனுள்ள முயற்சியாகும்.

## ஹஸ்தாமலகர்

சங்கரர் மூகாம்பிகை க்ஷேத்திரத்திற்கு வந்தபொழுது அவருக்கு ஒரு சீடர் ஏற்பட்டார். மூகாம்பிகைக்கு அருகில் ஸ்ரீவல்லி என்ற ஊர் உள்ளது. அங்குப் ப்ரபாகரர் என்ற பண்டிதர் வசித்து வந்தார். அவருக்கு ஓர் ஆண் மகவு இருந்தது. இது பிறந்தது முதல் பேசவில்லை. அதைச் சுற்றி நடக்கும் எந்தச் சம்பவமும் அதனிடம் எந்தவிதமான தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை. எந்தவிதமான மருத்துவச் சிகிச்சையினாலும் அந்தக் குழந்தை குணமடைய வில்லை. இதனால் மனமுடைந்த பெற்றோர்கள், சங்கரரது கீர்த்தியைக் கேள்வியுற்று அவரிடம் தங்கள் குழந்தையை அழைத்துச் சென்றனர். அந்தக் குழந்தையின் பரிதாப நிலையைக் கண்ட சங்கரர் அதனிடம் 'நீ ஏன் இப்படி ஜடப்பொருள்போல் இருக்கிறாய்?' என்று கேட்டார். அதைக் கேட்ட அக்குழந்தை அவரது கேள்விக்கு மறுமொழியாக அத்வைதக் கொள்கைகளின் சாரத்தை 12 சுலோகங்களின் வாயிலாகக் கூறியது.

இதைக் கண்டு மகிழ்ச்சியுற்ற சங்கரர் அக்குழந்தையைத் தம் சீடனாக ஏற்றுக்கொண்டு, ஸந்யாஸ தீக்ஷை அளித்து 'ஹஸ்தாமலகர்' என்று பெயர் சூட்டினார். ஹஸ்தம் என்றால் கை, ஆமலகம் என்றால் நெல்லிக்கனி. ஹஸ்தாமலகம் என்பதற்கு உள்ளங்கை நெல்லிக்கனி என்று பொருள். அந்தக் குழந்தை உபநிடதக் கருத்துக்களை உள்ளங்கை நெல்லிக்கனி போல அனைவரும் அறிந்துகொள்ளும்படி எடுத்துரைத்ததால் அதற்கு ஹஸ்தாமலகர் என்று பெயரிட்டார். இவரது மதி நுட்பத்தைக் கண்டு வியந்த சங்கரர் இவரிடம் மிக்க அன்பும் அக்கறையும் உடையவரானார். இவர் எழுதிய ஒரு நூலின் சிறப்பைக் கண்டு மகிழ்ந்த சங்கரர் அதற்கு தாமே விளக்க உரை எழுதி யுள்ளார். அதற்கு 'ஹஸ்தாமலகீய பாஷ்யம்' என்று பெயர். இது சங்கரரது மேலான குணத்தையும், ஹஸ்தாமலகரது மேதாவிலாசத்தையும் நன்கு பரிமளிக்கச் செய்கிறது. குருவானவர் தம் சீடரது படைப்பிற்கு உரை எழுதுவது என்பது மிக அபூர்வமாகும்.

ஹஸ்தாமலகரது இளமைக்கால நிகழ்ச்சிகள் நமக்கு ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளை நினைவூட்டுகின்றன. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிறந்து ஐந்து வயதுவரை பேசவே இல்லை. மனம் வருந்திய தாய் தந்தையர் அக்குழந்தையைத் திருச்செந்தூருக்கு எடுத்துச் சென்று முருகன் சந்நிதியில் தவமியற்றினர். முருகனது அருளால் அக்குழந்தை.பேசும் ஆற்றலைப் பெற்றதோடு மிகச் சிறந்த கல்வியாளராகவும் ஆயிற்று.



# 5. சங்கரர் ஸ்தாபித்த மடங்கள்

ஸனாதன தர்மம் தேசம் முழுவதும் பரவ வேண்டும் என்ற நோக்கத்தோடு சங்கரர் ஐந்து மடங்களை ஸ்தாபித்து அவைகளைத் தம் சீடர்களை நிர்வகிக்கும்படி செய்தார். ஒவ்வொரு மடத்திலும் ஆராதிக்கப்படும் தெய்வம், மடத்திற்குண்டான வேதம், மகாவாக்கியங்கள் தனித்தனியாக உள்ளன. அவர் முதலில் சிருங்கேரி மடத்தை நிறுவினார் என்று கூறப்படுகிறது.

## சிருங்கேரி

மாஹிஷ்மதி நகரத்திலிருந்து சங்கரர் துறவியாக மாறிய மண்டனமிச்ரருடனும் (ஸுரேச்வராசார்யர்), அவருடைய மனைவி ஸரஸவாணியுடனும் தெற்கு நோக்கி வந்துகொண்டிருந்தார். தம் கணவர் துறவியான பிறகு மாஹிஷ்மதி நகரிலிருந்து வேறு இடத்திற்குச் செல்ல நினைத்தார் மண்டனமிச்ரரின் துணைவியான ஸரஸவாணி. அவரைத் தங்களுடன் வருமாறு சங்கரர் வேண்டினார். அதற்கு ஸரஸவாணி ஒரு நிபந்தனையுடன் இணங்கினார். அதன்படி சங்கரரின் பின்னால் தாம் நடந்துவருவதாகவும், எக்காரணத்தைக் கொண்டும் சங்கரர் திரும்பிப் பார்க்கக்கூடாது என்றும் கூறினார். தம் கால் சிலம்புகளின் ஒலியிலிருந்து தாம் அவரைப் பின் தொடர்வதை ஊகித்துக் கொள்ள வேண்டும். இந்த நிபந்தனையை மீறிச் சங்கரர் திரும்பிப் பார்த்துவிட்டால் தாம் அந்த இடத்திலேயே நின்று விடுவதாகவும் கூறினார். நிபந்தனையை மீறாமல் அந்த மூன்று பேர்களும் வந்துகொண்டிருந்தார்கள். ரிஷ்யசிருங்ககிரியின் அருகிலுள்ள துங்கபத்ரா தீரத்தை அவர்கள் அடைந்தார்கள். அந்த இடத்தின் அமைதியும் இயற்கைக் காட்சிகளும் சங்கரரை மிகவும் கவர்ந்தன.

அங்கு மேலும் ஓர் அதிசயக் காட்சியைச் சங்கரர் கண்டார். பிரசவ வேதனையில் வாடும் தவளைக்குப் பாம்பு ஒன்று தன்

படத்தினால் குடைபிடித்து அதை வெய்யிலின் கொடுமையிலிருந்து காப்பாற்றிக் கொண்டிருந்தது. அந்த இடத்தின் மகிழ்ச்சியூட்டும் சூழ்நிலையும், பிறவிப்பகைவர்களான பாம்பும் தவளையும் நட்போடிருக்கும் பாங்கும் அவரது மனத்தில் அந்த இடம்தான் தம் மடத்தை நிறுவுவதற்கு மிகவும் ஏற்றது என்ற எண்ணத்தை உண்டாக்கிற்று. இந்த நினைப்பின் ஓட்டத்தினால் அவருக்குப் பின்னால் ஒலித்துக்கொண் டிருந்த ஸரஸவாணியின் காற்சிலம்பொலி நின்றுவிட்டதாகத் தோன்றியது. தம்மை மறந்தவராகத் தம் வாக்குறுதியை மீறி அவர் பின்னால் திரும்பிப் பார்க்கவும், ஸரஸவாணி அங்கிருந்து மறைந்துவிட்டார். பிறகு சங்கரரின் வேண்டுகோளின்படி சிருங்ககிரியில் சாரதாவாக இருந்து அருள் பாலிப்பதாக ஒப்புக்கொண்டார். சங்கரர் தமது மடத்தை அங்கு நிறுவித் தம் சீடரான ஸுரேச்வராசார்யரை அதன் தலைவராக்கினார். அது முதல் சிருங்கேரி மடம் சாரதா பீடம் எனப் பெயர்பெற்று, இன்றளவும் ஆசார்யர் இட்ட பணியைத் தொடர்ந்து செய்துவருகிறது.

ச்ருங்ககிரியானது கர்னாடக மாநிலத்தில் துங்கபத்ரா நதிக்கரையில் உள்ளது. இராமாயணத்தில் சொல்லப்பட்ட ரிஷ்யச்ருங்கர் இங்கு வசித்ததாக நம்பப்படுகிறது. ரிஷ்யச்ருங்ககிரி என்ற பெயர் மருவி ச்ருங்ககிரி என்றாயிற்று. இங்குள்ள ஆசார்யர்களுக்கு, ஸரஸ்வதீ, பாரதீ அல்லது பூரி என்ற பட்டம் உண்டு. இந்த மடத்தைச் சேர்ந்த பிரம்மசாரிகள் சைதன்யர் என்று அழைக்கப்படுவார்கள்.

இந்த மடத்திலிருப்பவர்கள் யஜுர் வேதத்தை நன்கு ஆராய்ச்சி செய்து பேணி வளர்க்க வேண்டும். மகாவாக்கியமானது - அஹம் ப்ரஹ்மாஸ்மி - (இது ப்ருஹதாரண்ய உபநிஷத்தில் உள்ளது) என்பது.

### பதரிகாச்ரமம்

வடக்குத் திசையில் பதரியில் ஒரு மடத்தை ஸ்தாபித்து அதற்குத் தோடகாசார்யரைத் தலைவராக நியமித்தார். இது இமயமலையில் ஜோதிதாம் என்ற இடத்தில் உள்ளது. இது இப்பொழுது 'ஜ்யோதிர்மட்' என்று அழைக்கப்படுகிறது. பதரிகாசிரமத்திலிருந்து சுமார் முப்பது கிலோமீட்டர் தொலைவிலுள்ளது. இங்குள்ள ஆசார்யர்கள் கிரி, பர்வத, ஸாகர என்ற பெயர்களில் அழைக்கப்படுவர். பிரம்மசாரிகளுக்கு ஆனந்த என்ற பட்டம் உண்டு.

இந்த மடத்திற்குண்டான வேதம் அதர்வண வேதம், மஹாவாக்யம் 'அயம் ஆத்மா ப்³ரஹ்ம' (மாண்டுக்ய உபநிஷத்வாக்யம்).

இங்குள்ள தீர்த்தம் அலகனந்தா : மூர்த்தி விஷ்ணு (நாராயணர்).

## துவாரகை

துவாரகையில் உள்ள மடம் மேற்குத் திக்கில் வாழும் மக்களுடைய ஆன்மீக வளர்ச்சிக்காக நிறுவப்பட்டது. மேற்குக் கடற்கரையில் இம்மடம் நிறுவப்பட்டுள்ளது. இது குஜராத் மாநிலத்தில் உள்ளது. ஹஸ்தாமலகர் இந்த மடத்தின் முதல் குருவாக நியமிக்கப்பட்டார். சிவபெருமானும் (ஸித்தேச்வரர்) அவருடைய துணைவியான பத்ரகாளியும் (சக்தி) இங்கு ஆராதிக்கப்படும் தெய்வங்கள். இங்குள்ள புண்ணியநதி கோமதி நதியாகும்.

இங்குள்ள ஆசார்யர்களுக்கு தீர்த்தர், ஆச்ரம என்ற பட்டங்களும், பிரம்மசாரிகளுக்கு ஸ்வரூப என்ற பட்டமும் உரியவையாகும்.

இந்த மடத்தில் ஸாமவேதத்தை நன்கு பயின்று மக்களுக்குக் கற்பிக்க வேண்டும் என்பது மரபு. இந்த மடத்திற்குண்டான மஹாவாக்யம் 'தத் த்வம் அஸி' (இது சாந்தோக்ய உபநிஷத்தில் உள்ளது). இந்த மடத்திற்கு 'காளிகா மடம்' என்று பெயர்.

## பூரி

இது ஜகந்நாத க்ஷேத்திரமான பூரியில் ஸ்தாபிக்கப்பட்டது. ஆசார்யரின் சீடரான பத்மபாதர் தலைமையில் இது இயங்க லாயிற்று. வன, அரண்ய என்பவை இங்குள்ள ஆசார்யர் களுக்கும், ப்ரகாச என்பது இங்குள்ள பிரம்மசாரிகளுக்கும் உண்டான பட்டப்பெயர்களாகும். இந்த மடத்திற்குண்டான முக்கிய வேதம் ருக்வேதமாகும். மகாவாக்கியம் 'ப்ரஜ்ஞானம் ப்₃ரஹ்ம' என்பதாகும். இந்த வாக்யம் ஐத்ரேய உபநிஷத்தில் உள்ளது.

இந்த மடத்திற்குக் கே₃ாவர்த₄ன மட₂ம் என்று பெயர். இங்குள்ள கிழக்குக் கடற்கரையே இந்த மடத்திற்குண்டான தீர்த்தமாகும். இதை மஹோததி என்று கூறுவார்கள். இந்த மடத்தின் முக்கியத் தெய்வங்கள், விஷ்ணுவும் (ஜகந்நாதர்), அவருடைய தேவியான விமலா தேவியுமாவர். பூரியிலுள்ள ஜகந்நாதரைப் 'புருஷோத்தமன்' என்று அழைப்பர்.

## காஞ்சி

இது தமிழ்நாட்டில் சென்னையிலிருந்து சுமார் 80 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இது மிகவும் பழமை வாய்ந்ததும், சரித்திரச் சிறப்புகளுடன் கூடியதுமாகும். இது பல்லவ ஸாம்ராஜ்யத்தின் தலைநகரமாக இருந்தது. பல்லவ மன்னர் மகேந்திரவர்மன் முதலில் சமணராக இருந்தார். திருநாவுக்கரசுப் பெருமானின் அருட்பார்வையினாலே அவர் சைவரானார். இங்குச் சிறப்பு மிகுந்த பல கோவில்கள் உள்ளன. காமாக்ஷியம்மன் கோவில், ஏகாம்பரேச்வரர் கோவில், வரதராஜப் பெருமாள் கோவில் ஆகியவை மிகவும் புகழ் வாய்ந்தவை. இங்குப் பெருமை வாய்ந்த கல்விக் கூடங்கள் இருந்ததற்குச் சரித்திரச் சான்றுகள் உள்ளன. மேலும் இங்குச் சைவ, வைணவ, சமண மதங்கள் பரவியிருந்த காரணத்தினாலே இந்நகரை ஜைன காஞ்சி, சிவகாஞ்சி, விஷ்ணு காஞ்சி என்று மூன்று பகுதிகளாகக் கூறுவர். மேலும் இந்தியாவில் உள்ள ஏழு மோக்ஷ புரிகளில் காஞ்சியும் ஒன்று. அவையாவன : அயோத்யா, மதுரா, மாயா (ஹரித்வார்), காசி, அவந்தி (உஜ்ஜயினி), காஞ்சி, துவாரகா.

இங்குள்ள காமாக்ஷியம்மன் கோவிலில் சங்கரர் ஸ்ரீசக்கரத்தைப் பிரதிஷ்டை செய்ததாகக் கூறப்படுகிறது. இது பிந்துஸ்தானமானதால் (நடுப்பாகம்) இங்குள்ள மற்ற எல்லாக் கோவில்களும் இந்தக் கோவிலை நோக்கி இருக்குமாறு அமைக்கப்பட்டுள்ளன. காஞ்சியைப் பற்றிய விவரங்கள், சிவரகஸ்யம், மார்கண்டேய ஸம்ஹிதை, ஆனந்தகிரியின் சங்கர விஜயம் முதலிய நூல்களிற் சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த மடத்தின் பெயர் காமகோடி பீடம் என்பது. சங்கரர் கைலாசத்திலிருந்து கொண்டு வந்த ஐந்து ஸ்படிக லிங்கங்களில் யோகலிங்கம் காஞ்சியில் பிரதிஷ்டை செய்யப் பட்டிருக்கிறது.

## சங்கரர் ஸ்தாபித்த மடங்கள்

| திசை | இடம் | பெயர் | தலைவர் |
|---|---|---|---|
| வடக்கு | பதரி | ஜ்யோதி பீடம் | தோடகாசார்யார் |
| கிழக்கு | பூரி | கோவர்தன பீடம் | பத்மபாதர் |
| தெற்கு | சிருங்கேரி | சாரதா பீடம் | ஸுரேச்வரர் |
| மேற்கு | துவாரகை | துவாரகா பீடம் | ஹஸ்தாமலகர் |

இது தவிரக் காஞ்சியில் காமகோடி பீடத்தை நிறுவியதாக வரலாறு உள்ளது.

ஷண்மதத்தை ஸ்தாபித்த சங்கரர் மடங்களை ஏற்படுத்தியதில் அந்தக் கோட்பாட்டை நன்கு கடைப்பிடித்திருக்கிறார். எல்லா மடங்களிலும் ஒரே வழிபடும் தெய்வத்தை (உபாஸனா மூர்த்தி) ஏற்படுத்தாமல் வெவ்வேறு மூர்த்திகளை ஸ்தாபித்திருக்கிறார்.

பதரியிலும், பூரியிலும் விஷ்ணுவை வழிபடும் தெய்வமாகவும், துவாரகையில் சிவனையும், காளியையும் வழிபடும் தெய்வங்களாகவும் சிருங்கேரியில் முக்கிய தெய்வமாகச் சாரதா தேவியையும், காஞ்சியில் காமாக்ஷியையும் ஸ்தாபித்துள்ளார். சமய வழிபாட்டு முறைகளை ஸர்வாதிகார முறையில் அல்லாது ஜனநாயக முறையில் நிறுவிய பெருந்தகை சங்கரராவார்.



# 6. அத்வைதமும் விஞ்ஞானமும்

'எங்கும் நிறைந்திருப்பது ஒரே பரம்பொருள், நாம் கண்ணால் காண்பவையெல்லாம் அந்தப் பரம்பொருளின் வெவ்வேறு தோற்றங்கள்' என்பது அத்வைத சித்தாந்தம். இதை எப்படி ஏற்றுக்கொள்ள முடியும் என்ற எண்ணம் எழுவது இயல்பு. நாம் பார்ப்பவையெல்லாம் வேறுபட்டவைகளாகக் காணப்படினும் அவையெல்லாம் ஒன்றே என்று நவீன விஞ்ஞானமும் சொல்லுகிறது. அணு விஞ்ஞானம் வளர்ச்சியடைந்த பின் இந்தக் கொள்கை மேலும் வலுவடைந்துள்ளது. மூலப்பொருள்கள் (elements) ஒன்றுக்கொன்று மாறுபட்டவைகளாகத் தோன்றினாலும் ஒரே சக்திதான் (energy) இந்த மூலப்பொருள்கள் வடிவமாக விளங்குகிறது என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். பொருள் (matter), சக்தி (energy) ஆகிய இரண்டும் ஒன்றேயாகும். வெவ்வேறானவையல்ல என்பது நவீன விஞ்ஞானக் கருத்தாகும்.

உலகமானது மாயை என்று அத்வைதம் கூறுகிறது. இதற்குப் பொருள் என்னவென்றால், 'உலகம் இறுதி சத்தியமல்ல, இது விவகாரத்திற்கு மட்டுமே சத்தியம், இதனுடைய இயக்கமெல்லாம் பிரம்மத்தைச் சார்ந்தது' என்பதுதான்.

புகழ்பெற்ற விஞ்ஞானி திரு. ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் சார்பு நிலைக் கொள்கை (Theory of Relativity) மேலே சொன்ன அத்வைத தத்துவத்தைப் பிரதிபலிப்பது போல் உள்ளது. நாம் காணும் உலகம் குறிப்பிட்ட விண்வெளியிலும் (space) காலவெளியிலும் (time) அடங்கிய வெளிக்கு உட்பட்டிருக்கும் பொருண்மை (mass), சக்தி (energy) இவைகளால் ஏற்பட்டதாகும். "The universe of our experience as far as science can tell us consists of matter and energy in a space-time continuum". பொருண்மையும் சக்தியும் ஒரே அம்சத்தின் இரண்டு நிலைகளாகும். அவை இரண்டும் ஒன்று மற்றதாக மாறும் தன்மையுடையவை. (Mass and energy are interconvertible),

பொருள் என்பது எளிதில் பார்த்து அறிந்துகொள்ளக்கூடிய நிலையில் இருப்பது. இது சக்தியின் மற்றொரு நிலை. இவைகளின் பரிமாணம் (size) சிறியதாக ஆகும்போது அவைகளுக்குள் காணும் வேறுபாடு மறைந்துவிடும். விஞ்ஞான ரீதியாக எல்லாப் பொருள்களும் சக்தியாக மாறக் கூடியவை. எனவே, பொருளும் சக்தியும் ஒன்றே என்று கூறப்படுகிறது.

அறிவியலானது பொருள், சக்தி ஆகியவைகளை, அவைகள் செயல்பட ஆதாரமாகவுள்ள விண்வெளி (space) காலவெளி (time) ஆகியவற்றைக் கொண்டே ஆராய்கிறது. விண்வெளி, காலவெளி என்பவை தத்துவ ரீதியாக அறிந்தகொள்ளப்படுபவை. அவைகளை எளிதில் அறிந்துகொள்ள முடியாது. பொருளும், சக்தியும் நம் புலன்களால் அறிந்து கொள்ளக்கூடியவை. விண்வெளி, காலவெளி ஆகியவைகளின் தாக்கம் நாம் காணும் ஒவ்வொரு பொருளுக்கும் உண்டு. அந்தத் தாக்கத்தின் அளவு பொருளின் பரிமாணத்தைப் (quantity)பொறுத்ததாகும். இந்த இயக்கங்கள் ஒன்றை ஒன்று சார்ந்ததாகும் (relative to each other). இதுதான் ஐன்ஸ்டீனின் சார்பு நிலைக் கொள்கையாகும் (Theory of Relativity).

இவ்வுலகத்திலுள்ள நமக்கு ஒரு நாள் என்பது 24 மணி நேரமாகும். இது பூமியானது ஒரு முறை தன்னைத் தானே சுற்றிக் கொள்ள எடுத்துக்கொள்ளும் காலமாகும். பூமியானது சூரியனை ஒரு முறை சுற்றிவருவதற்கு 365 நாட்கள் பிடிக்கின்றன. இதைப் பூமியிலுள்ள நாம் ஒரு வருடம் என்று கூறுகிறோம். இது இவ்வுலகத்தைச் சார்ந்த விண்வெளி, காலவெளி ஆகியவற்றின் தாக்கத்தைச் சார்ந்து கணக்கிடப்பட்டதாகும். ஆனால், இந்த ஒழுங்குமுறை மற்றக் கிரகங்களுக்கு ஏற்புடையதாக இருக்கும் என்று கூறமுடியாது. உதாரணமாக - சனிக்கிரகமானது சூரியனை ஒரு முறை சுற்றி வருவதற்கு (நம் கணக்குப்படி) இரண்டரை ஆண்டுகள் பிடிக்கின்றன. அங்குள்ளவர்களுக்கு ஒரு ஆண்டு என்பது நமக்கு இரண்டரை ஆண்டுகளாகும். ஒரே நிலையான இயக்கம் எல்லாக் கோள்களிலும் இருக்கும் வாய்ப்பில்லை.

அத்வைதமும் இதைத்தான் 'பிரம்மமே பாரமார்த்திக சத்யம் (நிலையான உண்மை) : நாம் காணும் உலகம் வ்யாவஹாரிக சத்யம்; உலகில் நிகழ்பவைகள் எல்லாம் மற்றொன்றைச் சார்ந்ததாகும் (only relative) முழுமையான (absolute) சத்தியமல்ல' என்று கூறுகிறது.

சத்தியம் என்பதில் மூன்று வகைகள் உள்ளன.

1. பாரமார்த்திக சத்யம்
2. வ்யாவஹாரிக சத்யம்
3. ப்ராதிபாஸிக சத்யம்

## பாரமார்த்திக சத்யம்

இதுதான் உண்மையான சத்யம், என்றும் மாறாமல் இருப்பது. இது ப்ரம்மம் மட்டுமே.

## வ்யாவஹாரிக சத்யம்

நம்மைச் சுற்றி நடக்கும் நிகழ்ச்சிகளும், நாம் கண்ணால் பார்த்துக்கொண்டிருக்கும் பொருள்களும் வ்யாவகாரிக சத்யமாகும்.

## ப்ராதிபாஸிக சத்யம்

ஒன்றை இன்னொன்றாக நினைத்துக் கொள்வது. நாம் செல்லும் வழியில் ஒரு கயிறு வளைந்து விழுந்து கிடந்தால் போதிய வெளிச்சமின்மை காரணமாக அதைப் பாம்பு என்று நினைப்பது உண்டு. ஆனால், அருகில் சென்று வெளிச்சத்தில் பார்த்தால் உண்மை விளங்கிவிடும். உண்மை விளங்குவதற்கு முன், இருப்பதாகத் தோன்றிய பாம்பு ப்ராதிபாஸிகம் எனப்படுகிறது. இதில் உண்மையாக உள்ள கயிறு அதிஷ்டானம் எனப்படும். உண்மையல்லாத தோற்றமான பாம்பு ஆரோப்யம் எனப்படும். அதிஷ்டானமானது அறிந்து கொள்ளப்பட்டுவிட்டால் ஆரோப்யம் மறைந்துவிடும்.

வ்யாவஹாரிக சத்யம், ப்ராதிபாஸிக சத்யம் ஆகிய இரண்டுமே மாயத்தோற்றங்கள்தான். இரண்டுமே பொய். பொய் என்பது அசத்யமல்ல. இரண்டும் வேறுபட்டவை. வேதாந்த வழக்கில் பொய்க்கு மித்யை என்று பெயர். மித்யை என்பது வ்யாவஹாரிக சத்யத்தையும், ப்ராதிபாஸிக சத்யத்தையும் குறிக்கும். இதனால்தான் 'ஜகன் மித்யா', உலகமானது பொய், ப்ரம்ம ஸத்யம் - ப்ரம்மமே உண்மையானது என்று கூறப்படுகிறது.

இந்த உலகத்தில் நடப்பவை யெல்லாம் இங்குள்ள விண்வெளி (space), காலவெளி (time) இவைகளைச் சார்ந்தே இருக்கும். அதாவது, அவை மற்றொன்றைச் சார்ந்தே இருக்கின்றன. ஆதலால் உலகமானது பாரமார்த்திக சத்யமல்ல.

அசத்யம் என்பது எந்தக் காலத்திலும் இல்லாதது. குதிரைக் கொம்பு, மலடியின் மகன் இவற்றை இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

பழுதை பாம்பாகத் தோன்றுவது ஒரு மருட்சி. இதை மாயை என்று சொல்கிறார்கள். சத்தும் அல்ல, அசத்தும் அல்ல. இன்னதென்று விவரிக்க முடியாத நிலை. இந்தப் பாம்பை ஸதஸத்விலக்ஷணம், அனிர்வசனீயம் என்று கூறுவார்கள்.

நாம், நம்மைச் சுற்றி இருக்கும் உலகம், அதில் காணப்படுபவை எல்லாம் உண்மை என்று நினைத்துக்கொண்டிருக்கிறோம். இது அஜ்ஞானத்தின் விளைவாக ஏற்பட்ட எண்ணமாகும். நம்மிடமுள்ள அஜ்ஞானம் நீங்கிவிட்டால், நாம் காணும் சூரியன், சந்திரன், பஞ்ச பூதங்கள் ஆகிய இவையெல்லாம் இயங்குவதற்கு மூலமான பரம்பொருள் எது என்பதை உணரமுடியும். அந்த உணர்வு ஏற்பட்டுவிட்டால் நாம் காணும் இந்த உலகம் உண்மையானது என்ற மருட்சி மறைந்துவிடும். பஞ்சபூதங்களினாலான இந்த உலகம் ஒரு மாயத்தோற்றம் என்று தொல்காப்பியம் கூறுகிறது. 'நிலந் தீ நீர் வளிவிசும் போடைந்துங், கலந்த மயக்க முலகம்'.

இதைக் கம்பர் சுந்தரகாண்டத்தின் காப்புச் செய்யுளில் கூறுகிறார் என்பதைக் காஞ்சி மாமுனிவர் ஸ்ரீ சந்த்ரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள் தெளிவாக விளக்கியுள்ளார்.

" அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை யரவெனப் பூத மைந்தும்
விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபா டுற்ற வீக்கம்
கலங்குவ தெவரைக் கண்டா லவரென்பர் கைவி லேந்தி
இலங்கையிற் பொருதா ரன்றே மறைகளுக் கிறுதி யாவார். "

மாலையில் தோன்றும் பொய்யான பாம்பைப் போலப் பஞ்ச பூதங்களின் சேர்க்கையினாலுண்டான இவ்வுலகில் தோன்றிய மனிதன், விலங்கு என்ற வேறுபாடுகளினால் உண்டான மனக்கலக்கம் எவரைக் கண்டால் போய்விடுமோ, அவரே வேதங்களுக்கு முடிவானவரும், இலங்கையிற் போர் செய்தவருமான ராமபிரானாவார்.

மாலையில் காணப்படும் பாம்பு பிராதிபாஸிக சத்யம். இந்தப் பஞ்ச பூதங்களாலான உலகத்தில் காணப்படுபவை எல்லாம் பொய்யான பாம்பு போன்ற பஞ்ச பூதவிகாரம். இந்தப் பஞ்ச பூதங்களுக்கெல்லாம் ஆதாரம் (அதிஷ்டானம்) இராமன். நாம் காணும் பொய்த் தோற்றம் (விகாரம்) மறைந்தால் நிலைத்து நிற்பது

பரமாத்ம தத்வம் என்ற ஞானம் ஏற்படும் என்பது கவிச்சக்ரவர்த்தியின் கருத்து.

தக்ஷிணாமூர்த்தி அஷ்டகத்தில் அவர் கீழ்க்கண்டவாறு வருணிக்கிறார்.

" விச்வம் பச்யதி கார்யகாரணதயா
ஸ்வஸ்வாமிஸம்ப³ந்த⁴த:
சிஷ்யாசார்யதயா ததை²வ பித்ருபுத்
ராத்யாத்³யாத்மனா பே⁴த³த : |
ஸ்வப்னே ஜாக்ரதி வா ய ஏஷ புருஷோ
மாயாபரிப்⁴ராமித :
தஸ்மை ஸ்ரீகு³ருமூர்தயே நம இத³ம்
ஸ்ரீதக்ஷிணாமூர்தயே || "

'மாயையில் உழல்பவர்களுக்கு விழிப்புணர்வுடன் இருக்கும் பொழுதும், கனவு காணும்பொழுதும், சொத்து - அதன் உரிமை, குரு - சிஷ்யன், தந்தை - மகன் போன்ற கார்ய காரணங்களால் ஏற்படும் வேறுபாடுகள் புலப்படும். ஆத்மாவுடன் ஏற்படும் உறவுகள் எல்லாம் மாயை. ஆத்மா ஒன்றே உண்மையானது' என்று அத்வைத தத்துவம் உணர்த்துகிறது.

பரம்பொருள் எல்லா அணுக்களிலும் உள்ளது: எங்கும் வியாபித்து உள்ளது என்று உபநிடதங்கள் கூறுகின்றன. 'அணோரணீயான் மஹதோமஹீயான்' (பரமாத்மாவானவன்) அணுவினுள் அணுவாகவும் பெரிதைவிடப் பெரிதாகவும் இருக்கிறான் என்று கூறுகிறது.

இதே கருத்தைக் கம்பர் தமது ராமாயணத்தின் யுத்த காண்டத்தில் இரணியன் வதைப்படலத்தில் பிரகலாதன் வாயிலாக வெளிப்படுத்துகிறார்.

'நீ சொல்லும் அரி என்பவன் எங்கு இருக்கிறான்?' என்று இரணியன் வினவ, பிரகலாதன் கீழ்க்கண்டவாறு பதிலளிக்கிறான்:

" சாணிலு முளனோர் தன்மை யணுவினைச் சதகூ றிட்ட
கோணிலு முளன்மா மேருக் குன்றினு முளனிந் நின்ற
தூணினு முளனீ சொன்ன சொல்லினு முளனித் தன்மை
காணுதி விரைவி னென்றா னன்றெனக் கனகன் சொன்னான் "

(கனகன் நக்கான் என்றொரு பாடமும் உள்ளது.)

'(நான் சொன்ன எம்பெருமான்) சாணிலும் இருக்கிறான். ஓர் அணுவை நூறு கூறாகப் பகிர்ந்த பகுப்பிலும் இருக்கிறான், பெரிய மேருமலையிலும் இருக்கிறான். இங்கு நின்றுகொண்டிருக்கும் தூணிலு மிருக்கிறான், நீ (அவனை நித்தித்துக் கூறிய) வார்த்தைகளிலும் இருக்கிறான். இந்த உண்மையை விரைவில் அறிவாய்'. இவ்வாறு கூறியதைக் கேட்ட இரணியன் 'நன்று' என்று கூறிச் சிரித்தான்.

இதில் நாம் மனத்தில் கொள்ள வேண்டியது என்னவென்றால், அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள் (மலை, தூண்), நாம் காணும் பொருள்கள், காணமுடியாத பொருள்கள் (வார்த்தைகள் போன்றவை) ஆகிய எல்லாவற்றிலும் இறைவன் நிறைந்திருக்கிறான் என்பதுதான். பல பெயர்கள் இட்டு அழைப்பினும், பல உருவங்களில் வழிபட்டாலும், இருப்பது ஒரே பரம்பொருள் என்பதை அறிய வேண்டும். அவனே என்றும், எங்கும் உண்மைப் பொருளாக விளங்கும் ப்ரம்மம். நாம் காணும் மற்றவைகளெல்லாம் உண்மை போல் விளங்கும் தோற்றங்கள். அவை நிரந்தரமானவை அல்ல, அழியத்தக்கவை. இதுவே ஆசார்யர் போதித்த அத்வைத தத்துவம்.



# 7. மத நல்லிணக்கம்
## (RELIGIOUS HARMONY)

மனிதர்களின் நல் வாழ்விற்கு வழிவகுப்பதே மதங்களின் நோக்கமாகும். அநேகமாக எல்லா மதத்தவர்களும் 'இறைவன் என்ற பரம்பொருள் ஒன்று இருக்கிறது. அதுதான் எல்லோரையும் வழி நடத்திச் செல்கிறது' என்று ஒப்புக்கொள்கிறார்கள். கடவுட் கொள்கையை வலியுறுத்திச் சொல்லாத புத்தமதமும் கடவுட்டன்மையை (Godliness) உயர்த்திப் பேசுகிறது. 'ஸத்யம் வத₃' = உண்மையே பேசு, 'த⁴ர்மம் சர' = தர்ம வழியில் நட, 'அஹிம்ஸா பரமோ தர்ம :' = ஜீவகாருண்யம் மேலான தர்மம் - இவற்றைப் போன்ற கோட்பாடுகளை எல்லா மதங்களும் ஏற்றுக் கொள்கின்றன. உலகத்தில் பல தேசங்கள் உள்ளன. அங்குள்ள நடைமுறைகளின் பாதிப்பால், மதங்களின் கொள்கைகளில் சில வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆனால், மதங்களின் தத்துவங்களிடையே ஊடுருவி நிற்கும் எண்ண ஓட்டம் ஒன்றேயாகும். இதைக் கம்பர் மிகத் தெளிவாக கூறுகிறார்.

" கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலு மியம்பரும் பொருளீ தென்னத்
தொல்லையி லொன்றே யாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போற் பரந்த தன்றே "

'சரயூ நதியானது மலையில் உற்பத்தியாகிக் கடலில் கலக்கிறது. கடலை அடைவதற்கு முன் அது வழியில் குளம், ஏரி, ஆறு என்று எல்லா இடங்களிலும் பரவி நிற்கிறது. தோன்றும் பொழுது ஒன்றாயிருந்த நதியானது, பரம்பொருளைப் பற்றிப் பல சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் வெவ்வேறான கொள்கைகளைக் கொண்டுள்ளதைப் போல, நாட்டிலுள்ள வெவ்வேறான நீர் நிலைகளில் நிறைந்து நிற்கிறது. அது கடலில் கலந்து விட்டால் எல்லா வேறுபாடுகளும் மறைந்து ஒன்றாகிவிடும். எது நதியின் நீர், எது கடல்

நீர் என்று பிரித்துச் சொல்ல முடியாது'. கம்பரின் இந்தப் பாடல் பல மதத்தவர்களால் பலவாறு சொல்லப்பட்டாலும் பரம்பொருள் ஒன்றுதான் என்ற மேலான தத்துவத்தை நன்கு உணர்த்துகிறது.

இந்தக் கருத்தை பகவத் கீதையும் உறுதி செய்கிறது.

" யேப்யன்யதேவதாப[4]க்தா யஜந்தே ச்ரத்[3]த[4] யான்விதா : |
தே பி மாமேவ கௌந்தேய யஜந்த் - யவிதி[4] பூர்வகம் || "

'குந்தியின் மைந்தனே (அர்ஜுனா), யார் முழுமனத்துடன் வேறு தெய்வங்களை வணங்குகிறார்களோ, அவர்களும் என்னை வணங்குபவர்களாக ஆகிறார்கள். அதாவது என்னை நேராக வணங்காமல் வேறு தெய்வங்களை வணங்கினாலும் அவர்களும் என்னை வழிபட்டவர்களாகிறார்கள்'. தெய்வம் ஒன்று உண்டென்று நம்பி, அதை யார் வணங்கினாலும், எந்த உருவத்தில் வணங்கினாலும் அவர்களுக்கு உய்வுண்டு என்பது இதனால் உணர்த்தப்படுகிறது.

சில மதங்கள் உருவ வழிபாட்டை ஏற்றுக்கொள்வதில்லை.

கால ஓட்டத்தில் சில மதக் கட்டுப்பாடுகள் தளர்ந்து மனித மேம்பாட்டுக்காக ஏற்பட்ட சில விதிமுறைகள் நலிவுற்று மக்களை அச்சுறுத்தும் நிலைக்கு வந்துவிட்டன. இவைகளின் கட்டிலிருந்து விடுபடும் தருணத்தை மக்கள் ஆவலோடு எதிர்பார்த்திருந்தனர். பூர்வ மீமாம்ஸகர்கள் கர்மாக்களின் முக்கியத்துவத்தை வலியுறுத்தி அவைகளை மக்களின்மீது திணித்து அவைகளை வியாபாரப் பொருளாக்கினர். இந்தச் சூழ்நிலையில் புத்தமதக் கோட்பாடுகள் மக்களுக்கு ஒரு நல்ல வரவேற்கத் தகுந்த மாறுதலாகத் தோன்றின. எல்லோரும் எளிதில் பின்பற்றக்கூடிய உபதேசங்களும், சடங்குகளின் பிடியிலிருந்து விடுபடுவதற்குண்டான நல்ல வாய்ப்பும், மக்களிடம் பெரிய வரவேற்பைப் பெற்றன. எல்லோர் மனத்திலும் எளிதாகப் பதியும்படியான வாதங்கள் ஒரு கவர்ச்சியை ஏற்படுத்தின. இதனால் அநேகர் ஹிந்து மதத்தைத் துறந்து புத்த மதத்தைத் தழுவினர். புத்த மதம் கர்மானுஷ்டானங்களை (சடங்குகளை) ஏற்றுக் கொள்ளவே இல்லை. அத்துடன் கடவுட் கொள்கையையும் வலியுறுத்தவில்லை.

சடங்குகளின் வலுவான பிடியிலிருந்து விடுதலை அடைந்ததால் மிக்க மகிழ்வெய்தினர் மக்கள். இந்த மகிழ்ச்சிப் பெருக்கால் அவர்கள் கடவுள் தத்துவத்தில் மனத்தைச்

செலுத்தவில்லை. மேலும் புத்த மதத்தின் மற்றக் கொள்கைகளான அஹிம்சை, உண்மை பேசுதல், பிறர் பொருள் கொடுத்தாலும் அதை ஏற்றுக் கொள்ளாமை (அபரிக்ரஹம்). இவையெல்லாம் பல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்படும்படியாக இருந்தன. இதில் நாம் கவனிக்க வேண்டியது என்னவென்றால், புத்த மதம் சொல்லும் அஹிம்சை முதலிய தத்துவங்கள் புதியவையல்ல. 'அஹிம்ஸா பரமோ த₄ர்ம :' அஹிம்சையே மேலான தர்மம் என்பது வேதக் கோட்பாடுகளில் ஒன்று. புத்த மதத்தில் சொல்லியதுபோல் சடங்குகளையும் கடவுட் கொள்கையையும் விட்டுவிட்டால் மனித மனம் மேம்பாடடைய முடியாது என்று சங்கரர் நம்பினார். ஞானம் பெறுவதற்குப் பக்திதான் முதற்படி. மனம் பக்குவப்பட்ட பிறகுதான் ஞானத்தைப் பெறமுடியும். பக்தி செய்வதற்கு ஏதாவது ஒரு பற்றுக்கோடு வேண்டுமல்லவா? அதற்காக இறைவனுக்கு ஓர் உருவத்தையும், பெயரையும் கொடுத்து, நாமஜபம் செய்து மனத்தை ஒருமைப்பாட்டுக்குள் கொண்டு வருவது எளிது என்று நினைத்த சங்கரர் இறைவனைத் தொழு வதற்கு ஓர் எளிய வழிமுறையை வகுத்தார். அதுதான் நாமஜபம். இதன் பெருமையை சங்கரர் விஷ்ணுஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் கூறுகிறார். கிம் ஜபன் முச்யதே ஜந்து : என்ற வாக்கியத்தில் வரும் 'ஜபன்' (=ஜபம் செய்பவன்) என்ற வார்த்தை கவனிக்கத்தக்கது. ஜபம் என்பது ஒரு வேள்வி. இந்த வேள்வியின் சிறப்பு என்னவென்றால், இதை ஜாதி, மத, இன வேறுபாடின்றி எல்லோரும் செய்யலாம். இதற்குத் தனி நியமங்களோ, குறிப்பிட்ட இடங்களோ, நேரமோ, எந்தவிதமான பொருட்களோ தேவை இல்லை. எப்பொழுதும் யார் வேண்டுமானாலும் செய்யலாம். இது முற்றும் அஹிம்சாமுறையில் செய்யப்படுகின்ற வேள்வியாகும். நாம ஜபம் செய்து பக்தி மேலிட்டால் ஞானம் படிப்படியாக மேலோங்கும். பூர்ண ஞானம் பெற்றால் பரமாத்ம தத்துவத்தை உணர்ந்துகொள்ள முடியும். இவ்வாறு போதித்தமை சங்கரரது முதிர்ந்து அனுபவத்திற்கும் புத்திக் கூர்மைக்கும் ஒரு சான்றாகும்.

இப்படி மக்கள் மனத்தில் ஹிந்து மதக் கோட்பாடுகளின்பால் இருந்த தவறான எண்ணங்களைப் போக்கி, அவர்களை வேத நெறியில் நடக்கும்படி செய்தார் சங்கராசார்யர்.

அவரது சித்தாந்தம் மற்றச் சித்தாந்தங்களுடன் முரண்பாடு உடையதல்ல. புத்த மதம் கடவுட்கொள்கையையும் கர்மாக்கள் செய்வதையும் ஏற்றுக் கொள்வதில்லை. மற்றப்படி இந்து மதத்தில்

சொல்லிய அஹிம்ஸை, ஸத்யம், அபரிக்ரஹம் (பிறர் பொருளை ஏற்காமல் இருப்பது) எல்லாவற்றையும் ஒத்துக்கொள்கிறது. பூர்வமீமாம்சகர்கள் வைதிக கர்மானுஷ்டானங்களை மட்டும் வலியுறுத்தினார்கள்.

கர்மானுஷ்டானங்களைப் பொறுத்தமட்டில் பூர்வ மீமாம்ஸகர்கள் (மண்டனமிச்ரர் போன்றோர்) பௌத்தர்களோடு வாதாடி வென்று மக்களைத் தங்கள்பால் ஈர்த்துவிட்டனர். சங்கரர் காலத்தில் புத்த மதம் மிக்க வலிவுடையதாக இல்லை என்று ஜவாஹர்லால் நேரு குறிப்பிட்டிருக்கிறார். ("But Buddhism had shrunk in India even before Shankara's time" - The Discovery of India.) சங்கரரும் தம் பங்கிற்குக் கடவுட் கொள்கையை மக்களிடம் பரப்பி அவர்களை வேத மார்க்கத்தில் வந்து சேரும்படி செய்தார். மனதத்துவ வல்லுநரான சங்கரர் கடவுட் கொள்கையின் முக்கியத்துவத்தை நன்கு உணர்ந்திருந்தார். மனிதன் தன் மனத்தைக் கட்டுப்படுத்துவதற்கு ஓர் இலக்கு வேண்டும். அது அவனது பார்வையில் படும்படி இருக்க வேண்டும். எனவே, உருவ வழிபாட்டை நெறிப்படுத்தி, பக்தி மேலிடச் செய்து, மனப்பக்குவம் ஏற்படும் சீரிய வழியை மக்களுக்கு அவர் போதித்தார். கடவுட் கொள்கை புறக்கணிக்கப்பட்டமை புத்த மதம் வளராமல் போனதற்கு ஒரு முக்கியமான காரணமாகும். நல்ல வழியில் கடமைகளை ஆற்றுவதே நாம் நடைமுறையில் காணும் தெய்வத் தன்மையாகும் என்ற கொள்கையைப் புத்த மதம் வலியுறுத்தியது. இது சாமானிய மக்களுக்கு நல்ல மனநிறைவைக் கொடுக்கவில்லை. இந்தக் குறையானது புத்தரது மறைவிற்குப் பிறகு புத்த மதத்திலேயே சில மாற்றங்களை ஏற்படுத்தியது. புத்தருக்குப் பின் வந்த சீடர்கள் ஒரு புதிய மதக்கோட்பாட்டைப் புகுத்தினர். அதன்படி அவர்களுக்குக் கடவுள், சொர்க்கம், நரகம் என்ற கொள்கைகளில் ஓர் ஈடுபாடு ஏற்பட்டது. புத்தருக்கே விக்கிரகம் அமைத்து அவரையே கடவுளாக வழிபடலாயினர். எனவே, சாதாரண மனிதனது எண்ணத்தை எளிதில் கவரும் விக்கிரக வழிபாடு இந்திய தேசத்தில் வேரூன்றிவிட்டது. சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு புத்தரே திருமாலின் அவதாரமாகக் கருதப்பட்டார்.

புத்தாவதாரம் விஷ்ணுவினுடைய அவதாரங்களில் ஒன்று என்ற கருத்து கி.பி. ஆறாவது நூற்றாண்டிற்குப் பிறகுதான் மக்களிடையே பரவ ஆரம்பித்தது என்று அறிஞர்கள் கூறுகிறார்கள்.

கர்னாடக மாநிலத்தில் ஹரிஹர் என்ற புண்ணியத்தலம் இருக்கிறது. இங்குள்ள மூர்த்தியானவர் ஹரி (திருமால்), ஹரன் (சிவன்) ஆகிய இரு தெய்வங்களின் உருவமாகக் காட்சியளிப்பதாகக் கூறுவர். இது சிவ-விஷ்ணு ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் சிறந்த பண்பாட்டு முறையாகும். இந்த மூர்த்தியின் பெயரில் சங்கரர் 'ஹரிசங்கர ஸ்தோத்திரம்' என்ற துதியை இயற்றியுள்ளதாகக் கருதப்படுகிறது. இந்தத் தோத்திரத்தை ஒரு வகையாகப் பதம் பிரித்துப் படித்தால் திருமாலின் பதினோரு அவதாரங்களை விவரிப்பதாகத் தோன்றும். வேறுவகையாகப் பதம் பிரித்துப் படித்தால் அது பரமசிவனைத் துதித்துப் பாடியது போல் தோன்றும். இது இயற்றியவருடைய புலமைக்கு ஒரு சான்று.

இதே போல் ஒரே பாட்டு இரண்டு வகையாகப் பொருள் கொள்ளும் வண்ணம் அமைந்த வேறு நூல்களும் உள்ளன. உதாரணமாக 'ராக$_4$வபாண்ட$_3$வீயம்' என்ற வடமொழி நூல்., (ராக$_4$வ) ராமனது கதையான ராமாயணத்தையும், (பாண்ட$_3$வீயம்) பாண்டவர்களது கதையான மகாபாரதத்தையும் கூறும் வண்ணம் அமைந்திருக்கிறது. இதையே,

'' இரவீசர் காதை' என்று தமிழிலும் பாடியிருக்கிறார்கள்.

இரவி (சூரிய) குலத்து (ஈசன்) தலைவன் ராமனின் கதை ராமாயணம், இரவிற்குத் தலைவன் சந்திரன் : சந்திரவம்சத்தைச் சேர்ந்தவர்களின் கதை மஹாபாரதம் என்று சொல்லும் வகையில் அமைந்துள்ளது.

பண்டைய மரபின்படி திருமாலின் பத்து அவதாரங்களாகக் கருதப்படுபவை :

| | |
|---|---|
| மத்ஸ்யாவதாரம் | - மீன் |
| கூர்மாவதாரம் | - ஆமை |
| வராகாவதாரம் | - பன்றி |
| நரசிம்மாவதாரம் | - பாதி மனிதன் பாதி மிருகம் |
| வாமனாவதாரம் | - குள்ளமான மனிதர் |
| பரசுராமாவதாரம் | - முற்றும் வளர்ந்த மனிதன் |
| இராமாவதாரம் | - } முழு மனிதர்கள் |
| பலராமாவதாரம் | - } முழு மனிதர்கள் |
| கிருஷ்ணாவதாரம் | - } முழு மனிதர்கள் |
| கல்கி அவதாரம் | - (இனி மேல் எடுக்கப்படவேண்டிய அவதாரம்) |

இந்தப் பத்து அவதாரங்கள் டார்வினின் உயிரினங்களின் வளர்ச்சித் தத்துவத்தைப் (theory of evolution) பிரதிபலிப்பதாக கூறுவர்.

ஆனால், மேலே குறிப்பிட்டுள்ள 'ஹரிசங்கர ஸ்தோத்திரத்தில்' சங்கரர் விஷ்ணுவின் அவதாரங்களில் புத்தாவதாரமும் ஒன்று என்று சொல்லி, பதினோரு அவதாரங்களின் பெயர்களைக் கூறுகிறார்.

புத்தமதக் கொள்கைகளைக் கண்டித்த சங்கரர், புத்தர் செய்த நற்காரியங்களை ஏற்றுக் கொண்டு அவரை ஓர் அவதார புருஷராகக் குறிப்பிடுவது சங்கரரது உள்ளச் சிறப்பைக் காட்டுகிறது.

புத்த மதத்தை ஹிந்து சமயத்திற்கு ஈர்த்துவிட்டால் அது சமய ஒற்றுமையை வளர்த்துச் சனாதன தர்மத்தின் வளர்ச்சிக்குப் பேருதவியாக இருக்கும் எனச் சங்கரர் நினைத்திருக்கலாம். புத்தர் காலத்திற்குப் பிறகு ஏற்பட்ட மாறுதல்களினால் அவருடைய சீடர்களிடையே கடவுள் தத்துவத்தில் பிடித்தம் ஏற்படலாயிற்று. இந்த நிலையில் புத்தரையே கடவுளது அவதாரம் என்று ஒரு நம்பிக்கையை ஏற்படுத்திவிட்டால், அது புத்தர்களைக் கவர்வதோடு அவர்களை ஹிந்து மதக்கூட்டிலிருந்து வெளியேறிவிடாமல் பாதுகாக்கும் என்ற நம்பிக்கையில் புத்தரைத் திருமாலின் அவதாரமாக அறிவித்திருக்கலாம். இது சங்கரருக்கு, சமுதாயச் சீர்த்திருத்தத்தில் இருந்த ஆர்வத்தைக் காட்டுகிறது.

இந்த அவதாரக் கொள்கையை எல்லோரும் ஏற்றுக் கொண்டார்கள் என்று உறுதியாக கூற முடியவில்லை.

பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான முத்துசாமி தீக்ஷிதர் 'மாத₄வோ மாம் பாது' என்ற ராகமாலிகையை இயற்றியிருக்கிறார். அதில் அவர் திருமாலின் பத்து அவதாரங்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார். அவர் குறிப்பிட்டுள்ள அவதாரங்கள் பின்வருமாறு :

1. மத்ஸ்யாவதாரோ - மச்சாவதாரம் (நாட ராகம்)
2. கு³ருகு³ஹனுத கூர்மாவதாரம் - கூர்மாவதாரம் (கௌளை ராகம்)
3. பூ⁴மிபால ஸூகரேண ரக்ஷிதோஹம் - வராகாவதாரம் (ஸ்ரீ ராகம்)
4. நரஸிம்ஹாய நமஸ்தே - நரசிம்மாவதாரம் (ஆரபி ராகம்)

| | | | |
|---|---|---|---|
| 5. | வாமனாத் அன்யம் ந ஜானேஹம் | - | வாமனாவதாரம் (வராளி ராகம்). |
| 6. | பரசுராமஸ்ய தாஸோஹம் | - | பரசுராமாவ தாரம் (கேதார ராகம்) |
| 7. | ராமசந்த்$^{3}$ரஸ்வாமினி ப$^{4}$க்தோஹம் | - | இராமாவதாரம் (வஸந்தா ராகம்) |
| 8. | ப$^{3}$லராம மாம் கலய | - | பலராமாவதாரம் (ஸுரடி ராகம்) |
| 9. | ஸ்ரீக்ருஷ்ணம் ப$^{4}$ஜரே சித்த | - | கிருஷ்ணாவ தாரம் (ஸௌராஷ்ட்ர ராகம்) |
| 10. | கலியுக$^{3}$வர வேங்கடேசம் ப$^{4}$ஜேஹமனிசம் | - | திருப்பதி வேங்கடேசப் பெருமாள் |

கல்கி அவதாரத்திற்குப் பதிலாக அலர்மேலு மங்கையுடன் கூடிய வேங்கடேசப் பெருமானின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது.

இந்தக் கிருதி முத்துசாமி தீக்ஷிதரால் இயற்றப்பட்டதல்ல என்று ஒரு கருத்து நிலவி வருகிறது. எப்படி இருப்பினும் இது ஒரு வடமொழி வல்லுநரால்தான் பாடப்பட்டிருக்க வேண்டும். அவரும் அவர் வழியைச் சார்ந்த மற்றவர்களும் புத்தரைத் திருமாலின் அவதாரமாகக் கருதவில்லை என்பது கருத்தில் கொள்ளத்தக்கது.

வைணவர்கள் (விசிஷ்டாத்வைதிகள்) புத்தரை விஷ்ணுவின் அவதாரமாக ஏற்றுக்கொள்ளவில்லை. ஆனால், த்வைதிகள் (மத்வாசார்யரின் மதத்தவர்கள்) புத்தரைத் திருமாலின் அவதாரமாகக் கருதுகிறார்கள். அவர்கள் கூறும் பத்து அவதாரங்களில் பலராமாவதாரம் சொல்லப்படவில்லை. ஆனால், புத்தாவதாரம் கூறப்பட்டுள்ளது. உடுப்பி கிருஷ்ணனை வழிபட்ட வாதிராஜ ஸ்வாமிகள் என்ற பெரியவர் இயற்றிய 'தசாவதார ஸ்துதி' என்ற தோத்திரத்தில் புத்தாவதாரம் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தத் துதியில் 33 சுலோகங்கள் உள்ளன. இது அச்வதா$^{4}$டீ என்ற விருத்த வகையில் அமைந்துள்ளது.

"பு$_3$த்$_3$தா$_4$ வதார கவிப$_3$த்$_3$தா $_4$னுகம்ப குரு
ப$_3$த்$_3$தா$_4$ ஞ்ஜலௌ மயி த$_3$யாம்
ஶௌத்$_3$தோ$_4$த$_3$னிப்ரமுத$_2$ஸைத்$_3$தா$_4$ந்திகாஸ¬க$_3$ம -
பௌ$_3$த்$_3$தா$_4$க$_3$மப்ரணயன"

ஸிந்தாந்த நூல்களை நன்கு கற்றறிந்தவர்களாலும் கூடப் புரிந்து கொள்ளப்பட முடியாத பௌத்த நூல்களை நிர்மாணம் செய்த, 'புத்தாவதார' - புத்தாவதாரம் செய்த ஹரியே! 'கவிப$_3$த்$_3$த$_4$ - அனுகம்ப' - ஞானிகளிடம் கருணை கொண்டவரே, 'ப$_3$த்$_3$தா$_4$ஞ்ஜலௌ' - கைகுவித்துள்ள, 'மயி' - என்னிடத்தில் 'த$_3$யாம்' - அருள், 'குரு' - செய்.



## 8. சங்கரரிடம் நாம் கற்க வேண்டிய நியதி

சங்கரரிடமிருந்து நாம் அனைவரும் அறிந்துகொள்ளவேண்டிய மேலான நடைமுறை என்னவென்றால், கொள்கைகளின்பால் உள்ள வேறுபாடு அவற்றைக் கடைப்பிடிப்பவர்கள் பேரில் பகையை ஏற்படுத்தக் கூடாது.

சங்கரர் புத்தமதக் கொள்கைகளைத்தான் கண்டித்தாரே தவிரப் புத்தரை நிந்தனை செய்யவில்லை. புத்தரைத் திருமாலின் பத்து அவதாரங்களில் ஒன்றாகக் கூறியிருக்கிறார்.

புத்தமதத்தின் சில மரபுகளையும் கடைப்பிடித்திருக்கிறார். புத்த மதத்தில் பிரம்மசாரிகள்தான் துறவு பூணவேண்டும் என்ற நியதி உண்டு. அது இன்றளவும் சங்கரர் பரம்பரையில் கடைப்பிடிக்கப் படுகிறது. இல்வாழ்க்கையிலிருந்தவர்கள் துறவியாகி மடத்தின் தலைவராக முடியாது. சங்கரரது முக்கியச் சீடர்களில் ஸுரேச்வாரசார்யார் நீங்கலாக, தோடகாசார்யார், பத்மபாதர், ஹஸ்தாமலகர் ஆகிய மூவரும் இல்லற வாழ்வை மேற்கொள்ளாமலேயே துறவு பூண்டவர்கள். புத்த மதக் கோட்பாடுகளில் சிலவற்றைச் சங்கரர் கடைப்பிடித்ததாலே அவரை 'ப்ரச்ச$_2$ன்ன பௌத்தர்' (மாறுவேடத்திலிருக்கும் புத்தர்) என்று வேறு சில சிந்தாந்தக்காரர்கள் சொன்னார்கள்.

தமது தேச யாத்திரையின்பொழுது சங்கரர், அமரசிம்மர் என்ற ஜைனரைச் சந்தித்தார். அமரசிம்மர் மிகச் சிறந்த அறிவாளி. ஜைனமதக் கொள்கைகளைப் பற்றிப் பல புத்தகங்கள் எழுதியிருந்தார். அவருடன் ஆசார்யர் வாதம் செய்து அவரை வென்றார். தோல்வியை ஒப்புக்கொண்ட அமரசிம்மர் தாம் எழுதிய புத்தகங்களை நெருப்பிலிட்டு அழிக்க ஆரம்பித்தார். இதை அறிந்த ஆசார்யர் அவரைத் தடுத்து அவரிடம் மீதமிருந்து ஒரே புத்தகத்தை நெருப்பில் போடாமல் பார்த்துக்கொண்டார். அதுதான் இன்று நம்மிடம் இருக்கும் அமரகோசம் என்ற அரிய நூல். அது இன்றளவும்

புகழ் பெற்று விளங்குகிறது. இதில் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய படிப்பினை ஒன்றுள்ளது. அமரசிம்மர் ஜைனராக இருந்தபோதிலும் அவர் எழுதிய நூல் எல்லோருக்கும் பயன்படக்கூடியதாய் இருந்ததால், சங்கரர் அமரசிம்மரை மனமாரப் பாராட்டி அவர் எழுதிய நூல் எல்லோருக்கும் பயனளிக்கும்படி செய்துவிட்டார். அமரசிம்மர் ஜைனமதத்தைச் சார்ந்தவராக இருந்தாலும் அகராதி போன்ற தமது நூலில் உலகிலுள்ள எல்லாப் படைப்புகளையும் மத வேறுபாடின்றிக் குறிப்பிட்டிருக்கிறார். இந்த மதக் கடவுள்களின் பெயர்கள் அனைத்தும் அமரகோசத்தில் இடம் பெற்றுள்ளன. தங்கள் சொந்த விருப்பு வெறுப்புகளைக் களைந்துவிட்டு எல்லா வார்த்தைகளுக்கும் உள்ள உண்மையான அர்த்தங்களை எழுதுவதே அகராதியைத் தொகுப்பவர்களது கடமையாகும். அமரசிம்மரது 'அமரகோசம்' இன்றும் வடமொழி பயிலும் மாணவர்களுக்கு ஒரு பயனுள்ள வரப்பிரசாதமாக விளங்கி வருகிறது.

இந்த நிகழ்ச்சி ஆசார்யர், அமரசிம்மர் ஆகிய இருவரின் பரந்த மனப்பான்மையையும் சிறந்த பண்பையும் காட்டுகிறது.

மாறுபட்ட கொள்கைகளை உடையவர்கள் நண்பர்களாகத் திகழ முடியாது என்பது தவறு. நமது பெருந்தலைவர்கள் இந்த விதத்தில் நமக்கு வழிகாட்டிகளாக இருந்திருக்கிறார்கள். மகாத்மா காந்தியும், ராஜாஜியும் உற்ற நண்பர்கள், பல சமயங்களில் அவர்கள் கொள்கையளவில் மாறுபட்டிருந்தாலும் அது அவர்களது நட்பைப் பாதிக்கவில்லை. காமராஜ் அவர்களும், கம்யூனிஸ்ட் கட்சித்தலைவரான ஜீவானந்தம் அவர்களும் வெவ்வேறு கொள்கைகளைக் கடைப்பிடிக்கும் கட்சிகளைச் சார்ந்தவர்களாக இருந்தபோதிலும் நல்ல நண்பர்களாகத் திகழ்ந்தார்கள். ஜீவானந்தத்தின் குடும்பச் சூழ்நிலைக் காரணமாக அவருடைய மனைவிக்கு வேறு இடத்திற்கு மாற்றல் தேவையாக இருந்தது. ஆனாலும் அவர் தம் நண்பரான காமராஜரிடம் கேட்க விரும்பவில்லை. இந்தச் செய்தியை அறிந்த காமராஜ் அவர்கள் ஜீவானந்தம் அவர்களின் துணைவியாருக்கு இடமாற்றம் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்தார். இதை எண்ணிப் பார்த்து, கொள்கை வேறுபாடுகள் மனிதர்களிடையே விரோதத்தை (personal hatred) உண்டாக்கக்கூடாது என்பதை உணர்ந்து கொள்ளல் வேண்டும். இது சங்கரர் தம் நடத்தையால் நமக்கு போதித்த பாடம்.

**அன்பு நெறி தழைக்க! உலகம் இன்புறுக!!**



# 9. சங்கரரின் உபதேசங்கள்

சங்கரர் ஒரு வேதாந்தி. அவர் அத்வைத தத்துவத்தைப் பிரசாரம் செய்திருக்கிறார். அது பாமரஜனங்களுக்கு எளிதில் விளங்காது என்று பலர் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள். அவர் ஞானமார்க்கத்தை வலியுறுத்தி யிருந்தாலும் பக்தி இல்லாமல் ஞானம் பிறக்காது என்று நம்பினார். ஆகையினாலே மக்களிடையே பக்தி உணர்வு ஏற்படுத்துவதற்காக நம் தேசத்திலுள்ள எல்லாக் கோவில்களிலும் உறையும் தெய்வங்களின்மீது அநேக தோத்திரங்களை இயற்றியுள்ளார். அவர் பாமரர், பண்டிதர் அனைவருக்கும் உதவும் வண்ணம் பல நூல்கள் இயற்றியுள்ளார். அவைகளில் சில நூல்களின் பெயர்கள் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

பண்டிதர்களுக்கான நூல்கள்

1. ப்ரம்ம ஸூத்திர பாஷ்யம்
2. உபநிஷத் பாஷ்யங்கள்
3. கீதா பாஷ்யம்
4. விஷ்ணுஸஹஸ்ரநாம பாஷ்யம்
5. லலிதாத்ரிசதி பாஷ்யம்
6. ஸௌந்தர்யலஹரீ
7. சிவானந்தலஹரீ

நீதி நூல்கள்

1. விவேக சூடாமணி
2. அபரோக்ஷானுபூதி
3. மனீஷாபஞ்சகம்
4. ப்ரச்நோத்தர ரத்ன மாலிகா
5. உபதேச ஸாஹஸ்ரீ

## பாமரர்களுக்கான தோத்திரங்கள்

**கணபதி**

கணேச புஜங்கம்
கணேச பஞ்சரத்னம்

**முருகன்**

ஸுப்ரஹ்மண்ய பு₄ஜங்கம்

**பரமசிவன்**

ஶிவபு₄ஜங்கம்
காஶீ பஞ்சகம்
ஶிவபஞ்சாக்ஷர ஸ்தோத்ரம்
ஶிவபாதா₃தி கேஶாந்தவர்ணன ஸ்தோத்ரம்
ஶிவகேஶாதி₃ பாதா₃ந்த வர்ணன ஸ்தோத்ரம்
லிங்காஷ்டகம்
காலபை₄ரவாஷ்டகம்
ஶிவாஷ்டகம்

**விஷ்ணு**

விஷ்ணுபு₃ஜங்கப்ரயாத ஸ்தோத்ரம்
ராமபு₄ஜங்கப்ரயாத ஸ்தோத்ரம்
லக்ஷ்மீ நரசிம்ம பஞ்சரத்னம்
அச்யுதா₃ஷ்டகம்
கோ₃விந்தா₃ஷ்டகம்
விஷ்ணு பாதா₃தி₃ கேசாந்தவர்ணன ஸ்தோத்ரம்
க்ருஷ்ணாஷ்டகம் - ராமாஷ்டகம்

**அம்பிகை**

லலிதா பஞ்சரத்னம்
மீனாக்ஷீ பஞ்சரத்னம்
அன்ன பூர்ணாஷ்டகம்
ப்⁴ரமராம்பா₃ஷ்டகம்
த்ரிபுரஸுந்தர்யஷ்டகம்
லலிதா மந்த்ர மாத்ருகாக்ஷர புஷ்பமாலா
த்ரிபுரஸுந்தரீ மானஸ பூஜா ஸ்தோத்ரம்.

6

சங்கரர் தம் நீதி நூல்களின் மூலம் மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்வதற்கும் பல நல்லுபதேசங்களை நல்கியிருக்கிறார். அவைகளில் சில மிகவும் எளிமையாகவும், அனைவரும் எளிதில் புரிந்து கொள்ளும் வகையிலும் அமைந்திருக்கின்றன. அவைகளில் 'ப்ரச்னோத்தர ரத்னமாலிகா' என்று நூலில் கேள்வி - பதில் முறையில் பல அரிய கருத்துக்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. பஜகோவிந்தம் என்ற நூலும் பலரும் நன்கறிந்த நூலாகும். அவைகளில் கூறப்பட்டிருப்பவைகளைச் சிறிதளவேனும் புரிந்துகொண்டு கடைப்பிடிக்க முயலுவோமேயானால், அது நம்மைப் பலவிதமான தீயவிளைவுகளிலிருந்து காப்பாற்றி நமக்கு மனச் சாந்தியை அளிக்கும்.

**ப்ரச்னோத்ர ரத்னமாலிகா**

கேள்வி : நலினீத₃ளக₃தஜலவத் தரலம் கிம்
தாமரை இலைத் தண்ணீர் போல இருப்பவை (நிலையற்றவை) யாவை?

பதில் : யௌவனம் த₄னம் ச ஆயு :
இளமை, செல்வம், ஆயுள் (முதலியவை)

இதைச் சற்று விரிவுபடுத்தி இந்த உலகவாழ்வே தாமரை இலைத் தண்ணீர் போல நிலையற்றது என்று பஜகோவிந்தத்தில் கூறுகிறார்.

" நளினீத₃ளக₃தஜலவத்தரளம் தத்வஜ்ஜீவிதமதிசய சபலம் ||
வித்₃தி₄ வ்யாத்₄யபி₄மானக்₃ரஸ்தம் லோகம் சோகஹதம் ச ஸமஸ்தம்"

நிலையற்றதாக இருப்பதோடல்லாமல் இந்த உலக வாழ்வு, வியாதி, (உலகத்திலுள்ள பொருள்கள், மனிதர்கள் இவைகள் பாலுள்ள) ஆசை ஆகியவற்றால் கட்டுண்டிருக்கிறது. மேலும் இவ்வுலக வாழ்வு சோகமயமாக இருக்கிறது. ஆதலால் கோவிந்தனைப் பாடுவாயாக என்று உபதேசிக்கிறார்.

**ப்ரச்னோத்தர ரத்னமாலிகா**

மனிதனிடம் அரிதாக இருக்கக்கூடிய பண்புகளை விவரிக்கிறார்.

கேள்வி : சிந்தாமணிரிவ து₃ர்லப₄மிஹ கிம்
இவ்வுலகில் (விரும்பும் பொருள்களையெல்லாம் அளிக்கும்) சிந்தாமணியைப் போன்று அரியது எது?

பதில் : தா³னம் ப்ரியவாஸஹிதம்
ஜ்ஞானமகு³ர்வம் க்ஷமான்விதம் சௌர்யம் |
வித்தம் த்யாக³ ஸமேதம்
து³ர்லப⁴மேதச்சதுர் ப⁴த்³ரம் ||

## தானம் ப்ரியவாக் - ஸஹிதம்

பிறருக்கு தானம் கொடுக்கும்பொழுது அன்பான வார்த்தை களைப் பேசிக்கொண்டு கொடுக்க வேண்டும் என்பது உணர்த்தப்படுகிறது. முகத்தில் கோபம் பொங்கக் கொடிய வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டு பிறருக்குப் பொருளை ஈந்தால், அது கொடுப்பவன், பெற்றுக்கொள்பவன் ஆகிய இருவருக்கும் நன்மை பயக்காது.

## ஜ்ஞானம் அகர்வம்

படித்தவர்களுக்குக் கர்வம் இருக்கக்கூடாது. அப்படிப் பட்டவர்களது கல்வி மற்றவர்களுக்குப் பயனளிக்காது. செருக்கு மேலிட்ட கல்வியாளர்கள், சீரான முறையில் விருப்பு வெறுப்பின்றி ஆராய்ந்து நல்ல முடிவை எடுக்க முடியாது. பிறர் சொல்லும் நல்ல கருத்துக்களை ஏற்றுக்கொள்ளும் மனப்பக்குவமும், தாம் சொல்லும் கருத்துக்களில் உள்ள தவற்றை ஒப்புக்கொள்ளும் பெருந் தன்மையும் இருந்தால்தான் அவரிடம் உள்ள கல்வியின் பரிமாணம் விரிவடையும், மற்றவர்களுக்கும் பயன்படும்.

ஞானமுடையவனுக்குக் கர்வம் இருக்கக்கூடாது; பணிவு இருக்க வேண்டும் என்பதைத் தம் வாழ்க்கையில் நடத்திக் காட்டியவர் சங்கரர். அவர் ஒரு மாமேதை என்பதை அனைவரும் அறிவர். இருந்தும் அவருடைய படைப்புகளில் பல இடங்களில் அவர் தம்மை மிகவும் தாழ்த்திப் பேசிக்கொள்கிறார். தம்மைப் பண்டிதன் என்றோ, உயர்ந்தவன் என்றோ சொல்லிக்கொள்ளவே இல்லை.

உதாரணங்கள் : *சிவானந்தலஹரீ (14)*

" ப்ரபு⁴ஸ்த்வம் தீ³னானாம் க²லு பரமப³ந் து⁴ : பசுபதே
ப்ரமுக்³யோ(அ)ஹம் தேஷா-மபி கிமுத ப³ந் து⁴த் வமனயோ |:
த்வயைவ க்ஷந்தவ்யார : திவ மத³பராதா⁴ச்ச ஸகலா :
ப்ரயத்னாத் கர்தவ்யம் மத³வன-மியம் ப³ந் து⁴ - ஸரணி : ||"

*ஏ! பசுபதே! நீர் எளியவர்களுக்கு நெருங்கிய உறவினர் அல்லவா? நான் எளியவர்களிலும் கடையானவன். அப்படி இருக்கையில் நம் உறவைப்பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. நீர் என்னுடைய*

குற்றங்களை மன்னித்தருள வேண்டும். என்னைக் காக்கும் பொறுப்பு உமக்குள்ளது. இதுவே உறவினர் செயல்பட வேண்டிய முறை.

இதே கருத்தை ஸுப்ரமண்ய புஜங்கத்திலும் சொல்கிறார் (30)

" ஜனித்ரீ பிதா ச ஸ்வபுத்ராபராத⁴ம்
ஸஹேதே ந கிம் தே³வஸேநாதி⁴ நாத² |
அஹம் சாதிபா³லோ ப⁴வான் லோகதாத
க்ஷமஸ்வாபராத⁴ம் ஸமஸ்தம் மஹேச || "

தேவர்களின் சேனைத் தலைவனே! (தேவசேனாவின் கணவரே!) தாயும் தந்தையும் தம் குழந்தைகளின் பிழைகளைப் பொறுத்துக் கொள்வதில்லையா? நான் மிகவும் சிறிய குழந்தை. தாங்களோ உலகத்திற்கே தந்தை. ஆதலாலே நான் செய்த அனைத்துப் பிழைகளையும் மன்னித்தருள்க, என்று இறைவனிடம் இறைஞ்சுகிறார். தம்மை ஏதும் அறியாத இளங்குழந்தையாகச் சொல்லிக் கொள்கிறார்.

ஸுப்ரமண்ய புஜங்கத்திள் இரண்டாவது சுலோகத்திலே தமக்கு ஒன்றுமே தெரியாது என்று கூறுகிறார்.

" ந ஜானாமி சப்³த³ம் ந ஜானாமி சார்த²ம்
ந ஜானாமி பத்³யம் ந ஜானாமி க³த்³யம் "

நான் சொல்லேதும் அறியேன்! சொல்லின் பொருளையும் அறியேன், செய்யுளும் அறியேன் : உரைநடையும் அறியேன் என்று கூறுகிறார் எல்லாமறிந்த இந்த மாமேதை. இது அவரது அடக்கத்தைப் பறை சாற்றுகிறது.

இதைவிட ஒருபடி மேலே சென்று தம் விநயபாவத்தை வெளிப்படுத்துகிறார் வேறோரிடத்தில். தம்முடைய சீடரான ஹஸ்தாமலகரது சுலோகங்களுக்குச் சங்கரர் உரை எழுதி யுள்ளார். இதில் ஆசார்யரது எளிமையும், பெருந்தன்மையும், ஹஸ்தாமலகரது மேன்மையும் ஒன்றையொன்று விஞ்சி நிற்கின்றன.

இதற்கு ஒப்பாக ஆழ்வார்கள் பாசுரங்களிலிருந்தும், நாயன்மார்களின் தேவார, திருவாசகப் பாடல்களிலிருந்தும் பல மேற்கோள்கள் காட்டலாம். இது நம் பெரியோர்கள் நமக்கு அவர்களது சீலத்தால் கற்பிக்கும் சிறந்த பாடமாகும்.

### க்ஷமான்வி்தம் சௌர்யம்

வீரம், பராக்ரமம், பதவி ஆகியவை இருப்பவரிடம் மன்னிக்கும் தன்மை இருக்க வேண்டும். இல்லையெனில் கொடுங்கோல் ஆட்சியையே மக்கள் சந்திக்க வேண்டிய நிலைமை ஏற்படும்.

காந்தியடிகள் தமது வாழ்நாள் முழுவதும் ராமராஜ்யத்தை ஏற்படுத்த வேண்டும் என்று கனவு கண்டார். அதைப் பற்றி இடைவிடாமல் பேசிக்கொண்டும் இருந்தார். ராமன் சக்ரவர்த்தித் திருமகனாய் அவதரித்து மற்றவர்கள் எப்படி வாழ வேண்டுமென்று வாழ்ந்து காட்டினான்.

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான தியாகராஜர் தமது கீர்த்தனம் ஒன்றில் அயோத்தியில் நடந்த ஒரு நிகழ்ச்சியை விவரிக்கிறார். (பலுகு கண்ட சக்கர - நவரஸகன்னட ராகம்). இராமன் அயோத்தியில் கொலு மண்டபத்தில் அமைச்சர்களும், சான்றோர்களும் சூழ வீற்றிருக்கிறான். அப்பொழுது அங்குள்ள சேவகனை விளிக்கும் நிகழ்ச்சி விவரிக்கப்படுகிறது. சேவகனைக் கூப்பிட வேண்டுமானால் அங்குள்ள மற்ற அலுவலர்கள் அல்லது அமைச்சர்களிடம் சொல்லியிருக்கலாம். அப்படிச் செய்யாமல் இராமன் தானே கூப்பிடுகிறானாம். எப்படி? அதிகாரச் செருக்கோடு இல்லாமல் அன்போடு கூப்பிடுகிறானாம். அவன் கூப்பிட்ட முறை எப்படி இருந்தது என்பதை எல்லோரும் கருத்தில் கொள்ள வேண்டும். இராமன் தனது பணியாளரிடம் பேசிய பேச்சு (பலுகு), 'கண்ட[3] சக்கரென கே[3]ருனே' கற்கண்டை வெல்லும் இனிமையுடையதாக இருந்தது.

ராஜாஜி சென்னை மாகாணத்தின் முதன்மந்திரியாக (பிரிமியர்) 1937 ஆம் ஆண்டு பதவி ஏற்றார். அவர் முதல் நாள் தலைமைச் செயலகம் சென்று தம் பணியைத் துவங்குவதற்கு முன் அங்குப் பணிபுரிபவர்களைப் பற்றிய விவரங்களை அறிய விரும்பினார். அங்கிருந்த கிருஷ்ணையா என்ற அலுவலரிடம் "Give me the list of names of all persons working for me" (எனக்காக வேலை செய்பவர்களின் பெயர்ப் பட்டியலைக் கொடுங்கள்) என்று கேட்டாராம். இதைக் கேட்ட கிருஷ்ணையா வியப்படைந்தார். மற்ற அதிகாரிகள் கேட்பது போல் "persons who are working under me" 'என் கீழ் வேலை செய்பவர்கள்' என்று கேட்காமல் "persons who are working for me" எனக்காக வேலை செய்பவர்கள் என்று கேட்ட பண்பு அவரைத் திகைக்க வைத்தது. கிருஷ்ணையாவும் முதன் மந்திரி கேட்ட பணியாளர்கள் பட்டியலை அவரிடம் கொடுத்தாராம். அதைப் பரசீலித்த ராஜாஜி அங்குள்ள கடைநிலை ஊழியரை அழைக்க நினைத்தாராம். அந்த ஊழியரை எல்லோரும் அழைக்கும் வண்ணம் 'பியூன்' என்று அழைக்காமல் ஆறுமுகம் என்று அவர் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டாராம். இது அவரது சீரிய பண்பை

வெளிப்படுத்துகிறது. மனிதனைப் பணிபுரியும் எந்திரமாகக் கருதாமல் உணர்ச்சியுள்ள ஒரு மனிதனாகக் கருதிய பாங்கு போற்றத் தக்கதன்றோ?

இத்தகைய அதிகாரிகளும் தலைவர்களும் நமக்குக் கிடைக்கமாட்டார்களா என்று ஏங்கும் நிலையில் இன்று நாம் இருக்கின்றோம்.

## வித்தம் த்யாக₃ஸமேதம்

பொருள் உடையவர்கள் அதைப் பிறருக்கு வாரி வழங்கும் கொடைத்தன்மை உடையவர்களாக இருக்க வேண்டும். இந்தப் பண்பு சமூகத்தை வாழ்விப்பதற்கு இன்றியமையாததாகும். பணமும் பண்டமும் சீரான முறையில் அனைவருக்கும் பகிர்ந்தளிக்கப் பட்டால்தான் மக்களின் வாழ்வு சீராக இருக்கும்.

ஆனால், இந்த நான்கு பண்புகளும் மிகச் சிலரிடமே காணப்படும். 'து₃ர்லப₃ம் ஏதத் சதுர் ப₄த்ரம்' என்று சங்கரர் கூறுகிறார். இது அவரது தீர்க்க தரிசனத்திற்கு ஓர் எடுத்துக்காட்டு.

ப்ரச்னோத்தர ரத்ன மாலிகாவில் கொடையின் பெருமை மேலும் வலியுறுத்தப்பட்டிருக்கிறது.

கேள்வி : கிம் சானர்க₄ம் - எது மதிப்பிடப்பட முடியாதது?

பதில் : யத₃வஸரே த₃த்தம் - உரிய காலத்தில் தகுதியுள்ள மனிதனுக்குத் தானம் செய்வது.

மனிதன் தவித்து நிற்கின்றபோது அவனுக்குச் செய்யும் பொருளுதவி மிகச் சிறந்ததாகும். இதைத்தான் வள்ளுவர்

" காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது "

என்று சொன்னார்.

கேள்வி : கிம் தா₃னம் - கொடை என்பது என்ன?

பதில் : அனாகாங்க்ஷம் - கேட்காமல் கொடுப்பது

நல்வழியில் பொருள் ஈட்டி அதனால் மகிழ்வடைய வேண்டும் என்று சங்கரர் உபதேசிக்கிறார். தீயவழியில் சம்பாதித்த பொருள் தனி மனிதனுக்கோ அல்லது சமூகத்திற்கோ நிம்மதியை அளிக்காது.

" யல்லப4ஸே நிஜகர்மோபாத்தம்
வித்தம் தேன வினோத3ய சித்தம் "

உன்னுடைய நல்ல உழைப்பினால் கிடைத்த பணத்தைக் கொண்டு நிறைவடைவாயாக என்று உபதேசிக்கிறார். தீயவழியில் சேர்த்த பணம் சமுதாயத்தையே சீர்குலைத்துவிடும். இதைத்தான் வள்ளுவரும் கூறுகிறார்.

" அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். "

உள்ளன்புடன் பக்தி செய்ய வேண்டும்; பகட்டிற்காகச் செய்யக் கூடாது, என்பதை வலியுறுத்துகிறார்.

" ஜடிலோ முண்டீ4 லுஞ்சி2த கேச :
காஷாயாம்ப3ர ப3ஹுக்ருத வேஷ || :
பச்யன்னபி ந பச்யதிமூடோ4
ஹ்யுத4ர நிமித்தம் ப3ஹுக்ருத வேஷ : ||"

தலையை மொட்டையடித்துக்கொண்டு, அல்லது சடை தரித்துக் கொண்டு, காவித்துணி அணிந்துகொண்டிருப்பவர்கள் கண்கள் இருந்தும் (பார்க்க வேண்டியதைப்) பார்க்கத் தவறிவிட்டார்கள். ஏனெனில், அவர்கள் வயிற்றை வளர்ப்பதற்காக இந்த வேடங்களைத் தரித்தவர்கள்.

இம்மாதிரி மனிதர்கள் பக்தி மார்க்கத்தை அறியாதவர்கள் என்று தியாகராஜ ஸ்வாமிகள் கூறுகிறார்கள். 'தெலிய லேரு ராமப4க்தி மார்கமு3முனு' (மக்கள்) ராமபக்தி எனும் சிறந்த வழியை அறியமாட்டார்கள். அவர்கள் என்ன செய்வார்கள் என்று சரணத்தில் கூறுகிறார். 'வேக3லேசி' - அதிகாலையில் எழுந்திருந்து, 'நீடமு நிகி3' - நீரில் மூழ்கி (நீராடி), 'பூ4தி பூ3ஸி' - திருநீறணிந்து 'வெள்ளநெஞ்சி' - விரல்களை எண்ணி (ஜபம் செய்வது போல் நடித்து), 'வெலிகி த்லாக4நீயுலை' - வெளிக்கு நல்லவர்களைப் போல் நடித்து, 'பா3க3' - நன்கு, 'பைகமு' - பணத்தை 'ஆர்ஜன லோலுலைரே கானி' - திரட்டுவதில் கவனம் செலுத்துவார்களே தவிர (இராம பக்தி மார்க்கத்தை அறியமாட்டார்கள்).

முரனைக் கொன்ற திருமாலை முழுமனத்துடன் நன்கு வழிபட்டால் கடைத்தேறலாம் என்று உபதேசிக்கிறார்.

" பகவத் கீதா கிஞ்சிததீதா
கங்கா ஜலலவ கணிகா பீதா! |
ஸக்ருதபி யேன முராரி ஸமர்சா
க்ரியதே தஸ்ய யமேன ந சர்சா ||"

பகவத் கீதையைச் சிறிதளவு படித்தல், ஒரு துளி கங்கா ஜலத்தைப் பருகுதல், ஒரு முறையேனும் முராரியைத் (திருமாலைத்) தொழுதல் முதலியவை மரண பயத்தைப் போக்கும் என்கிறார். பகவத் கீதையானது உபநிஷத்துக்களின் சாரம். உலக வாழ்வின் உண்மையான தத்துவத்தை விளக்கி இறைவனை அடையும் மார்க்கத்தைப் போதிக்கிறது. அதை ஒரு சிறிதளவேனும் புரிந்து கொண்டால் மனம் மேம்பாடடையும் என்பதை உணர்த்தவே "பகவத் கீதா கிஞ்சிததீதா' என்று கூறினார். கங்கா ஜலம் என்பது ஞானப்பெருக்கைக் குறிக்கிறது.

நம் நாட்டில் பல ஆசார்யர்கள் தோன்றி மக்களுக்கு ஞானத்தைப் புகட்டி வந்திருக்கிறார்கள். அந்த ஞானப்புனலில் ஒரு துளியை அருந்தினாலும் மனத்தூய்மை ஏற்படும். மனத் தூய்மையுடன் முராரியின் நாமத்தை ஒரு முறை கூறினாலும் நமக்குக் காலனிடமுள்ள பயம் விலகிவிடும். தூய மனத்துடன் இறைவனை வழிபட்டால் நற்கதி பெறலாம் என்பது வலியுறுத்தப்படுகிறது.

மேலும் எந்த நிலையில் இருந்தாலும் மனமானது இறைவனிடத்தில் லயித்திருந்தால் பேரின்பம் கிடைக்கும் என்பது கீழ்க்காணும் சுலோகத்தில் கூறப்பட்டிருக்கிறது.

" யோகரதோ வா போகரதோ வா
ஸங்கரதோ வா ஸங்கவிஹீந : |
யஸ்ய ப்ரஹ்மணி ரமதே சித்தம்
நந்ததி நந்ததி நந்தத்யேவ ||"

இன்பம் என்பது ஒரு வித மனநிலை, சிற்றின்பத்தினால் கிடைக்கும் மனநிறைவு நிரந்தரமானதல்ல. இறைவனுடன் மனம் ஒன்றிய நிலையில் இருக்கும்பொழுது ஏற்படும் ஆனந்தமானது முற்றும் வேறுபட்டதாகும். அதுவே பேரின்பம். அது எல்லையற்றது. மேலும் நிரந்தரமானது.

"யோகரதோ வா" - (நீ) யோகநிலையில் இருந்தாலும், "போகரதோ வா" - சுகபோகங்களை அனுபவித்துக் கொண்டிருந்தாலும், "ஸங்கரதோ வா" - பல ஜனங்களின்

மத்தியில் இருந்தாலும் ''ஸங்க$_3$விஹீன :'' - தனியாக இருந்தாலும், ''யஸ்ய ப்$_3$ரஹ்மணி ரமதே சித்தம்'' - எவனுடைய மனமானது (சித்தமானது) இறைவனிடத்தில் லயித்து மகிழ்ச்சியடைகிறதோ, ''நந்த$_3$தி - நந்த$_3$தி நந்த$_3$தி ஏவ'' - அவனே உண்மையான மகிழ்ச்சியை அனுபவிக்கிறான்.

அதாவது, இறைவனது நினைவு ஒன்றே பேரின்பத்தைக் கொடுக்கும். எனவே, முழுமனத்துடன் கோவிந்தனது நாமத்தைச் சொல் என்று வலியுறுத்துகிறார் சங்கரர்.

தியாகராஜ ஸ்வாமிகளும் இத்தகைய உயர்ந்த நிலையை அடைந்திருக்கிறார் என்பதற்கு அவர் இயற்றியக் கிருதிகளிலே அகச்சான்றுகள் உள்ளன. ''ராமா நீபை'' என்ற கேதார ராக கிருதியின் மூன்றாவது சரணம் கவனிக்கத்தக்கது.

''போ$_4$கா$_3$னுப$_4$வமுலந்து$_3$
பா$_3$கு$_3$க$_3$ பு$_4$த்$_3$தி$_4$ நீயந்து$_3$
த்யாக$_3$ராஜுனி ஹ்ருத$_3$யமந்து$_3$
வாகீ$_3$ஶானந்த$_3$ மந்து$_3$''

போ$_4$கா$_3$னுப$_4$வமுலந்து$_3$ - (நான் இல்வாழ்வின்) போகங்களை அனுபவிக்கும்பொழுதும், பா$_3$கு$_3$க$_3$ பு$_4$த்$_3$தி$_4$ நீயந்து$_3$ - என் மனம் உன்னிடமே நன்கு லயித்திருக்கிறது, (எனவே) த்யாக$_3$ ராஜுனி ஹ்ருத$_3$யமந்து$_3$ - (இத்) தியாகராஜனின் மனத்தில், வாகீ$_3$ஶானந்த$_3$ மந்து$_3$ - பிரம்மானந்தம் பிறக்கிறது என்கிறார். எங்கிருந்தாலும், எந்தச் சூழ்நிலையில் இருந்தாலும் ஆண்டவனிடம் மனம் லயித்து விட்டால் பேரானந்தம் ஏற்படும். இதில் ''பா$_3$கு$_3$க$_3$ பு$_4$த்$_3$தி$_4$ நீயந்து$_3$'' என் மனமானது உன்னிடத்தில் நன்கு லயித்திருக்கிறது என்று அவர் கூறுவது கவனிக்கத்தக்கது. இது இராமனிடத்தில் அவருக்கிருந்த தீவிர பக்தியைக் காட்டுகிறது. எந்தச் சூழ்நிலையிலும் இராமனை மறவாமல் சதாகாலமும் முழுமனத்துடன் இராமனிடம் தம் மனத்தைச் செலுத்தியதால்தான் அவர் பேரின்ப நிலையை அடைய முடிந்தது.

இந்த நிலையில் உலகிலுள்ள அனைத்து மக்களும் அடைய முடியும். இதை ஆலிவர் கோல்ட்ஸ்மித் (Oliver Goldsmith) என்கிற ஆங்கிலக் கவிஞர் தமது The Deserted Village - ''புறக்கணிக்கப்பட்ட கிராமம்'' என்ற கவிதையில் அங்கு வசித்த (Village Preacher) - கிராமத்துப் பாதிரியார் மூலம் மிக நன்றாக வெளிப்படுத்துகிறார்.

As some tall cliff that lifts its awful form,
Swells from the vale and midway leaves the storm,
Tho' round its breast the rolling clouds are spread,
Eternal sunshine settles on its head.

ஒரு பெரிய மலையைப் பாதிரியாருக்கு உவமையாகக் கூறியிருக்கிறார். அந்த மலையானது பூமியில் வேரூன்றிப் பரவி மேல் நோக்கிச் செல்கிறது. அதன் மத்தியப் பகுதி புயல் முதலிய இயற்கைச் சீற்றங்களினால் பாதிக்கப்பட்டு மேகங்களால் சூழப்பட்டிருந்தாலும், அதன் உச்சியில் நிலையான சூரிய ஒளி தங்குகிறது. பாதிரியார் மலையைப் போன்றவர். மலையின் உருவம் awful - பெரியது, பயங்கரமானது என்று வருணிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் awful என்ற வார்த்தைக்கு, பெரிய, மரியாதைக்குரிய என்று பொருள் கொள்ள வேண்டும் என்று உரையாசிரியர்கள் கூறுகிறார்கள்.

பாதிரியார் கிராமத்து மக்கள் அனைவராலும் பெரிதும் மதிக்கப்படுபவர். ஏழை எளியவர்களின் துயர் துடைத்து அவர்களின் வாழ்வை மேம்படுத்துவதையே தமது பெருமிதமளிக்கும் தொண்டாக அவர் நினைத்தார் (to relieve the wretched was his pride). நாற்பது பவுண்டுகளே ஆண்டு வருமானாகப் பெற்று வந்த போதிலும், அதையே மிகப்பெருஞ் செல்வமாக நினைத்து, மிக்க மனநிறைவுடன் தன்னலம் கருதாமல் மக்களுக்குச் சேவை புரிந்து வந்தார். மக்களின் சேவையே மகேசனின் சேவை என்ற தத்துவத்தை நன்குணர்ந்து செயல்பட்டு வெற்றி கண்டவர்.

தவறு செய்தவர்கள் மனம் வருந்திப் பாவமன்னிப்புக் கோரி வந்தபொழுதும், மரணத்தை எதிர்நோக்கி நோய்ப்படுக்கையில் கிடந்து வருந்துபவர்களையும் கண்டு மனமிரங்கி அவர்களது அருகில் சென்று ஆறுதல் கூறி எல்லோரையும் அன்பால் கவர்ந்த ஏழை பங்காளர் அவர். வெளிப்பார்வைக்கு அவர் தம்மைச் சுற்றி இருப்பவர்களது இன்பதுன்பங்களில் பங்கு கொண்டு அவைகளின் தாக்கத்தால் பாதிக்கப்பட்டவர் போல் காணப்பட்டாலும் (மலையின் மத்திய பாகத்தை மேகங்கள் சூழ்ந்து காணப்படுவது போல்), அவரது மனம் ஆண்டவனது அருட்சிந்தனையென்னும் சூரிய ஒளியிலேயே நிலைத்திருந்தது. Eternal sunshine (நிரந்தரமான சூரிய ஒளி) என்பது நிலையான இன்பத்தை, அதாவது பேரின்பத்தைக் குறிக்கும் வகையில் அமைந்துள்ளது. இடைவிடாது இறைவனையே சிந்தித்துக்கொண் டிருந்தால் பேரின்ப நிலையை எய்தலாம் என்பது உலக மக்கள் அனைவருக்கும் பொருந்தும் என்பதை நாம் இப்பெருமக்களின் படைப்புக்களின் வாயிலாக அறிய முடிகிறது.

சிற்றின்பத்திற்கும் பேரின்பத்திற்கும் உள்ள வேறுபாட்டை மணிவாசகப் பெருமான் மிகத் தெளிவாகக் கூறுகிறார் (திருக்கோத்தும்பி - 3).

" தினைத்தனை உள்ளதோர் பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும் பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும் புள்நெக ஆனந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ "

மேலான வண்டே! பூவினுள் சிறிதளவு தேன்தான் இருக்கும். ஆனால் நினைக்கும் பொழுதும், காணும் பொழுதும், பேசும் பொழுதும், மற்றும் எல்லா நேரத்திலும், எல்லா எலும்புகளும் நெகிழும்படி ஆனந்தத் தேன் பொழிபவன் ஆடல்வல்லானான இறைவன், எனவே, பூவினுள் இருக்கும் சிறிதளவு தேனை நாடாமல் அளவில்லாத ஆனந்தத்தேன் சொரியும் இறைவனது பாதத்தில் மனத்தைச் செலுத்து என்கிறார் மணிவாசகர்.

சங்கரர் அத்வைத சித்தாந்தத்தைப் பரப்பியவரானாலும் அவர் சாதாரண மனிதனைக் கடைத்தேற்றுவதில் மிகவும் அக்கறை காட்டியுள்ளார். எல்லோரும் எளிதில் புரிந்துகொள்ளும் வண்ணம் பல நீதிநூல்களை இயற்றிச் சமூகத்திற்குப் பெருந்தொண்டு ஆற்றியுள்ளார்.



# 10. நிறைவுரை

முப்பத்திரண்டு ஆண்டுகளே வாழ்ந்த சங்கரர் ஒப்பில்லாத சாதனைகளைப் படைத்திருக்கிறார். தெற்கே பிறந்தவராயிருந்தாலும் இந்திய தேசம் முழுவதும் ஒன்று, இந்திய மக்கள் அனைவரும் ஒரே கலாசாரப் பெருக்கில் ஊறித் திளைப்பவர்கள் என்று எண்ணினார். அதுவுமன்றி அவர் உலக சகோதரத்துவத்தையும் போதித்தவர். அவர் அத்வைத தத்துவத்தைப் போதித்தவராக இருந்தபோதிலும் எளிய மக்கள் மனத்தில் பக்தியை வளர்க்கும் வண்ணம் பல தோத்திரங்களைப் பாடியிருக்கிறார். இதுவே அவர் செய்த தலைசிறந்த சேவை என்று ராஜாஜி கூறியிருக்கிறார். (பஜகோவிந்தம் என்ற பக்தி நூலுக்கு ராஜாஜி எழுதிய முன்னுரையின் ஒரு பகுதி) (பிற்சேர்க்கை - *1*)

ஹிந்து மதத்திலே வேரூன்றி யிருந்த மூட நம்பிக்கைகளைக் களைந்து இறை வழிபாட்டு முறைக்ளைப் புகுத்தினார். சமய வழிபாடுகளிலும் ஜனநாயக முறையைப் புகுத்தினர். வேறு பாடுகள் கொள்கையளவில் நிற்க வேண்டுமேயல்லாது தனி மனித உறவில் குறுக்கிடக்கூடாது என்பதைத் தம் நடத்தையால் தெளிவுபடுத்தினார். மேலும் அவர் மனித மனப்பாங்கை நன்கறிந்த ஓர் ஒப்பற்ற சீர்திருத்தவாதி. இவர் மதத்தால் நாட்டு மக்களை ஒன்றுபடுத்திய பெருந்தகையாவார். இறைவழிபாட்டு முறைகளைச் சீர்திருத்தி, பாரம்பரியமிக்க ஹிந்து மத தர்மத்தை நிலைநாட்டினார். ராஜாஜி கூறியதுபோல் எந்த ஒரு ஹிந்துவும் தான் வழிபடுவதற்காக ஏற்றுக் கொண்ட தெய்வம் எவ்வளவு சிறப்புடையதாக இருந்தாலும் மற்றவர்கள் வழிபடும் தெய்வங்களை அவமதிக்கக்கூடாது. அவன், தான் விரும்பும் (தெய்வ) உருவத்தையும், பெயரையும் வானளாவப் புகழலாம். ஆனால் அவன் மற்றவர்கள் வணங்கும் தெய்வத்தின் புனிதத் தன்மையையும், அவர்களது பக்தி விச்வாசத்தையும் நிராகரிக்கக்கூடாது. பல கலாசாரங்களின் கலவையாக விளங்கும் இந்த உலகத்தில், மேற் சொன்ன அசைக்க

முடியாத ஹிந்து மதப் பாரம்பரிய தர்மமானது பக்தியின் ஆழ்ந்த தன்மையால் (Fervour) மனச்சாட்சியையும், ஆத்மாவையும் சமூகத்தின் அமைதியைக் குலைக்காமல் இயக்குகிறது. (பிற்சேர்க்கை - 2).

சங்கரர் பல நற்பண்புகள் நிறைந்த ஒரு குணக்குன்று. இந்த மகானைப் பற்றிப் பல மூதறிஞர்கள் கூறியவற்றைக் காண்போம்.

## ஜவாஹர்லால் நேரு

அவர் (சங்கரர்) தம் வாழ்க்கைக் குறிக்கோளை நன்கு உணர்ந்தவராயிருந்தார். இது தெளிவு. குமரி முனையிலிருந்து 'வெள்ளிப்பனிமலை' வரை பரந்துள்ள இந்திய நாடு முழுவதுமே தம் செயலுக்குரிய களம் என்றும், வெளிப் பார்வைக்கு இந்நாடு பலவித வடிவங்களைக் கொண்டு அமைந்திருப்பினும், பண்பாட்டால் நன்கு பிணைக்கப்பட்டதாகவும், அந்தப் பண்பாட்டுக்குரிய உணர்ச்சிகளால் ஆட்கொள்ளப்பட்டதாகவும் கருதினார். (பிற்சேர்க்கை - 3)

அவர் இந்தியர்களின் மனங்களை வாட்டிய பலவகைப்பட்ட எண்ண ஓட்டங்களை ஒன்றுசேர்க்கவும், அந்த வேற்றுமையைக் கொண்டே ஒரு கருத்தொற்றுமையை ஏற்படுத்தவும் பெரிதும் முயன்றார். முப்பத்திரண்டு ஆண்டுகளே வாழ்ந்த அவர், தம் குறுகிய வாழ்நாளில் நீண்ட ஆயுள்களைக் கொண்ட பல வாழ்க்கைகளில் சாதிக்கப்படக்கூடிய பணியைச் செய்து முடித்தார். அவர் தமது வலிமை மிக்க மனம், வளம் மிக்க ஆளுமை இவற்றின் தாக்கத்தை இந்தியாவின் மீது ஆழமாகப் பதித்தது இன்றும் மிகமிகத் தெளிவாகத் தெரிகிறது. (பிற்சேர்க்கை - 4)

அவர் பல பண்புகள் சேர்ந்த ஒரு விசித்திரக் கலவையாக இருந்தார். தத்துவ ஞானியாகவும் புலமை மிக்கவராகவும், அசாதாரணமான எதையும் தம் அனுபவத்தால் அறிந்தாலொழிய நம்பாத அனாஸ்திகவாதியாகவும் மனித சக்திக்கு அப்பாற்பட்ட தெய்வீக அனுபவங்கள் உடையவராகவும், கவிஞராகவும், மகானாகவும் திகழ்ந்ததோடல்லாமல், மனித இயல்பை நன்கறிந்த அனுபவமுள்ள சீர்திருத்தக்காரராகவும், திறமை வாய்ந்த ஒரு செயல் வீரராகவும் திகழ்ந்தார். தென் பிராந்தியத்தில் தோன்றிய அவர் முப்பத்திரண்டாம் வயதில் இமயமலையின் பனி நிறைந்த மேற்பகுதியிலுள்ள கேதார்நாத் என்ற இடத்தில் மரணமெய்தினார். (பிற்சேர்க்கை - 5)

சங்கரர் முக்தி அடைந்த இடம், காஞ்சி, பதரிகாச்ரமம், நேபாளம், திருச்சூர் என்று மாறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன என்பது சங்கரரின் வரலாற்றுப் பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### டாக்டர் ராதாகிருஷ்ணன்

தத்துவ மேதைகளில் மூதன்மையானவராக, வாதப்போரில் தேர்ந்தவராக, கலங்காத விவேகமும், மிகுந்த சகிப்புத் தன்மையும் கொண்ட ஒரு மனிதராக விளங்கிய சங்கரர், நமக்கு உண்மையை நேசிக்கவும், பகுத்தறிவை மதிக்கவும், வாழ்க்கையின் நோக்கத்தைப் புரிந்துகொள்ளவும் கற்றுக் கொடுத்தார்.

அவர் கனவுலகில் சஞ்சரிக்கும் இலட்சியவாதியல்லர்; நடைமுறைச் சிந்தனையாளராகவும், தத்துவ ஞானியகாவும் இருந்த அவர், அதே சமயம் ஒரு கர்மவீரராகவும் திகழ்ந்தமையால், அவரை 'ஒரு மிகப் பெரிய சமூக லட்சியவாதி' என்று அழைக்கலாம். *(பிற்சேர்க்கை - 6)*

அவர் பகுத்தறிவை மதித்ததால்தான் சமூகத்திலிருந்து மூட நம்பிக்கைகளைக் களைந்து சமுதாயத்தைச் சீர்திருத்த முடிந்தது.

### சுவாமி விவேகானந்தர்

சங்கராசாரியார் வேதங்களில் ஊடுருவி நிற்கும் மூலாதார இசையைப் புரிந்து கொண்டவர். அவர் இளைஞராக இருந்தபோதே ஓர் உயர்ந்த இலட்சியக் காட்சியைக் கண்டார். அதனாலேயே நமது நாட்டின் பழம்பெரும் (கலாசார) இன்னிசையை அவரால் உணர முடிந்தது என்று நான் அடிக்கடி எண்ணுவதுண்டு. அவரது ஒட்டுமொத்த வாழ்க்கையின் பணி வேதங்கள், உபநிஷதங்கள் ஆகியவற்றின் சௌந்தர்யத்தின் உயிர்ப்பேயன்றி வேறெதுவுமல்ல. *(பிற்சேர்க்கை - 7)*

### சகோதரி நிவேதிதா

சங்கராசாரியார் போன்ற ஒருவரின் ஆளுமையைப் பற்றி எண்ணிப் பார்ப்பது மேனாட்டவர்க்கு எளிதான காரியமன்று. ஃப்ரான்ஸிஸ் ஆஃப் அஸ்ஸீஸியின் பக்தி, ஏபிலார்டின் மதிநுட்பம், மார்டின் லூதரின் உயிர்ச் சக்தி, விடுதலையுணர்வு, இக்னேஷியஸ் லயோலாவின் அரசியல் திறன் இவற்றைப் பற்றித் தனித்தனியாக வியப்போடும், ஆனந்தத்தோடும் நினைத்துப் பார்க்க நம்மால்

முடிகிறது. ஆனால் இத்தனை சீரிய பண்புகளும் ஒரு மனிதனிடமே இணைந்திருப்பதை யாரே கற்பனை செய்யவல்லார்? (பிற்சேர்க்கை - 8)

மாபெரும் சட்ட மேதை நானி பல்கிவாலா கூறியது போல் ஆதிசங்கரரது நோக்கு உலகளாவியதாக இருந்தது. அவரது போதனைகள் ஹிந்துக்களுக்கும், இந்தியர்களுக்கும் மட்டுமேயல்லாமல் மனித குலம் அனைத்திற்கும் பொருந்தும் வண்ணம் உள்ளன. (பிற்சேர்க்கை - 9)

பலதிறப்பட்ட மாந்தர்களுக்கெல்லாம் அறத்தைச் சார்ந்த வாழ்வு நடத்த வழிகாட்டுபவர் 'ஜகத்குரு' என அழைக்கப்படக்கூடியவர் என்று சிருங்கேரி ஆசார்யர் ஸ்ரீ பாரதீ தீர்த்த ஸ்வாமிகள் கூறியிருக்கிறார். (பிற்சேர்க்கை - 10). நம் ஆதிசங்கரர் 'லோக குரு' என்று போற்றப்படுதற்குரிய தகுதி பெற்ற ஒப்பற்ற ஆசானாவார்.

குருவினுடைய ஆசியைப் பெறுவதே நமது கடமையாகும். மனிதன் இவ்வுலகில், மனைவி, செல்வம், புகழ் ஆகிய எல்லாப் பேறுகளையும் அடைந்திருந்தாலும், அவனுக்குக் குருவினிடத்தில் பக்தி இல்லை என்றால் அவனது வாழ்க்கை பயனுள்ளதாக இருக்காது. இதைச் சங்கரர் குருவஷ்டகத்தில் கூறுகிறார் :

" ஶரீரம் ஸுரூபம் ததா₂வா களத்ரம்
யஶச்சாருசித்ரம் த₄னம் மேருதுல்யம்
மனச்சேன்னலக்₄னம் கு₃ரோரங்க்₄ரிபத்₃மே
தத : கிம் தத : கிம் தத : கிம் தத : கிம் "

ஒருவன் நல்ல அழகுடையவனாக இருக்கிறான். அவனுக்கு மனைவியும் அதே போல் அமைந்திருக்கிறார். நல்ல புகழ் இருக்கிறது. மேருமலைக்கு ஒப்பான செல்வம் உள்ளது. இருப்பினும் அவனது மனமானது குருவினுடைய பாதத் தாமரைகளில் லயிக்காவிட்டால் இந்த எல்லாப் பேறுகளும் பயனற்றவை யாகிவிடும். இதை நன்கு வலியுறுத்தும் வண்ணம் சங்கரர் இந்த ச்லோகத்தின் ஈற்றடியில் 'தத : கிம்' 'அவ்வாறிந்தும் என்ன பயன்?' என நான்கு முறை சொல்கிறார். (இந்த ச்லோகம் பு⁴ஜங்க விருத்தத்தில் அமைந்துள்ளது).

இத்தகைய பெருமைவாய்ந்த மகானுக்கு நாம் அனைவரும் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம். அவர் நினைவைப் போற்றுவதே நாம் அவருக்குச் செலுத்தும் நன்றிக் கடனாகும். அவர் நினைவை எப்படிப் போற்றுவது என்ற வினாவிற்கு முத்துஸ்வாமி தீக்ஷிதர்

வழங்கியுள்ள உபதேசத்தைக் கூறி இந்தப் புனிதமான வரலாற்றை நிறைவு செய்கிறேன்.

"நத்வா ஸ்ரீகு³ருரு சரணம் க்ருத்வா நாமஸ்மரணம்
ஜித்வா மோஹாவரணம் மத்வா த்வதே³க சரணம்"



குருவினுடைய பாதங்களை வணங்கி, அவருடைய நாமத்தை நினைத்து, மாயையின் கட்டுப்பாட்டிலிருந்து வெற்றியுடன் வெளியேறி (மாயையை வெற்றி கொண்டு) குருவே ரக்ஷகர் என்று நினைத்து உய்வோமாக !



# பிற்சேர்க்கை

## RAJAJI

### 1. BHAJA GOVINDAM

Sri Sankara crossed the ocean of Maya as easily as one steps over a small irrigation channel in the field. He wrote a number of Vedantic works for imparting the knowledge of the Self. He composed a number of hymns to foster the sense of devotion in the hearts of men and this I consider to be his greatest service. One of these hymns is the famous "Bhaja Govindam".

### 2. RAJAJI'S SPEECHES - VOL. II

It is not open to any Hindu, whatever the name and mental image of the Supreme Being he may use for his own devotional exercises, to deny the Gods that others worship. He can praise the name and raise the image of his choice to the highest, but he cannot deny the divinity or the truth of the God of other denominations. This unshaken tradition of Hinduism makes it possible for pious fervour to operate on conscience and spirit without disturbing the peace of community life in a composite world.

### 3. JAWAHARLAL NEHRU (DISCOVERY OF INDIA)

He was evidently a man who was intensely conscious of his mission, a man who looked upon the whole of India from Cape Comorin to the Himalayas as his field of action and as something that held together culturally and was infused by the same spirit, though this might take many external forms.

4. He strove hard to synthesise the diverse currents that were troubling the mind of India of his day and to build a unity of outlook out of that diversity. In a brief life of 32 years he did the work of many long lives and left such as impress of his powerful mind and rich personality on India that it is very evident today.

5. He was a curious mixture of a philosopher and a scholar, an agnostic and a mystic, a poet and a saint, and in addition to all this, a practical reformer and an able organiser ..... At the age of 32 Sankara from the tropical south died at Kedarnath in the upper snow-covered reaches of the Himalayas.

6. **Dr. RADHAKRISHNAN**

Supreme as a philosopher and a dialectician, great as a man of calm judgement and wide toleration, Sankara taught us to love truth, respect reason and realise the purpose of life.

He was not a dreaming idealist, but a practical visionary, a philosopher and at the same time a man of action, what we may call a social idealist on a grand scale.

7. **SWAMI VIVEKANANDA**

Sankaracharya has caught the rhythm of the Vedas, the national cadence. Indeed, I always imagine that he had some vision when he was young, and recovered that ancient music that way. Anyway his whole life's work is nothing but that the throubbing of the beauty of the Vedas and Upanishads.

8. **SISTER NIVEDITA**

Western people can hardly imagine a personality like that of Sankaracharya. We contemplate with wonder and delight that devotion of Francis of Assissi, the intellect of Abelard, the virile force and freedom of Martin Luther, and the political efficiency of Ignatius Loyola; but who could imagine all these united in one person?

9. **NANI PALKHIVALA**

Aadi Sankaracharya was universal in his outlook. His message was meant not for Hindus alone, not for Indians alone, but for all mankind.

10. **HIS HOLINESS SRI BHARATI TIRTHA MAHASWAMIGAL**

The lifestyle of each one of us is formed in accordance with our own samskaras, or the bundle of effects from our previous births. Only the one who can show all such diverse human beings the way to lead a righteous life can be called a Jagadguru. Adi Sankara was such a world preceptor.



# அருணகிரியார்

## பொருளடக்கம்

# அருணகிரியார்

## 1. அருணகிரிநாதர் வரலாறு

ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட வரலாறுகள் எல்லாம் தெளிவாக விளக்கப்பெறும் இக்காலத்தில் ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட வாழ்ந்த அருணகிரிநாதரின் வரலாறு தெளிவாக அறியப்படாமை வியப்பளிப்பதாகும். அறிஞரும் கவிஞரும் போற்றும் திருப்புகழ்ப் பாடல்களைத் தமிழகமெங்கும் கேட்க இசைத்தவர் அருணகிரிநாதர். பலவகைகளில் அவர் குறிப்பிடத்தக்கவராக விளங்கினார்.

1. சந்த அலை வீச்சும் தாளக்கட்டும் அமைய ஆயிரக்கணக்கான பாடல்களைப் பாடியவர்.
2. கௌமார சமயம் என்ற சமயநெறி வளர வித்திட்டவர்.
3. சைவம், வைணவம் ஆகிய இரு சமயங்களும் இணக்கமான போக்கைக் கடைப்பிடிக்கும் வகையில் பாடல்கள் இசைத்தவர்.
4. சைவ வைணவ அடியார்களுக்குப் பின் பற்பல தலங்களுக்குச் சென்று இறைவனைப் பாடியவர்.
5. இயற்றமிழோடு இசைத் தமிழையும் வளர்த்தவர்.
6. தமிழ்ச் சொற்களையும் வடமொழிச் சொற்களையும் வேறுபாடின்றிக் கலந்தமைத்த பாடல்களை அருளியவர்.
7. முருகனின் பல்வேறு கோலங்களையும் வடிவச் சிறப்பையும் தம் பாட்டில் புலப்படுத்தியவர்.
8. முருகக் கடவுள் குறித்த புராணச் செய்திகள் பலவற்றையும் பாட்டில் இடம்பெறச் செய்தவர்.

9. மனித வாழ்க்கை அருவருக்கத்தக்கதும், நிலையாததும் என எடுத்துக்காட்டி இறைவன் திருவடிப் பேறே நிலையானது எனப் பாடல்தொறும் மொழிந்தவர்.

10. பெண்ணாசை தீயது என்றும் கைவிடத் தக்கதென்றும் வலியுறுத்திப் பாடல் இசைத்தவர்.

இத்தகைய சிறப்புகளைப் பெற்றுப் பதினைந்தாம் நூற்றாண்டில் புலவர்களில் தலைமை வாய்ந்தவராக விளங்கிய அருணகிரியார் வரலாறு தெளிவற்றதாகவும், ஆதாரமற்ற பல செய்திகளின் புனைவாகவும் பலராலும் கூறுப்பெறுகின்றது. இந்நிலையில், சரியான சான்றாதாரங்களின் அடிப்படையில் அவர் வரலாறு இந்நூலில் முதற்கண் எடுத்துரைக்கப்பெறுகின்றது.

## திருவண்ணாமலை

பொதுவாகத் தென்னக மலைகள் இமயமலையைவிடப் பழமையானவை என வரலாற்றறிஞர் கூறுவர். தென்னக மலைகளில் மிகப் பழமையானது திருவண்ணாமலை. பஞ்ச பூதங்களில் நெருப்பு உருவாக இம்மலை திகழ்ந்ததால் சிவப்பு மலை எனப்பொருள்பட அரன் மலை, அருணன் மலை என வழங்கிப் பின் அருணாமலை, அண்ணாமலை எனத் திரிந்தது என்பர். நான்முகனும் திருமாலும் அணுக முடியாத மலையாகச் சிவபெருமான் நின்றமையினைக் குறிக்கும் வகையில் 'அண்ணாமலை' எனப் பெற்றது எனவும் கூறுவர். இது குறித்து அருணாசல புராணம் கூறுவதாவது : ஒருகாலத்தில் நான்முகன் தன் படைப்புத் தொழில் குறித்தும் திருமால் தன் காத்தல் தொழில் குறித்தும் மிகச் செருக்கடைந்தனர். தம்மினும் மிக்கார் யாருமில்லை என ஆணவம் கொண்டிருந்தனர். இந்நிலையில் சிவபெருமான் அவர்களிடம் 'நீங்கள் வல்லமை உடையவரேல், என் அடியையேனும், முடியையேனும் கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்' எனக் கூறி ஒளித்தார். நான்முகன் அன்னமாக உருக்கொண்டு சிவபெருமானின் திருமுடியைக் காணச் சென்றார். திருமால் பன்றி உருக்கொண்டு சிவபெருமானின் திருவடியைக் காணச்சென்றார். இந்நிலையில் இவர்கள் தம்மை அணுக முடியாதவாறு சிவபெருமான் நெருப்புருவ நீள்மலையாக நின்றார். அம்மலையே திருவண்ணாமலை எனப் பெயர் பெற்ற புகழ் மிக்கதாயிற்று. மலைவடிவில் நின்ற சிவபெருமான் அன்பர்களின் வழிபாட்டிற்குரியவராக மலையடியில் இலிங்க வடிவில் தோன்றினர். அவ்விடமே திருவண்ணாமலைத் திருக்கோயில்.

நினைத்தவுடன் முத்தி தரத்தக்க தலம் திருவண்ணாமலை. அம்மலை சிவ வடிவேயாம்.

'மாலறியா நான்முகனும் காணாமலையினை நாம்
போல் அறிவோம் என்று உள்ள பொக்கங்களே பேசும்
பால் ஊறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே அறிவு அரியான்![1]'

என்று பிற தெய்வங்களாலும் தேவர்களாலும் அறியமுடியா ஆற்றல்மிகு மலையாகக் காட்சி தருகின்றார் அண்ணாமலை நாதர்.

கார்த்திகை நாளன்று இம்மலை மீது அகண்ட பரிபூரண விளக்கு ஏற்றப்படும். இவ்வழக்கம் சங்க காலத்திலிருந்தே நடைபெற்று வருகின்றது.

'மழைகால் நீங்கிய மாக விசும்பில்
குறுமுயல் மறுநிறம் கிளர்மதி நிறைந்து
அறுமீன் சேரும் அகஇருள் நடுநாள்
மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்
பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய
விழவுடன் அயர வருகதில் அம்ம[2]'

என்று சங்க இலக்கியம் கார்த்திகைத் திருநாள் கொண்டாடப் பெற்றமையினை எடுத்துரைக்கின்றது. திருவண்ணாமலை இயற்கை வளமிக்கது எனத் திருஞானசம்பந்தர் பதிகம் காட்டும்.

'தேமாங்கனி கடுவன்கொள
விடுகொம்பொடு தூண்டித்
தூமாமழை துறுவல்மிசை
சிறுநுண்துளி சிதற,
ஆமாம்பிணை அணையும் பொழில்
அண்ணாமலை அண்ணல்
பூமாங்கழல் புனைசேவடி
நினைவார் வினையிலரே[3]'

தேன் போலும் மாங்கனிகளைக் கிளைகளிலிருந்து ஆண் குரங்கு பறித்த அளவில் அக்கிளைகள் மேகங்களைக் கீறி மழைத்

1. திருவாசகம்; திருவெம்பாவை 5.
2. அகநானூறு 141:6-11
3. திருஞானசம்பந்தர் தேவாரம் : திருவண்ணா : 2

துளிகளைச் சிதறச் செய்யும். காட்டுப் பசுக்களும் மான்களும் அம்மலையை வந்து சேரும். அண்ணாமலை மேவிய பெருமானின் பாத மலர்களை நினைபவர்கள் வினையிலிருந்து நீங்குவர். இவ்வாறு சம்பந்தர் பாடியுள்ளார். திருநாவுக்கரசரும் இத்தலம் தொழுபவரின் வினையை நீக்குமெனக் கூறக் காணலாம்.

'உருவமும் உயிரும் ஆகி ஓதிய உலகுக் கெல்லாம்
பெருவினை பிறப்பு வீடாய் நின்றஎம் பெருமான் மிக்க
அருவி பொன்சொரியும் அண்ணா மலைஉளாய் அண்டர்கோவே
மருவிநின் பாதம் அல்லால் மற்றொரு மாடு இலேனே[4]'

வினையும் பிறப்பும் நீக்கி வீடளிக்கும் பெருமான் என்று கூறி இது முத்தியளிக்கும் தலம் என்பது உணர்த்தினார். இம்மலையின்கண் இருந்து தவம்புரிந்த குரு நமசிவாய முனிவர்,

'கண்டம் கரியமலை கண்மூன்று உடையமலை
அண்டரெலாம் போற்றற்கு அரியமலை - தொண்டருக்குத்
தோற்றுமலை நாளும் தொழுவோர் எழுபிறப்பை
மாற்றுமலை அண்ணா மலை[5]'

எனப் போற்றியுள்ளார். இவ்வெண்பாவில் சிவனே மலையாக விளங்கும் தன்மை கூறப்பட்டது.

சைவ எல்லப்ப நாவலர் கந்தபுராணத்தில் உள்ள உருத்திர சங்கிதையையும், இலிங்க புராணத்தின் ஒரு பகுதியையும் தொகுத்து 649 தமிழ்ச் செய்யுட்கள் கொண்ட அருணாசல புராணத்தை இயற்றினார். இந்நூல் இத்தலத்தின் சிறப்பையும், அண்ணா மலையாரின் முதன்மையையும் இனிது உணர்த்துகின்றது. 'திருவண்ணாமலையில் உள்ள கற்கள் எல்லாம் சிவ லிங்கங்கள்; எனவே அவ்வூர் சிவலோகமே ஆகும். அவ்வூரில் உள்ள மரங்கள் எல்லாம் கற்பக மரங்கள்; அவ்வூரில் உள்ள நீரெலாம் சிவபிரானின் சடைமுடியில் உள்ள கங்கை நீரேயாம். அவ்வூரினர் உண்ணும் உணவெல்லாம் தேவர் அமிழ்தமேயாம். அவ்வூரில் உலவுதல் நில உலகையே சுற்றி வருவதற்கு நேராகும். அவ்வூரில் பேசும் சொற்கள் வேதங்களேயாம். அவ்வூரில் உறங்குதல்கூடத் தவம் கூடிச் சமாதியில் இருத்தலேயாம்'. இவ்வாறு இத்தலப் பெருமையை இப்புராண நூல் மொழியும். 'மற்ற மலைகள் எல்லாம் வீடு கட்டுவதற்குரிய மரங்களையே தரும்; அண்ணாமலை உயர்ந்த

4. திருநாவுக்கரசர் தேவாரம் : திருவண்ணா : 3
5. அண்ணாமலை வெண்பா.

வீட்டையே அளிக்கும்' என்று துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் போற்றுவர்.

அண்ணாமலைப் பெருமான் அழலாகவும், இலிங்கமாகவும், மலையாகவும் 'உண்ணா முலை உமையாளொடும் உடனாகிய ஒருவனாக'வும், அருவம், உருவம், அருவுருவம் என்ற மூன்று நிலையிலும் காட்சி தருகின்றான். அண்ணாமலைப் பதியில் உறையும் தேவியின் திருப்பெயர் உண்ணாமுலை என்பதாகும். இறைவனை எய்தவேண்டு மென்று தவமிருந்து அதன் விளைவாய் என்றும் மாறா இளமை உற்றமையால் அம்மை இப்பெயர் தாங்கினள்.

'கார் ஒழுகும் குழலாளை - கருணை வழிந்து
ஒழுகும் இரு கடைக்கண்ணாளை -
மூரல் இளநிலவு ஒழுக, புழுகு ஒழுக,
அழகு ஒழுகும் முகத்தினாளை -
வார் ஒழுகும் தனத்தாளை - வடிவு ஒழுகித்
தெரியாத மருங்குலாளைச் -
சீர்ஒழுகும் பதத்தாளை, அருணை உண்ணா
முலையாளைச் சிந்தை சேர்ப்பாம்[6]'

என்று அருணாசல புராணம் அம்மையின் அழகு வடிவைக் காட்டும். திருமூலர் அடிமுடி தேடலைப் பற்றி ஒன்பது பாடல்கள் பாடியுள்ளார். அப்பாடல்கள் இத்தலத்துப் பெருமானுக்கு உரியவையே. தேவார, திருவாசகங்களும், கந்தபுராணம், பெரியபுராணம், திருவிளையாடற் புராணமும், அருணாசல புராணமும், அருணகிரிப் புராணமும், அருணகிரி அந்தாதி, திருவருணை அந்தாதி, திருவருணைக் கலம்பகம், திருவண்ணாமலைக் கோவை, சோணசைலமாலை, அண்ணாமலை வெண்பா, அருணாசல சதகம், உண்ணாமுலை அம்மன் சதகம், உண்ணாமுலை அம்மை பிள்ளைத்தமிழ், திருவருணைப் பதிற்றுப்பத்தந்தாதி எனச் சிற்றிலக்கியங்கள் பலவும் திருவண்ணாமலையின் பெருமையையும் அண்ணாமலையாரின் கீர்த்தியையும் எடுத்தியம்புகின்றன.

அருணகிரியார் இவ்வண்ணாமலைத் தலத்தில் பிறந்து வளர்ந்து பெருமை எய்தியவர் என்பது பலர் கருத்தாகும். எனினும் அண்ணாமலைக்குப் பக்கத்தில் உள்ள புத்தூரைச் சார்ந்த

6. அருணாசல புராணம், பா. 9.

முள்ளந்தரம் என்பதே இவர் ஊரென்பாரும் உளர். எவ்வாறாயினும், திருவண்ணாமலைத் தலத்தோடு இத்தவ முனிவர் கொண்டிருந்த தொடர்பு யாராலும் மறுக்க முடியாது. இப்பெருமானின் வரலாறு இனி காணத் தக்கதாகும்.

## அருணகிரியார் வரலாறு

"அருணகிரி நாதரது தோற்றம் பெற்றோர்கள் பற்றி நாம் ஏதும் அறிய முடியவில்லை. அவரது தோற்றம் பற்றிப் பல புனைகதைகள் கூறப்படுகின்றன. செந்தமிழ்க் கடவுளாம் செவ்வேள் முருகனைத் தலந்தொறும் சென்று பரவித் தம் சந்தத் திருப்புகழ்க் கவிமணிகளால் இழைத்து அலங்கரித்த அருணகிரிநாதரின் பெருமையை இப்புனை கதைகள் மாசுபடுத்துவதாயுள்ளன"[7]

என்று பலராலும் கூறப்பெறும் வரலாறு, உண்மை பொருந்தியதாக இல்லை என்பர்.

திருவிடைமருதூர் மகாலிங்க சுவாமி தேவஸ்தானத்தினர் வெளியிட்டுள்ள 'திருப்புகழ் பொழிப்புரை நூலில்' பலராலும் செவிவழி அறிந்த செய்திகளிலிருந்து பெறப்பட்ட அருணகிரியார் வரலாறு விரிவாகக் கூறப்பட்டுள்ளது. அதன் சுருக்கம் வருமாறு:

"அருணகிரிநாதர் திருவண்ணாமலை என்னும் திருத்தலத்தில் அவதரித்தவர். இவர் கணிகையர் மரபைச் சார்ந்தவர். இவருடைய அன்னையார் இவரது இளம் பருவத்திலேயே உயிர் துறந்தார். இவர் தமக்கையாரால் வளர்க்கப்பட்டார். இளமையில் கல்விச் செருக்கால் கவிபாடியும், இன்பத் துறையில் எளியராகியும் வாழ்ந்தார். சிற்றின்பத்திற்காக இவர் பொருளை நிரம்பச் செலவிட்டார். அதற்காகத் தமக்கையாரிடம் அடிக்கடி பொருள் பெற்றார். இதனால் வீட்டிலிருந்த பொன் பொருள்களும், அணிமணிகளும் பிற உடைமைகளும் ஒழிந்தன. அந்நிலையில் பொருள் வேண்டி இவர் தமக்கையாரைத் துன்புறுத்தவே அவர் மனம் வெறுப்புற்று 'நீ கணிகையரிடம் பெறும் இன்பத்தை என்னிடமே பெறுக' எனக் கூறிக் கண்ணீர் விட்டனர். அருணகிரி உள்ளத்தில் இவ்வாக்கு, பேரிடி ஆயிற்று. அவர் உள்ளம் புண்பட்டுப் பண்பட்டது; மனம் திருந்தினார். தம் செயல்களையெல்லாம் நினைந்து நைந்து நாணினார். இனி வாழ்வதும் பிழை என்று கருதி அருணைக் கோபுரத்தின் மேலேறினார். உயிர்விடுவதற்காக அங்கிருந்து தலைகீழாக

7. அருணகிரிநாதர் அடிச்சுவட்டில், ப. 5.

விழுந்தார். அப்போது முருகப்பெருமான் முனிவர் வேடத்தில் தோன்றி அருணகிரியாரைத் தம் திருக்கரத்தில் ஏற்றுக் கீழேவிட்டார். 'இன்று தொடங்கி முருகனைப் பாடும் பணியை மேற்கொள்க' எனத் திருநீறளித்து வாழ்த்தினார்; செவியில் 'சும்மா இரு' எனவும் ஓதி முனிவர் மறைந்தார். அருணகிரியார் கோபுர வாயிலிலேயே கண்மூடித் தவஞ்செய்யத் தொடங்கினார். அவரைப் பற்றியிருந்த தொழுநோயும் அவரைவிட்டு நீங்கியது. பின் அவர் முருகப்பெருமானைப் பாட வேண்டுமென்று எண்ணினார். 'முத்தைத்தரு பத்தித்திருநகை' என அடியெடுத்துப் பாடினார். அதுவே திருப்புகழாயிற்று. தலந்தோறும் சென்று இறைவனைப் பாடி வழிபட்டார். திருப்புகழால் உள்நாட்டுத் தலங்களையும், கதிர்காமம் சென்று அத்தலத்தையும் போற்றினார். அவர் திருவண்ணாமலைக்கு மறுபடியும் வந்தபோது வில்லிபுத்தூராருடன் வாதிட நேரிட்டது. வில்லிபுத்தூரார் அருணகிரியாரின் 'திதத் தத் தத்' எனத் தொடங்கும் கந்தரலங்காரப் பாட்டுக்குப் பொருள் கூற முடியாது தோற்றார். சம்பந்தாண்டான் என்ற தேவி உபாசகன் ஒருவன், திருவண்ணாமலையை ஆண்டுவந்த பிரபுட தேவராயனிடம் சென்று, அருணகிரியார் அரசனுக்கு முருகன் காட்சியைக் காட்டுவிக்க வேண்டுமென்று அரசனைக் கூறுமாறு தூண்டினான். அரசனும் அருணகிரியிடம் முருகன் காட்சியைக் காட்டியருள வேண்டினான். அருணகிரியார் முருகனை வேண்டிப் பாடினார். சம்பந்தாண்டான் வேண்டுகோளால் தேவி முருகனைத் தம் மடி மீதமர்த்திக் கொண்டாள். உடனே அருணகிரி மயிலைப் பாடினார். மயில் நடம்புரிய தேவி அக்காட்சியில் ஈடுபட்டு நிற்க, முருகன் மயில் மீது தோன்றி அருணகிரியார் முன் சென்றார். அரசனும் முருகனின் காட்சி பெற்றான். பின்பு சம்பந்தாண்டான் தூண்டுதலால் அரசன் அருணகிரியாரைத் தேவலோகம் சென்று பாரிசாத மலர் கொண்டுவரப் பணித்தான். அருணகிரியார் அதற்கு இசைந்து கிளி உருக்கொண்டு, தன் உடலைக் கோபுரத்தில் மறைத்து வைத்துவிட்டுத் தேவலோகம் சென்று பாரிசாத மலரோடு திரும்பினார். அதற்குள் சம்பந்தாண்டான் தூண்டுதலால் அருணகிரியார் இறந்தாரென்று கருதி உடலை எரித்துவிட்டனர். அருணகிரி நிகழ்ந்தது அறிந்து கிளி உருவோடு தியானம் செய்து முத்தி அடைந்தனர்[8]''.

8. திருப்புகழ் பொழிப்புரை ப. 6-14.

சிலச்சில மாற்றங்களோடு இக்கதை பலராலும் கூறுப்பட்டுள்ளது. பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் அருணகிரியார் வரலாறுபற்றிக் கூறுவதை இங்குச் சுருக்கமாகக் காணலாம்[9].

''திருவண்ணாமலையில் உருத்திர கணிகையர் மரபில் தோன்றிய முத்தம்மை இறைவனிடம் தனக்கோர் ஆண்மகவு வேண்டுமென இரந்து பெற்றனர். பெற்ற அப்பிள்ளைக்கு அருணகிரி எனப்பெயரிட்டு வளர்த்தனர். அருணகிரியின் ஏழாமாண்டில் அவர் தாய் இயற்கை எய்தினர். பின்பு தமக்கையாரால் அவர் வளர்க்கப்பட்டார். ஊழ்வினைப் பயனாக அருணகிரி பெருநோயுற்றார். இந்நோய் அவர் பெண்களிடத்துக் கொண்ட சிற்றின்பத்தால் உண்டானதென்றும், இதற்குப் பாடல்களில் சான்று உள்ளது என்றும் கூறுவன கொள்ளத்தக்கன அல்ல. அருணகிரியார் கல்வியும் ஒழுக்கமும் கடவுட் பக்தியும் கொண்டவராகவே திகழ்ந்தார். நோயால் வருந்திய அருணகிரியார் திருவண்ணாமலைக் கோயிலின் சிவாலய கோபுரத்தின் வடக்கே உள்ள முருகனது சந்நிதியில் நின்று கண்ணீர் நெகிழக் கதறினர். பின்பு ஆறுநாள் அவ்விடத்திலேயே தியானத் திருந்தனர். ஆறுநாளின் முடிவில் முருகப்பெருமான் 'முத்தைத்தரு பத்தித் திருநகை யத்திக்கிறை சத்திச் சரவண முத்திக் கொரு வித்துக் குருபர எனவோதும்' என அடி தொடங்கிக் கொடுக்க அருணகிரியார் பாடினர். அவர் உற்ற நோயும் அகன்றது. பல தலங்களுக்கும் சென்று முருகன் மீது திருப்புகழ் இசைத்தார். முருகன் காட்சியை கண்ணார நேரே காண வேண்டுமென்ற அவா அவரை உந்தியது. தாம் பாடிய பல்லாயிரம் திருப்புகழையும் திருவண்ணாமலைக் கோபுரத்தின் மேலிருந்து படித்து முடித்தார். இறைவன் அவர்க்கு அந்நிலையிலும் காட்சி தராமை கண்டு திருப்புகழ் ஏடுகளை உருவிக் கீழேவிட்டார். அவரும் கோபுரத்திலிருந்து கீழே குதித்தார். முருகப்பெருமான் மனித உருக்கொண்டு தோன்றி அருணகிரியாரைத் தாங்கிக் காத்தனர். அருணகிரியார் பின்னும் பெருந்தவமியற்றி முருகன் காட்சி பெற்றனர். ஓங்கார உபதேசம் அருளி, 'சும்மா இரு சொல்லற என்றலுமே' என்றபடி மோனத்தவ நிலையில் இருத்தி முருகப்பெருமான்

9. ஸ்ரீமத் அருணகிரிநாத சுவாமிகளின் சரித்திரச் சுருக்கம் 7-17.

அருணகிரியார்க்கு அருள் செய்து மறைந்தனன். திருவண்ணாமலையில் வில்லிபுத்தூரார் என்ற வைணவரை வாதில் வென்று அவர் கொண்ட செருக்கையும், தம்மிடம் வாதில் தோற்றவரைக் காதுகளை அரிந்து அனுப்பும் வழக்கத்தையும் போக்கினர். மேலும் வில்லிபுத்தூரார் அருணைநாதனையும் பாடுமாறு செய்து அவர் கண்ணொளி பெறவும் காரணமாயினர். பிறகு சம்பந்தாண்டான் என்ற சமணநெறியினனின் அறைகூவலை ஏற்றுக் கம்பத் தூணொன்றில் முருகப்பெருமான் மயில்மீது தோன்றி காட்சி தரச் செய்தனர். சம்பந்தாண்டான் தூண்டுதலால் அரசன் கற்பக மலர் வேண்ட, அருணகிரியார் கிளி உருக் கொண்டு விண்ணுலகிலிருந்து கற்பக மலர் கொண்டுவந்து அரசனுக்களித்துத் தம் பழைய உருவை மீண்டும் பெற்றனர். இதற்கு மாறாக அருணகிரியாரின் மனித உடம்பு எரிக்கப் பெற்றதென்பது பொருந்தாது. 16000 திருப்புகழ்ப் பாடல்களைப் பாடிய அருணகிரியார் மோனநிட்டையிலே இருந்து சிதாகாசப் பெருவெளியில் மறைந்தருளினார்[10]''.

பாம்பன் சுவாமிகள் கூறும் இவ்வரலாற்றில், சில வேறுபாடுகளுண்மை அறியலாம். அருணகிரியார் வரலாறு போலப் பலப்பல புனைவுகளும், தத்தம் மனப்போக்கிற்கேற்ப மிகுதியாகக் கலந்த கற்பனைகளும் வேறு எவர் வரலாற்றிலும் இல்லை. பாம்பன் சுவாமிகள் அருணகிரியார் வரலாற்றைக் கூறுகையில், கணிகை ஒருத்தி ஆண்மகன் ஒருவனோடு புணராது இறைவன் அருளாற் பெற்ற குழந்தையே அவர் என்று கூறுகின்றார் என்பர். இவற்றுக்கெல்லாம் சிகரம் வைத்ததுபோலப் புலவர் புராணம் எழுதிய வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் 'அகத்திய முனிவர் வளர்த்த நாய் ஒன்று தேவேந்திரனாகிப் பிறகு அருச்சுனன், கண்ணப்ப நாயனார், நக்கீரர், பொய்யாமொழிப் புலவர் ஆகியோராய்ப் பிறவியெடுத்துப் பின்னர் அருணகிரிநாதராகப் பிறந்ததென்று' கூறுகிறார். சுவாமிகள் முருகனே வந்து இவ்வரலாற்றை உணர்த்தியதாக உரைக்கின்றார். இப்புராணத்தை அவர் மேலும் விரித்துரைக்கையில்,

''இனி அருணகிரிநாதருடைய பிறப்பு குலம் தாய் தந்தையர் பற்றிய செய்திகளும் விபரீதமாகவே கூறப்படுகின்றன. முற்றும் துறந்த பட்டினத்தடிகள் தலயாத்திரை செய்து

10. திருப்புகழ் சமாஜப் பதிப்பு முன்னுரை, ப. 23.

திருவண்ணாமலை சென்ற போது முத்தம்மை என்ற உருத்திர கணிகையைத் திருக்கோயிலிற் கண்டு மயங்கி அவள்மீது அடங்காக் காதல் கொண்டு, அவளைக் கலவிக்கழைப்ப, அவள் மறுத்து ஓட, தமக்கு வெளிப்பட்ட சுக்கிலத்தை அடிகள் ஓர் இலைக்கலத்தில் பெய்து வைக்க, முத்தம்மையின் தாய் தன் மகளைக் கடிந்து அழைத்து வந்து அடிகளிடம் விட, அடிகள் இலைக்கலத்தைச் சுட்டிக்காட்ட, முத்தம்மை அதிலிருந்த சுக்கிலத்தை விழுங்கி, கருத்தரித்து சூல் முதிர்ந்து அருணகிரிநாதரை ஈன்றாள் என்ற வரலாறும் மேற்கூறிய அருணகிரிநாதர் புராணத்திலேயே கூறுப்படுகின்றது[11]''

என்று கூறுவதாகக் காட்டுவர். பட்டினத்தார் காலத்திற்குப்பின் பல நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றியவர் அருணகிரியார் என்பது கருதத்தக்கது. முருகனின் பிறப்புப் பற்றிய கதை, திருவள்ளுவர் பிறப்புப் பற்றிய கதை போன்ற பல்வேறு கதைகளின் கூட்டாகவே இக்கதை தோன்றியுள்ளது. கண்ணப்பர் போன்ற சிவசாயுச்சிய நிலையடைந்தவர்கள் மீண்டும் பிறந்தனர் என்பதும் பொருந்தாது.

பதினைந்தாம் நூற்றாண்டின் தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதியுள்ள மு. அருணாசலம் அவர்கள் அருணகிரியாரின் வரலாறு பற்றிக் கூறுகையில்,

''எவ்வளவுக்கு அவருடைய வாழ்க்கை கீழ்த்தரம் என்று காட்டலாமோ அவ்வளவுக்கு முருகனுடைய அருளின் பெருமை உயர்ந்து விளங்கும் என்று சரிதம் கூறியவர்கள் எண்ணினர் போலும்! ஆனால் அவரே பாடிய பாடல்களில் காணும் குறிப்புகளுக்கு இச்செய்திகள் முற்றிலும் முரணாக உள்ளன[12]''

என்று கூறுவதோடு, புலவர் புராணம் கூறும் செய்திகள் உண்மையானவை அல்ல என மறுத்துரைக்கின்றார். அருணகிரியார் பிராமணர் என்பதோ, உருத்திர கணிகையின் மகன் என்பதோ உண்மையன்று எனக் கூறும் மு. அருணாசலம், அருணகிரியாரை ஒரு சீலமான வேளாளர் என்று குறிப்பதோடு ''கன்மவசத்தால் விலைமாதரோடு கூடிச் சிற்றின்பத்துறை தோய்ந்து பொருள் இழந்து வருந்தினார்'' எனவும் கூறுகின்றார். அருணகிரியார் வரலாறு குறித்து மு. அருணாசலம் கூறும் செய்திகளில் குறிக்கத்தக்கன வருமாறு :

---

11. திருப்புகழ் சமாஜப் பதிப்பு முன்னுரை. ப. 13.
12. தமிழ் இலக்கிய வரலாறு 15ஆம் நூற். மு. அருணாசலம் ப. 6.

1. 'மனையவள் நகைக்க ஊரில் அனைவரும் நகைக்க லோக மகளிரும் நகைக்க' அவர் சிற்றின்பத்துறை மூழ்கினார் என்பதை அவரே குறிக்கின்றார்.
2. கோபுரத்திலிருந்து தற்கொலைக் கருத்தில் வீழ்ந்த அவரை முருகன் தாங்கித் தரையில் விடுத்தான் என்றொரு வரலாறு வழங்குகின்றது.
3. 'முத்தைத்தரு' என முருகன் அடியெடுத்துக் கொடுக்கச் சந்தப் பாடல்கள் மலர்ந்தன.
4. அருணகிரியார் வேண்டியபடி முருகன் 'சந்தச் சபைதனில்' தோன்றி அருளினான்.
5. வேலும் மயிலும் கொண்டு முருகன் தோன்றச் சம்பந்தாண்டான் தோற்றான் என்பதை அருணகிரியார் பாடலிலிருந்து அறியலாம்.
6. வில்லிபுத்தூராரொடு வாது செய்தமையை உண்மையென்றும் கற்பனையென்றும் கூறுவார் உளர். வில்லிபுத்தூராரை ஒருவர் தூண்ட, அவர் உற்ற செருக்கை அருணகிரியார் அடக்கினர் எனக்கூற இடமுண்டு.
7. போட்டியில் வில்லிபுத்தூராார் காதை அறுக்காது பெருந்தன்மை பாராட்டியதால் 'கருணைக்கு அருணகிரி' எனப் புகழப் பெற்றார்.
8. அருணகிரியார் கிளி வடிவு பெற்றனர் என்பதும் பாரிசாத மலர் கொண்டு வந்து உடல் காணாது அவ்வடிவிலேயே இருந்தனர் என்பதும் மனித இயல்புக்கு அப்பாற்பட்டவை. 'சுகம்' என்ற சொல்லைக் கிளி என்று தவறாகப் புரிந்து கொண்டதன் விளைவே இது.

மேற்கண்ட செய்திகள் பலர்க்கும் உடன்பாடாக இருந்திருக்கின்றன. சைவ சித்தாந்த சமாஜத் தலைவர் ம. பாலசுப்பிரமணிய முதலியார், தணிகைமணி வ.சு. செங்கல்வராய பிள்ளை ஆகிய இருவருமே அருணகிரியாரின் உண்மை வரலாறு எழுதினோர் ஆவர் என்று மு. அருணாசலம் குறிக்கின்றார். இவர்கள் இருவரும் அருணகிரியாரின் பாடல்களையெல்லாம் திரட்டிப் பதிப்பித்த பெருமைக்குரியவர்கள். இவர்களில் பாலசுப்பிரமணிய முதலியார் கூறும் அருணகிரியார் வரலாற்றில் குறிக்கத்தக்க செய்திகள் வருமாறு[13] :

13. அருணகிரிநாதர் அருளிச்செய்த கந்தரலங்காரம் முதலிய நூல்கள் : முன்னுரை சைவ சித்தாந்த சமாஜப் பதிப்பு, ப. 12-21.

1. 'சீலமுள தாய் தந்தையர் மாது மனையான மைந்தர்', 'மனை கனக மைந்தர் தமதழகு பெண்டிர் வலிமை குலம் நின்ற நிலையூர்' என்றெல்லாம் அவர் பாடுவதிலிருந்து அவர் சீரிய இல்லற நெறி நின்று வாழ்ந்தவர் என்பது புலனாகும்.
2. அருணகிரியார் கணிகையர் குலத்தவரோ, ஆரியர் குலத்தவரோ இல்லை. சைவ வேளாளர் என்பது பொருந்தும்.
3. தமக்குப் பிறமொழிப் பயிற்சிக் குறைவு என்றும், வேதம் ஓதினேன் இல்லை என்றும் அவரே குறிப்பிடினும், ஆகம உண்மைகளைப் பல பாடல்களிற் குறிக்கின்றார். மணிப்பிரவாள நடையில் தேர்ந்தமைந்த பாடல்களை இயற்றியுள்ளார்.
4. அருணகிரியாரின் சாதி குலத்தை ஆராய்வது தேவையில்லை.
5. அருணகிரியார் பல பாடல்கள் பாடும்வரை அவருடைய அன்னையார் உயிருடன் இருந்தார். வாழ்க்கையில் சலிப்புற்றுத் தற்கொலை முயற்சியில் அவர் இறங்கியிருக்கக் கூடும். முடக்கு நோயால் அவர் பீடிக்கப்பட்டிருக்க வேண்டும். மனைவி, தம்பி, தங்கை, மருகர், மைந்தர் ஆகிய உறவுமுறைகளை அவர் குறிக்கின்றார். மனைவியின் சிறப்பையும் அவர் எடுத்துரைக்கின்றார்.
6. விதிவசத்தால் இவர் கூடா ஒழுக்கத்தில் உழன்றவராதல் வேண்டும். கணிகையர் கூட்டுறவு பற்றியும், பொருள் இழப்புப் பற்றியும் இவர் பல பாடல்களிற் பாடியுள்ளார்.
7. 769ஆவது பாடலை ஊன்றிப் பார்த்தால் இவர் சிலகாலம் போலித்துறவி வேடம் பூண்டு பொருளீட்டி விலைமாதருக்கு ஈந்தாரெனக் கூறுதற்கிடமுண்டு.

இக்குறிப்புக்களிலிருந்தும் அறிவும் புலமையும் மிக்க அருணகிரிப் பெருமானின் முழுவரலாற்றை ஐயந்திரிபுகள் இல்லாமல் அறிய வாய்ப்பில்லை. இப்பெருமானின் வரலாறு பல மயக்கங்களைத் தருமாறு ஆக்கப் பெற்றதற்குக் காரணங்கள் உள்ளன.

1. மிகுந்த ஆற்றலுடைய அருட்புலவர் என்பதற்காகப் புனையப்பட்ட மிகைக் கதைகள்;

2. புலவர்களின் வரலாற்றைப் பொய்ம்மை கலந்து படைக்கும் ஒரு மரபு தழுவிச் சேர்க்கப்பட்ட செய்திகள்;
3. சமயக் காழ்ப்பினால் அவரைக் குறைவுபடக் கூறும் மனநிலை கொண்டவர்களின் கற்பனைகள்;
4. அருணகிரியார் பாடல்களிற் பயிலும் பற்பல செய்திகளையும் அவர் வாழ்வோடு தொடர்புடையன எனத் தவறாகக் கருதியோர் கூறிய செய்திகள்;
5. தக்க சான்றுகள் கிடைக்காத நிலையில், புலவர் பிறர் வாழ்க்கை பற்றிய செய்திகளோடு தொடர்பு கற்பித்துக் கூறப்பெற்ற செய்திகள்;

என்ற அடிப்படையில் அருணகிரியாரைப் பற்றி ஒரு வரலாறு உருவாகிவிட்டது. வைணவ சமயத்தைச் சார்ந்த ஐயங்கார் ஒருவர் கற்பித்துக் கூறும் வரலாறு மிக விந்தையானது. அவ்வரலாறு வருமாறு :

''வில்லிபுத்தூரார் வந்தவுடனே அரசன் அமைச்சராதியோர் அந்தணனென்றிடும் முறையில் உபசரித்தனர். துறவியாகிய அநாதனெனும் புலவோனும் அவ்வாறு உபசரித்தான். தலத்துப் புலவன் துறவி வேடம் கொண்டவன் என்பதையும் மதியாது சாருவ பௌமன் அதட்டிப் பேசி 'சந்தம் மொழிந்தனையெனக் கேட்டு இங்கு வந்தோம் சாற்றுக' என்று கூறினன். 'சாற்றுகின்றேன், தடையொன்றில்லை. கோபம் கொள்ளாதீர்' என்று விடையளித்துவிட்டு 'விகட பரிமளம்' எனும் பாவை அருணகிரிநாதப் புலவன் விளம்பினான். இப்பாடல் எங்குளதோ புலப்படவில்லை. கோடையிடி இடித்தாற் போல் முழங்கிக் கவி கூறி மற்றோர் கவிதொடுக்குமுன் சாருவ பௌமன் சபையோர் கேட்க 'இவ்வகைக் கவிகளை நம் அடைப்பக்காரன் ஜாடையினில் சொல்லிவிடுவான்' என்று ஆணவத்தால் தவறிச் சொன்னான். அரசனும் இம்மாற்றம் 'இயல்பல்ல' என்றான். அருணகிரிப் புலவனும் கண்கள் நெருப்பெனச் சிவந்து 'கூறிய கவியின் நயமுணராத நீ, கவி எவ்வாறு கூற வல்லாய்' என்று கூறி வில்லிபுத்தூராரை ஒரு மசகம் போல் எண்ணினான். உடனே அரசன் எழுந்து 'சிறப்புள்ள நீங்கள் இருவரும் இவ்வண்ணம் போர்புரிதல் நன்றல்ல. ஒருவர் நன்கவி நூறு கூற, மற்றவர் அதனைக் கேட்டுப் பொருள் கூறுதல் வேண்டும்' எனப் பகர்ந்தனன். இதைக் கேட்டு உடனே அருணகிரிப் புலவன்

பாட்டுரைக்க வாய் திறந்தான். வந்த புலவனாம் சாருவ பௌமன் பொருளுரைக்க உடன்பட்டுப் பொருளுரைத்துக் கொண்டே வந்தனன். தொடங்கிய அந்நூல் 'கந்தனந்தாதி' அதிலடங்கிய யமகக் கவி நூறில் ஐம்பது வரை நிறைவேறிய மேல், அருணகிரிப் புலவன் கொஞ்சம் மனம் நொந்து முருகவேளை நோக்கினான். 'திதித்த' எனும் பாடல் தகரமெனும் வருக்கத்தால் அருணகிரிப் புலவன் வாயிலுதித்தது. அதற்குப் பொருள் கூற முடியாது வேதியன் மாழ்கிச் சோர்ந்தான். 'பற்பலர் காதை அந்தணன் போரில் இதுகாறும் அறுத்த பாவம் இந்த நாள் வெளிப்பட்டதோ' என மயங்கினான். மன்னவன்முதல் பலரும், தோற்றவன் காதைக் கொய்தல் தகுதியென்றனர். 'கொய்வதனாற் பயனில்லை. கொய்யாது விடுத்தால் யான் கொடுத்த காதெனப் பெயர் விளங்கும்' என்று அருணகிரிப் புலவன் மொழிந்து கருணை பாராட்டினன். எல்லோரும் அதிசயித்தார்கள். கைவாளை அந்தணனிடத்திலிருந்து வாங்கிப் பிரபுட தேவனாம் அரசனிடம் கொடுத்து அதனை 'நீ உபயோகம் செய்' என்று அருண்கிரிப் புலவன் கூறினான். வில்லிபுத்தூரார் அவ்வொரு பாட்டிற்கு மட்டும் சொல்வகை கேட்டு அறிந்து பொருள் கூறி மற்றைய பாடல்களுக்கும் பொருள் கூறிவிட்டு, அருணகிரிநாதரைச் சுட்டித் 'தீதில்லாத கவிக் கடலேழும் கடந்ததென்று சிந்தை மகிழ்ந்தோம்' என்று வில்லிபுத்தூரார் ஒரு பாட்டுக் கூறினார்[14]''

இவ்வரலாற்றில் கந்தரந்தாதியைக் கந்தனந்தாதி என்று கூறியிருப்பினும் இறுதியில் வில்லிபுத்தூராரின் தோல்வியையும், அருணகிரியாரின் ஆற்றலையும் வெளிப்படுத்தத் தவறவில்லை. கடுமையான சமய வேறுபாடு நிலவிய காலத்தில் பிற சமயிகளும் அருணகிரியாரின் புலமையைப் போற்றியுள்ளனர் என்பது விளங்கும். பலரும் பலவாறு கூறியுள்ள அருணகிரியாரின் வரலாறு குறித்த செய்திகளைக் கண்டநிலையில் அவருடைய சரியான வரலாற்றைத் தகுந்த சான்றுகளின் அடிப்படையில் சுருங்கக் காணலாம்.

### அருணகிரியார் - உண்மை வரலாறு

அருணகிரியார் திருவண்ணாமலைப் பதியினர் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. முல்லண்டிபுரம், காஞ்சிபுரம்

14. தமிழ் இலக்கிய வரலாறு. மு.அ., ப. 14-15.

எனுமிடங்களில் இவர் பிறந்தாரென்று கூறுவதற்குச் சான்றில்லை. முல்லண்டிபுரத்தில் வாழ்ந்த அண்ணாமலைநாதரோடு தொடர்பு கொண்டவர் அருணகிரியார் என்ற கற்பனையே அவரை முல்லண்டிபுரத்தில் பிறந்தவராக எண்ணத் தூண்டியிருக்கிறது. காஞ்சிப் பிள்ளையார் பாளையத்தில் முதண்ட முதலியாரும் அவர் மனைவி முத்தம்மையாரும் இறைவனைக் குறித்து மகப்பேறு வேண்ட, அருணகிரியார் தோன்றினர் எனக் கூறுவதற்கும் ஆதாரங்கள் இல்லை. திருவண்ணாமலையைப் பாடும் போது அத்தலத்திற் குறித்த சில இடங்களைப் பாடுவது எண்ணுவதற்குரியது.

'அடலரணைத் திருக்கோபுரத்தே அந்த வாயிலுக்கு
வடஅருகிற் சென்று கண்டு கொண்டேன்[15]'

என்பதில் 'அந்த' என்ற சுட்டைத் தமக்குப் பழக்கமான இடம் என்பதை உணர்த்த ஆள்வது கருததற்குரியது. திருச்சிராப்பள்ளியிலும், திருமுதுகுன்றத்திலும் பாடும் போது திருவருணையை நினைந்து போற்றுதலும் எண்ணத்தக்கது. குறுநிலமன்னர் வேறு எவரையும் பாடாது பிரபுட தேவனைப் பாடுவதும் அருணகிரியோடு அருணகிரிக்கிருந்த தொடர்பைக் காட்டும்.

அருணகிரியாரின் பெற்றோர் சீலமுள தாய் தந்தை எனக் கூறத் தகுதி பெற்றவர். அவருடைய சாதி, குலம் என்பவற்றை ஆய்வது தேவையற்ற செயலாகும். மனிதர்கள் களைந்தெறிய வேண்டிய தளைகளெனத்தக்க இவற்றைப் பரம ஞானியர்க்கும் கற்பித்துக் கூறல் அறியாப் பேதைமையாம்.

இளமையிலேயே நல்ல கல்வியறிவும், இறை உணர்வும், நன்னெறியிலிருந்து எச்சூழலிலும் நழுவிவிடக் கூடாதென்ற உள்ள உரனும் கொண்டவராகத் திகழ்ந்தவர் அருணகிரி. திடீரெனக் கோடையிடி போல அவரிடத்திருந்து திருப்புகழ் வாய் வெடித்து வந்து விழுந்ததெனக் கூறுவதெல்லாம் வீண். இந்நாட்டிற் கற்ற கல்வியாளர்களின் உலையா முயற்சியால் ஈட்டிய ஒளிமிக்க உண்மை அறிவை எதிர்பாராத ஒரு நொடி விளைச்சலெனக் காட்டுவது ஞானியர் பலர் வாழ்வையும் விவரிக்கும் போது நிகழ்ந்துள்ளது. இறையருள் கல்லாத மடையர்களுக்கெல்லாம் வெள்ளமெனக் கல்வி அறிவை ஒரு நொடியிற் பாய்ச்சிவிடுவதன்று.

15. கந்தரலங்காரம். 1.

'ஆனாத ஞான புத்தியைக் கொடுத்ததும்
ஆராயும் நூல்களிற் கருத்தளித்ததும்
ஆதேச வாழ்வினிற் ப்ரமித்து இளைத்து உயிர் அழியாதே
ஆசா பயோதியைக் கடக்க விட்டதும்
வாசாம கோசரத்து இருத்துவித்ததும்
ஆபாதனேன் மிகப்ரசித்தி பெற்றுஇனிது உலகேழும்
யானாக நாம அற்புதத் திருப்புகழ்
தேனூற ஓதி எத்திசைப் புறத்திலும்
ஏடு ஏவு ராஜ தத்தினைப் பணித்ததும் இடராழி
ஏறாத மாமலத்ரயக் குணத்ரய
நானா விகார புற்புதப் பிறப்பற
ஏது ஏமமாய் எனக்கு அநுக்கிரகித்ததும் மறவேனே![16]'

என்று அருணகிரியார் பாடியுள்ள பாடல் அவருடைய உண்மை வரலாறு அறிவிக்கும் பெருஞ்சான்றாகும்.

இதனின்றும் அவர் வாழ்ந்த செம்மைமிகு வாழ்வை அறிந்து கொள்ளலாம். சிற்றின்பத்தையும் பெண்ணாசையால் வரும் கேட்டையும் அவர் மிகுதியாகப் பாடியுள்ளார் என்பது உண்மையே. இதற்காக அவர் அவ்வுளைச் சேற்றில் அழுந்திக் கிடந்தார் என்று எழுதுதல் ஞானியரின் பாடுநெறி அறியாமையால் விளைந்த குற்றமாகும்.

சிற்றின்ப நெறியைக் கைவிட்டுப் பேரின்ப நெறியில் மனம் செல்லுதல் வேண்டுமெனக் கருதித் திருத்தக்க தேவரும், கம்பரும் பாடியுள்ள பனுவல்களைக் கற்று அவர்தம் உளக் குறிப்பு அறிந்தவர்கள் இவ்வாறு கருதார். பெண்ணிச்சை வயப்பட்ட மனிதர்களைப் பேரின்ப வீட்டுக்கு அழைத்துச் செல்ல முயன்ற சான்றோர் இறைவனை நாயகனாகவும் தம்மை நாயகியாகவும் அகப்பொருள் நெறியமையப் பாடிய கோவை, உலா, அந்தாதி, தூது மடல் போன்ற நூல்களைக் கற்றுணர்ந்தார் யாரும் அருணகிரியாரைச் சிற்றின்ப வாழ்வில் ஈடுபட்டு உழன்றவராகச் சித்திரிக்க மாட்டார்.

முன்னூல்கள் எவற்றினும் இல்லாத அளவு சிற்றின்பச் செயல்களையும், காமக் களியாட்டங்களையும் அருணகிரியார் பாடியுள்ளார் எனக் கூறுவர். இஃது உண்மையா? ஆம்.

16. திருப்புகழ் சகுந்தலை நிலையப் பதிப்பு. 1012

உண்மையே. 'அருக்க மங்கையர் மலரடி வருடி' எனத் தொடங்கும் திருப்பரங்குன்றத் திருப்புகழில் மாதரோடு கொள்ளும் நேயக் கலவியின் ஒவ்வொரு கூறையும் அவர் பாடுகின்றார். அவர் சிற்றின்பத்தை மட்டுமோ அவ்வாறு பாடுகின்றார்? முதுமையைப் பாடுகிறார்; போர்க்களத்தின் அச்சந்தரு சூழலைப் பாடுகின்றார்; உலோபிகளின் ஒப்புரவின்மையைப் பாடுகிறார்; இறப்பு ஒருவரை வந்து துயருறுத்தும் நிலையைப் பாடுகிறார்; பாடுபொருள் எதுவாயினும் அதனை முற்றப் பாடுதலும் அப்பொருளின் பண்புகள் அனைத்தும் கேட்பார் உள்ளத்தில் பதியவும் பாடுதல் அருணகிரியாரின் வழக்கம். முருக பக்தி ஒன்றே அவரது குறிக்கோள்.

'தண்டையணி வெண்டையங் கிண்கிணி சதங்கையும்
 தண்கழல் சிலம்புடன் கொஞ்சவே நின்
தந்தையினை முன்பரிந்து இன்பவுரி கொண்டுநல்
 சந்தொடம் அணைந்து நின்று அன்புபோலக்
கண்டுற கடம்புடன் சந்த மகுடங்களும்
 கஞ்சமலர் செங்கையும் சிந்துவேலும்
கண்களும் முகங்களும் சந்திர நிறங்களும்
 கண்குளிர என்றன்முன் சந்தியாவோ[17]'

என்ற பாடல் முழுமையும் முருகனின் அழகு ஒழுகும் வடிவச் சிறப்பைப் பாடுவதாகும்.

அருணகிரியார் இல்லறநெறி நின்றவர். நூல்களில் தம்மைக் குறித்தும் பொதுவாக மனித வாழ்க்கை குறித்தும் கூறும் செய்திகளைப் பிரித்தறிய முடியவில்லை எனினும்,

'காவி உடுத்தும் தாழ்சடை வைத்தும்
 காடுகள் புக்கும் தடுமாறிக்
காய்கனி துய்த்தும் காயம் ஒறுத்தும்
 காசினி முற்றும் திரியாதே
சீவன் ஒடுக்கம் பூத ஒடுக்கம்
 தேற உதிக்கும் பரஞான
தீபவிளக்கம் காண எனக்குள்
 சீதள பத்மம் தருவாயே![18]'

17. திருப்புகழ் மேலது 103
18. திருப்புகழ் மேலது 600

என இயற்கைக்கு மாறான செயற்கைத் துறவை அவர் வெறுத்தவர் என்பதை அறியலாம். அவர் நோயுற்று வருந்தினாரென்றும், தொழுநோயால் வருந்தினாரென்றும் கூறுவன எல்லாம் இலக்கியப் படைப்பு நெறி அறியாரால் கூறப்பட்ட தவறான செய்திகளாகும்.

'எனையடைந்த குட்டம் வினைமிகுந்த பித்தம்
எரிவழங்கு வெப்பு வலிபேசாது
இகலிநின்று அலைக்கும் முயலகன் குலைப்பொடு
இருமல் என்று உரைக்கும் இடையோடே[19]'

என்ற பாட்டில் தமக்குப் பல நோய்களும் வந்தன எனப் பாடுகிறார். இன்னொரு பாட்டில், இறுக்குச் சீ புழுவோடு அடை மூளைகள், இரத்தச்சாகர நீர் மலமேவிய கும்பி ஓடை, இளைப்பு, சோகை, வாதம், விலாவலி, உளைப்பு, கண்டமாலை ஆகிய நோய்கள் கொண்டு உழலும் நாயேன் என்கிறார். எனவே இவை பல நோய்களாலும் துயருறும் மனிதர்களின் குறியீடாகத் தான்நின்று பாடிய பாடல்கள் எனக் கருத வேண்டும். இவ்வளவு நோய்களும் ஒருவரையே வந்த அடுத்தன எனக் கொள்ளுதல் இயற்கையன்று.

## இரு சொற் போர்கள்

அருணகிரியாரின் வரலாற்றில் இரண்டு சொற்போர்கள் நிகழ்ந்தன என்று கூறுவர். சம்பந்தாண்டான் என்ற சத்தி வழிபாட்டினன், அருணகிரியாரோடு வாது நிகழ்த்துங்கால், 'முருகனின் காட்சியை இவ்விடத்து இயலுமேல் காட்டுக' என அறைகூவல் விட்டதாகவும், பிரபுட தேவராயன் என்ற அரசனும் அருணகிரியை முருகன் காட்சியைக் காட்டுமாறு வேண்டியதாகவும், அருணகிரியார் அதற்கிசையப் பாடி முருகனின் காட்சியைக் கம்பத்தில் தோன்றுமாறு செய்தனர் என்றும் கூறுவர். அப்போது அருணகிரியார் பாடிய பாடல் வருமாறு :

'அதல சேடனார் ஆட அகிலமேரு மீதாட
அபின காளி தானாட அவளோடன்று
அதிரவீசி வாதாடும் விடையில் ஏறுவார் ஆட
அருகுபூத வேதாளம் அவையாக
மதுர வாணி தானாட மலரில் வேதனாராட
மருவு வானுளோ ராட மதியாட
வனச மாமியாராட நெடிய மாமனாராட
மயிலுமாடி நீயாடி வரவேணும்[20]'

19. திருப்புகழ்: மேலது 253
20. திருப்புகழ். மேலது 1292

என்று பாடியவுடன் கம்பத்திளையனாராக முருகன் காட்சி தந்தான் என வரலாறு கூறுகின்றது. மயில் மேலமர்ந்த மூர்த்தியாகக் கந்தப்பெருமான் எழுந்தருளிய நிலையில் சம்பந்தாண்டான் தோற்றனன் என்பர். இறையடியார்களுக்கு அவர்கள் வேண்டுகோளையேற்றும் பாடலுக்கு மனமுவந்தும் இறைவன் காட்சி தந்தமை குறித்த நிகழ்ச்சிகள் பல உள்ளன. நால்வர், குமரகுருபரர், இராமலிங்க வள்ளலார் போன்ற பெருமக்களுக்கு இத்தகு காட்சி கிடைத்தமையினை அவர்களின் வரலாறுகள் காட்டுகின்றன.

அருணகிரியாரின் இரண்டாவது சொற்போர் வில்லிபுத்தூராரோடு நிகழ்ந்தது. வில்லிபுத்தூரார் திருமுனைப்பாடி நாட்டுச் சனியூரில் பிறந்தவர். சந்தப் பாடல்களை மிகுதியாகப் பாடியவர். இவரைப் பற்றியும் உண்மைக்குப் புறம்பான கதைகள் வழங்குகின்றன. அவற்றில் ஒரு கதை வருமாறு : ஆண்டான் பிள்ளை என்ற அரசன் வில்லிபுத்தூராரைப் பாரதம் பாட வேண்டினான். அவரும் பாரதம் பாடி முடித்தார். அரசன் புலவர்க்குப் பரிசில் தர முன்வந்த போது அவர், 'என்னிடம் சந்தப் பாடல் பாடுவதில் போட்டியிட்டுத் தோற்பவர் காதை அறுக்கும் அதிகாரமும் அதற்கு அடையாளமாக ஒரு வாளும் தருக' எனக் கேட்டுப் பெற்றனர். வில்லிபுத்தூரார் தம்மிடம் தோற்ற பலர் காதுகளை அறுத்தனர்.

'குட்டுதற்கோ பிள்ளைப் பாண்டியன் இங்கில்லை
கும்பி அளவாய்க் காதைக் குடைந்து தோண்டி
எட்டினமட்டும் அறுப்பதற்கோ வில்லி இல்லை
இரண்டொன்றாய் முடிந்துதலை இறங்கப் போட்டு
வெட்டுதற்கோ கவிஒட்டக் கூத்தன் இல்லை
விளையாட்டாய்க் கவிதைகளை விரைந்து பாடித்
தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைகள் உண்டு
தேசமெங்கும் புலவரெனத் திரிய லாமே![21]'

என்று படிக்காசுப் புலவர் மூவரைக் கடுமையான தண்டம் வழங்குகின்ற திறனாய்வாளராகக் காட்டுகின்றார். வில்லிபுத்தூராருக்கும் அருணகிரியாருக்கும் வாது நிகழ்ந்தது. இவ்வாதின் போதுதான் கந்தரந்தாதி பாடப்பட்டதென்பர். அருணகிரியாரின் ஒவ்வொரு பாட்டுக்கும் பொருள் சொல்லி வந்த

21. தனிப்பாடல் திரட்டு, படிக்காசுப் புலவர் பாடல்கள்

வில்லிபுத்தூரார்,

'திதத்தத் தத்தித்த திதிதாதை தாத துத்தித் தத்திதா
திது தத்தத்தித் ததி தித்தித்ததே துத்து தித்தி தத்தா
திதத் தத்தத் தித்தத்தை தாததி தேதுதை தாததத்து
திதத் தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே[22]'

என்ற தகர விகற்பப் பாடலுக்குப் பொருள் கூற இயலாதவரானார். முன் பாடிய பாடல்களைப் போன்றவற்றை வில்லிபுத்தூராரும் பாடியுள்ளார். ஆனால் ஓரெழுத்து விகற்ப யமகப் பாடல்களை உடன் கேட்டுப் பொருள் கூறும் நிலையை அவர் அதுகாறும் சந்திக்கவில்லை. ஓரெழுத்து வருக்கப் பாடலைக் கேட்ட மாத்திரையில் பொருள் உரைப்பது எல்லார்க்கும் இயன்ற செயலும் அன்றாம். இப்பாடலின் பொருள் வருமாறு :

| | | |
|---|---|---|
| திதத்தத் தத்தித்த | - | திதத்தத் தத்தித்த என்னும் தாளங்களால் |
| திதி | - | நடனம் செய்யும் |
| தாதை | - | சிவபெருமானும் |
| தாத | - | நான்முகனும் |
| துத்தி தத்தி | - | பொறியையுடைய பாம்பினது |
| தா | - | இடத்தையும் |
| திதத்து | - | நிலைபெற்றுத் ததும்புகின்ற |
| அத்தி | - | கடலையும் படுக்கையாகக் கொண்டு |
| ததி தித்தித்ததே | - | தயிர் தித்தித்ததென்று |
| து | - | உண்ட கண்ணனும் |
| துதித்து | - | வணங்குகின்ற |
| இதத்து | - | பேரின்ப வடிவான |
| ஆதி | - | முதல்வனே! |
| தத்தத்து அத்தி | - | தந்தத்தையுடைய ஐராவதம் வளர்த்த |
| தத்தை | - | தெய்வ யானையின் |
| தாத | - | தொண்டனே! |
| திதேதுதை | - | தீமை நெருங்கியதும் |
| தாது அதத்து | - | தாதுக்கள் நிறைந்ததும், இறப்பைக் கொண்டதும் |
| உதி | - | பிறப்பை உடையதும் |
| தத்தும் | - | பல தத்துகளோடும் |
| அத்து | - | பொருந்திய |

22. கந்தரந்தாதி 54

| | | |
|---|---|---|
| அத்தி தித்தி | - | எலும்புகளைக் கொண்ட பையாகிய இவ்வுடல் |
| தீதீ | - | தீயால் பற்றப்படும் |
| திதி | - | அந்த நாளில் |
| துதி | - | உன்னைத் துதிக்கும் |
| தீ | - | புத்தி |
| தொத்தது | - | உனக்கே அடிமையாக வேண்டும் |

இப்பாடலுக்குப் பொருள் கூற முடியாத நிலையில் தோற்ற வில்லிபுத்தூராழ்வார் மற்றவர் காதறுக்கும் பழக்கத்தை அன்றோடு கைவிட்டார் என்று வரலாறு கூறுகின்றது. இருவர்க்கும் வாது நிகழ்ந்தது உண்மையே. எதிராளியைப் பொருள் கூறுமாறு அறைகூவல் விடுக்கும் பாங்கிலேயே கந்தரந்தாதி அமைந்துள்ளது. காதறுப்பது போன்ற புலமைவீறும் தலைமையும் காட்டுதற்கெழுந்த செய்திகள் மிகையானவையே. வில்லிபுத்தூரார் சிவபெருமானையும் தம் நூலில் போற்றிப் பாடியவர். எனவே இவருக்கும் அருணகிரியாருக்கும் இடையே எழுந்த சொற்போர் சமய வேறுபாட்டால் விளைந்ததன்று. வில்லிபுத்தூரார் இவரை வாதுக்கழைக்கையில் பகட்டும் ஆரவாரமும் கொண்டு விளங்கினர் என்பதை அருணகிரியார் குறிக்கின்றனர்.

'மதுரகவி ராஜனானென் வெண்குடை
விருதுகொடி தாள மேள தண்டிகை
வரிசையொடு உலாவு மால் அகந்தை தவிர்ந்திடாதோ[23]'

என்பது அருணகிரியாரின் கூற்று. வில்லிபுத்தூராரை அருணகிரியார் வென்ற செய்தி புலவர் பலராலும் போற்றப் பெறுகின்றது.

'எதிரும் புலவன் வில்லி தொழ
எந்தை உனக்கந் தாதி சொலி
ஏழைப் புலவர் செவிக் குருத்தொடு
எறியும் கருவி பறித்தெறிந்தே[24]'

என்றும்,

'- அக்கிளிதான்
வில்லிபுத்தூரன் செவியின் மேல் அரிவாள் பூட்டியன்று
வல்லபத்தின் வாதுவென்று வந்தது காண்[25]'

---

23. திருப்புகழ் : படர்புவியின் மீது... மேலது 53.
24. திருமலை முருகன் பள்ளு
25. தணிகை உலா

என்றும் இவ் வெற்றிப் புகழ் பல நூற்றாண்டுகளாகக் கூறப்பெற்று வருகின்றது. வில்லிபுத்தூரார் வாது செய்யும் கருத்தினர் அல்லரென்றும், சிலர் அவரைத் தூண்டவே அவர் அவ்வாறு செய்தனரென்றும் அந்நிலையில் அவர் செருக்கை அடக்குமாறு சிலர் அருணகிரியை வேண்டினர் என்றும் கூறுவர். அந்நிலையில் அருணகிரியார்,

'புரத்தைநர சிங்கத்தைப் போர்வேளைக் கூற்றை
எரித்தவர்க்குத் தாச னெதிரே - நினைத்தபுகழ்த்
தேன்சொட்டும் சோணகிரித் தேசிகரைப் போற்றாமல்
ஏன்கெட்டுப் போனான் இவன்[26]'

என்று பாடியதாகக் கூறுவர்.

## உலகம் சுற்றிய பாட்டுப்பறவை

ஞானியர் காற்றுப்போல் எங்கும் உலா வரும் இயல்புடையவர். ஓரிடத்தில் நிலையாக அவர்கள் காயம் தரித்திராது. பல்வேறு தலங்களிலும் பொருந்திய உருவ மூர்த்திகளைப் பாடவேண்டும் என்ற அவாவும், பக்திப்புனல் மக்களெனும் பயிரிடையே இடைவிடாது பாய வேண்டும் என்ற கருத்தினாலும் அவர்கள் ஊரூர் சென்றனர்.

'கன்னார் உதித்தஎன் மன்னா எனக்குநல்
கர்ணாமிர்தப் பதம் தந்தகோவே[27]'

என்றும்,

'எட்டிரண்டும் அறியாத என்செவியில்
எட்டிரண்டும் இதுவாம் இலிங்கமென
எட்டிரண்டும் வெளியா மொழிந்தகுரு முருகோனே[28]'

என்றும் இவ்வருள் பெற்ற நிலையைப் பாடுவர். அருணகிரிப் பெருமான், கயிலாய மலையிலிருந்து பாரத நாடு முழுமையும் நடந்து பல தலங்களுக்குச் சென்று இறைவனைப் பரவிப் பின் கண்டி, கதிர்காமம், யாழ்ப்பாணம், திருக்கோணமலை ஆகிய கடல் கடந்த ஈழப்பதிகட்கும் சென்று இறைவனை வழிபாடு செய்தவர். இருநூற்று நான்கு தலங்களை அவர் பாடியுள்ளார். திருநாவுக்கரசர் போலக் கயிலாயம் வரை தம் திருவடி நிலந்தோய நடந்து சென்று

26. தமிழ் இலக்கிய வரலாறு. மு.அ., 15. ஆம் நூற் ப. 11
27. திருப்புகழ். வயலூர் மேலது 910.
28. திருப்புகழ். கட்டி முண்டகர... மேலது 639

இறையன்பராக அருணகிரியார் விளங்குகின்றார். அறுமுகச் செவ்வேள் உறையும் கோயிலன்றியும், சிவபெருமான், திருமால் உறையும் கோயில்களிலும் இவர்தம் பாடல்கள் ஒலித்திருக்கின்றன. 'மலைச்சிகர வடமலை நின்ற பெருமாளே' எனத் திருவேங்கடநாதனைப் பாடுவது எண்ணத்தக்கது.

அருணகிரியார் பதினாறாயிரம் பாடல்களைப் பாடினாரெனப் பலரும் கூறுவர்.

'அருணகிரி நாதர்பதி னாறா யிரமென்று
உரைசெய் திருப்புகழை ஓதீர் - பரகதிக்கு அஃது
ஏணி; அருட்கடலுக்கு ஏற்றம்; மனத்தளர்ச்சிக்கு
ஆணி; பிறவிக்கு அரம்[29]'

என்று பதினாறாயிரம் பாடல்கள்இருந்தமை குறிக்கப் பெறுகின்றது. இன்று கிடைக்கும் திருப்புகழ் 1361 (சமாஜப் பதிப்பு). 'மலடி வயிற்று மகன் போலே' என்பது முதலான பஞ்சரத்தினத் திருப்புகழ் ஐந்தும் இவர் பாடியன அல்ல என்றும் திருவையாறு வைத்தியநாத தேசிகர் பாடியன என்றும் கூறுவர்.

இருநூற்று நான்கு தலங்களில் இவர் பழனியைக் குறித்துப் பாடியவையே அதிகம் (99). அடுத்துத் திருச்செந்தூர் (83), அதற்கடுத்துத் திருவண்ணாமலை (81). திருத்தணியை 64 பாடல்களிலும், சிதம்பரத்தை 66 பாடல்களிலும் போற்றியுள்ளார். பொதுப்பாடல்களாகத் தலம் குறியாது இவர் பாடியுள்ள பாடல்கள் 309. தலக்கோவை(க்ஷேத்திரக் கோவை)யாகப் பாடியது 1. விநாயகர் துதியாகப் பாடியன 6. தேவார மூவரைப் போலப் பொதுநிலையிலும், தலக்கோவையாகவும் இவர் பாடியுள்ளமை கருதத்தக்கது.

இருநூற்று நான்கு தலங்களும், புதிதாகக் கிடைத்துள்ள பாடலைக் கொண்ட புனவாயிலையும் சேர்க்க இருநூற்றைந்து தலங்களை அருணகிரியார் திருப்புகழாற் பாடியுள்ளார்.

இத்தலங்களைக் குறித்துப் பாடும் போது இப்புலவர் பெருமாள் 1. தல வரலாற்றைப் பாடுவதில்லை; 2. தல இயற்கை வளத்தினை அதிகமாகப் புனைந்து போற்றுவதில்லை; 3. சிவபெருமானின் அரும் செயல்கள், உமையின் பெருமை, திருமாலின் அரும்செயல்கள் ஆகியவையும், முருகனின் வீரதீரப்

29. திருப்புகழ்ச் சிறப்புப் பாயிரம் 13.

பெருமைகளும், காதலும், அடியார்க்கருளும் மேம்பாடும் கூறப்பெறுகின்றன; 4. தன் எளிமையும் இழிவும், பெருமானின் உயர்வும் சிறப்பும் உரைக்கப் பெறுகின்றன. இதனால், முருகனை ஒரு தலத்துக்குரியவனாகக் காணாது உலக முழுதும் பரவத்தக்க கடவுளாக இவர் கண்டுள்ளார் என்பது விளங்கும். பல சிவன் கோயில்களிலும் விளங்கும் மூலமூர்த்தி அருணகிரியாருக்கு முருகனாகவே காட்சி தருகின்றார்.

'கனகசபை மேவும் எனது குருநாத
கருணை முருகேசப் பெருமாள்காண்[30]'

என்று காணும் நிலையினைத் திருப்புகழிலேயே நாம் காட்ட இயலும்.

## அருணகிரியாரும் கிளிக் கதையும்

அருணகிரியார் வரலாற்றின் இறுதிப் பகுதியில் அவர் கிளி வடிவம் கொண்ட செய்தி கூறுப்படுகின்றது. இது முற்றிலும் கற்பனையானதென்று சான்று காட்ட வேண்டியதில்லை. அருளாளர்கள் வாழ்ந்து முடிந்தபின்னர் அவர்கள் மற்றையவரைப் போலப் பிறந்தார், இறந்தார் என்று கூற மக்கள் ஒருப்படுவதில்லை. இறப்புப் பற்றியும், பிறப்புப் பற்றியும் பல கதைகள் புனையப்பட்டுவிடுகின்றன. அகத்தியர், திருவள்ளுவர், முதலாழ்வார்கள் போன்றோரின் பிறப்பும், திருமூலர், பட்டினத்தார், இராமலிங்கர் ஆகியோர் மறைவும் இயற்கைக்கு மாறான நிலையில் புனையப்பட்டுவிட்டனவாகவே தோன்றுகின்றது. மனித உடலெடுப்பதற்கும், பின் வாழ்க்கை முடிவதற்குமான பிறப்பு, இறப்பு நியதிகள் இத்தகையவர்களுக்கு உரியன அல்ல என்று கூறுவது ஏற்புடையதில்லை. சகல பராக்கிரமங்களும் படைத்த ஒருவன், தன் நாட்டு அரசன் நோயிலிருந்து விடுவிக்கப் பெறுவதற்காகக் கூடுவிட்டுக் கூடு பாய்ந்து, கிளி வடிவாகி ஏழு கடல், ஏழு மலை தாண்டிச் சென்று தீவு ஒன்றில் அஞ்சத்தக்க குகையில் வைக்கப்பட்டிருந்த மரகதமணிக் கல்லைக் கொண்டு வந்த செயல், அல்லது பாரிசாத மலரைப் பறித்து வந்த செயல் இந்நாட்டில் பல காலமாக நிலவிவரும் சுவையான கதையாகும். அருணகிரியார் அட்டமா சித்திகளில் வல்ல சித்தர் என்று காட்டுதற்காகப் புனையப்பட்ட கதையே ஆகும் இக்கிளி பற்றிய செய்தி. திருக்கடவூர்த் திருப்புகழில்,

30. திருப்புகழ் மேலு 617

'சூலமென ஓடு சர்ப்ப வாயுவை விடாதடக்கி
தூயஒளி காண முத்தி விதமாகச்
சூழும் இருள் பாவகத்தை வீழ அழலூடு எரித்து
சோதிமணி பீடமிட்ட மடமேவி
மேலைவெளி ஆயிரத்து நாலிரு பராபரத்தின்
மேவி அருணாசலத்தின் உடன்மூழ்கி
வேறுமயில் வாகனப்ரகாச மதிலே தரித்து
வீடுமதுவே சிறக்க அருள்தாராய[31]'

என அவர் பாடியுள்ளார். திருக்கடவூர்த் தலத் திருப்புகழாதலால், அவர் அவ்விடத்தில் தம் இறுதிக் காலம் எண்ணியே இதனைப் பாடியிருக்க வேண்டும். அருணகிரியார் பற்பல தலங்களுக்கும் சென்று அருணையூர் திரும்பித் தவயோக நெறி மேற்கொண்டு சொல்லறச் சும்மா இருந்த நிலையில் இறைவனடி சேர்ந்தார் என்று கூறுவதே ஏற்புடைத்தாம்.

அருணகிரியார் வரலாற்றை அறிவிக்கும் பல அகச்சான்றுகள் அவருடைய திருப்புகழிலும், அலங்காரத்திலும், அநுபூதியிலும் காணப்பெறுகின்றன. வேறு தல நினைவின்றி விராலி மலையில் அவர் தங்கியிருந்தபோது 'வயலூர்க்கு வா' என்று இறைவன் தன்னை அழைத்ததாக அவர் குறிக்கின்றார். இத்தகைய குறிப்புகளில் சிலவற்றைச் சரியாக உணராத நிலையிலேயே கிளிக்கதை உருப்பெற்று மக்களிடையே வழங்கத் தலைப்பட்டுவிட்டது. அருணகிரியார்,

'துகளில் சாயுச்சியக் கதியை ஈறற்ற சொற்
சுக சொரூபத்தை உற்று அடைவேனோ[32]'

என்றும்,

'பரவசந்தணிந்து உனை உணர்ந்தொரு
மவுன பஞ்சரம் பயில்தரும் சுக
பதமடைந்திருந் தருள் பொருந்துமது ஒருநாளே[33]'

என்றும் பாடியுள்ளார். இப்பாடற் பகுதிகளில் சுகம் என்பதற்குக் கிளியென்று பொருள் கொண்டதன் விளைவே கிளிக் கதையாகும். சுக சொரூபம் என்பது இறைவனோடு இரண்டறக் கலக்கும் அத்துவித நிலையாம்.

---

31. திருப்புகழ் மேலது 796
32. திருப்புகழ் சரியையாளர்க்கு... மேலது 424
33. திருப்புகழ் கடைசிவந்த... மேலது 1031

'இருவினையும் மும்மலமும் அற இறவியொடு பிறவியற
ஏக போகமாய் நீயும் நானுமாய்
இறுகும் வகை பரமசுகம் அதனையருள்[34]'

என்று அந்நிலையை அருணகிரியார் விளக்குவர். அத்துவித முத்திப்பேறு அவருடைய குறிக்கோளாக இருந்தது.

"நந்தம் சுவாமிகள், சாமுசித்த மூர்த்தம் என்பது வெளிப்படை. சாமுசித்தர் ஆவார் சரியை கிரியை யோகம் கைவந்த மூர்த்தமுடையார் என்று ஆகமங்கள் கூறும். இதனால் ஞான பாதம் பெறாது பெற வந்து பெற்ற நந்தம் சுவாமிகள் தேகம் பிரணவ தேகம் என்பது ஒருதலை. இப்பிரணவ தேகம் பஞ்ச பூதங்களால் அழிவெய்துவது அன்று. அத்தேகமே எண்ணிய எண்ணியாங்கு எத்தொழிலும் செய்ய உரியதாம். சரியை கிரியை யோகம் கைவரப் பெற்றோர் அடைவது முறையே சாலோக சாமீக சாரூபம் என்னும் பதங்களாகும். சாரூபத்திற்கு மேல் சாயுச்சியம் ஒன்றுண்டு. அதுவே அத்துவிதம்[35]"

எனக் காஞ்சி நாகலிங்க முனிவர் கூறுவர். இவ்வாறு பலராலும் கருதப்பெற்ற நிலையில் அருணகிரிநாதர் எவ்வாறு இறைவனை அடைந்தார் என்ற வினாவிற்குச் சுகசொரூபமாகிய கிளி வடிவு பெற்று முக்தியடைந்தனர் என்று கூறிவிட்டனர். இக்கிளிக் கதை மற்றெல்லாக் கதைகளையும் விடப் பரவலாய்ப் பலரால் வழங்கப்பட்டுக் 'கிளிக்கோபுரம்' என அருணைக் கோபுரம் ஒன்று பெயர் பெறவும் காரணமாயிற்று. இலக்கியங்களிலும் இக்கிளிக் கதை ஏறிவிட்டது.

'கைக்கிளியைப் பார்த்து வெகு காதலுடன் அன்னையீர்,
இக்கிளியைத் தாரும் எனக்கென்றாள் - அக்கிளிதான்
வில்லிபுத் தூரான் செவியின் மேல் அரிவாள் பூட்டி அன்று
வல்லபத்தில் வாதுவென்று வந்ததுகாண் - பல்லவையுள்
மற்றொருவன் வாதுவென்று வான்பாரி சாதப்பூக்
குற்றமற மண்மேற் கொணர்ந்தது காண்[36]'

என்று உலா நூலில் கிளிக்கதை இடம் பெற்றது. இக்கதைகளையெல்லாம்விட அருணகிரிப் பெருமானுக்குப் புகழ்

34. திருப்புகழ் அறுகு நுனி... மேலது 868
35. அருணகிரிநாத சுவாமிகள் திருமுறைத் திரட்டு. பதிப்புரை ப. 18-19.
36. திருத்தணிகை உலா

சேர்ப்பன அவருடைய சந்த அலை கொழிக்கும் செந்தமிழ்த் திருப்பாடல்களேயாம். நக்கீரருக்குப் பின்பு அறுபடை வீடுகளையும் தம் சந்தமார் திருப்புகழ்ப் பனுவல்களால் அழகொளிரப் பாடியவர் அருணகிரியார். அஃதன்றியும் முருகன் குடிகொண்ட பல தலங்களுக்கும் பாடல் அருளி வழிபாட்டுப் பெருமைமிகச் செய்தவர் அவர். அவரைத் தொடர்ந்தே குமரகுருபரர், பகழிக்கூத்தர், திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள், இராமலிங்க வள்ளலார், பாம்பன் குமரகுருதாச சுவாமிகள், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் எனப் பலரும் முருகப்பெருமானை வாய் மணக்கப் பாடும் நிலை உருவாயிற்று.

### அருணகிரியார் காலம்

அருணகிரியார் பதினைந்தாம் நூற்றாண்டினர் என்பது அறிஞர்களிடையே நிலவுகின்ற ஒரு பரவலான கருத்தாகும். கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் சேக்கிழாரும், பதின்மூன்றாம் நூற்றாண்டில் மெய்கண்டாரும், பதினான்காம் நூற்றாண்டில் உமாபதி சிவமும், பதினைந்தாம் நூற்றாண்டில் அருள்நந்தி சிவாச்சாரியாரும், பதினேழாம் நூற்றாண்டில் குமரகுருபரரும் பரஞ்சோதி முனிவரும், பதினெட்டாம் நூற்றாண்டில் தாயுமானவரும் குறிப்பிடத்தக்கவர்களாகத் தோன்றினர் என்பர். இந்த வரிசை சைவம், சித்தாந்தம் ஆகியவற்றின் வளர்ச்சி நிலையில் குறிப்பிடத்தக்கது.

அருணகிரிநாதரின் காலம் பற்றி முதலில் ஆராய்ந்த டி.ஏ. கோபிநாதராவ் கலியுக ஆண்டு 4400 ஆம் ஆண்டுக்குச் சமமான கி.பி. 1299 ஆம் ஆண்டில் அருணகிரி தோன்றினாரென்பர். 'விபாகபத்ரமாலா' என்ற நூலில் குறிப்பிடப்படும் சோணாத்ரிநாதரே அருணகிரிநாதரென இவர் கருதுகின்றார். சிற்றன்னையின் கொடுமைக்கு ஆளான அருணகிரி புத்தூர்க்கோயிலில் சென்று கிடந்து இறைவனால் கவி புனையும் வன்மை பெற்றாரென்றும் சிலர் கூறுவர். சி.வி. நாராயண ஐயரும் விபாகபத்ரமாலா கூறும் அண்ணாமலைநாதரே அருணகிரியார் என்பர்.

கி.பி. 1550இல் கங்கைவாடி நாச்சியார் என்பவரும் அவர் கணவரும் குமாரதிண்டிம அண்ணாமலைநாதர் என்பாருக்கு ஒரு கோயில் எழுப்பி வழிபாடு செய்தனரென்றும் அந்த அண்ணாமலைநாதரே அருணகிரியார் என்றும் சிலர் கருதுவர். அருணகிரியார் பல சிறப்புப் பெயர்களைப் பெற்றவர்.

'திண்டிம கவி சார்வ பௌமர்
சேர சோழ பாண்டிய பிரமதமராத்யா
ஹிருதய சிவாக்யா
துவாதச தேசிய விருத்தி பராதிர்ஸ்வஸி
அஷ்ட பாஷா பரமேஸ்வரா
அபிநவ நாடக பவபூதி
மேகாத்ய திவர்த்தி சித்ரபந்த பரமேஸ்வரா
அஷ்டதிக்விஜ பாதக் கிருதிகா
ஷட் தர்சன சண்மூகா
சைவ சாஸ்திர ஜீவது
அகில வேத சாகர சம்யாந்திரிகா[37]'

இவற்றுள் சில பட்டங்கள் அருணகிரியாருக்குப் பொருந்துமேனும், அண்ணாமலைநாதர் மற்றும் திண்டிம கவிகளாக விளங்கிய பலர்க்கும் உரிய செய்திகளை அருணகிரியாரோடு இணைத்து எண்ணிவிட்டனர். திண்டிம கவிஞர் அகோர சிவாச்சாரியார் எனப் பெறுபவர். இவர் சமஸ்கிருத நாடகம் போன்ற படைப்புகளைப் பாடியுள்ளாரேயன்றி முருகனைப் பாடவில்லை.

அருணகிரியாரின் காலத்தை அறிவதற்குப் பெரிதும் துணை நிற்பது அவருடைய பாடலிற் குறிக்கப் பெறும் பிரபுடதேவ மாராஜன் என்னும் குறுநில மன்னனின் பெயராகும். விஜயநகரப் பேரரசின்கீழ்க் குறுநில மன்னராக விளங்கியவர்களில் பிரபுட தேவமாராயன் என்னும் பெயருக்குரியோர் இருவர். விஜயநகர அரசர் இரண்டாம் தேவராயர் காலத்தில், மல்லிகார்ஜுன இம்முடிப் பிரபுட தேவராயர் என்பவர் இருந்திருக்கின்றார். இவர் காலம் 1447 - 1470 ஆகும். இவருடைய தந்தையும் பிரபுட தேவமாராயர் என்ற பெயருடையவரே. இவர் கி.பி. 1447இல் இறந்துவிட்டார். இவ்வரசருடைய காலம் அருணகிரியாரின் காலமாகும். ஏனெனில் அருணகிரியார் வில்லிபுத்தூராரின் காலத்தில் வாழ்ந்தவர். வில்லிபுத்தூரார் காலம் கி.பி. 1331 - 1383 என்பர். வில்லிபுத்தூரார்,

'கொங்கர் குல வரபதி ஆட்கொண்டான் என்று
ஒரு வண்மைக் குரிசில் தோன்றி
வெங்கலியில் மூழ்காமல் கருநடப்பேர்
வெள்ளத்து வீழாமல் நான்காம்
சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல்
கலங்காமல் தலை கண்டானே[38]'

37. Saint Arunagirinatha, Swami Anvananda p. 19-20.
38. வில்லிபுத்தூரார் : வில்லிபாரதம்

என்று பாடுவதால் வரபதி ஆட்கொண்டான் என்ற வக்கபாகை அரசனின் காலமும் பதினான்காம் நூற்றாண்டு என்பது அறியப்படும். இந்த வரபதி ஆட்கொண்டானை இரட்டையர் பாடியுள்ளனர்.

'சாணர்க்கு முன்னிற்கும் ஆட்கொண்ட நாயன்
தமிழ்க் கொங்கர் கோன்
பாணுற்ற வரிவண்டு சேர் வக்கை நகராதி
பக்கத்திலே
ஊணுக்கு வாராதிருப்பாய் விருப்பாகி
உயர்வானிலே
வீணுக்கு நின்ஆகம் மெலிகின்றது இவ்வாறு
வெண்திங்களே[39]'

என்று அவ்வேந்தன் குறிக்கப்பெறக் காணலாம். வக்கபாகை வரபதி ஆட்கொண்டானைப் பற்றி வேறேதும் அறியப்படவில்லை. ஆனால் இவ்வரசனைப் பாடிய இரட்டையர் சம்புமல்லிநாதரைப் பாடியுள்ளனர். இச்சம்புமல்லிநாதரே திருவண்ணாமலைப் பகுதியை ஆண்ட ராஜநாராயண சம்புவரையர் ஆவர். இவர் காலம் கி.பி. 1337 - 1361 ஆகும்.

'வடித்த சுடர் வேற்சம்பன் வாழ்மல்லிநாதன்
செம்பதுமை கேள்வன் திருமல்லிநாதன்[40]'

என்ற பகுதிகள் எண்ணத்தக்கன. மேலும் இவ்விரட்டையர் கொடைக்குணமற்ற சம்பந்தாண்டான் என்பவனை இகழ்ந்து பாடியுள்ளனர். இச்சம்பந்தாண்டானே அருணகிரியோடு வாது செய்து தோற்ற சாக்த நெறியினன். எனவே வில்லிபுத்தூரார், சம்பந்தாண்டான் ஆகியோர் முதியவர்களாயிருந்தபோது அருணகிரியார் இளைஞராய் இருந்திருக்கின்றார். இச்சான்றுகளால் அவர் காலம் பதினைந்தாம் நூற்றண்டின் முற்பகுதி என்பது உறுதியாகிறது. மேலும் கி.பி. 1488 ஆம் ஆண்டினதாகக் கருதப்படும் சிவப்பிரகாச உரையில் திருப்புகழ் மேற்கோளாகக் காட்டப்பெறுகின்றது. மேலும் கந்தபுராணத்தை இயற்றிய கச்சியப்ப சிவாசாரியர் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிக்குரியவர். அருணகிரிநாதர் தம் திருப்புகழில்,

---

39. இரட்டைப்புலவர் : தில்லைக்கலம்பகம்
40. இரட்டைப்புலவர் : தில்லைக்கலம்பகம்

'மருவு புலவனார் கவிக்குளே சிறு
வழுவது அறை மகாசபைக்குள் ஏகியே
வகைய பெயரதா இலக்கணாவிதி - மொழிவோனே[41]'

எனவும்,

'முற்பட்ட இலக்கண நூலிடை
தப்புற்ற கவிக்கெனவே அவை
முற்பட்டுப் புதுத்துறை மாறிய புலவோனே[42]'

எனவும் கச்சியப்பரைப் போற்றுவதால் அருணகிரியார் கச்சியப்பர்க்குப் பிற்பட்டவர் என்பது விளங்கும். பதினைந்தாம் நூற்றாண்டின் இலக்கிய வானைத் 'தகத்தகாயமாக' ஆக்கிய பெருமை அருணகிரிப் பெருமானுக்கே உண்டு. தென்னாட்டின் பக்தி இயக்கத்தில் அருணகிரியார் பேரிடம் பெறுகின்றார்.

அருணகிரியார்க்குப் பின்தோன்றிய தவஞானிகள் பலரும், பக்திப்பாவாணர் பலரும் அவருடைய நெறிகளைப் போற்றியுள்ளனர்; அவருடைய சிறப்பைப் பலவாறு எடுத்துரைத்துள்ளனர். பதினெட்டாம் நூற்றாண்டினராகிய தாயுமானவர்,

'ஐயா அருணகிரி அப்பா உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர்யார்? - வையகத்தோர்
சாற்றரிது என்று ஏசற்றார்; தன்அனையாய்; முக்கண் எந்தை
நாற்றிசைக்கும் கைகாட்டி னான்[43]'

என்று கூறுகின்றார். உடல் பொய்யுறவு என்று கூறும் இப்பகுதியில் தாயுமானவர் வேறு எவரையும் குறிப்பிடவில்லை. அருணகிரிப் பெருமான் மெய்யாகக் கூறியது யாது? இப்பகுதியைத் தாயுமானவர்,

'சும்மா இருக்கச் சுகம்உதயம்ஆகுமே
இம்மாயா யோகம் இனிஏன் அடா?[44]'

என்று கூறக் காணலாம். எனவே 'சும்மா இரு சொல்லற' என்று இறை கூறிய அருள்வாக்கு அருணகிரியாரால் வெளிப்பட்டதையே இங்ஙனம் சுட்டுகின்றார் எனலாம். இவ்வெண்பாவில் தாயுமானவர் அருணகிரியாரைத் 'தன் அனையாய்' எனக் குறிக்கின்றார். அவர்க்கு

41. திருப்புகழ் சமாஜப் பதிப்பு 525
42. திருப்புகழ் சமாஜப் பதிப்பு 793
43. தாயுமானவர் பாடல்கள் : உடல் பொய்யுறவு 26
44. தாயுமானவர் பாடல்கள் : உடல் பொய்யுறவு 52

அவரே நிகராவரன்றிப் பிறர் ஆகார் என்பது கருத்து. அப்பா என்றது தந்தை முறைமை பற்றியாம்.

'கந்தர் அநுபூதி பெற்றுக் கந்தர் அநுபூதி சொன்ன
எந்தை அருள்நாடி இருக்கும்நாள் எந்நாளோ'

என்பதால் இதனை அறியலாம். கி.பி. பதினைந்தில் தோன்றிய அருணகிரிப் பெருமானைப் பின்வந்த நூற்றாண்டு ஒவ்வொன்றிலும் துறவியரும் மெய்யன்பரும் பாவலரும் போற்றியுள்ளமை அறியத்தக்கது.



# 2. அருணகிரியாரின் நூல்கள்

கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டினரான அருணகிரியார் முருகப்பெருமானைக் குறித்துப் பல்லாயிரம் பாடல்கள் பாடியவர். பதினாறாயிரம் பாடல்களை அவர் பாடினாரெனத் திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழும் பிற நூல்களும் கூறுகின்றன. இன்று நமக்குத் திருப்புகழ் எனக் கிடைப்பன சமாசப் பதிப்பின்படி 1361 பாடல்களாம்; வ.சு.செ. பதிப்பின்படி 1304 பாடல்களாம். பல்லாயிரம் பாடல்கள் கிடைக்கவில்லை என்பதைவிட எண்ணிக்கை மிகைப்படுத்திக் கூறப்பட்டிருக்கலாம் எனவும் நினைக்க இடமுண்டு. இதனைவிட அருணகிரியார் பாடல்களெனப் பிற்காலத்தில் இடைச்செருகலாகச் சேர்க்கப்பெற்ற பாடல்களும் உள்ளன என்பத எண்ணுதற்குரியது. 'மலடி வயிற்று மகன் போல' எனத் தொடங்கும் பாடலும், அதனோடு சேர்ந்தவையுமான பஞ்சரத்தினத் திருப்புகழ் அருணகிரியாரால் பாடப்பட்டன அல்ல; திருவையாற்று வைத்தியநாத தேசிகர் பாடியன என்ற கருத்துப்பற்றி முன்னரே கூறப்பட்டுள்ளது.

அருணகிரியார் பாடியனவாகக் கூறப்பெறும் நூல்கள் 1. திருப்புகழ்; 2. திருவகுப்பு; 3. கந்தரந்தாதி; 4. கந்தரலங்காரம்; 5. கந்தரனுபூதி; 6. வேல் விருத்தம்; 7. மயில் விருத்தம்; 8. சேவல் விருத்தம்; 9. திரு எழுகூற்றிருக்கை ஆகியன. இவற்றுள் முப்பத்திரண்டு உள்ளன. இவற்றுள் பதினெட்டு மட்டுமே அருணகிரியார் பாடியன என்றும், எஞ்சியன பிற்சேர்க்கை என்றும் ஆறுமுகநாவலர் கூறுகின்றார். களவகுப்பு என்பதனைக் காளமேகப் புலவரே பாடியிருப்பர் என்று மு. அருணாசலம் கருதுகின்றார். வேல் மயில் விருத்தங்கள் இவர் பாடியன அல்ல என்ற கருத்து வலிமையுறக் கூறப்பெறுகின்றது. சேவல் விருத்தம் ஒரு பிற்காலப் புனைவு என்பது தெளிவு. திருத்தணிகை உலாவில் கந்தரநுபூதி பற்றிக் கூறுகையில்,

'அநுபூதி ஐம்பதுமே ஆருயிர்ப் பேரின்ப
அநுபூதி நல்கு மணி'

என்பதால் அநுபூதியின் எஞ்சிய பாடல்கள் இவர் திருவாக்கல்ல என்று கருதும் நிலையில் உள்ளன. திருவெழுகூற்றிருக்கை என்ற சித்திரக்கவி அமைப்புடைய சொல்லலங்காரப் பாடலையும் இவர் பாடியுள்ளார்.

அருணகிரியார் பாடாத பல நூல்களை அவர் மேலேற்றிக் கூறுவது வழக்கமாகிவிட்டது. அருள் முருகாற்றுப்படை, உடற்கூற்று வண்ணம், முத்தி விநாயகர் அகவல் ஆகியன இவர் பாடியன அல்ல என்பது தெளிவான உண்மையாகும்.

அருணகிரியாரின் மேலேற்றிக் கூறப்பெறும் பிற்காலப் புனைவுகளில் வெறும் சந்த ஒட்டமே நகல் செய்யப்பெற்ற நிலையில் உள்ளது. அவருடைய ஆழ்ந்த புலமைக்குரிய முத்திரைகள், முருக வழிபாடுபற்றி அவர் கொண்டிருந்த கோட்பாடுகள் இவற்றில் இல்லை. அருணகிரியார் பாடியவற்றுள் திருப்புகழ், கந்தரந்தாதி, கந்தரநுபூதி, கந்தரலங்காரம் ஆகிய நான்கு நூல்களும் பெருவழக்கினவாய் இன்றும் தமிழகமெங்கும் பாடப்பெறுகின்றன. இயலும் இசையும் கலந்த வழிபாட்டுப் பாடல்களாகத் திருப்புகழ்ப் பாடல்கள் பல தலங்களில் போற்றப் பெறுகின்றன. கந்தரநுபூதி நோன்பு வரம் குறித்தனவாகப் பலரால் இசைக்கப் பெறுகின்றன. கந்தரலங்காரம் எளிமையாய்ப் பாடுதற்கு ஏற்ற வகையில் பலர் உள்ளத்திற் குடியேறி உள்ளது. கந்தரந்தாதி ஆழமான புலமையின் அடையாளமாகவும், அந்தாதி உலகில் புகழ்மிக்கதாகவும் அமைந்து புலவோரால் போற்றப்பெறுகின்றன.

## திருப்புகழ்

அருணகிரி முனிவரே தம் பாடல்களைத் திருப்புகழ் எனக் குறிக்கக் காணலாம். 'திருப்புகழ் விருப்புடன் செப்பு' என இறைவன் அருளியதாக அவர் குறிப்பிடுகின்றார்.

> ''திருப்புகழ் என்ற இடத்துத் திரு என்னும் அடைமொழி இறைவனை ஞானக்கண்ணாற் கண்டவர் விரும்பின நோக்கமாய்த் தெய்வத் தன்மையைக் குறிப்பதாகும்.... இனி புகழ் என்னும் சொல் கீர்த்தி. கீர்த்தியை எடுத்து ஓதும் துதி எனப் பொருள்படும். திருப்புகழ் என்ற சொல் 'தெய்வத்தின் புகழ்' என்று பொருள்படும்[1]''

1. கலைக் களஞ்சியம் தொகுதி 6. ப. 15

என்று கூறும் விளக்கம் காணத்தக்கது. திருப்புகழின் வாக்கினிமை பலரையும் ஈர்த்திருக்கின்றது.

'வாக்கிற் கருணகிரி; வாதவூரர் கனிவில்;
தாக்கில் திருஞான சம்பந்தர்; - நோக்கிற்கு
நக்கீர தேவர்; நயத்துக்குச் சுந்தரனார்;
சொற்குறுதிக் கப்பரெனச் சொல்'

என்ற வெண்பா நால்வருக்குச் சமமாக அருணகிரியாரையும் இடம் பெறுத்தியமை காணத்தக்கது.

"வாக்கின் அங்கங்களாகக் கனிவு, தாக்கு, நோக்கு, நயம், சொல்லுறுதி என்பன கூறப்பட்டு அவ்விசேடங்களுள் ஒவ்வொன்றே தெய்வப் புலவர்களாம் நால்வர் வாக்கிலும் நக்கீரர் வாக்கிலும் மேம்பட்டு விளங்க, மேற்கூறிய அங்கங்கள் யாவும், பிற நற்பண்புகளும் பிறங்க அமைந்துள்ளது அருணகிரியாரின் வாக்கு என்பதைப் புலப்படுத்தவே வாக்கிற்கருணகிரி என அடைமொழியிலாது கூறப்பட்டுள்ளது[2]"

என்ற மொழி அருணகிரியார்பால் அன்பர் கொண்ட ஈடுபாட்டைக் காட்டும். சந்தமிகுந்த பாடல்களைத் தங்கு தடையற்று மடை திறந்த புனலெனப் பாடிய தனிச்சிறப்பால் 'வாக்கிற் கருணகிரி' எனப் போற்றினர் எனக் கருதலாம். திருப்புகழின் சுவையைக் கூறுங்கால்,

'உதிரும் கனியை நறும்பாகில் உடைத்துக்
கலந்து தேனைவடித்து
ஊற்றி அமுதின் உடன்கூட்டி ஒக்கக்
குழைத்த ருசி பிறந்து
மதுரம் கனிந்த திருப்புகழ்ப் பாமாலை[3]'

எனக் கூறக் காணலாம். திருப்புகழ்ப் பாக்களை ஓதுவார்க்கு அவை பல்வகைச் சுவைகளைப் பயக்கக் காணலாம். தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர்,

'நலமருவு மதுரைத் தமிழ்ச்சங்க மேற்புலவர்
நடுவீற்றிருந்த முதல்வா!
நக்கீரர் சொன்ன முருகாற்றுப் படைத்தமிழும்
நல்லருண கிரிநாதர் சொற்

2. கலைக்களஞ்சியம் தொகுதி 6. ப. 15
3. திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்

புலமையுறு சித்திரச் சந்தப்ர வாகமும்
 புனிதச் செவிக்குணர்த்தப்
புகழான குறுமுனிக்கு ஆரணத்து உட்பொருள்
 புலப்படுத்திய குரவனே'

என்று போற்றுகின்றார். முருகனைப் பாடிய புலமையாளருள் நக்கீரரும் அருணகிரியாரும் ஒருங்கு வைத்து எண்ணப் பெறுகின்றனர். பத்திமையும் சொற்சந்தமும் தாளக்கட்டும் இசையும் ஒரு நேர்த்தியான கலவையிலமைய ஆயிரக்கணக்கான செய்யுட்களைப் பாடியுள்ள அருணகிரி முனிவரின் வித்தகம் வியப்பளிக்கக் கூடிய ஒன்றேயாகும். "கொண்டலெனச் சந்தத் தமிழ்மாரி பெய் கொற்றவன் அருணகிரிக்கோமான்" என்று இலக்கண விளக்க நூலாசிரியர் வைத்தியநாத தேசிகர் அருணகிரியாரைப் போற்றுகின்றார். "அருணகிரிநாதர் கடலென மகிழ்ந்து பாடும் திருப்புகழ்" என்று அந்தகக்கவி வீரராகவ முதலியார் பாராட்டுகின்றார்.

'மாணிக்கம் பூண்பார்க்கு மற்றொருகல் வேண்டுமோ
ஆணிப்பொன் கையுறுவார்க் கையுறவேன் - பேணிப்பின்
செவ்வேல் விநோதன் திருப்புகழ்சிந் தித்திருப்பார்க்கு
எவ்வேலை வேண்டும் இனி'

'வேதம்வேண் டாம்சகல வித்தைவேண் டாம்கீத
நாதம்வேண் டாம்ஞான நூல்வேண்டாம் - ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்தாள் போற்றும்
திருப்புகழைக் கேளீர் தினம்[5]'

என்னும் இருபாக்கள் உட்படப் பதினாறு வெண்பாக்கள் திருப்புகழ்ச் சிறப்புப் பாயிரமாக அமைந்து இந்நூலின் சிறப்பை ஓதுகின்றன.

## திருப்புகழில் விநாயகர் துதி

நூல் இயற்றுவார் காப்புச் செய்யுளென ஒரு தெய்வங் கருதிப் பாடுதல் மரபு. சிவபெருமான், பிள்ளையார், திருமால், முருகன் எனும் தெய்வம் குறித்துக் காப்புச் செய்யுள் அமையும். கருதிய நூல் இனிது நிறைவேறவும், இடையூறின்றி இனிது முடியவும் விநாயகரைப் பாடுதல் பெருவழக்காகும். அருணகிரிநாதர் கந்தரலங்காரத்திலும்,

5. திருப்புகழ் - சிறப்புப் பாயிரம்

'அடலருணைத் திருக்கோபுரத்தே அந்த வாயிலுக்கு
வடவருகிற் சென்று கண்டுகொண்டேன் வருவார்தலையில்
தடபடெனப் படுகுட்டுடன் சர்க்கரை மொக்கியகைக்
கடதட கும்பக் களிற்றுக்கு இளைய களிற்றினையே[6]''

என்று முருகனைப் பாடத் தொடங்கும்போதே அவரை விநாயகனின் இளவல் எனக் கூறிப் பாடுவதைக் காணலாம்.

'கைத்தல நிறைகனி அப்பமொடு அவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடும் அடியவர் புந்தியில் உறைபவ
கற்பகம் எனவினை கடிதேகும்[7]''

என விநாயகரைக் கருத வினைகள் நீங்குமென இத் துதிப்பாடலிற் கூறினர். முத்தமிழ் அடைவினை மலையில் எழுதியவன், சிவனின் தேர் அச்சைத் துகள் செய்தவன் எனப் பிள்ளையாரின் ஆற்றல் போற்றப்படுகிறது. 'விக்கிந சமர்த்தனெனும் அருளாழி' எனவும் விநாயகரை இப்புலவர் புகழ்கின்றார்.

'மனது மகிழ்வொடு தொட்ட கரத்தொரு
மகர சலநிதி வைத்த துதிக்கரம்
வளரும் கரிமுக ஒற்றை மருப்பனை வலமாக
மருவு மலர்புனை தோத்திர சொற்கொடு
வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடு
வசை பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே[8]''

எனப் பிள்ளையாரைத் தலையில் குட்டிக் கொண்டு அடியவர் வழிபடும் வழக்கத்தைக் கூறுகின்றார். விநாயகரை முருகனோடு தொடர்புபடுத்தியே பாடும் நெறி அருணகிரியாருடையது. முருகன் வள்ளியை மணக்க விநாயகரே யானையாக வந்து உதவிய செயலைத் திருப்புகழில் அவர் பாடக் காணலாம்.

## ஆறு படைவீடுகள்

ஆறு படைவீடுகளை முதற்கண் பாடியவர் நக்கீரராவார். அருணிகிரியார் நக்கீரரைப் பெரிதும் மதித்துப் போற்றுகின்றார். ''வளவாய்மை சொற் ப்ரபந்தம் உளகீரனுக்கு உகந்து மலர்வாயின்

6. கந்தரலங்காரம், காப்புச் செய்யுள்
7. திருப்புகழ் - காப்புச் செய்யுள்
8. திருப்புகழ் மேலது 5

இலக்கணங்கள் இல்போதி அடிமோனை சொற்கிணங்க உலகாம் உவப்ப என்று உன் அருளால் அளிக்குகந்த பெரியோனே'' என்று அருணகிரியார் நக்கீரரைப் போற்றுகின்றார். இறைவன் அருள்செய முருகாற்றுப்படை பிறந்தது என்கிறார் அருணகிரியார்.

'கீத இசை கூட்டி வேதமொழி சூட்டு
கீரர் இசை கேட்ட க்ருபை வேளே''

என்றும் அவர் கூறுவார். நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதொறாடல், பழமுதிர்சோலை என அறுபடை வீடுகளைப் பாடியுள்ளார். இப்பாட்டில் உள்ள தல வைப்பு முறையைக் கந்தரந்தாதியின் முதற்பாட்டில் அருணகிரியார் அப்படியே பின்பற்றிப் பாடியுள்ளார். அருணகிரியார் தலப்பயணம் மேற்கொண்டபோது திருவாவினன்குடி, திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவேரகம் என்ற வரிசையிற் சென்றுள்ளார்.

### திருப்பரங்குன்றம்

திருப்பரங்குன்றத்தைப் பதினான்கு பாடல்களில் அருணகிரிப் பெருமான் பாடியுள்ளார். இப்பாடல்கள் 1. பக்தி செலுத்தாத தன்நிலை; 2. இறப்புக் குறித்த அச்சம்; 3. மாதர் மையல்; 4. முருகன் அவுணரைப் போரிட்டு வென்ற வெற்றி; 5. இரந்துண்ணும் வாழ்வின் அவலம்; 6. பேரின்பப் பதம் பெறும் விழைவு ஆகியன கூறப்பெறுகின்றன.

'உனைத்தினம் தொழுதிலன் உனது இயல்பினை
உரைத்திலன் பலமலர்கொடு உன் அடியிணை
உறப் பணிந்திலன் ஒருதவமிலன்...[10]'

என்று தன் நிலைக்கு இரங்கி மொழிகிறார். இஃது அவரது சொந்த நிலையன்று. உலக மக்கள் நிலையாகும். இப்பாடல்களில் நெறியின் நீங்கிப் பொருளாசையால் ஆடவரை மயக்கித் தம்பால் ஈர்க்கும் காமக்கலங்களாம் பொருட்பெண்டிர் பற்றியே உரைக்கப் பெறக் காணலாம். மதனநூற் செய்திகளையும் இப்பாடல்களிற் காணலாம். இவற்றின் வருணனையில் தேங்கி நின்று அருணகிரியார் இத்திறத்தர் என எண்ணுதல் பிழையாகும். அவர் ஒரு தீய பழக்கத்தைக் காட்டி இவ்வாறிருத்தல் சரியன்று என உணர்த்தவும் வாழ்வாங்கு வாழவும் இறைவன் பதமலரே தக்கன என உணர்த்துகிறார்.

9. திருப்புகழ் மேலது 1182
10. திருப்புகழ் மேலது 7

'கருவடைந்து பத்துற்ற திங்கள்
வயிறிருந்து முற்றிப் பயின்று
கடையில் வந்துதித்துக் குழந்தை வடிவாகி
கழுவியங்கு எடுத்துச் சுரந்த
முலையருந்துவிக்கக் கிடந்து
கதறி அங்கை கொட்டித் தவழ்ந்து நடமாடி
அரைவடங்கள் கட்டிச் சதங்கை
இடுகுதம்பை பொற்சுட்டி தண்டை
அவையணிந்து முற்றிக் கிளர்ந்து வயதேறி
அரியபெண்கள் நட்பைப் புணர்ந்து
பிணி உழன்று சுற்றித் திரிந்த
தமையும் உன்கிருபைச் சித்தமென்று பெறுவேனோ[11]'

எனப் பெரும்பான்மையானவர்களின் வாழ்க்கைப் போக்கு சென்று கொண்டிருக்கும் நெறியையும், செல்ல வேண்டிய நெறியையும் கூறுகின்றார். சிற்றின்பப் பொருண்மையெதுவுமற்ற பாடலும் இப்பகுதியில் உள்ளது.

'மால்வரை நிவந்த சேணுயர் வெற்பு[12]'

என்று நக்கீரர் பாடிய பரங்குன்றத்தை அருணகிரியார் 'திங்களும் செங்கதிரும் மங்குலும் தங்கும் உயர் தென்பரங்குன்று' எனப் பாடுகின்றார்.

## திருச்செந்தூர்

திருச்செந்தூர் முருகப்பெருமான் மீது 83 பாடல்களைப் பாடியுள்ளார் அருணகிரிப் பெருமான். சூரன் மீது படையெடுத்துச் செல்லுமுன் முருகப்பெருமானுக்குச் செந்திலம்பதியே பாடி வீடாகத் திகழ்ந்தது. செந்தூரில் சூரசம்ஹாரமும் நிகழ்ந்தது. திருச்செந்திற் பதியில் பாடிய பாடல்களில் 1. கந்தனைத் தொழும் சிந்தை; 2. சிற்றின்பக் கடலில் வீழா மனம்; 3. இறப்பின்போது இறைவன் தோன்றி அஞ்சேல் என அருளும் நிலை; 4. துன்ப வாழ்வை அகற்றல்; 5. மெய்ஞ்ஞானத் தவத்தில் நாட்டம் ஆகியவற்றை வேண்டுகின்றார்.

---

11. திருப்புகழ் சகுந்தலை நிலையப் பதிப்பு
12. திருமுருகாற்றுப்படை 12

'செந்திலை உணர்ந்து உணர்ந்து உணர்வுறக்
கந்தனை அறிந்து அறிந்து அறிவினிற்
சென்று செருகும் தடம் தெளிதரத் தணியாத
சிந்தையும் அவிழ்ந்து அவிழ்ந்து உரைஒழித்து
என்செயல் அழிந்து அழிந்து அழியமெய்ச்
சிந்தைவர என்றுநின் தெரிசனைப் படுவேனோ[13]'

என்று திருச்செந்தூரில் முருகனைக் காணும் ஆர்வத்தைக் குறிக்கின்றார். மூர்த்தி, தீர்த்தம், தலம் என்ற மூன்றும் வழிபடும் அடியவர் மனத்திற்கு உவகை ஊட்டுவன. அவ்வகையில் செந்திலம்பதி மூன்றாலும் பெருமை உடையது. ஆறுமுக நயினாரைக் கண்டு வணங்கவும் வேண்டும்; அத்திருமூர்த்தம் உள்ளத்திற் பதியவும் வேண்டும். உருவ வழிபாடு கடந்து மனத்துள்ளேயே இறைவனைக் காணும் நெருக்கமான நேய அன்பும் ஒருமையும் உருவாக வேண்டும். இதனை அருணகிரிப் பெருமான் 'உனை எனது உள் அறியும் அன்பைத் தருவாயே' என்று இத்தலத்தில் வேண்டுவதன் வழியே அறிவுறுத்துகின்றார். திருச்செந்தூர் அருணகிரியாருக்குக் கயிலை மலை போலக் காட்சி தருகின்றது. கடற்கரைத் தலம் கயிலை எனக் காட்சி தருவது எங்ஙனம்? 'கயிலை மலை அனைய செந்திற்பதி வாழ்வே' என்று அவர் கூறுவதன் பொருள் சிந்தனைக்குரியது. ஆதிசங்கரர் சுப்பிரமணிய புஜங்கத்தில்,

'கிரௌ மந்நிவாஸே நரா யேதிரூடா:
ததா பர்வதே ராஜதே அதிரூடா:
இதீவ ப்ருவந் ஸ்கந்தசைலாதிரூட:
ஸ தேவோ முதே மே ஸதா ஷண்முகோஸ்து[14]'

என்று செந்தில் மேய முருகப்பெருமானைப் போற்றுகின்றார். இதன் பொருளாவது : 'சண்முகப்பெருமானே! எனது ஆலயம் உள்ள இந்தக் கந்தமாதன மலைக்கு வருகின்றவர்கள் கயிலை மலைக்குச் சென்ற புண்ணியம் பெறுகின்றனர் என்று நீ கூறியுள்ளாய். உன்னைக் காண வந்துள்ள எனக்கு நின் அருளைத் தருக' என்பதாகும். இப்பொருளையே அருணகிரிப் பெருமானும் உணர்த்தக் காணலாம்.

இளமை அழகு கட்டுக்குலைந்து மூத்துத் தளர்ந்த நிலையில் மனித உடம்பு எவ்வாறிருக்கும் என்பதை இத்தலத் திருப்புகழ் மிக

13. திருப்புகழ் மேலது 21
14. ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்கம் செய்யுள் 6.

நன்றாக எடுத்துரைக்கின்றது. முதுமையின் இரங்கத்தக்க நிலையை வேறெவரும் இத்தனை பாடல்களில் பாடவில்லை. என்றும் இளையோனாக இருக்கும் முருகப்பெருமானிடம் முதுமை பற்றிய முறையீடு செய்வதில் பொருள் உள்ளதன்றோ! 'முகிலென இருண்டு ஒளிதிகழும் மணமுடைக் கூந்தல் வெளிய பஞ்சு போலாயிற்று; கருத்தும் வெளுத்தும் அமைந்த வேல்விழிகளில் முடைதயிர் பிதிர்ந்ததுபோல் பீளை ஒதுங்கிற்று; மதம் கொண்டு திமிர்ந்த யானைகளின் கோடுகளெனத் தோற்றம் செய்த மார்பகங்கள் தோலாய்த் துவண்டன' என்று முதுமை நிலையைக் காட்டுகின்றார். பெரும்பாலும் அழகும் இளமையும் நிலையா என்பதைப் பெண்பாலர்கட்கே பொருத்திக் காட்டுவர். ஆனால் அருணகிரியார் ஆண்பாலவர்க்கும் இஃதுரியது என்பதைக் காட்டுகின்றார்.

'தொந்தி சரிய மயிரே வெளிற நிரை
தந்தம் அசைய முதுகே வளைய இதழ்
தொங்க ஒருகை தடிமேல் வர மகளிர் நகையாடி
தொண்டு கிழவன் இவன் ஆரென இருமல்
கிண்கிண் எனுமுன் உரையே குழறவிழி
துஞ்சு குருடு படவே செவிடுபடு செவியாகி'

என முதுமையின் பலவேறு இயல்புகளைப் படம் பிடித்துக் காட்டுகின்றார்.

செந்தில் திருப்புகழில் சிறப்புக்குரிய ஒரு பகுதி இராமாயணப் போர்க்களக் காட்சியை வருணிப்பதாகும்.

'வஞ்சம் கொண்டு உந்திட ராவண
னும் பந்தென் திண்பரி தேர்கரி
மஞ்சின் பண்பும் சரியாமென வெகுசேனை
வந்தம்பும் பொங்கிய தாகஎ
திர்ந்துந்தன் சம்பிரதாயமும்
வம்பும் தும்பும் பலபேசியும் எதிரே கை
மிஞ்சென்று சண்டை செய் போது...[15]'

என அப்போர் வருணனை காட்டுவர். படை திரண்டு வர, குரக்குச் சேனை போரிட, கூளிகள் பிணங்களின் நிணங்களைத் தின்று கூத்தாட வென்ற மாதவன் மருகோனே என முடிக்கின்றார்.

15. திருப்புகழ், மேலது. 67

இராமாயணப் போர்க்களக் காட்சியை ஒரு சைவநூல் பரக்க விரிப்பது என்பது திருப்புகழுக்கே உரியதாகும். அருணகிரியார் திருச்செந்தூரில் முருகனை நடராசப் பெருமான் வடிவில் காண விழைந்து,

'கொண்ட நடனம் பதம் செந்திலினும் என்றன்முன்
கொஞ்சி நடனம் கொளும் கந்தவேளே[16]'

என்று பாடினாரென்றும், முருகனும் அதற்கிசைந்து கூத்தப்பெருமானின் கோலம் காட்டி அருளினர் எனவும் கூறுவர்.

## திருவாவினன்குடி

திருவாவினன்குடி எனப்பெறும் பழனித் தலம் குறித்து அருணகிரியார் 99 பாடல்களைப் பாடியுள்ளார். இத்தலம் 'சித்தன் வாழ்வு' எனவும் பெயர் பெற்றது. முருகன் ஞானப்பழம் பெற வேண்டி உலகை வலம்வர, விநாயகர் அவ்வேளையிற் கனி பெற்றுவிட வெகுண்ட முருகன் பழனியம்பதி நாடி வந்துறைந்தான் என்பது வரலாறு. இதனைத் திருப்புகழ்,

'படியிற் பெருமதி தகவுயர் செம்பொற்
கிரியைத் தனிவலம் வர அரன் அந்தப்
பலனைக் கரிமுகன் வசம் அருளும் பொற்பு அதனாலே
பரன் வெட்கிட உளமிகவும் வெகுண்டு அக்
கனியைத் தரவிலை என அருள் செந்திற்
பழனி சிவகிரி தனில் உறை கந்தப் பெருமாளே[17]'

என்று பாடும். இத்தலப் பாடல்கள் 1. பழனி முருகன் பிற தலங்களிலும் உள்ளான்; 2. முருகன் வழிபடுவோரை ஞான நெஞ்சினர்பால் சேர்ப்பன்; 3. நாளும் திருப்புகழ் பாடச் செய்தவன் செந்தில்வேள்; 4. மாதர்மீது கொள்ளும் மையலை நீக்க வேண்டுதல்; 5. பிறவிக் கடல் விட்டு உயர் நற்கதி தர வேண்டுதல்; 6. காலன் வரும்போது அருள்க என இரத்தல்; 7. உலக பாசத் தொடர்பை நீக்கியருள் செய்க எனல்; 8. உடம்பைச் சுகத்திற்குரியது என நினைப்பதை மாற்றியருளக் கூறல் ஆகியன இத்தலப் பாடல்களில் முதன்மை பெறுகின்றன. தீய சொற்களின்பால் மனம் செல்லாமல் திருப்புகழ் பாட வைத்த இறைவனது அன்பை நினைந்து அருணகிரியார் உருகுகின்றார்.

16. திருப்புகழ், மேலது 103
17. திருப்புகழ், மேலது 192

'பாலுடன் கனி சர்க்கரை சுத்தம்
தேனெனும்படி மெத்த ருசிக்கும்
பாதகம் பகர் சொற்களில் இட்டம் பயிலாமே
பாத பங்கய முற்றிட உட்கொண்டு
ஓதுகின்ற திருப்புகழ் நித்தம்
பாடும் அன்பது செய்ப்பதியில்தந் தவனியே[18]'

என்று பழனிப் பதி அவ்வருளைப் பயந்தது என்று கூறுகின்றார். இசைப் பாடல்கள் மீதும் காவியங்களின் மீதும் இப்புலவர் பெருமானுக்கு இருந்த ஆர்வம்,

'பகர்தற் கரிதான செந்தமிழிசையிற் சில பாடல் அன்பொடு
பயிலப்பல காவியங்களை - உணராதே'

தம் வாழ்நாள் போகக் கூடாது எனப் பாடுவதாற் புலனாகும். பழனியில் அருணகிரியார் நெடுங்காலம் தங்கியிருந்திருக்கின்றார். அங்குத் தம்மை ஆதரித்த கலிசைச் சேவகனை அவர்தம் திருப்புகழில் போற்றி உரைக்கின்றார்.

'கருடனுடன் வீறான கேதனம் விளங்கு
மதியினொடு மாமாட மேடைகள் துலங்கு
கவிதைவரு காவேரி சேவகனொ டன்பு புரிவோனே[19]'

இக்கலிசைச் சேவகன் வீரை என்னும் இடத்தில் பழனியாண்டவர்க்கு ஒரு கோயில் சமைத்தவன் ஆவன். திருஞானசம்பந்தர் பாண்டியன் வெப்பு நோயைப் போக்கியது, சுந்தரர்க்கு இறைவன் நெல் உதவியது ஆகிய அருட்செயல்கள் இத்தலத் திருப்புகழில் இடம் பெறுகின்றன. சம்பந்தர் ஆற்றில் இட்ட ஏடு எதிர்த்து வந்ததும், சமணர் கழுவேறப் பெற்றதும் முருகனின் செயல்களாகவே குறிக்கப் பெறுகின்றன. பழனிப்பதியில் அருணகிரிநாதர் ஜெபமாலை பெற்றதாக அவரே குறிக்கின்றார்.

## திருவேரகம்

திருவேரகம் என்பது இப்போதுள்ள சுவாமிமலையே ஆகுமென்பது அருணகிரியார் கருத்து. இத்திருத்தலம் குறித்து 38 பாடல்களை அருணகிரியார் பாடியுள்ளார். இப்பாடல்களில் 1. சிற்றின்ப நாட்டம் நீக்கி இறைவன் பாதங்களில் மனம் செல்லுதல்; 2. இனிப் பிறவா நிலை பெறல்; 3. இறைவனோடு இரண்டறக்

---

18. திருப்புகழ் மேலது. 109
19. திருப்புகழ் மேலது. 138

கலக்கும் நிலை அடைதல்; 4. காலன் அணுகாத நிலை பெறுதல்; 5. நாளும் இறைவனை வழிபடும் பேறு பெறுதல் ஆகிய பொருண்மைகள் பேரிடம் பெறுகின்றன. பிறவி இதனோடு முடிந்து உயிர் ஒரு நிலைபெற வேண்டுமென்ற வேண்டுகோளை இறைவன் திருமுன் அருணகிரியார் இங்குக் கூறுகின்றார்.

'எந்தத் திகையினும் மலையினும் உவரியின்
எந்தப் படியிலும் முகடிலும் உளபல
எந்தச் சடலமும் உயிர்இறை பிறவியின் உழலாதே
இந்தச் சடம் உடன் உயிர்நிலை பெற நளி
னம்பொற் கழல் இணைகளில் மருமலர் கொடு
என் சித்தமும் மனமுருகி நல்சுருதியார் முறையோடே[20]'

இறைவனோடு கலந்துவிட வேண்டுமென்று கருதுகின்றார். சிவபெருமானுக்குக் குருவாக அமர்ந்து உபதேசித்த பொருளைத் தமக்குச் செவியோடு உரைக்க வேண்டுகிறார் முனிவர். ஓர் 'அரை நிமிஷம்' கூடத் தியானம் செய்ய முடியாத நிலையிலிருக்கும் இரங்கத்தக்க நிலையை எடுத்துரைத்துச் 'சகல செல்வ யோக மிக்க பெருவாழ்வு' கொடுத்து உதவ வேண்டும் என்கிறார்.

'நீ வேறு எனாதிருக்க நான்வேறு எனாதிருக்க
நேராக வாழ்வதற்கே அருள்கூர[21]'

வேண்டும் என்று அருணகிரி முனிவர் வேண்டுகின்றார். பிரணவப் பொருளுக்கும் தமிழுக்கும் முருகனுக்கும் உள்ள தொடர்பு சுவாமிமலைத் திருப்புகழில் மிகுதியாக உரைக்கப்பெறுகின்றது.

'குருவாய் அரற்கும் உபதேசம் வைத்த
குகனே குறத்தி மணவாளா
குளிர்கா மிகுந்த வளர்பூக மெத்து
குடகாவிரிக்கு வடபாலார்
திருவேரகத்தில் உறைவாய் உமைக்கோர்
சிறுவா கரிக்கும் இளையோனே
திருமால் தனக்கு மருகா அரக்கர்
சிரமே துணித்த பெருமாளே[22]'

என்றும்,

20. திருப்புகழ் மேலது. 202
21. திருப்புகழ் மேலது. 212
22. திருப்புகழ் மேலது. 230

'அருமறை தமிழ்நூல் அடைவே
தெரிந்துரைக்கும் புலவோனே[23]'

என்றும் வரும் பகுதிகள் சான்றாகும். தமிழின் இலக்கணத்தை நக்கீரருக்கு முருகப்பெருமான் கற்பித்தார் என்பதையும் சுவாமிமலைத் திருப்புகழிற் காணலாம். சுவாமிமலை முருகனை அருணகிரியார் 'தகப்பன்சாமி' எனக் குறிக்கக் காணலாம். அருணகிரியார்க்கு இத்தலத்தில் பாத தரிசனம் தந்த செய்தியைத் 'தகையாது எனக்கு உன் அடிகாண வைத்த தனி ஏரகத்தின் முருகோனே' எனக் குறிப்பதால் அறியலாம்.

## குன்றுதோறாடல்

குன்றம் உள்ள இடமெல்லாம் குமரவேள் குடி கொண்டிருப்பன். அந்நிலையில் கயிலை, ஸ்ரீசைலம், திருவேங்கடம், திருத்தணிகை, வள்ளிமலை, திருக்கழுக்குன்றம், மயிலம், திருச்சிராப்பள்ளி, திருக்கற்குடி, ரத்னகிரி, சிரகிரி, விராலிமலை, விநாயகமலை, கொடுங்குன்றம், குன்றக்குடி, திருச்செங்கோடு, கொல்லிமலை, ராஜகம்பீர வளநாட்டு மலை, ஞானமலை, ஊதிமலை, குருடி மலை, தென்சேரிகிரி, கொங்கணகிரி, தீர்த்தமலை, கனகமலை, புகழிமலை, பூம்பாறை, பொதியமலை, கழுகுமலை, வள்ளியூர், கதிர்காமம், திருக்கோணமலை, வடமலை என்னும் முப்பத்து மூன்று மலைத் தலங்களைப் பாடியுள்ளார். இப்பாடல்களில் 1. சீவன் சிவசொரூபம்; 2. எவரொடும் உரைசெயும் மரம்போல் நிலை வேண்டா; 3. நின் அடிமைகட்குத் தொண்டு இயற்றுதல்; 4. தமிழின்பத்தில் ஈடுபடாது சிற்றின்பத்தில் நாட்டமுறுதலை விலக்குதல்; 5. காப்பவர் யாருமற்ற நிலையில் இறைவனே காத்தல் கடன்; 6. மானுடரைப் பாடுவதைவிட இறைவனைப் பாடுவதே உய்வு தரும்; 7. உலக வாழ்வை நிலையென்று நம்புதல் வீண்; 8. குருவின் சொல் நலம் பயக்கும்; 9. இறைவன் பெருமை சொல்லில் அடங்காதது ஆகிய செய்திகள் காணக்கிடக்கின்றன. இவற்றுள் தமிழாற் பெறுமின்பம் மிகச்சிறந்தது எனக் குறிக்கையில்,

'இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்
இடுக்கினை அறுத்திடும் என ஓதும்
இசைத்தமிழ் நடத்தமிழ் எனத்துறை விருப்புடன்
இலக்கணம் இலக்கியக் கவிநாலும்[24]'

23. திருப்புகழ் மேலது. 210
24. திருப்புகழ் மேலது. 249

என்று கூறக் காணலாம். வள்ளிமலைத் திருப்புகழில் 'குலம் வாய்த்த நல்ல தனம் வாய்த்ததென்ன குருவார்த்தை' என்கிறார். முன்னோர் தேடி வைத்த செல்வம் போன்றது குருவருள் என்பது இதன் கருத்து. அனுமன் சீதையைக் கண்டு கணையாழி தந்து மீண்டமை முருகனது அருளால் என அருணகிரியார் கதிர்காமத் திருப்புகழிற் பாடுகின்றார்.

'அடிக்குத் திரகார ராகிய
அரக்கர்க்கு இளையாத தீரனும்
மலைக்கப் புறமேவி மாதுறு வனமே சென்று
அருள்பொற் றிருவாழி மோதிரம்
அளித்துற் றவர்மேல் மனோகரம்
அளித்துக் கதிர்காம மேவிய பெருமாளே[25]'

இலங்கையில் நிகழ்ந்த இந்நிகழ்வு கதிர்காமத்திளையோனால் நிகழ்ந்தது என அருணகிரிப் புலவர் கூறுவது நினைக்கத்தக்கது. துரியநிலைக்கு மேற்பட்ட சாயுச்சியக் கதியை, சொற்களால் கூற முடியாத சுக சொரூபத்தை நான் அடைய வேண்டும் என்று கதிர்காமத் திருப்பாட்டிற் பாடினர். 'சுகசொரூபம்' என்பதைக் கிளிவடிவு எனக் கொண்டு கதை புனைந்துவிட்டனர்.

## பழமுதிர் சோலை

பழம் முதிர்ந்த சோலையெல்லாம் முருகன் வாழிடமே. அவையெல்லாம் அப்பெருமானின் ஆறாவது படைவீடாகும். மதுரைக்கு அணித்தாக விளங்கும் சோலைமலையை 16 பாடல்களிற் பாடியுள்ளார். முருகன் தேவர்க்கும் மூவர்க்கும் மேற்பட்டவன் என்பதை இத்தலத் திருப்புகழில் ஓதுகின்றார். ''அயன் எனவாகி, அரியெனவாகி, அரனெனவாகி, அவர் மேலாய் இகரமுமாகி எவைகளுமாகி'' என முருகனைப் போற்றக் காணலாம். 1. சிற்றின்பத்துறையில் ஈடுபடா நிலை; 2. மாயமான உலக வாழ்வைத் துறத்தல்; 3. மூப்பு வந்து முடியாமுன் இறைவன் அருள்பெறல்; 4. பிறப்பை நீக்குவது இறையருள் ஆகிய கருத்துக்கள் பழமுதிர் சோலைத் திருப்புகழில் கூறப் பெறுகின்றன.

## பிற தலங்கள்

அருணகிரிநாதர், காஞ்சி, திருக்காளத்தி, திருவண்ணாமலை, சிதம்பரம், திருவானைக்கா எனும் பஞ்சபூதத் தலங்களையும், காசி முதலான வடநாட்டுப் பதிகளையும், ஆலங்காடு, திருவேற்காடு,

25. திருப்புகழ் மேலது. 419

ஒற்றியூர், மயிலை, திருப்போரூர், திருப்பாதிரிப்புலியூர், சீர்காழி, வைத்தீசுவரன் கோயில், கந்தன்குடி, திருவாரூர், சிக்கல், எட்டுகுடி, எண்கண், வயலூர் உள்ளிட்ட பல உள்நாட்டுத் தலங்களையும் பாடியுள்ளார். இந்தியா, இலங்கை உட்படக் கைலாயத்திலிருந்து கதிர்காமம் வரை நடைப்பயணம் பாடிப் பல ஊர்களிலும் முருகனைப் பாடிய தனிப்பெரும் சிறப்பு அருணகிரிப் பெருமானுக்கே உரியது. சிதம்பரத்தில் அவர் இசைத்த பாடல் நம் சிந்தனைக்குரியது.

'எழுகடல் மணலை அளவிடின் அதிகம்
எனதிடாப் பிறவி அவதாரம்
இனிஉனது அபயம் எனது உயிர் உடலும்
இனியுடல் விடுக முடியாது
கழுகொடு நரியும் எரிபுவி மறலி
கமலனும் மிகவும் அயர்வாணார்
கடன்உனது அபயம் அடிமை உன் அடிமை
கடுகி உன் அடிகள் தருவாயே
விழிதிகழ் அழகி மரகத வடிவி
விமலி முன் அருளும் முருகோனே
விரிதலம் எரிய குலகிரி நெரிய
விசைபெறு மயிலில் வருவோனே
எழுகடல் குமுற அவுணர்கள் உயிரை
இசைகொளும் அயிலை உடையோனே
இமையவர் முனிவர் பரவிய புலியூ
ரினில் நட மருவு பெருமாளே[26]'

என்ற பாட்டில் அருணகிரியார் நடராசப் பெருமானை முருகனாகவே காண்பது விளங்கும். சிவனையும் முருகனையும் வேறுவேறாகக் காணாத நிலையை இப்பாடல் விளக்குகின்றது. சிதம்பரத்தில் மேலைக் கோபுர வாயிலில் உள்ள முருகனை 'மேருமால் வரையென நீள் கோபுர மேலை வாயிலில் மயில் மீது ஏறிய பெருமாளே' என்று பாடுகின்ற அருணகிரியார் முருகப்பெருமானைச் சிவமூர்த்தங்களுள் ஒரு வடிவுடையவராகவே கருதியுள்ளார் என் அறியலாம். தேவாரப் பதிகம் பெறாத பல தலங்கள் திருப்புகழ் பெற்றமையால், பாடல் பெற்ற தலம் என்ற பெருமையைப் பெற்றன. பொதுப்பாடல்களாக 313 பாடல்களை

26. திருப்புகழ் மேலது. 596

இப்பெருமான் பாடியுள்ளார். இப்பொதுப்பாடல்களில் முருகன் மலையைத் துளைத்தது, சூரனை வென்றது, வள்ளி நாச்சியாரை மணந்தது, சிவபெருமானுக்கு உபதேசம் செய்தது போன்ற செயல்கள் கூறப்பெறுகின்றன. பாரதப் போர்பற்றி ஒரு பாடலிற் கூறப்பெறும் செய்தி காணத்தக்கதாகும்.

'சூதுபொரு தருமன் நாடுதோற்று இரு
ஆறுவருஷம் வனவாசம் ஏற்று இயல்
தோகை யுடனுமே விராட ராச்சியம் உறைநாளில்
சூறை நிரைகொடு அவரேக மீட்டெதிர்
ஆளும் உரிமை தருமாறு கேட்டொரு
தூது செல அடு வலாண்மை தாக்குவன் எனமீள
வாதுசமர் திருதரான ராட்டிர
ராஜ குமரர் துரியோதனாற் பிறர்
மாள நிருபரொடு சேனை தூள்பட வரிசாப
வாகை விஜயன் அடல் வாசிபூட்டிய
தேரைமுடுகு நெடுமால் பராக்ரம
மாயன் மருக அமர் நாடர் பார்த்திபப் பெருமாளே[27]'

எனப் பன்னிரண்டாண்டுக் கானக வாழ்வையும் ஓராண்டுக் கரந்துறை வாழ்வையும் ஏற்ற பாண்டவர் கௌரவரைப் போரில் அழிக்கத் துணையாய் நின்ற மால் மருகன் என்ற வகையிற் பாடிப் பாரதக் கதையினைக் கூறினர்.

## திருவகுப்பு

திருவகுப்பு, திருப்புகழைப் போலவே சந்தம் அமையப் பாடப் பெற்ற பனுவல்களைக் கொண்டது. முருகப்பெருமானின் திருவடி, அவர் கைக் கொண்ட வேற்படை, அவருடைய அருள்பொழியும் விழிகள், அன்பர்க்கு நல்கும் திருக்கைகள் ஆகியவற்றின் பெருமைகளை இந்நூல்கள் விரித்துரைக்கின்றன. திருமுருகாற்றுப் படையில் முருகப்பெருமானின் ஆறுமுகங்களும் பன்னிரு கைகளும் கொண்ட கோலம்பற்றிப் பாடும் நக்கீரர்,

'மாயிரு ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்; ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினி தொழுகிக்
காதலின் உவந்து வரம்கொடுத் தன்றே; ஒருமுகம்

27. திருப்புகழ் மேலது. 1075

மந்திர விதியின் மரபுளி வழாஅது
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே; ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே; ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே; ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே[28]'

எனக் கூறிப் பின் பன்னிரு கையும் பாற்பட இயன்ற தன்மையைப் பாடுவர். இவ்வாறு உறுப்புகளைப் பாடும் மரபு பிற நூல்களிலும் உண்டெனினும் பக்தித்துறையில் முருகாற்றுப் படையே முதலாவதாகும். அந்நெறி பற்றி நக்கீரரின் முருகாற்றுப்படை நூலின் இறுதியில் இணைக்கப்பட்டுள்ள வெண்பாக்கள் முருகனின் முகங்கள், திருவடிகள், கைவேல் ஆகியவற்றின் பெருமைகளை வகுத்துரைக்கின்றன. இவ்வெண்பாக்கள் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணத்தில் ஆளப்பெறுகின்றமையால் இவை அந்நூலுக்கு முற்பட்டன என்பது விளங்கும்.

'அஞ்சு முகம்தோன்றின் ஆறு முகம்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும் - நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலும் தோன்றும்
முருகா என்றோதுவார் முன்

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் - வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை[29]'

என்று முகமும் தாளும் வேலும் பாடப்பட்டவாறு காணலாம். அருணகிரிநாதர் பாடும் திருவகுப்பில் முதற்கண் அமைந்தது சீர்பாத வகுப்பு என்னும் பகுதியாகும். ஓரடிக்கு அறுபத்து நான்கு சீராக அமைந்தது இவ்வகுப்பு.

'உருவெனவும் அருவெனவும் உளதெனவும் இலதெனவும்'

கூறிப் பல சமயங்கள் ஆரவாரிக்கும் நிலைமாற 'உரையவிழ உணர்வவிழ உள்மகிழ உயிரவிழ உளபடியை உணரும் அவர் அநுபூதி' ஆகும் நிலைபற்றி இத்திருவகுப்புப் பேசும்.

28. திருமுருகாற்றுப் படை 91-102
29. திருமுருகாற்றுப் படை 6, 3.

வேல்வகுப்புப் பகுதியில், வேல் இதுகாறும் விளைத்த வெற்றிகளையும் இனியும் அது செயல்படுமாறும் கூறுகின்றது. நக்கீரருக்காக வேல் குகையை இடித்து வழி செய்ததையும் சூரன் முதலாம் அவுணர்தமை அழித்ததையும் குறிப்பிட்டுப் பின்னர்,

'தனித்து வழிநடக்கும் எனதிடத்தும் ஒரு
வலத்தும் இருபுறத்தும்அருகடுத்து இரவு
பகல் துணையதாகும்[30]'

என்று கூறுகின்ற நிலையைக் காணலாம். 'வழிக்குத் துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே' எனக் கந்தரலங்காரம் இதனைக் குறித்தது. முருகப்பெருமானைத் திருவேளைக்காரன் வகுப்பில், நேர்மைக்காரன், கருணை ஓடக்காரன், திருத்தணிவாசக்காரன், நேயக்காரன், காவற்காரன் என்றெல்லாம் வருணிக்கக் காணலாம். பூத வேதாள வகுப்பில்,

'அரசறிய வாமன முநிக்கொரு தமிழ்த்ரயமும்
அபரிமிதமாக விவரித்த கடவுட் புலவன்'

என்று கூறி, அகத்தியர்க்குத் தமிழ் கற்பித்தவன் முருகன் என்பது உணர்த்துவர். பூத வேதாள வகுப்பில் ஒவ்வோர் அடியும் 160 சீர்கொண்டு திகழக் காணலாம். செருக்களத்தில் பேய்களின் செயல்களை விவரிக்கும் இரு பகுதிகள் ஆலங்காட்டு மூத்த திருப்பதிகத்தையும் கலிங்கத்துப்பரணியின் பேய் பாடியது பகுதியையும் நினைவுக்குக் கொண்டுவரும்.

'குதிரைத் திரள்பட்ட பிணத்தை எடுத்து
உதிரப் புனலில் குளிக்கும் ஒருதிரள்
குருதிக் கடலைப் பெருகப் பருகிக்
குணலைத் திறனிற் களிக்கும் ஒருதிரள்
கொடுகொட்டி படத் துடிகொட்டி நடத்
தடமிட்டு வளைத்து இருக்கும் ஒருதிரள்
குடரைப் புயமிட்டு உடலைச் சிறுகக்
குலையிட்டு அதிரச் சிரிக்கும் ஒருதிரள்[31]'

என்று செருக்களம் வருணிக்கப்பெறுகின்றது. பாரதப் போரில் பதினெண்குண அக்ரோணிப்படை அழிந்ததனால் நிலமகள் பாரம் தவிர்ந்தாள் எனப் பாடுகின்றார்.

30. வேல்வகுப்பு
31. செருக்களத்தலகை வகுப்பு

பக்திநெறியில் அருணகிரியாரின் பாங்கு புதுமையானது. இறைவன்மீது உரிமை பாராட்டிக் கொள்ளும் நிலையை இவருடைய பாடல்களிற் காணலாம்.

'அறிவொடு மதுர மொழியது குழறி
அலமரும் பொழுதில் அழைத்தால் வருவாய்'

எனச் சேவகன் வகுப்பிற் கூறுவர். முருகனைச் சேவகனாகக் கண்ட இந்நெறியே பாரதியார் கண்ணனைச் சேவகனாகப் பார்க்க முன்னோடியாக அமைந்தது. வேல்வாங்கு வகுப்பில், முருகன் வேல் வாங்கியதால் இந்திராணி நூல் வாங்காது வாழ்ந்தனள் எனச் சொற்சுவை தோன்றப் பாடுகின்றார். பெரும்பான்மை திருப்புகழை ஒத்து நடக்கும் இப்பாடல்களில், முருகப்பெருமானின் அழகு, ஆற்றல், உமையின் அருள், கைலாயச் சிறப்பு ஆகியன கூறப்பெறுகின்றன.

## கந்தரந்தாதி

அருணகிரியாரை வில்லிபுத்தூரார் வாதுக்கழைத்த நிலையில் பாடிய நூல் கந்தரந்தாதி என்பர். புலவர் பலர் வேண்டுகோளுக்கிணங்க இவ்வாது நிகழ்த்தப் பெற்றதென்று செவிவழிச் செய்தி கூறும். இந்நூலின் தொடக்கமுதல் 53 பாட்டுவரை வில்லிபுத்தூரார் உரை சொல்லி முடித்தாரென்றும் 54ஆம் பாட்டிற்கு உரை கூறவியலாது தோற்றனரென்றும் கூறுவர். கந்தரந்தாதிக்கு வில்லிபுத்தூரார் உரை ஒன்று வெளியிடப்பட்டுள்ளது.

### நூலின் சிறப்பு

இந்நூல் காப்புச் செய்யுட்கள் இரண்டையும் சேர்த்து 102 செய்யுட்களை உடையது. காப்புச் செய்யுட்களைத் தவிர ஏனையவை சி, சீ, செ, சே, தி, தீ, தெ, தே என்ற எட்டெழுத்துக்களை முதல் எழுத்துக்களாகப் பெற்றவை. அந்தாதித் தொடையமையப் பாடப் பெற்றவை.

இந்நூலின் எட்டுப் பாடல்களில் (27, 29, 56, 65, 75, 89, 96, 100) திருஞானசம்பந்தரைப் பற்றிய குறிப்புகள் காணப்பெறுகின்றன.

சந்தம் குறையாமலும், முற்றெதுகையாகவும் பாடப்பெற்றது இந்நூலின் குறிக்கத்தக்கதோர் சிறப்பாகும். இந்நூலின் பாடல்கள் பிரித்துப் பொருளறிய அருமையுடையனவாயும் உள்ளன.

'திருவாவினன்குடி பங்காளர் எண்முது சீர்உரைச
திருவாவினன்குடி வானார் பரங்குன்று சீரலைவாய்
திருவாவினன்குடி ஏரகம் குன்றுதோ றாடல்சென்ற
திருவாவினன்குடி கொண்டதண் கார்வரைசெப்புமினே[32]'

என்னும் பாட்டில் முதலடியில் உள்ள திருவாவினன்குடி என்பதை திரு, ஆவி, நன், குடி எனப் பிரித்துத் திருமகளுக்கு ஆவி போன்றவராகிய திருமாலும், நற்குடிச் சேர்ந்த தேவியைத் தன் பங்கிலே வைத்து ஆடும் பரமசிவனும் எனப் பொருள் கொண்டு தொடர்தல் வேண்டும். முதுசீர்உரை சதிருவாவினன்குடி எனத் தொடரும் இரண்டாமடிக்குப் பழமையான சிறப்புடைய வேதாகமப் பொருளைச் சொல்லிய சதிர்மிக்க (சதுரப்பாடுடைய) உவாவினனாகிய இளையோன் உறைவிடமாகிய வானவுலகின் எனப் பொருள் அறிந்து உரைத்தல் வேண்டும்.

'செவ்வந்தி நீலப் புயமுருகா பத்தர் சித்தமெய்யிற்
செவ்வந்தி நீலத்தை உற்றருள் வாய்திங்கட் சேய்புனைந்த
செவ்வந்தி நீலத் தொருபாகர் போன்றது இனிச் சிந்தியார்
செவ்வந்தி நீலத்தின் நீடும் முற்றாத திமிரமுமே[33]'

என்பது ஒரு பாட்டு. இதற்குப் பொருள் கொள்ளுமாறு : ''செவ்வந்தி என்னும் பூமாலையையும் கருங்குவளை மாலையையும் புனைந்த புயங்களை உடைய முருகா! அன்பரது இதயமாகிய இருப்பிடத்தில் செம்மையாகப் பொருந்தியுள்ள நீ இரக்கம் கொண்டு அருள்வாயாக! பிறைத் திங்களைக் கொண்ட சிவந்த மாலைக்காலம் நீலநிறம் கொண்ட பார்வதியைப் பாகமாக உடைய சிவ்பெருமானைப் போன்றுள்ளது. இனி உன்னை வழிபடாதவர்கள் துன்பம் சௌனமாகிய வருத்தத்தை உண்டாக்கும் அஞ்ஞான இருள்போல நீடிக்கட்டும்''. இவ்வாறு ஒரு சொல் அல்லது தொடரைப் பலவகையாகப் பிரித்துப் பொருள் காண வேண்டியதாக இந்நூற் பாடல்கள் அமைந்துள்ளன.

## நூற்பொருள்

அந்தாதியின் நூற்பொருள் முருகப்பெருமானின் பலவகைச் சிறப்புகளைப் பாடுதலேயாம். ஆறுபடை வீடுகளையும், திருவண்ணாமலை, சீர்காழி, கயிலை, வல்லம், இலஞ்சி ஆகிய தலங்களையும் இந்நூல் பாடுகின்றது. ஒரே பாட்டில் சுவாமிமலை,

32. கந்தரந்தாதி 1
33. கந்தரந்தாதி 6

இலஞ்சி, திருச்செந்தூர், திருச்செங்கோட்டுமலை, திருவல்லம் ஆகிய தலங்கள் குறிக்கப்பெறுகின்றன. இந்நூல் அகப்பொருள் அமைந்த பாடல்களையும், புறப்பொருள் அமைந்த பாடல்களையும் கொண்டது. இந்நூலின் ஏழாம் பாட்டு ''திமிங்கில மீனைக் கொண்ட இருண்ட கடலைச் சினந்தவனே! வேலவனே! அசுரர் குலத்தை அழிப்பவனே! வள்ளி தெய்வ யானை என்னும் நாயகியர் தழுவுமாறு பேசுபவனே! சந்தனம் முதலிய குளிர்ந்த பொருட்கள் பூசப்பூச என் உடம்பு கனலாய் மாறுகின்றது! ஆதலால் என்னைத் தழுவி அருள்க'' என அகப்பொருள் அமைய, விரகதாபத்தில் துன்புறும் தலைவி கூறுவதாக அமைந்தது. ஒன்பதாம் பாட்டில், ''கரும்பு வில்லை உடைய மன்மதனின் அம்புகள் என்னைக் கொல்ல வருகின்றன. தென்றல் காற்றையும் நான் ஒன்றும் செய்ய முடியாதவளாய் இருக்கின்றேன்'' என்று தலைவி கூறுவதாக அமைந்தது.

அகப்பொருள் சிறிதும் அமையாத பாடல்களும் இந்நூலில் உள்ளன. இருபத்தோராம் பாட்டு, ''கோழிக் கொடியோனே! பச்சைமயில் வீரனே! வாமன அவதாரம் கொண்ட மால் மருகோனே! சூர சங்காரனே! உலக வாழ்வை நித்தியமாய் நம்பி மனம் வருந்துகின்றவர்களிடம் சேராது இருக்க எனக்கு அருள் செய்க!'' என்று கூறுகின்றது. நாற்பத்தோராம் பாட்டு ''திருச்செங்கோட்டு மலைக் கந்தனே! தேவர் உலகம் அழியாதவாறு சூரனை வென்றவனே! உன்னை வணங்குகிறேன். யமன் வந்து என் சுற்றத்தாரும் பிள்ளைகளும் சூழ்ந்து அழும்படி என்னைத் தன் உலகமாகிய நரகத்தில் கொண்டு சேர்க்காமல் காப்பாற்ற வேண்டும்''.

திருஞானசம்பந்தராக அவதாரம் செய்தவர் முருகனே என்று இந்நூலிலும் அருணகிரியார் கூறக் காணலாம். 'சமணர் இட்ட ஏட்டையும் வாதத்தையும் வெற்றி கொண்ட முருகன்' (27) என்றும், 'சமணர் கூட்டத்தைக் கழுவிலேற்றி அழியுமாறு செய்த சம்பந்தராகிய முருகப்பெருமான்' (29) எனவும், 'தென்னவனாகிய பாண்டியன் உற்ற வெப்புநோய் தணியத் தேவாரம் மொழிந்தருளிய சம்பந்தப்பிள்ளையார்' (65) எனவும், 'தென்னூலாகிய தேவாரம் எனப்படும் இருக்குவேதத்தை ஐயம் அகல உரைத்த சம்பந்தச்சேய்' எனவும், பல இடங்களில் உரைக்கக் காணலாம். கண்ணப்ப நாயனார் பற்றியும் இந்நூலிற் குறிப்பு உள்ளது.

சங்கத் தமிழ் மரபையும், நாயன்மார் ஆழ்வார் ஆகியோர் பின்பற்றிப் போற்றிய பத்திமை மரபையும் அருணகிரியார் ஏற்றுட் போற்றியவர் என்பது இந்நூலிற் சிறப்பாகப் புலனாகின்றது. சங்க அக இலக்கியம் காட்டும் பரத்தையிற் பிரிவுபற்றி இந்நூல் கூறுகின்றது. ''முருகனே! நீ என்னை நீங்கிச் சென்று புணர்ந்து வந்த பரத்தையரைப்பற்றி நான் இகழ்ந்து பேச யாது உளது? நீ அங்கேயே செல்வாயாக!'' என முருகனுக்கும் பரத்தையொழுக்கம் சார்த்திப் பேசும் புதுமையினை இந்நூல் காட்டுகின்றது. மனிதர்களுக்கு இயற்கையாகத் தோன்றும் இறப்பச்சத்தை ஏனை நூல்களிற் போலவே இந்நூலிலும் அருணகிரியார் பாடியுள்ளார்.

'தெண்டன் புரந்தர நற்கேள் சிறுவர் அழச்செய்து எம்மைத்
தெண்டன் புரம்தரவின்படி நூக்கிய தீநரகே[34]'

'இயமன் வந்து என் சுற்றத்தாரும் பிள்ளைகளும் சூழ்ந்து அழும்படி என்னைத் தன்னுடைய உலகிற் கொண்டுபோய் நரகத்தில் சேர்க்காமல் காத்தருள்வாய்' என வேண்டக் காணலாம்.

'இதயத்தைத் தகழியாக்கி அன்பாகிய நெய்யை வார்த்து ஆகமமாகிய திரியையிட்டு ஞானத்தை விளக்காக ஏற்றிய அடியார்களுக்குச் சிதாகாசமான சாயுச்சிய பதவியை அருளுகின்ற திருச்செந்தில் நாயகர் சத்துரு சங்காரம் செய்த அம்பிருக்க அவர் தோளில் அணிந்த நீலோற்பல மாலையே மன்மதன் அம்பாக வந்து என் உடம்பில் தைக்கின்றது' என்பதில் பத்திமைநெறி நிற்கும் அடியார்களை வருணிக்கும் பாங்கு,

'அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை இடுதிரியா - நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்[35]'

என்று பூதத்தாழ்வார் உவமித்த நெறியில் அமையக் காணலாம். சிவபெருமானை, முதல் தமிழ்ச்சங்கத் தலைவன் என்று கூறுவது மரபு. அருணகிரியார் 'தமிழ்நூற் சீர்க்கு ஐ' எனக் குறிக்கின்றார். சடங்குகள், ஆசாரங்கள் ஆகியவற்றைக் கருதாத தூய பத்திமை பொருந்திய அகக்காதல் நெறி கந்தரந்தாதியிற் போற்றப் பெறுகின்றது.

---

34. கந்தரந்தாதி 41
35. நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், இரண்டாம் திருவந்தாதி 1

'சேதனம் தந்து உறுஜ என்று உமை செப்பும் குருந்து உறை காற்
சேது அனம் தந்துறை அல்லிமன் வாவிச் செந்தூர் கருதுஅ
சேதனம் தம் துறை என்று அறியார் திறம் நீங்கி நெஞ்சே
சேது அனந்தம் துறை மற்றும் முற்றாடித் திரிகை விட்டே[36]'

என்ற பாட்டு "அறிவின்மையால் தம் சமயக் கோட்பாடு என்று கருதிக்கொண்டு தெளியாமல் இருக்கும் மக்களின் நிலையிலிருந்து நீங்கி மனமே! நீ சேது முதலிய பலப்பல நீர்த்துறைகளில் மூழ்குவதும், அப்பதிகளை நாடித் திரிவதும் கைவிட்டு அழகிய மார்பினால் பால் ஊட்டி எமக்குச் சேயாக உற்ற ஐயனே என்று உமையம்மை கூறும் பாலனாகிய முருகன் அமர்ந்து அருளும் சிவந்த காலை உடை அன்னங்களும் நூலோடு கூடிய ஆம்பல்களும் நிலைபெற்ற குளங்கள் சூழ்ந்த திருச்செந்தூர்ப்பதியை நீ சிந்தனை செய்வாயாக!" என்று உரைக்கக் காணலாம்.

'மனத்தது மாசாக மாண்டார் நீராடி
மறைந்து ஒழுகு மாந்தர் பலர்[37]'

என்ற திருக்குறள் நெறியில் அருணகிரிநாதர் இதனை மொழியக் காணலாம்.

அருணகிரிநாதர் பெண்களின்பாற் பெறும் சிற்றின்ப நேயத்தைப் பெரிதும் பாடினாரென்றும், அவர் அவ்வின்பத்துறையில் எளியராய் இருந்தாரென்றும் கூறுவர். அத்தகையோர் கந்தரந்தாதியில் இச்செய்யுளைக் காண வேண்டும்.

'சிகைத் தோகை மாமயில் வீரா சிலம்பும் சிலம்பு அம்புரா
சிகைத் தோகை மா மய்இல் வாங்கிப் பொருது திசைமுகன் வா
சிகைத் தோகை மா மய் இல் வானில் வைத்தோய்
வெஞ்செரு மகள் வா
சிகைத் தோகை மா மயில் செவ்வி நற்கீரர் சொல் தித்தித்ததே'

இப்பாட்டின் பொருளாவது : "கொண்டையையும் தூவியையுமுடைய பெரிய மயிலேறும் வீரனே! கிரவுஞ்ச மலையினையும் ஒலிகின்ற கடலிடையே ஒழுங்காக ஓங்கிய கொடியையுடைய மாமரமாய் நின்ற சூரனையும் இருளுக்கு இடமாகிய மாயையினையும் விலக்கிப் போர் செய்து வென்று சினந்து தேவர் உலகத்தை மகிழ்ச்சிக்கு இடமாக ஆக்கியவனே!

36. கந்தரந்தாதி 33
37. திருக்குறள் 278

கடுமையான போரிற் சிறந்த பாண்டியனின் குதிரை முகத்தை உடைய பெண்ணுக்கு அம்முகத்தை மாற்றி அருள் செய்தவனே! ஐராவதம் வளர்த்த தெய்வ யானையின் கலவி இன்பத்தைவிட நக்கீரர் சொல்லிய திருமுருகாற்றுப்படை உனக்குத் தித்தித்ததன்றோ!'' என்பதாகும். மங்கையொருத்தி தரும் சுகமும் எங்கள் மாத்தமிழுக்கு ஈடில்லை என்ற பாரதிதாசனின் கவிதைக் கருத்துக்கு அடிமூலமாக விளங்குவது அருணகிரியின் இப்பாட்டே எனலாம்.

வள்ளியைத் திருமணம் செய்துகொடுத்தபோது சீதனப் பொருளாக முருகன் யானைக் கொம்பைப் பெற்றான் என்று இந்நூல் குறிக்கின்றது. முருகன் பரசமய நெறிகளுக்கு எட்டாதவனாக இருக்கின்றான் என்று இந்நூல் கூறுகின்றது. வள்ளியின் முகத்தைத் தாமரையென்றும் மூக்கை எள்ளினது பூவென்றும் முருகப்பெருமான் பாராட்டி உரைத்ததாகவும் அருணகிரியார் பாடுகின்றார். சிவபெருமான் முத்தமிழ்க்கும் தலைவனாக இருந்த நிலையிலும் முருகப்பெருமானிடம் பணிந்து நின்று பிரணவப் பொருளைக் கேட்டுக்கொண்டான் எனப் பல பாடல்களில் அருணகிரியார் உரைக்கின்றார். ஐயனே! என அவர் முருகனை விளித்ததாகவும் கூறுவர்.

முத்தி பெற விரும்புவோர் ஆன்மா சாக்கிர நிலையில் இருக்கும்போதும் செயலொடுங்கிய துரியாதீத நிலையில் இருக்கும் போதும் 'என்னை அன்புறப் பார்' என முருகனை வழிபட வேண்டுமென்று அருணகிரிப்பெருமான் அறிவுறுத்துகின்றார். முருகனின் திருவருள் என்ற வெளிச்சத்தில் அடியவரின் பொறுமை என்னும் அம்பினால் கோபம் முதலிய விலங்குகள் பட்டுவிடும் என்றும் கூறுகின்றார்.

அந்தாதி நூல்களில் கந்தரந்தாதி குறிப்பிடத்தக்க பல சிறப்புகளைக் கொண்டது; வாது புரிந்து தம் புலமை வீறுகாட்டப் பாடியது. சந்த அமைப்பில் அந்தாதித் தொடை அமைய முருகவேளின் பெருமைகளைக் கூறுவது. பல இதிகாச, புராண, தலபுராணச் செய்திகளைக் கொண்டது. திருமால், நான்முகன் எனப் பிற தெய்வங்களின் சிறப்பையும் மொழிவது. சித்தாந்த நெறியில் கௌமார சமயநெறியின் சிறப்புகளை மொழிவது. முருகப்பெருமானின் ஆறு படைவீடுகளின் சிறப்பினை எடுத்துரைப்பது. வள்ளி, தெய்வயானை என்னும் இருவரையும் போற்றிப் புகழ்வது. உலக இன்பங்கள் பொய்யானவை என்பதை

அறிவுறுத்தி முத்தி நெறியை விழையத் தூண்டுவது. தமிழின்பம் எல்லா இன்பங்களைவிட உயர்ந்தது எனக் கூறி நிலைநாட்டுவது. இத்தகைய பல சிறப்புக்கள் இந்நூலிற் பொதுளக் காணலாம்.

## கந்தர் அலங்காரம்

இந்நூல் நூறு பாடல்களைக் கொண்டது என இந்நூலின் இறுதிப்பாட்டுக் கூறுகின்றது. எனினும் காப்புச் செய்யுள் உட்பட சில பதிப்புகளில் 102 பாடல்களும், சில பதிப்புகளில் 107 பாடல்களும் கொண்டுள்ள இந்நூல் முருகப்பெருமானின் சிறப்பினைப் பாதாதி கேசமாக அழகுறக் கூறுவதுபற்றிக் கந்தர் அலங்காரம் எனப் பெற்றது. முருகப்பெருமானின் மயில், வேற்படை, சேவற்கொடி ஆகியவற்றின் பெருமைகளையும் இந்நூல் கூறுகின்றது.

'அலங்காரத் துட்பொருளை ஆய்வதுவே தேகம்
கலங்கா அலங்காரம்[38]'

என்று கந்தப்பையர் இந்நூலின் சிறப்பைப் போற்றுகின்றார். இந்நூல் கட்டளைக் கலித்துறையால் அமைந்தது. அடிதோறும் முதல் நான்குசீர் வெண்டளை பிழையாமல் வர, கடைச்சீர் விளங்காய் வாய்பாடு பெற்று, நேரசையில் தொடங்கியதாயின் அடிக்கு ஒற்று நீக்கிப் பதினாறு எழுத்தும், நிரையசையில் தொடங்கியதாயின் அடிக்குப் பதினேழு எழுத்தும் பெற்று வருவது கட்டளைக் கலித்துறையாகும். இந்நூல் திருவண்ணாமலையிற் பாடியது என்பது காப்புச் செய்யுளால் அறியப் பெறும்.

அருணகிரியார் முருகப்பெருமானைப் பாடுகின்ற போது, விநாயகராகிய களிற்றுக்கு இளைய களிறு, ஆற்றையும் அம்புலியின் கீற்றையும் புனைந்த சிவபெருமானின் மகன், தெய்வ வள்ளிக்கோன், மூவடிகேட்டுச் சேவடி நீட்டும் பெருமான் மருகன், பரம கல்யாணிதன் பாலகன் என அப்பெருமானின் சுற்றத்தாரையெல்லாம் சொல்லிப் போற்றுவது நினைக்கத்தக்கது. இஃது உலகத்தாரைப் பக்தி நெறியில் செலுத்தும் உத்தியாகும். அண்ணன், தந்தை, மாமன், மனைவி என்று உறவும் சுற்றமும் கூறி, அதன்வழி இறைவனிடம் பற்றுண்டாக்கும் வகையில், எல்லாவற்றையும் விட்டு நீங்கிய கடுந்துறவு நெறி வேண்டியதில்லை என இங்குக் காட்டப்பெறும்.

---

38. திருத்தணிகை உலா

'காட்டிற் குறத்தி பிரான்பதத் தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுத மிகஎளி தே;விழி நாசிவைத்து
மூட்டிக் கபால மூலாதார நேரண்ட மூச்சைஉள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கும் ஓடாமல் சாதிக்கும் யோகிகளே[39]'

என்று கூறுவதன் வழியாக ''யோகிகளே! கண்ணின் நோக்கினை மூக்கு நுனியில் நிறுத்தி மூலக்கனலை எழுப்பிக் கபாலத்திற்கும் மூலாதாரத்திற்கும் நேரே பொருந்துமாறு மூச்சுக் காற்றைத் தேக்கித் தவம் செய்வோரே! காட்டில் தினைப்புனம் காத்த வள்ளியிடம் காதல் கொண்ட முருகனின் திருவடியில் சிந்தையைச் செலுத்தினால் முத்தி பெறல் எளிதாகும்'' எனக் கடுந்தவம், யோகம் ஆகியவற்றைக் கைவிடத் தூண்டுகிறார். யோக நெறியைவிட மனத்தினை இறைவன்பால் செலுத்தும் அன்பு நெறி உயர்வுடையது என்பதை இப்பாடல் விளக்குகின்றது.

இறைவன் எவ்வுருவினன்? இறைவனுக்கென்று ஓர் உருவமில்லை. அவன் எவ்வுருவும் ஏற்பன். அவன் உருவன்; அருவன்; அருவுருவன் எனச் சைவ சித்தாந்தம் கூறும். உறவல்லாதவனுக்கு உறவுகள் கற்பித்து நம்மோடு பிணைப்பினை உண்டாக்குதல் போலவே, நிறமும் வடிவும் அற்ற பெருமானுக்கு அவற்றையும் கற்பித்து உலகோர் அறிந்த வழியில் இறைவனை உணரச் செய்தல் ஆன்றோர் வழக்கமாகும்.

'வண்ணந்தாள் சேயதன்று வெளிதே யன்று
அநேகன், ஏகன் அணுஅணுவில் இறந்தாய் என்றங்கு
எண்ணம்தான் தடுமாறி இமையோர் கூட்டம்
எய்துமாறு அறியாத எந்தாய்[40]'

என்று வானவர்களும் இறைவனின் நிறம் எது, உரு எது, ஒருவனா, பலரா, அணு அளவினனா, அதன் உட்கூறு எனத் தக்கவனா எனத் தடுமாறுகின்றனர். வானவர்களுக்கே இந்த நிலையென்றால் மனிதர்கள் நிலை எப்படி ஆகும்? இறைவனுக்கு ஒரு வடிவம், ஒரு நிறம், ஒரு கோலம், கற்பித்துக்காட்டினால் எளிதில் பலர் உள்ளத்தே பதியும். முதலில் புறக்கோலத்தில் உள்ளம் பதியும். யானையைப் பிணிக்கும் கட்டுத்தறி போல அக்கோலம் மனத்தை ஈர்த்தப் பிணிக்கும். முருகனின் தோற்றமெலாம் அழகின் கூறுகள் அனைத்தும் செறிந்த அற்புதம். இதனை அருணகிரிப் பெருமான்,

39. கந்தர் அலங்காரம் 85
40. திருவாசகம், திருச்சதகம் 25

'சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ்நூல் விரித்தோனை விளங்கு வள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போதும் மறவாதவர்க்கொரு தாழ்விலையே[41]'

என்றும்,

'பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கும் அமுது கண்டேன்[42]'

என்றும் வடிவ அழகு காட்டுவர். இவ்வாறு தோன்றும் ஓர் உருவன்றி உருவமற்ற நிலையில் வெறும் பாழில் நின்ற வெறுந்தனியையும் அருணகிரியார் அலங்காரப் பாட்டில் காட்டுகின்றார்.

'ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத்து உச்சியின்மேல்
அளியில் விளைந்ததொரு ஆனந்தத் தேனை அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பியவா முகம்ஆறுடைத் தேசிகனே[43]'

உருவ வழிபாடு என்பது தொடக்கநிலை. அதன் பார்பதம் அண்டம் அனைத்திலுமாகப் பரந்திலங்கும் பரம்பொருளின் இருப்பை உணர்ந்த நிலையில், அப்பரம்பொருள் தோற்ற ஒடுக்கமின்றி நிற வடிவின்றி வெறும் பாழாய் விளங்கக் காணலாம். இதனை நம்மாழ்வார்,

'நன்றாய் ஞானம் கடந்துபோய் நல் இந்திரியமெல்லாம் ஈர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும் பாழ் உலப்பில் அதனை
உணர்ந்து உணர்ந்து
சென்றாங்கு இன்பத் துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே அப்போதே விடு; அதுவே வீடு வீடாமே[44]'

சித்தர்களிடம் இத்தகைய கருத்து வெளிப்படக் காணலாம். கந்தரலங்காரம் அருணகிரியாரின் அளப்பரிய முன்னை நூற் கல்வியைக் காட்டுகின்றது. புராணங்களையும் இலக்கியங்களையும் கற்றுத் தெளிந்த அவருடைய அறிவுப் பரப்பை இந்நூல் வழியே நாம் நன்கறியலாம்.

41. கந்தரலங்காரம் 72
42. கந்தரலங்காரம் 47
43. கந்தரலங்காரம் 8
44. நாலாயிரம் 2936

'திருந்தப் புவனங்கள் ஈன்ற பொற்பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டில் ஏறி அறுவர் கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழும்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென்று ஓதும் குவலயமே[45]'

என, முருகன் பாலருந்தி வளர்ந்த பருவச் சிறப்பைக் கூறக் காணலாம். திருஞானசம்பந்தர்க்குப் புவன முழுதுடையாளாகிய உமை தம் திருமுலைப்பால் சுரந்து அமுது செய்வித்த நிகழ்ச்சி இங்கு எண்ணுதற்குரியது. இங்கு முருகன் விம்மியழுதான் என்றனர். முருகன் மட்டுமா அழுதான்? முருகப்பெருமான் வேலால் வற்றப் போகும் கடல் அழுதது. கிரவுஞ்சக்குன்று அழுதது. சூரன் அழுதான் என்றனர். எவ்வுலகும் குதுகலிப்ப ஞானசம்பந்தர் அழுதனர் என்றனர் சேக்கிழார். இங்குக் கடலும் குன்றும் சூரும் அழுதவாற்றை அருணகிரியார் கூறவே, கடலும் குன்றும் சூரும் தவிர்த்த ஏனைய உயிர்கள் யாவும் மகிழ்ந்தன என உணர்த்தினர். 'குறிஞ்சிக்கிழவன்' என்று இங்குக் குறித்தவை 'விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ' என நக்கீரர் கூறியதை நினைவூட்டும்.

அலங்காரம் ஒரு தத்துவக் கருவூலம். மாயை மனத்துள் பெருமயக்கத்தை உண்டாக்கிய நிலையில் உயிர் தவிப்பெய்தி இறைவனை வேண்டுகின்றது. அசுரர்கள் எதிர்த்து மண்டிய போர்க்களத்தில் வேல் தொட்ட பெருமானே! என் உள்ளத்தினுள்ளே உருவாகி எனைப் பெருமயக்கத்தில் ஆழ்த்தும் போர்க்களத்திலும் நீ நின் வேற்படையால் வெற்றி உண்டாக்க வேண்டும் என்று வேண்டுகிறார். அசுரரோடு முருகப்பெருமான் நிகழ்த்திய போர், பேய்கள் வெற்றிக் களத்தில் குருதி குடித்துக் கூத்தாடியமை ஆகிய நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் களம்பாடிய பகுதியை ஒப்ப அமைந்துள்ளது.

'உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரல்
கண்தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
நிணந்தின் வாயள் துணங்கை தூங்க[46]'

அசுரரின் வீழ்ச்சியை அருணகிரிப் பெருமான் பாடுவதில் பேரார்வம் காட்டுகின்றார். முருகாற்றுப்படை கூறும் செய்தியை மேலும் உணர்ச்சி பொங்கப் பாடுகின்றார். திருப்புகழிலும்,

45. கந்தரலங்காரம் 5
46. திருமுரு 51 - 56

'தித்தித்தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப் பதம் வைத்துப் பயிரவி
திக்கொக்க நடிக்கக் கழுகொடு கழுதாடத்
திக்குப் பரிஅட்டப் பயிரவர்
தொக்குத் தொகு தொக்குத் தொகுதொகு
சித்ரப் பவுரிக்குத் த்ரிகடக என ஓதக்
கொத்துப்பறை கொட்டக் களமிசை
குக்குக்குகு குக்குக் குகுகுகு
குத்திப் புதை புக்குப் பிடியென முதுகூகை
கொட்புற்றெழ நட்பற் றவுணரை
வெட்டிப்பலி யிட்டுக் குலகிரி
குத்துப்பட ஒத்துப் பொரவல பெருமாளே[47]'

என்று இந்தப் போர்க்களக் காட்சியைப் பாடுகின்றார். பரணி நூல்களில் பாடப் பெற்ற களவருணனையும் பேய்களின் செயல்களும் சந்தம் மிகப் பாடப்பட்டுள்ளமையினை இங்குக் காணலாம்.

## முருகனின் வடிவச் சிறப்பு

இளமை, மணம், அழகு, கடவுள்தன்மை ஆகிய எல்லாம் ஒருங்கிணைந்த வடிவம் திருமுருகனுடையது. முருகனின் தோற்றங்காண நான்முகன் நாலாயிரம் கண்கொடாது போயினனே என்கிறார் அருணகிரியார். முருகனின் குழந்தைப் பருவம், குமரப் பருவம் ஆகிய இரண்டும் அலங்கார நூலிற் பாடப்பெறுகின்றன. குழந்தைப் பருவத்தே முருகன் அரையிற் பூட்டிய கிண்கிணியின் ஓசையைப் பதினாறு உலகமும் கேட்டது எனக் கூறும் அவர், முருகன் குமரனாகிச் சூரனோடு போரிட்டமையினையும் கந்தரலங்காரம் எடுத்துக் கூறுகின்றது. முருகனின் சேவடி, பன்னிரண்டு தோள், ஆறிரண்டு கைகள், தண்டைக்கால் என ஒவ்வோர் உறுப்பையும், அதன் பெருமையையும் அருணகிரியார் கந்தரலங்காரத்திற் பாடுகின்றார். அருணகிரியார்க்கு முன்னும் முருகனின் வேல், மயில், கோழிக்கொடி ஆகியன போற்றிப் புகழப்பட்டிருப்பினும் அருணகிரியாரே மிக விரிவாக அவற்றின் பெருமையைப் பாடியவர் ஆவர். வேல்விருத்தம், மயில் விருத்தம், சேவல்விருத்தம் எனப் பாடியமை அறியத்தக்கது. அலங்காரத்திலும்

---

47. திருப்புகழ் மேலது 6

இவற்றின் சிறப்பை விரிவாக அவர் பாடுகின்றார். ''வேலும் மயிலும் நினைந்தவர் தம் துயர்தீர அருள்தரு கந்த'' என்பது அருணகிரி வாக்கு. இதனால் வேலும் மயிலும் துணை என்று கூறும் பத்திமை மரபு தோன்றியது.

### வேலும் மயிலும் துணை

முருகப்பெருமான் கைக்கொண்ட வேல், ஞானசக்தியின் வடிவமாகும். சிவபெருமான் இவ்வேலால் சூரனை வெற்றிபெற்று வருக எனக் கூறிப் போருக்கு அனுப்பினார். சிவபெருமானின் சூலாயுதமும், திருமாலின் சக்கரப் படையும், இந்திரனது வச்சிராயுதமும், சூரனை வெல்ல முடியாத நிலையில் முருகனின் கைவேல் அச்செயல் முடித்தது என வேல்வகுப்பில் பாடுகின்றார். முருகப்பெருமானின் ஊர்தியாகிய மரகதக் கலாப மயில் சக்கரவாள மலை பிளந்து போகவும், கிரவுஞ்ச மலை பொடிபடவும், மேருமலையும் பிறமலைகளும் அசைந்து குலுங்கவும் ஆதிசேடனின் தலைகள் கலக்கமடையவும் நடனம் செய்யும் என்று மயில் வகுப்பில் குறிக்கின்றார். இந்நிலையில் கந்தரலங்காரத்தில்,

'விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காஎனும் நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணைஅவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்செங் கோடன் மயூரமுமே[48]''

என்று பாடுகின்றார். கடைநாளில் செல்லும் வாழ்க்கைப் பயணத்தில் சாவு பற்றி அச்சம் யாருக்கும் வரும். அப்போது மனிதர் யாரும் துணையாக வர இயலாது. முருகனின் வேலும் மயிலுமே துணையாக விளங்கத் தக்கன என்பதை இப்பாடலில் உணர்த்தினார். திருமுருகாற்றுப்படை வெண்பாவும்,

'வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறை மீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் - வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை[49]''

என்று முருகனின் வேற்படையின் புகழ் பேசக் காணலாம். வேல், முருகன் எனவே கருதத்தக்கது என்பது பழங்கால வழிபாட்டு மரபிலிருந்து அறியப்படுகிறது. இதனை உணர்ந்து அருணகிரியார்,

48. கந்தரலங்காரம் 70
49. திருமுருகாற்றுப்படை வெண்பா 3

வேலைப் பல வகையிலும் புகழ்ந்து போற்றுதலை அலங்காரத்தில் காணலாம். அருணகிரியார்க்குப் பின்வந்த குமரகுருபரர் போன்ற புலவர்களும் அருணகிரியாரைப் பின்பற்றி வேலையும் மயிலையும் போற்றியுள்ளனர்.

'பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்தோளும்
அச்சம் அகற்றும் அயில்வேலும்[50]'

எனக் குமரகுருபரர் பாடுவர். சுப்பிரமணிய பாரதியாரும்,

'வீரத் திருவிழிப் பார்வையும் - வெற்றி
வேலும் மயிலும் என் முன்னின்றே - எந்த
நேரத்திலும் என்னைக் காக்குமே'

என்று வேலையும் மயிலையும் வழிபட்டுப் போற்றக் காணலாம். வேலையும் மயிலையும் வழிபடும் மரபை வலிமையுறச் செய்தவர் அருணகிரிநாதரே.

### கந்தரலங்காரம் அறிவுறுத்தும் செய்திகள்

முருகப்பெருமானை வணங்குவதால் பிறவிநோய் அகலுமென்பதைக் கூறுவதோடு அருணகிரிப் புலவர் நின்றுவிடவில்லை. இறைவனை வழிபட்டால் மனத்தில் உள்ள அச்சமென்னும் பிணி நீங்கும். மரணம் என்னும் இறப்புக் குறித்து உள்ளம் நடுங்காது.

''மரணப்ரமாதம் எமக்கில்லை''

என்பது அருணகிரியார் மொழி. கூற்றுவனாகிய யமன் வந்து பிடிக்கும்பொழுது முருகா நீ வந்து அஞ்சாதே எனக் கூறி எனக்கு அபயம் அளித்திடல் வேண்டும் என்பது அவர் வேண்டுகோள். அணிகளும், மணிகளும், மகளிரும், மாளிகைகளும், பணப் பைகளும், யமன் உயிரைக் கொண்டு போகும்போது கூட வருவன அல்ல என்பதைக் கூறி, வடிவேலனை நினைந்து போற்றுவதே உறுதுணையாம் என்பதை அலங்காரத்தில் கூறியுள்ளார்.

செல்வத்தையும், பிற உடைமைகளையும் பெரிதாக நினைக்காத ஒரு வாழ்வைக் கந்தரலங்காரம் நமக்கு அறிவுறுத்துகின்றது.

பொன்பொருளால் பெறும் மகிழ்ச்சியையும், மாதராற் பெறும் இன்பத்தையும், அதிகாரப் பெரும்பதத்தால் வரும் களிப்பையும்

50. கந்தர் கலிவெண்பா 114

பொய் என்பதை உணர்ந்து, என்றும் 'தித்தித்திருக்கும் அமுதாகிய' முருகனின் திருவடிகளை நினைந்து உய்யுமாறு அருணகிரி அறிவுறுத்துகின்றார்.

'சுழித்தோடும் ஆற்றிற் பெருக்கானது செல்வம்'

'பந்தாடும் மங்கையர் செங்கயல் பார்வையில் பட்டு உழலும் சிந்தாகுலம்'

'வணங்கித் துதிக்க அறியா மனிதருடன் இணங்கிக் குணம் கெட்ட துட்டன்'

என்று உலகோர் இன்பங்களையும் செருக்கையும் களைதல் கடன் என்பதை இந்நூல் நன்கு உணர்த்துகின்றது.

மனத்தைப் புலன்கள் வழியே செல்லாமல் தடுக்க வேண்டும். கோபம் கொள்ளுவதைக் கைவிட வேண்டும். இரப்பவர்க்கு இயன்ற அளவு தானம் செய்ய வேண்டும். எந்த நிலையிலும் சலனப்படாமல் சும்மா இருக்க வேண்டும். இந்த நான்கு நன்னெறிகளை அலங்காரம் நமக்கு உணர்த்துகின்றது.

'தடுங்கோள் மனத்தை; விடுங்கோள் வெகுளியைத் தானம் என்றும்

இடுங்கோள் இருந்தபடி இருங்கோள்'

என்று கூறிக் காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் என்ற ஆறு குற்றங்களிலிருந்து மனிதன் நீங்க வேண்டுமென்பதை இந்நூல்வழி உணர்த்துகின்றார்.

## நாளும் கோளும் வினையும் ஒன்றும் செய்யா

இறைவன்மீது முழு நம்பிக்கை கொண்டவர்க்கு நாள், கோள் ஆகியன பார்த்து ஒழுகவும், பரிகாரங்கள் தேடவும் தேவையில்லை. வினையைக்கூட அனுபவித்தாக வேண்டும் என்ற நிலை அவர்களுக்கு இல்லை. இவ்வாறு கூறுகின்றது கந்தர் அலங்காரம். திருஞானசம்பந்தரின் கோளறு பதிகமும் இக்கருத்தை மொழியப் பாடப்பெற்றதேயாகும். முருகனின் அருள் பெற்றவரை யமனின் சாவோலையும் நெருங்காது. நான்முகன், முருகன் அருள் பெற்றவனை விதி ஓலையில் எழுதுவானாகில் அவன் கைகளில் விலங்கு பூட்டப்பெறும் என்றும் அருணகிரி கூறுகின்றார். முன்பு பிரணவப்பொருள் அறியாமைக்காக நான்முகன் காலில்

விலங்கிடப்பட்டான்; இப்போது கைகளில் விலங்கு இடப்பெறுவான் என்றார். முருகனை வாழ்த்துங்கள்; வறியவர்களுக்கு இயன்றவரை உதவுங்கள். அதுவே கடைவழிக்குக் காப்பாக அமையும் என்கிறது அலங்காரம்.

'நொய்யிற் பிளவு அளவேனும் பகிர்மின்கள்'

என்று கூறுவது,

'இம்மி அரிசித் துணையானும் வைகலும்
நும்மில் இயைவ கொடுத்து உண்மின்'

என்று கூறும் நாலடியாரை நினைவூட்டும்.

## இறையுணர்வும் தமிழ் உணர்வும்

முருகப்பெருமான்மீது அளப்பரிய அன்பு கொண்டு வாழ்ந்தவர் அருணகிரியார். முருகன் தமிழ்ப் புலமைக்கு உளம் கனிவான் என்பது அவர் கருத்து.

'மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன்; முத்தமிழால்
வைதாரையும் அங்கு வாழவைப்போன்'

எனப் பாடுவது அருணகிரியாருக்கே உரிய கூற்றாகும். தம்மைத் தமிழால் வைதாரையும் வாழ வைப்பான் எனில், அவ்விறைவனுக்குத் தமிழில் உள்ள விருப்பம் புலனாகுமன்றோ! முருகனையும் தமிழையும் இவ்வாறு இணைத்து எண்ணிய பெருந்தகை அருணகிரிநாதர், தமிழ் உணர்வு மிக எழுந்த பிற்காலப் பாடல்களுக்கு முன்னோடியாவார்.

சான்றோர் தாம் செய்த இறை உணர்வுமிக்க தண்டமிழ்ப் பாடல்களைக் கற்பார் நன்னெறி எய்துவர் என்று கூறுவது மரபு. திருஞானசம்பந்தர் பதிகந்தோறும் இறுதிப்பாடலில் தம் பெயர் கூறி இப்பதிகம் பயில்வார் இன்ன சிறப்பெய்துவர் என்று குறிப்பர். இதற்கு முத்திரைப் பாட்டு என்பது பெயர்.

'கல்லின் மணிமாடக் கழுமலத்தார் காவலவன்
நல்ல அருமறையான் நற்றமிழ் ஞானசம்பந்தன்
எல்லி இடைமருதில் ஏத்துபாடல் இவை பத்தும்
சொல்லுவார்க்கும் கேட்பார்க்கும் துயரம் இல்லையே[51]'

என்று திருஞானம்பந்தர் பாடக் காணலாம். கந்தபுராண நூலைக் கற்பார் கேட்பார் எல்லாரும் வீடுபெறுவர் என அந்நூல் கூறுகின்றது.

51. திருஞானசம்பந்தர். திருவிடைமருதூர் 11

'வற்றா அருள்சேர் குமரேசன் வண்காதை தன்னைச்
சொற்றாரும் ஆராய்ந் திடுவாரும் துகள் உறாமே
கற்றாரும் கற்பான் முயல்வாரும் கசிந்து கேட்கில்
உற்றாரும் வீடுநெறிப் பாலின் உறுவர் அன்றே[52]'

நூலின் பயன் இன்னது எனத் தெரிவிக்கும் அம்மரபினை அருணகிரியாரும் பின்பற்றிக் கந்தரலங்கார இறுதிப்பாட்டில்,

'சலம் காணும் வேந்தர் தமக்கும் அஞ்சார்; யமன் சண்டைக்கு அஞ்சார்
துலங்கா நரகக் குழி அணுகார்; துட்ட நோய் அணுகார்;
கலங்கார் புலிக்கும் கரடிக்கும் யானைக்கும் கந்தன் நன்னூல்
அலங்கார நூற்றுள் ஒருகவிதான் கற்றறிந்தவரே[53]'

எனக் கூறுகின்றார். ஒரு பதிகமன்று, ஒரு நூல் முழுமையுமன்று; அலங்காரத்தில் ஒரு பாடல் கற்றால், உலகில் யார்க்கும் எதற்கும் அஞ்சாத மனத்திண்மையும், வலிவும் வருமாம். அருணகிரிப் பெருமானின் புலமை உரம் இங்குச் சிந்திக்கத் தக்கது.

கந்தரலங்காரம் முருகனைக் குறித்து எழுந்த இலக்கியங்களில் சிறப்புடைய ஒன்று. இறை உணர்வு என்னும் வலிமையால் இவ்வுலகத் துன்பங்கள் யாவற்றையும், இறப்பைக் குறித்த அச்சத்தையும் மனிதர்கள் நீங்கியிருக்கலாம் என்ற செய்தியை இந்நூல் சிறப்புறக் காட்டுகின்றது.

## கந்தர் அநுபூதி

காப்புச் செய்யுள் நீங்கலாக 101 செய்யுட்களைக் கொண்டது[54] இந்நூல். இவை அனைத்தும் கலிவிருத்தமாகப் பாடப் பெற்றுள்ளன. கந்தர் அநுபூதி என்பதற்குக் 'கந்தரை ஆத்ம வடிவமாக அறியும் அறிவை உண்டாக்கும் நூல்' எனப் பொருள் கூறுவர். கந்தனை அனுபவித்தல், மனத்தால் உணர்தல் என்று கூறலாம். மனிதர்கள் இறைவனை நாள்தோறும் பல நன்மைகளைப் பெறவும், துன்பங்களிலிருந்து விடுபடவும் வேண்டுவர். அவ்வேண்டுகோள் யாவற்றுக்கும் இந்நூலில் செய்யுட்கள் உள்ளன. வறுமையுற்றவர் யாரும் அத்துன்பத்திலிருந்து விடுபட நினைத்தலும், அதற்காக இறைவனை வேண்டுதலும் இயற்கையே.

'வடிவும் தனமும் மனமும் குணமும்
குடியும் குலமும் குடிபோ கியவா!

52. கந்தபுராணம்
53. கந்தரலங்காரம் 101
54. 51 பாடல்களே அனுபூதிக்குரியன என்பர் புலிசை ஞானியாரடிகள் முதலியோர்

அடி அந்தமிலா அயில்வேல் அரசே!
மிடி என்றொரு பாவி வெளிப்படினே[55]'

என்று புலவர் பெருமான் மிடியாகிய வறுமையிலிருந்து காக்குமாறு முருகனை வேண்டுகிறார். அழகும் பொருளும் நன்மனமும், நற்குணமும், பாரம்பரியமும், நற்குடிப் பிறப்பும் ஆகிய எல்லாம் வறுமையில் ஒழிந்தன என்கிறார். 'மிடி என்றொரு பாவி' என்று கூறுவது, திருவள்ளுவர் கூறும் 'இன்மையென ஒருபாவி' என்பதோடு ஒப்பு நோக்கத்தக்கது. வறுமையைப் போக்கியருள் என்பது போலப் பல வேண்டுகோள்கள் அநுபூதியிற் கூறப்பெறுகின்றன.

1. 'சிங்கார மடந்தையர் தீநெறி போய்
   மங்காமல் எனக்கு வரம் தருவாய்'
2. 'அரிவாய் அடியோடும் அகந்தையையே'
3. 'கரவாகிய கல்வியுளார் கடைசென்று
   இரவா வகை மெய்ப்பொருள் ஈகுவை'
4. 'சிந்தாகுலம் அவை தீர்த்து எனை ஆள்'
5. 'விதிகுன்றிட வந்து இகமும் பரமும் பெற என்று இசைவாய்'

என்பன போன்று தம்மை வழிநடத்தி, தேவையானவற்றை வேண்டுகின்ற பாங்கில் அருணகிரிப் பெருமான் அநுபூதியில் பாடுகின்றார்.

## உபதேசித்த பொருள்

அருணகிரியார் இறைவனிடமிருந்து பெற்ற ஞான உபதேசம் யாது? கந்தரநுபூதியில் இதனைக் குறித்து அவர் சண்முகரிடமே கேட்கிறார்.

'வானோ புனல்பார் கனல் மாருதமோ
ஞானோதயமோ நவில் நான் மறையோ
யானோ மனமோ எனை ஆண்ட இடம்
தானோ பொருள் ஆவது சண்முகனே[56]'

சண்முகனே! எனக்கு அறிவுறுத்திய பொருள் என்பது வானா, காற்றா, நீரா, நெருப்பா, நிலமா, ஞானம் விளைதற்குக் காரணமான

55. கந்தரநுபூதி 19
56. கந்தரநுபூதி 3

தத்துவ விசாரணையா, நான்மறையா, சீவனாக விளங்கும் நானா, என் மனமா, என்னை ஆட்கொண்ட திருத்தலமாகிய திருவண்ணாமலையா, ஏதென எனக்கு விளங்கவில்லை. அதனை மீண்டும் எனக்குக் கூறியருள் என்று இப்பாட்டில் அருணகிரிநாதப் பெருமான் வேண்டுகின்றார். அவருக்கு அறிவுறுத்தப்பட்ட மெய்ப்பொருள் யாது?

'அரிதாகிய மெய்ப்பொருளுக்கு அடியேன்
உரிதா வுபதேசம் உணர்த்தியவா[57]'

என்று கூறுவதால் அப்பொருள் அரிதானது. அஃது ஐம்பூதங்களையும், நான்மறையையும், ஞானத் தேடலையும், அருணைப்பதியையும் உள்ளடக்கியது. அவ்வறிவுறுத்தல் மரண பயத்தினை அவரிடமிருந்து நீக்கியது. 'கூ கா என என் கிளை கூடி அழப் போகா வகை மெய்ப்பொருள் பேசியவா' என்பதிலிருந்து இதனை அறியலாம். முருகப்பெருமான் அப்படி எதனை உபதேசித்தருளினான்?

'யானாகிய என்னை விழுங்கி வெறும்
தானாய் நிலைநின்றது தற்பரமே[58]'

உயிர் உடம்போடு சேர்ந்துகொண்டிருந்த 'யான்' என்னும் உணர்வை இறைவன் நீக்கினான். சிவமாக விளங்குகின்ற சுகானுபவ நிலையை உயிருக்குத் தந்தான். இதனை நம்மாழ்வார் 'கோனேயாகி நின்றொழிந்தான் என்னை முற்றுயிர் உண்டே' என்று கூறுவர். உயிர் வினையை உண்ண வேண்டும். உயிரை இறைவன் உண்ண வேண்டும். 'சித்த மலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்' என்பர் மாணிக்கவாசகர். மெய்யே என நம்பிய உலக வாழ்வை வினையின் விளைவு என உணர்தற்குரிய ஞானத்தை இறைவன் அருள் செயல் வேண்டும். 'ஆதாரம் இலேன் அருளைப் பெறவே நீதான் ஒரு சற்றும் நினைந்திலையே' என்று அருணகிரியார் கூறுவர். அவனருளாலே அவன்தாள் வணங்கி என்பர் மாணிக்கவாசகர். 'எனக்கு நின் இரு தாள் தா' என அருணகிரி வேண்டினர். வானோர்க்கும் ஏனோர்க்கும் வசப்படாத முருகப்பெருமான் அருணகிரிச் சேயை நினைந்தனன். அச்சேய் அழுதது; துன்புற்று அரற்றியது. அழுததும் அரற்றியதும் தமக்காக அன்று. உலக உயிர்க் கணத்திற்காக. காம நெருப்பிலும், பிணிக்கடலிலும் துயருறும் அவர்களின் இன்னல் தீர வேண்டி

57. கந்தரநுபூதி 20
58. கந்தரநுபூதி 28

அருணகிரியார் வேண்டினர். இறைவன் அவர்க்கு இரங்கி உபதேசித்த பொருள் இன்னது என அவர் குறிக்கத் தயங்கவில்லை.

'செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இரு சொல்லற என்றலுமே
அம்மா பொருள் ஒன்றும் அறிந்திலனே[59]'

எல்லாத் தத்துவங்களுக்கும் அடிப்படையானது இது. முருகவேள் ஞானத்தை இயல்பாகப் பெற்றுக் கொண்டவர் என்பதை உணர்த்தச் 'செம்மான் மகளைத் திருடும் திருடன்' என்ற கூற்றினால் உணர்த்தினார். அவன் 'பிறவான் இறவான்' என்றமையின், உயிர்களைக் கரையேற்றும் ஒரு தனி முழுமுதலாகக் கருதத்தக்கவனும் ஆதியும் அந்தமும் இல்லாதவனும் என்பன உணர்த்தினார். 'சும்மா இரு சொல்லற' என்பதில் பரந்த மெய்ப்பொருளைச் சின்முத்திரையான் உணர்த்துவது போல எளிமையாய் உணர்த்தினார். சும்மா இருத்தலாது யாது? விழித்துக் கொண்டிருக்கும் போதே மனோவியாபாரம் அற்று இருத்தலே சும்மா இருத்தல் என்பர். ஆர்ப்பரிக்கும் அலை கடலாக இருக்கும் உள்ளம் சலனமின்றி ஆதல்போல எவ்வியக்கமும் சிந்தனையுமற்ற சூனியநிலைக்கு மனத்தை உள்ளாக்குதல் எளிதா? குருவாக வந்து இறைவன் நம்பெருமான் உள்ளத்தில் நிலைபெறுமாறு உணர்த்தி மெய்ப்பொருள் எத்தகையது? காரியமாகப் புலப்படும் பிரபஞ்சமும் இல்லை; அதனைப் படைக்கக் காரணமாக நிற்கும் மாயையும் இல்லை. உள்பொருளும் இல்லை; இல்பொருளும் இல்லை. இருளும் இல்லை; ஒளியும் இல்லை. இத்தகைய பொருண்மை சீவன் முத்தர் உள்ளத்தில் நிலைபெற நிற்பதற்கே இறைவன் 'சும்மா இரு' என்றனன். அவ்வாறு இருக்கக் கூறி அத்தகைய யோக நித்திரையில், மனம் கன்றிச் சிவக்கச் சிவக்கச் சிந்திப்பதை விட்டொழித்து ஒன்றுமற்ற அகண்ட வெளியாய் நிற்கும்போது, முருகன் முன்னர்த் தம் தந்தைக்கு உபதேசித்த ஓங்காரத்தின் உட்பொருளை உபதேசித்தனன். ''நம என்று அரனார் ஓதாய் என ஓதியது எப்பொருளோ'' அப்பொருளை உரைத்தனன் என்பர். அப்பொருளின் பொருள் யாது? திருப்புகழ் அதனைத் தெளிவுறுத்துகின்றது.

'அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே'

அறிவை அறிவதே அப்பொருள். மெய்ப்பொருள் காண்பது அறிவு என்றார் திருவள்ளுவர். உலகம் உள்ளவாறு நமக்குத்

59. கந்தரநுபூதி 12

தோன்றுவதில்லை. அத்தோற்றம் பொய். அதனை உண்மையென நினைந்து உலகத்தை உணர்ந்துவிட்டதாகக் கருதும் உயிர் சகச மலமாகிய ஆணவத்தால் எல்லாமறிந்ததாகப் பேசுகின்றது; எண்ணுகின்றது. இந்நிலையிலேயே 'சும்மா இரு' என்ற கட்டளை பிறந்தது. மாயையினின்றும் படைக்கப்பட்ட உலக நிலையை உயிர் உள்ளவாறு உணர்தற்குரிய அறிவையே பெருமான் உபதேசித்தருளினன். 'சும்மா' என்ற இச்சொல் இலக்கிய உலகில், தத்துவார்த்தப் புலப்பாட்டில் அருணகிரியாராலேயே முதன்முதல் கையாளப் பெற்றது.

## அனுபூதியின் பெருமை

தன் இயல்பும், குணமும், மனமும் கெடச் சமாதிப் பயிற்சி செய்த நிலையில், இறைவன் உயிரோடு இரண்டறக் கலந்து நின்ற நிலையில், 'தன்னந்தனி நின்றது தான் அறிய' என்றனர். இந்த நிலை, இந்த அனுபூதி வேறெவர்க்காவது கிட்டுமா? கிட்டாது என்கிறார் அருணகிரியார். இது ஞானத்தாற் பெற்ற ஆனந்த நிலை.

'தேடிக் கண்டு கொண்டேன் திருமாலொடு நான்முகனும்
தேடிக் காணொ ணாத் தேவனை என்னுள்ளே
தேடிக் கண்டு கொண்டேன்[60]'

என்பர் திருநாவுக்கரசர். இந்த அனுபூதியாகிய அனுபவத்தை அருணகிரியார் உலக மக்கள் எல்லார்க்கும் தான் அனுபவித்தவாறு கூறக்கூடாதா எனக் கேட்கலாம். ''அறிவார் அறிகின்றது அல்லால் எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பது'' என அவர் கூறும் விடையால் நமக்குத் தெளிவு ஏற்படும். அனுபூதி நிலையை எவ்வாறு அடையலாம் என்பதை அருணகிரியார் தெளிவுபடுத்தத் தவறவில்லை.

1. முருகன் திருவடிவைக் காணாத விழியும் கருதாத மனமும் முன்விதியால் வந்தவை. (52) அப்பழவினை அகல அப்பெருமானின் திருவடிகளைச் சிந்தித்தல் ஒன்றே செயத்தக்கது.
2. இறைவனைக் குறித்துத் தியானம் செய்யாதோர் அவன் திருவருளைப் பெறார்; வினையிலிருந்து விடுபடார்; உடம்பு அழுகும் தொழுநோயைப் பெற்று உழல்வர். (54)
3. 'ஊழ்வினை நீடுமதோ' என்று இறைவனை வேண்டிடப் பழவினைகள் நீங்கும். (56)

60 திருநாவுக்கரசர் தேவாரம் திரு அங்கமாலை.

4. நின் திருவடிகளைத் தொழும் பரிசே பரிசாக அருள்வாய் என இறைவனை வேண்டுதல் தக்கது. (57)
5. தையலார் மையலைத் தவிர்த்தருள்க என வேண்டுதல் தக்கது. பிரபஞ்ச மாயை என்னும் சேற்றிலே எனை அழுந்தாமல் காப்பாய் என வேண்டுதல் தகும். (89) சுற்றம், பற்று என்ற கானல் நீரிடத்து மனம் செல்லாதவாறு அருள்க எனக் கேட்டால் பொருந்துவது. (90) மெய், வாய், விழி, நாசி, செவி என்ற ஐம்புலன் வழி செல்லும் நிலையைத் தவிர்த்தருள் என இறைஞ்சுதல் இனியது. (14)
6. பேராசை என்னும் பிணியிற் படாது இருக்க அருள்க என விண்ணப்பித்துக் கொள்வது உரியது. (16)
7. மாயையில் இடப்பட்ட யான் அறியாமையாற் செய்யும் செயல்களைப் பொறுத்தருள்க என்பது உரியது. (29)

இவ்வேழு வகையில் இறைவனை வேண்ட உயிர் ஒரு யோக சமாதி நிலையில் சொல்லறச் சும்மா இருந்து மெய்ப்பொருளை அறியும்படியாக இறைவன் செய்வான் என்பதை அனுபூதி உணர்த்துகின்றது. இறைவனைப் பணிந்தும் தணிந்தும் வேண்டுகின்ற நிலையிலும் இறைவன்பால் அடியவர் கொண்டுள்ள உறவும் உரிமையும் வெளிப்படுகின்றன.

'பாழ்வாழ்வு எனும் இப்படுமாயையிலே
வீழ்வாய் என என்னை விதித்தனையே
தாழ்வானவை செய்தன தாமுளவோ
வாழ்வாய் இனிநீ மயில்வாகனனே[61]'

என்ற பாட்டில் ''மயில்வாகனத்தில் ஏறிவரும் பெருமாளே! பயனற்ற வாழ்வு என்று சொல்லப்படும் இந்த சாவதற்குரிய மாயாப்பிரபஞ்சப் படுகுழியில் வீழ்ந்திருக்கக் கடவாய் என்று என்னைப் படைத்தாயோ? கருதத் தகாத செயல்களை நான் செய்துவிட்டேனோ? எனக்கு நீ அருளாமைக்குக் காரணம் உளதோ? நீ அருளவில்லையானால் வாழ்ந்து போவாய்''. சுந்தரர் ஆரூரில் இறைவனைப் பாடும்போது,

'விற்றுக் கொள்வீர் ஒற்றி அல்லேன் விரும்பி ஆட்பட்டேன்
குற்றம் ஒன்றும் செய்ததில்லை கொத்தை ஆக்கினீர்
எற்றுக்கு அடிகேள் என்கண் கொண்டீர் நீரே பழிப்பட்டீர்
மற்றைக் கண்தான் தாராது ஒழிந்தால் வாழ்ந்து போதீரே[62]'

61. கந்தரநுபூதி 31
62. சுந்தரர் தேவாரம் திருவாரூர்ப் பதிகம்

என்று பாடும் உரிமை நிலையை நாம் அருணகிரியாரிடம் காணலாம். இத்தகைய பாடல்கள் 'பழிப்பது போலப் புகழும்' (நிந்தாஸ்துதி) நெறியமைந்த பாடல்களுக்கு ஊற்றுக்கண்ணாக அமைந்தன.

## அநுபூதியின் நோக்கம்

அருணகிரியார் கந்தரநுபூதியைத் தம் நலனுக்காக இசைக்கவில்லை. நாள்தோறும் உலகர் இறைவனை வேண்டிப் பாடுதற்கும், துன்பங்களை நீக்கிக் கொள்ளுதற்குமே பாடினர். பாராயணமாகப் படித்து ஓதி வழிபடற்கு ஏற்ற நூலாகப் பலராலும் இந்நூல் கொள்ளப் பெறுகின்றது. ஒருவன் தன் மனத்திற்கு அறிவுறுத்துகின்ற வகையிலும், முருகப்பெருமானோடு நேராகப் பேசுகின்ற பாங்கினும் அமைந்தன இப்பாடல்கள்.

'கெடுவாய் மனனே கதிகேள் கரவாது
இடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவேதனை தூள்படவே
விடுவாய் விடுவாய் வினையாவையுமே[63]'

என்ற பாட்டில் மனத்தைத் தன்வயப்படுத்திப் பின் இறைவயப்படுத்தற்காம் முயற்சியைக் கூறினார். 'வினை யாவையும் விடுவாய் விடுவாய்' என்றது ஆகாமியம், பிராரத்தம், சஞ்சிதம் என மூவகைப்பட்ட வினையையுமாம். வினையை ஒழித்தல் என்பது இறைவன் உயிர்களுக்குச் செய்யும் பேருதவியாகும்.

'வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் விளைக்கேடன் என்பாய் போல
இனையன்நான் என்று உன்னை அறிவித்து என்னை
ஆட்கொண்டு எம்பிரான் ஆனாய்க்கு...[64]'

என்று மாணிக்கவாசகரும் இறைவன் வினை கெடுத்து உயிரை ஆளுதலைக் கூறுகின்றார். மனம் இறைவன் வயப்பட நின்றால் இறைவன் உயிர்க்கு மெய்ப்பொருள் உணர்த்துவான். இறைவன் உயிர்க்கு வழங்கும் மெய்ப்பொருளால் மூன்று கெடும் என்கிறார் அருணகிரியார். அமரும்பதி, கேள், அகம் என்பன அவை. வாழும் ஊர், உறவு, வீடு என்ற மூன்றும் பற்றற இறைவன் மெய்யறிவு தருவன்.

---

63. கந்தரநுபூதி 7
64. திருவாசகம், திருச்சதகம் 22

மனம் இறைவனைப் பற்றுதற்கு என்ன செய்ய வேண்டுமென்பதையும் அருணகிரியார் தெளிவுபடுத்தியுள்ளார். 'மனமே! மெய் வாய் விழி நாசி செவி என்ற ஐந்தின் வழியிலே செல்லும் ஆசையை விடுவாய்' என அறிவுறுத்துகின்றார். திருவள்ளுவர் இதுவே அறிவுடைமை என்பர்.

'சென்ற விடத்துச் செலவிடாது தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு[65]'

குதிரையைப் புலமறிந்து செலுத்துகின்ற வாதுவன் போல மனமும் அறிவுக் கடிவாளத்தால் ஐந்து புலன்களைக் கட்டுக்குட்படுத்த வேண்டும். மனத்தின் இயல்பு ஒன்றை விரும்புதல். அவ்விருப்பம் அளவிற்குட்பட்டதாகவும் அறந்தழுவியதாகவும் இருக்க வேண்டும். மனம் அளவான ஆசையோடு அமையாது. பேராசை கொள்ளத் தூண்டும். எல்லா மனிதரையும் பிணிக்கும் இந்தப் பிணியை நம் ஐந்து புலன்களும் தூண்டி வளர்க்கும் இயல்புடையன. சிவஞான போதம், 'அரச குலத்திலே பிறந்த ஒருவன் மிக இளமையிலிருந்தே ஐந்து வேடர்களின் வளர்ப்பினில் இருந்தான். தான் அரசன் மகன் என்பதையே அவன் அறியமாட்டான். ஆனால் இறைவன் தன் கருணையால், அவனை அணுகி அவன் அரசன் மகன் என்பதைக் குருவாக இருந்து கற்பித்து அவனுடைய உண்மை நிலையை உணரச் செய்வான். அதுபோல உயிர் ஐம்புலன்களின் பிடியில் சிக்கி உண்மை அறியமாட்டாது நிற்கிறது. அதற்கு இறைவன் உண்மையை உணர்த்துவன்' என்று கூறும்.

'மக மாயைகளைக் களைந்திட வல்லபிரான்' என்று அருணகிரியார் நம்மை மாயையிலிருந்து விடுவிப்பவன் இறைவனே என்பதை உணர்த்தினார். எனவே ஒருவர் தம் மனத்திற்கு அறிவுறுத்தும் வகையில்,

'கிரிவாய் விடு விக்ரமவேல் இறையோன்
பரிவாரம் எனும் பதம் மேவலையே
புரிவாய் மனனே பொறையாம் அறிவால்
அரிவாய் அடியோடும் அகந்தையையே[66]'

என்று கூறுகிறார். ''மனமே! கிரவுஞ்ச மலையின் மீது செலுத்திய வேற்படையினைக் கொண்ட இறைவனுடைய அடியார்

65. திருக்குறள் 422
66. கந்தரநுபூதி 37

கூட்டத்தைச் சேர்ந்தவன் என்று சொல்லத்தக்க நிலையை அடைய விரும்பாமல் இருக்கின்றாயே! இனியாவது நீ அதனை விரும்புக! நிலைபெற்ற அறிவு என்னும் வாளால் அகங்காரம் என்னும் 'கொடியை அறுத்தெறிவாய்'' என்பது இப்பாட்டின் பொருள். ''அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும் தொழும்பர் உளக் கோயிற்கு ஏற்றும் விளக்கே!'' என்பர் குமரகுருபரர். மனத்தில் இருக்கும் அகந்தை அகன்றால்தான் இறைவன் அங்குக் குடிவர முடியும். இவ்வாறு மனம் நோக்கிக் கூறிய பாடல்கள் அநுபூதியில் உள்ளன.

இறைவனிடம் ஒருவர் நேரே பேசுவது போன்ற அமைப்பில் உள்ள பாடல்களும் அநுபூதியில் உள்ளன. அவை இரண்டு வகைப்படும். அவையாவன : 1. அநுபூதி கிடைக்குமுன் பாடியன; 2. அநுபூதி கிடைத்தபின் பாடியன.

'அய்யாம் உடல் ஊண்மயமாய் உளதால்
அய்யாறு ஆறும் அறிவித்து அருள்வாய்
செய்யா! முருகா! திகழ்வேல் அரசே
அய்யா! குமரா! அருளா கரனே![67]'

இஃது அநுபூதி கிடைக்குமுன் பாடியது. இந்த உடல் ஐயத்திற்கிடமானது; ஊண்மயமாய் உள்ளது. எனவே முப்பத்தாறு தத்துவங்களையும் நீ அல்லவென்று நீக்கி எனக்கு என் உண்மை வடிவை அறிவித்தருள்வாய் என வேண்டுகிறது இப்பாட்டு.

'உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே![68]'

எனக் குருவடிவாக வந்து தமக்கு அநுபூதி வேண்டும் பாட்டும் இத்தகையது. அநுபூதி பெற்றபின் பாடும் நிலையில்,

'தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினது அன்பு அருளால்
ஆசா நிகளம் துகள்ஆ யினபின்
பேசா அநுபூதி பிறந்ததுவே[69]'

67. கந்தரநுபூதி 79 (இவர் பாடியது இல்லை எனவும் மொழிவர்)
68. கந்தரநுபூதி 51
69. கந்தரநுபூதி 43

எனப் பாடுகின்றார். 'தூய முத்து மாலையையும் பட்டாடையையும் தரித்த வள்ளி நாயகியின் காதலனே! முருகனே! உன்னுடைய அன்பின் முதிர்ச்சியான கருணையெனும் வாளினால் என் ஆசை விலங்கு தூளாய் அழிந்த நிலையில் கூறுதற்கு முடியாத அநுபூதி எனக்குக் கிட்டியது' என்பது இப்பாட்டின் பொருள்.

இறைவன் பரஞானமாகிய அநுபூதியை வழங்க வேண்டுமெனில் உயிரைப் பற்றிய அபர ஞானம் விலக வேண்டும். இவ்வுலகில் இதுகாறும் கற்ற சாத்திரக் கலைகளின் அறிவு பொய்யானது என்று உணர வேண்டும். இதனை அருணகிரிப் பெருமான் ''கலையே பதறிக் கதறித் தலை ஊடலையே படுமாறு அதுவாய் விடவோ'' என்று கூறுகின்றார். நான் அந்தச் சாத்திரங்களின் மயமாய் இருக்கலாமா என்று கேட்கிறார். ஆகவே உலக இன்பம், உலகப்பற்று, உலக ஞானம் ஆகியவை அகலவே அநுபூதி பெற வேண்டுமென்பதும், அதனைப் பெற்ற நிலையில் உயிர் முத்தி நிலையில் இறைவன் திருவடியிற் சேரும் என்பது இந்நூலில் உணர்த்தப்பெற்றது.

இந்நூலிலும் அருணகிரியார் தையலார் பாற்கொண்டு துயருறும் மையல் நோய் பற்றிப் பேசுகின்றார். இஃது உலகர் பலரையும் ஆட்படுத்துவது. வானக வாழ்வில் இறைவனுக்கு அணுக்கத் தொண்டு செய்து கொண்டிருந்த ஆலால சுந்தரரும் தையலாரிடத்து மையலுற்று மனம் போக்கியமையால் மண்ணுலகிற் சுந்தரராய்ப் பிறக்க நேர்ந்தது. இந்நிலையில் அவ்வின்பத்தைக் கடிந்து பேசுவது அருளாளரின் கடமையாகிறது.

'கூர்வேல் விழி மங்கையர் கொங்கையிலே
சேர்வேன் அருள்சேரவும் எண்ணுமதோ
சூர் வேரொடு குன்று தொளைத்த நெடும்
போர் வேல! புரந்தர பூபதியே![70]'

என்ற பாட்டு சிற்றின்பத்தைத் துறப்பதை மட்டும் கூறுவதோடு அமையவில்லை. பேரின்பப் பொருளாவது யாது என்பதையும் உணர்த்துகின்றது. மாதர் விழிக்கூர்மையில் மனம் மயங்காமல் முருகனின் வேலின் கூர்மையை நினைக்க வேண்டும். குன்று நிகர்த்த மாதர் மார்பகங்களில் மனம் பற்றாது குன்று தொலைத்த கூர்வேல் குமரனிடம் சிந்தை பற்றுமாறு செலுத்த வேண்டும். மனத்தில் காமப்போர் நிகழாமல் சூரனை வேரறுத்த

70. கந்தரநுபூதி 24

முருகப்பெருமானின் அருட்போரிலே உள்ளம் பதிய வேண்டும். இவ்வாறு இருநிலைகளை இந்த அநுபூதிப் பாட்டு உரைக்கக் காணலாம்.

கந்தரநுபூதி சொல்லும் கருத்துக்களில் மிகவும் கருதுதற்குரியது ஒன்றுள்ளது. 'இவ்வுலக வாழ்வு அநியாயம்' (99) என்று கருதுபவரே முருகன் கழல்களை அடைதற்குரியவர் என்பது கருதுதற்குரிய அக்கருத்தாகும். நியாயமற்ற ஒன்று எவ்வாறு வந்தது? வினையால் வந்தது. வினை செய யாது காரணம்? பொறி புலன்களும் பேராசையும் சிற்றின்ப நாட்டமும் காரணம் என இவை எல்லாம் உயிரை நீங்குங் காலத்தில் அநுபூதி சித்தியாகும் என அருணகிரியார் தெரிவிக்கின்றார். அநுபூதியின் பயனாகக் கிட்டும் திருவடிப் பேறு எத்தகையது என நூலின் இறுதிப்பாட்டு எடுத்துரைக்கின்றது.

'ஆளாய் அயில்வேள் அடியிற் பணிவார்
கோளார் பிறரைக் குறிசெய்து அழியார்
மாளார் சமனால் மறுகார் பகையால்
மீளார் வினையால் வெருவார் அவமே[71]'

கந்தவேளின் கழல் பணிவார் வறுமை உறார்; துன்பமும் யம பயமும் அடையார்; பகையும் பிறப்பும் அச்சமும் எய்தார், எனக் கூறினார்.

## திருஎழு கூற்றிருக்கை

எழுகூற்றிருக்கை என்பது சிற்றிலக்கிய வகையுள் ஒன்று. சித்திரக் கவி வகையிலும் இஃதொன்றாம். ஒன்று முதல் ஏழுவரையும் எண்கள் முறையே ஒவ்வொன்றாக ஏறியும் இறங்கியும் வருமாறு கூறப்படும் மிறைக்கவி வகை எழுகூற்றிருக்கை ஏன்பர்.

'ஒன்று முதலா ஓர்ஏழ் ஈறாச்
சென்றஎண் ஈரேழ் நிலந்தொறும் திரிதர
எண்ணுவ தொன்றாம் எழுகூற் றிருக்கை[72]'

என்பர் இலக்கண நூலார். தேவாரத்தில் திருஞானசம்பந்தர் பாடிய எழுகூற்றிருக்கை உள்ளது. யாப்பருங்கல விருத்தி இவ்வகை இலக்கியத்திற்கு இரண்டு எடுத்துக்காட்டுகள் தந்துள்ளது.

71. கந்தரநுபூதி (இவர் பாடியது இல்லை எனவும் கூறுவர்)
72. மாறலைங்காரம் 297

இவற்றைத் தவிரப் பதினொன்றாம் திருமுறையில் நக்கீர தேவர் பாடிய எழுகூற்றிருக்கையும் நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் திருமங்கை யாழ்வார் பாடிய எழுகூற்றிருக்கையும், மாறலைங்காரத்தில் திருக்குருகைப்பெருமாள் கவிராயர் சடகோபர் மேல் பாடியுள்ள எழுகூற்றிருக்கையும் உள்ளன. இந்நெறியிலமைந்தது அருணகிரியார் அருளிய எழுகூற்றிருக்கை என்னும் 32 அடிகளைக் கொண்ட இணைக்குறள் ஆசிரியப்பா.

**பாட்டின் கருத்து**

ஒரு பொருளாகிய பிரணவமாம் முழுமுதலின் ஒருவகையாக ஆறுமுகம் கொண்டு, சத்தியும் சிவமும் ஓருருவாய்ப் பொருந்த, அச்சத்தி சிவம் ஆகிய இரண்டிடத்தும் தோன்றி மூப்பின்றி என்றும் இளையவனாய் இருந்தனை.

இரு பிறப்புகளைக் கொண்ட அந்தணருள் ஒருவன் ஆயினை.

பிரணவப் பொருளை அறியாத பிரமனின் குடுமியை இமைக்கும் பொழுதில் கலையச் செய்து, அரன் அரி இந்திரன் ஆகிய மூவரும் உன்னிடம் வந்து நின் இருதாள் பற்றி வேண்டச் சிறைபிலிருந்து பிரமனை விடுவித்தாய்.

ஒரு நொடிப்போதில் இரு சிறகுடைய மயிலின் மீது ஏறி முந்நீராகிய கடலைக் கடந்து நானிலம் அஞ்ச வலம் செய்தனை.

நான்கு தந்தங்களையும் மும்மதங்களையும் இரு செவிகளையும் ஒரு துதிக்கையையும் கொண்ட ஐராவதத்தை உடைய இந்திரன் மகள் தேவசேனையை மணந்து கொண்டனை.

யானை வடிவில் இருவகைத் தோற்றத்தோடும், மும்மதத்தோடும் நால்வாயோடும் ஐங்கரத்தோடும் உற்ற பிள்ளையார்க்குத் தம்பி ஆனாய்.

ஐந்தெழுத்தை மூலமாகக் கொண்ட நான்கு வேதங்களும் கூறுகின்ற முக்கட் சுடருடையவரும், இருவினைகளை ஒழிக்கும் ஒரு மருந்தாய் விளங்குபவருமான சிவனுக்குக் குருவாய் அமர்ந்தாய்.

முன்னொரு நாள் உமையின் பாலருந்தி, முத்தமிழ் விரகன், நாற்கவி ராஜன், ஐம்புலக் கிழவன், அறுமுக ஒருவன் எனக் கூறுமாறு சீர்காழியில் தோன்றியருளினாய்.

அறுமீன் எனப்பெறும் கார்த்திகை மாதரின் மகனாய் விளங்கி ஐவகைத் தெய்வ மரங்கள் உள்ள பொன்னுலகின் தலைவனாகத்

திகழ்ந்து, நான்கு வகையான தோற்றங்களில் ஒன்றானதும் முத்தலைக் கொண்டையை உடையதுமான கிரௌஞ்சப் பறவைப் பெயர் கொண்ட மலையைப் பிளந்தனை.

காவிரியின் வடகரையில் உள்ள குருமலை எனப்பெறும் சுவாமி மலையில் குமாராய நம எனும் உனது ஆறெழுத்து மந்திரத்தை அந்தணர்கள் போற்ற ஏரகத்து இறைவனாக வீற்றிருக்கின்றனை.

இவ்வாறு எழுகூற்றிருக்கை நடக்கக் காணலாம். இத்தகைய சொல்லலங்காரப் பாடல்களைப் பலரும் பாடியிருப்பினும், காலநிலையை ஒட்டி அருணகிரியாரும் இதனைப் பாடினார் எனலாம். மேலும் முருகப்பெருமான் மீது இவ்வகை இலக்கியமும் பாடப் பெற்றிருக்க வேண்டுமென்று அவர் கருதியிருக்கலாம். சொல்லலங்காரத்தில் அவர் உள்ளம் சென்றதைவிடத் தாளக்கட்டும் லய வேறுபாடுகளும் மிக்க இசைப் பாமாலைகளில் அவர் உள்ளம் அதிகம் சென்றுள்ளது என்பது தெளிவாக அறியப் பெறுகின்றது.



# 3. அருணகிரியாரின் சமய நெறியும் தத்துவக் கோட்பாடும்

அருணகிரியார் சைவ நெறியில் வந்தவரே. எனினும் முன்னைய சைவ சமயச் சான்றோர்களிலிருந்து சில நோக்கில் இப்புலவர் பெருமான் வேறுபட்டு விளங்குகின்றார். வைணவ சமயத்தையும் சைவ சமயத்தோடு இணைத்துப் பார்க்கும் ஒரு பொதுநோக்கை அருணகிரியார் கொண்டிருக்கின்றார்.

'கலைகொடு பவுத்தர் காம கருமிகள் துருக்கர் மாய
கபிலர் பகரக் கணாதர் உலகாயர்
கலகமிடு தர்க்கர் வாம பயிரவர் விருத்த ரோடு
கலகலென மிக்க நூல்கள் அதனாலே
சிலுகியெதிர் குத்தி வாது செயவும் ஒருவர்க்கு நீதி
தெரிவரிய சித்தியான உபதேசம்
தெரிதர விளக்கி ஞான தரிசனம் அளித்து வீறு
திருவடி எனக்கு நேர்வது ஒருநாளே![1]'

என்று பிற சமயங்களுக்கு மேலான ஞானத்தைத் தமக்கு அருள்பவர் முருகப்பெருமான் எனக் குறிக்கின்றார். சம்பந்தரோடு வாது செய்த சமணரை அவர் 'சமண்மூகர்' எனக் குறிக்கத் தவறவில்லை.

'புகலி வனப்பேறப் புகல்
மதுரைமன் வெப்பாறத் திகழ்
பொடிகொடு புற்பாய் சுற்றிகள் கழுவேற[2]'

எனக் கடுமையாகச் சமணர்களின் தோல்வியைப் பற்றிக் கூறவும் தயங்கவில்லை. சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர்

1. திருப்புகழ் மேலது 166
2. திருப்புகழ் மேலது 148

ஆகியோருக்குச் சிவபெருமான் அருள் செய்த நிகழ்ச்சிகளைப் பாடும் அவர் இராமாயண, பாரதப் போர் நிகழ்ச்சிகளைக் காட்டித் திருமாலின் வெற்றியையும் ஆற்றலையும் போற்றுகின்றார். முருகனைப் போற்றுவதே நோக்கமெனினும், அம்முருகன் திருமாலின் மருமகன் என்பதையும் அத்திருமால் பல வெற்றிகளை ஈட்டிப் புகழ் கொண்ட நிலையினர் என்பதையும் அருணகிரியார் குறிக்கக் காணலாம். சம்பந்தர், அப்பர் ஆகியோர் இராவணனின் அழிவைப் பாடுகின்றனர்; ஆனால் இராமனால் வெற்றி கொள்ளப் பெற்ற நிலையைப் பாடும்போது கூட,

'கோடிமா தவங்கள்செய்து குன்றினார் தம்மை எல்லாம்
வீடவே சக்கரத்தால் எறிந்துபின் அன்பு கொண்டு
தேடிமால் செய்த கோயில் திருஇரா மேச்சு ரத்தை
நாடிவாழ் நெஞ்சமே நீ நன்னெறி ஆகு மன்றே[3]'

என்று சிவபெருமான் திருமாலுக்குக் கொடுத்த சக்கராயுதத்தால் வெல்லப்பட்டான் இராவணன் என்பர். பல இடங்களில் தேவாரம், இராவணன், சிவபெருமான் உறையும் மலையை எடுத்துத் துன்புற்ற செய்தியையே பாடுகின்றது. இராவணனின் ஆணவ மலம் சிவபெருமானால் அழிக்கப்பெற்றதனைப் பாடுவதே தேவார ஆசிரியர்களின் குறிக்கோளாக இருந்திருக்கின்றது. ஆனால், இராமன் இலங்கையின்மீது படைகொண்டு சென்ற வெற்றியினை அருணகிரியார் மிகச் சிறப்பாகப் பாடுகின்றார். இராவணன் வீழ்ச்சி மட்டுமன்றி இராமன் அரக்கர் பலரை வீழ்த்திய வெற்றியும் அருணகிரியாரால் பாடப்பெறுகின்றது.

'ஓலமிடு தாடகை சுவாகு வளர் ஏழுமரம்
வாலியொடு நீலி பகனொடு ஒருவிராதன் எழும்
ஓதக் கடலோடு விறல் ராவண குழாம் அமரில் பொடியாக

ஓகைதழல் வாளிவிடு மூரிதநு நேமிவளை
பாணி திருமார்பன் அரிகேசன்...[4]'

என்று பாடும் நிலையை வேறெந்தச் சைவர் பாட்டிலும் காண இயலாது. இவ்வாறு திருமாலையும் இணைத்துப் பெருமையோடு பாடுவதற்குரிய காரணம் இங்கு ஆராயத்தக்கது.

---

3. திருநாவுக்கரசர் தேவாரம், இராமேச்சுரம் 8
4. திருப்புகழ் மேலது 993

'ஆலம் அமுதாக உண்ட ஆறுசடை நாதர் திங்கள்
ஆடரவு பூணர் தந்த முருகோனே
ஆனைமடு வாயிலன்று மூலமென ஓலமென்ற
ஆதிமுதல் நாரணன்றன் மருகோனே[5]'

என இரு தெய்வத்தையும் ஒரு நிகராகக் கூறுதற்குரிய நிலையை அவருடைய திருப்புகழ் கொண்டே காணல் முறையாகும். சிவபெருமானை முழுமுதலாகக் கொண்ட சைவ சமயம் சிவனை அருவம், உருவம், அருவுருவம் என்ற மூன்று வகையில் வழிபட்டுப் போற்றியது. இவற்றுள் உருவத் திருமேனியாகப் பல சிவ வடிவங்களைத் தோற்றுவித்தது. அர்த்தநாரீச்சுரர், சோமாஸ்கந்தர், பிட்சாடனர், நடராசர், தட்சணாமூர்த்தி எனப் பல வடிவங்களில் சிவனைக் கண்ட சைவம் 'யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி மாதொரு பாகனார் தாம் வருவர்' என எல்லா வடிவ உருவங்களையும் சிவ பரம்பொருளாகக் கருதிப் போற்றியது. இந்நிலையிலேயே முருகப்பெருமானின் திருஅவதாரம் நிகழ்ந்தது. அப்பெருமான் சிவனன்றி வேறல்லன்.

'அருவமும் உருவமும் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி ஆகக்
கருணைகூர் முகங்களாறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய[6]'

என்று கந்தபுராணம் முருகப்பெருமான் சிவனே என்பதைத் தெளிவுறுத்தும். சிவம் செயற்படுங்கால் சத்தியாகும். எனவே அச்சத்தியே முருகனை உருவாக்கினள்; வீரச் செயல்களின் பாற்படுத்தினள். அருணகிரிப் பெருமான் முருகன் தோன்றியமையினை,

'களிமயில் சிவனுடன் வாழ்ந்த மோகினி
கடலுடை உலகினை ஈன்ற தாய்உமை
கரிவன முறையகிலாண்ட நாயகி அருள்பாலா[7]'

என்று கூறுகின்றார். தோன்றி வளர்ந்த முருகன் தேவர்களைச் சூரனின் கொடுமையிலிருந்து விடுவிக்கும் கடமை பூண்டார். ஞானசக்தி அவருக்கு வேற்படையாக அளிக்கப்பெற்றது.

5. திருப்புகழ் மேலது 714
6. கந்தபுராணம்
7. கந்தபுராணம்

சிவபெருமானும் திருமாலும் இந்திரனும் சூரனை வெல்ல முடியாத சூழலில், உமையம்மையாகிய சக்தி அளித்த வேல் கொண்டு முருகன் சூரனை வதை செய்தார்.

'வெங்காள கண்டர்கைச் சூலமும் திருமாயன்
வெற்றிபெறு சுடராழியும்
விபுதர்பதி குலிசமும் சூரன் குலம்கல்வி
வெல்லா எனக்கருதியே
சங்க் ராம நீசயித்தருள் எனத்தேவரும்
சதுர்முகன் நின்று இரப்பச்
சயிலமொடு சூரனுடல் ஒருநொடியில் உருவியே
தனியாண்மை கொண்ட நெடுவேல்
கங்காளி சாமுண்டி வாராகி இந்த்ராணி
கௌமாரி கமலாசனக்
கன்னி நாரணி குமரி த்ரிபுரை பயிரவி அமலை
கௌரி காமாட்சி சைவ
சிங்காரி யாமளை பவானி கார்த்திகை கொற்றி
த்ரியம்பகி அளித்த செல்வச்
சிறு அறுமுகன் முருகன் நிருதர்கள் குலாந்தகன்
செம்பொன் திருக்கை வேலே[8]'

என்று அவர் கைக்கொண்ட வேலின் சிறப்பை அருணகிரி முனிவர் பாடுகின்றார். முருகப்பெருமான் ஒருவரே சூரனை வெல்லத்தக்கவர் என்று கந்தபுராணமும் திருப்புகழும் திருவகுப்பும் கூறுகின்றன. முருகனைப் பயந்த சக்தியின் பற்பல பெயர்கள் அருணகிரியாரால் கூறப்பெறுகின்றன. சக்தி, திருமால், சிவன் என்ற முப்பேராற்றல் களின் கூட்டாக முருகப்பெருமான் சித்திரிக்கப் பெறுகின்றார். இம்மூன்றையும் முருகனாகக் கலந்தினிது காண்கின்ற நிலையை அருணகிரியார் படைக்கின்றார். பிற சமயங்களின் வளர்ச்சியாலும் தாக்குதலாலும் சைவம், வைணவம் ஆகிய இரண்டும் நிலைகுலைந்த நிலையில் இவற்றைப் பண்டு போல் நிமிரச் செய்ய வேண்டிய பொறுப்பைப் பதினைந்தாம் நூற்றாண்டில் அருணகிரியார் ஏற்கிறார். தேவார திருவாசகப் பாக்களால் சைவம் எளிய மக்களைச் சென்றடைந்தது. வைணவமும் ஆழ்வார்களின் பாடல்களால் எளிய மக்களைக் கவர்ந்தது. ஆனால்

8. வேல் விருத்தம் (இவர் பாடியது இல்லை எனவும் கூறுவர்)

இவ்விரண்டிடையிலான போராட்டம், இரண்டையும் வளரவிடாமல் தடுத்தது. இந்நிலையில் தோன்றிய சித்தாந்த சாத்திரங்கள் எளிய மக்களைக் கவரவில்லை. எளிய சிற்றூர்களில் அமைந்த காளி, மாரி, கோயில்கள் கொண்ட பக்தி வழிபாட்டு நெறிகள் சமயப் பேரியாறுகளோடு கலவாமல் தனித்தே இருந்தன. இச்சூழலில் தோன்றிய அருணகிரியார் பிளவுபட்டும் ஒன்றிணையாமலும் இருந்த நாற்பேராற்றல்களை ஒருங்கிணைத்தார். முருக வழிபாடு, சிவநெறி, வைணவ நெறி, சாக்த நெறி ஆகிய நான்கும் ஒன்றிணைக்கப்பட்டதுமல்லாமல், இவற்றை எளிய மக்களிடம் கொண்டு செல்வதற்குரிய இசையோடும் தாளலயத்தோடும் அமைந்த சந்தத்தமிழை உரிய கருவியாக அவர் தேர்ந்து கொண்டார்.

"சைவம் வைணவம் சாக்தம் என்று பிளவுபட்டிருந்த தமிழ் மக்களை முருக வழிபாட்டின் மூலம் ஒற்றுமைப்படுத்த அருணகிரிநாதர் முயன்றிருக்கிறார். பல்லவர் கால நாயன்மார் முருக வழிபாட்டைச் சைவத்துடன் இணைக்க முயன்றது போல, அருணகிரிநாதர் முருக வழிபாட்டைச் சைவத்துடன் மட்டுமல்லாது வைணவம் சாக்தம் என்பவற்றுடனும் இணைக்க முயன்றுள்ளமைக்குச் சான்றுகள் கதிர்காமம் திருகோணமலை என்பன பற்றிய திருப்புகழ்ப் பாக்களிலிருந்து தரப்படுகின்றன.

'திருமக ளுலாவு மிருபுய முராரி
திருமருக நாமப் பெருமாள்'

'சிவகாமி நாயகர் திருக்குமாரனே'

'குறப் பாவையாள் மகிழ்தரு வேளே'

முருகன் சிவபெருமானுடைய புதல்வன். திருமாலுடைய மருமகன் உமையின் புதல்வன், இலக்குமியின் மருமகன், வள்ளியின் கணவன் முதலிய கருத்துக்கள் கௌமாரம் என்ற முருக வழிபாட்டை முக்கியமான பிற இந்து சமயப் பிரிவுகளோடு இணைக்க உதவியிருக்கும்... அருணகிரிநாதர் காலத்திலே தோன்றிய வழிபாட்டு மறுமலர்ச்சியென்ற அலையிலேயே நல்லூர்க் கந்தசுவாமி கோயில் தோன்றியிருக்க வேண்டும்"[9]

என்று தமிழர் சமய வரலாற்றில் அருணகிரியாரால் விளைந்த மாற்றத்தைக் குறிப்பிடுவர். இந்து சமயப் புத்தெழுச்சிக்குத்

9. தமிழர் சமய வரலாறு. ஆ. வேலுப்பிள்ளை ப. 237-38

தமிழகத்திலும் இலங்கையிலும் அடிகோலிய பெருமை அருணகிரியாருடையதே. சமய உலகின் தத்துவ எல்லைகளையும் அவர் விரிவுபடுத்தியிருக்கின்றார். 'அதிமத புராணமும் சுருதிகளுமாகி நின்று அபரிமிதமாய் விளம்புவதோதான்' என்று புராண சாத்திரக் கடலுட்படாமல் எளிய நெறியிலே இறைவனை வழிபடும் நெறியை அவர் தொடங்கி வைத்திருக்கின்றார்.

இறைவன் ஒருவனே எனினும் அவன் பல்வேறு தலங்களிலும் வழிபடுகின்றவர்களுக்குக் காட்சி தருவதற்குரிய திருவுருவோடு விளங்குகின்றமையான் நக்கீரர், தேவாரமூவர், மணிவாசகர் போலத் தலந்தோறும் சென்று அருணகிரியாரும் வழிபடுகின்றார். முருக வழிபாட்டுக்கே முதன்மை கொடுக்கும் நிலையில், அம்முருகனைச் சிவனது வடிவமாகவே காணும் மனப்பாங்குடையவராகத் திகழும் அருணகிரியார் சிதம்பரத்தில் ஆடும் நடராசரை முருகனாகவே காண்கிறார். செந்திற்பதியில் முருகனிடம் 'சிதம்பரத்தில் காட்டியருளிய கோலத்தினை இங்கும் காட்டியருள்க' என வேண்டி அவ்வாறே காட்டப்பெற்று மகிழ்கிறார். யோக நெறிகள் பலவற்றையும் அருணகிரியார் அறிந்திருக்கின்றார். எனினும் செயற்கையான யோகப் பயிற்சிகளையும் உடலை வருத்தி மேற்கொளும் தவமுயற்சிகளையும் அவர் போற்றவில்லை.

'கறைபடும் உடம்பு இராதெனக்
கருதுதல் ஒழிந்து வாயுவைக்
கரும வசனங்களால் மறித்து அனலூதிக்
கவலை படுகின்ற யோக கற்
பனை மருவு சிந்தை போய்விடக்
கலகமிடும் அஞ்சும் வேரறச் செயல்மாளக்
குறைவற நிறைந்த மோனநிர்க்
குணமது பொருந்தி வீடுறக்
குருமலை விளங்கு ஞானசற் குருநாதா[10]'

என்பதில் யோக நெறிகளிலும், செயலற்ற மோனத்திலிருந்து இறைவனை வழிபடுவதே சிறந்தது எனக் கருதக் காணலாம். வழிபடுவோர் உள்ளத்தில் 'சவுந்தரிக மூக சரவண பதமொடு மயிலேறி' வந்து நகையொளியுடன் கூடிய முகமலர்ந்து உபதேசம் செய்வான் இறைவன் என்று அவர் கூறுவது எண்ணுதற்குரியது.

10. திருப்புகழ் மேலது 204

பல நூலும் கற்று வாது செய்யும் சமயவாதிகளின் செயல்கள் அருணகிரியார்க்கு உடன்பாடில்லை. இத்தகைய வம்பு நெறிகளில் அகப்படாது தம்மைக் காக்க வேண்டுமென்று அவர் இறைவனை வேண்டுகின்றார்.

'சங்கைக்கத்தோடு சிலுகிடு சங்கிச் சட்கோல சமயிகள்
சங்கற்பித்தோதும் வெகுவித - கலை ஞானச்
சண்டைக்குட் கேள்வி அலமல மண்டற்குப் பூசையிடுமவர்
சம்பத்துக் கேள்வி அலமலம் இமவானின்
மங்கைக்குப் பாகன் இருடிகள் எங்கட்குச் சாமியென வடி
வந்திக்கப் பேசி அருளிய சிவநூலின்
மந்த்ரப்ரஸ்த் தார தரிசன அந்த்ரத்துக் கேள்வி அலமலம்
வம்பிற் சுற்றாது பரகதி அருள்வாயே[11]'

என்ற இப்பாட்டு ஒன்றே அவரது சமயக்கோட்பாட்டையும் தத்துவநெறியையும் விளங்கிக் கொள்ளப் போதுமானது. ஆரவாரச் சமயச் சண்டைகளை அவர் உளம் விரும்பவில்லை. வில்லிபுத்தூராரொடு கூட அவர் வாதத்தைத் தவிர்க்கவே விரும்பியதாகக் கூறுவர். வெற்றி பெற்ற பின்னரும் அவரைத் தண்டிக்காதுவிட்ட பெருந்தகைமை நினைக்கத்தகும். 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' என்று முன்னோர் கூறியவாறு, எங்கும் நிறைந்த பரம்பொருள் நாதவடிவானவன். அவனை மனத்தால் சிந்தித்து வாக்கால் பாடி வழிபடும் முறை அருணகிரியார்க்கு உகந்ததாய் இருந்தது. எளிய மனிதர்களுக்காகும் பத்தி வழிபாட்டு நெறியென்ற முறையில் அவர் உலகோர்க்கு இதனைக் கற்பித்திருக்கின்றார்.

'நாத விந்து கலாதீ நமோ நம
வேத மந்திர சொரூபா நமோநம
ஞான பண்டித ஸாமீ நமோநம
நாமசம்பு குமாரா நமோநம
போக அந்தரி பாலா நமோநம
நாக பந்த மயூரா நமோநம[12]'

என இசையோடு பாடிப்பரவும் நெறியை அவர் பின்பற்றினார். மூச்சை அடக்கித் தவநிலை முயலும் யோகிகளைப் போல் 'அசட்டு யோகி' ஆகாமல் தாம் இறைவனோடு இரண்டறக் கலக்கும்

11. திருப்புகழ் மேலது 951
12. திருப்புகழ் மேலது 104

நிலையை அவர் வேண்டுகின்றார். இறைவனை வழிபடும் நெறியில் திருமூலர் ஒரு செயலைக் குறிப்பிடுவர்.

'யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை
யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே[13]'

இந்நெறியே பற்றி அருணகிரி முனிவரும்,

'எமதுபொருள் எனும் அருளையின்றிக் குன்றிப்
பிளவளவு தினையளவு பங்கிட்டு உண்கைக்
கிளையும் முதுவசை தவிர'

பிறரைப் பேணிப் பசி தவிர்க்கும் நெறியை இறைவனிடம் வேண்டுவர். மக்களிடமிருந்து விலகிய பக்திமார்க்கத்தைப் பின்பற்ற அவர் விரும்பவில்லை. 'காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே' என்று பட்டினத்தார் கூறியது போலவே. இம்முனிவரும்,

'வையிற் கதிர் வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவு அளவேனும் பகிர்மின் உங்கட்கு இங்ஙன்
வெய்யிற்கு ஒதுங்க உதவா உடம்பின் வெறுநிழல்போல்
கையிற் பொருளும் உதவாது காணும் கடைவழிக்கே[14]'

என்று கூறி வறியார்க்கு உதவுவதே இறைவனின் இன்னருள் பெறற்கேதுவாகும் என்பதை உணர்த்துவர்.

அருணகிரி வேதாந்த நெறியினரா சித்தாந்த நெறியினரா என்ற வினா பலர் உள்ளத்தில் எழக்கூடும். அவருடைய நூல்களில் சைவ சித்தாந்தக் கூறுகளும் வேதாந்தக் கூறுகளும் ஒருங்கிணைந்து காணப்பெறுகின்றன. அவையிரண்டையும் அவர் வேறுபட்ட நெறியினவாகக் கருதவில்லை. சைவ சித்தாந்தத்தின் முக்கூறுகளாகிய இறை, உயிர், தளை ஆகியவற்றின் இயல்புகளையெல்லாம் திருப்புகழ் மற்ற உணர்த்துவதாகக் கருதுவோர் உளர். இதனை விளக்கும் வகையில்,

'மாநாக நாண் வலுப்புறுத் துவங்கியொர்
மாமேரு பூதரத் தனுப் பிடித்தொரு
மாலாய வாளியைத் தொடுத்து அரக்கரில் ஒருமூவர்

13. திருமந்திரம் கழகப் பதிப்பு 109
14. கந்தரலங்காரம் 18

மாளாது பாதகப் புரத்ரயத்தவர்
தூளாகவே முதற்சிரித்த வித்தகர்'

என வெகுளி வயப்பட்ட சிவம் பிரவிருத்தர் நிலையில் இருப்பதை அருணகிரியார் உணர்த்தினார் எனக் காட்டுவர்[15]. அதேபோல அருணகிரியார் சத்தியைப் பல பெயர்களாற் குறிப்பதும் சைவ சித்தாந்தப் பொருண்மை அடிப்படையிலேயே என்பர். சுத்த மாயை அசுத்த மாயை இலக்கணங்களும், உயிர் பல்வேறு அவத்தைகளை எய்துதலும், உயிரின் மூவகைப் பிரிவுகளும், சரியை முதலான வழிபாட்டு நெறிகளும் திருப்புகழால் விளங்குகின்றன எனக் காட்டுவர்.

அருணகிரியாரின் பாடல்களிற் சித்தாந்தப் பொருண்மைகள் மிளிர்வது போலவே வேதாந்த பரமாக அவருடைய நோக்கிற் பிறந்த சிந்தனைகளும் மிளிர்கின்றன.

'வசிட்டர் காசிபர் தவத்தான யோகியர்
அகத்ய மாமுனி இடைக்காடர் கீரனும்
வகுத்த பாவினில் பொருட்கோலமாய்வரு முருகோனே'

எனக் கூறுவதில் வேதாந்த நெறி நின்ற முனிவர்களைப் பற்றிக் கூறக் காணலாம். முருகனை அருணகிரியார் 'வேதனத்ரய வேளே' என்று போற்றுகின்றார். இதன் பொருள் 'மூன்று வேதங்களாகிய இருக்கு யசுர் சாமம் என்பவற்றின் உட்பொருளாகிய தலைவனே' என்பதாம். மேலும் மாயை பற்றிக் கூறுமிடங்களில் வைதிக நெறிப்பட்ட நிலை காணப்பெறுகின்றது. எனவே வேதாந்த சித்தாந்தக் கருத்துக்களை அவர் ஏற்றவர் என அறியலாம். இத்தகைய பொதுமை இவர்க்குப் பின்வந்த குமரகுருபரரிடத்தில் காணப்பெறுகின்றது.

'ஓரும் வேதாந்தமென் றுச்சியிற் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
சாரம் கொண்ட சைவசித் தாந்தம்'

என்பது குமரகுருபரர் மொழி. 'தளிர்வேதத்துறை காட்டி'த் தன்னை ஆட்கொள மேவியதாக அருணகிரியார் கூறுவதும் சிந்தனைக்குரியது. சிவஞானம் என்பதன் இயல்பு கூறும்போது,

'ஓல மறைகள் அறைகின்ற ஒன்று அது
மேலை வெளியில் ஒளிரும் பரஞ்சுடர்
ஓது சரியை க்ரியையும் புணர்ந்தவர் எவராலும்

15. அருணகிரித் திருப்புகழில் சைவ சித்தாந்தம், டாக்டர் ப. வெள்ளியங்கிரி ப. 39

ஓத அரிய துரியம் கடந்தது
போத அருவ சுருபம் ப்ரபஞ்சமும்
ஊனும் உயிரும் முழுதும் கலந்தது சிவஞானம்[16]'

என்று வேதாந்த சித்தாந்த நெறியிரண்டும் சார்ந்ததாக உரைப்பது கருதுவதற்குரியது. சைவ நாயன்மார்களைப் பற்றியும், சிவபெருமான் அவர்களின் பொருட்டாக நிகழ்த்திய அற்புதங்கள் பற்றியும் குறிப்பிடும் அருணகிரிப் பெருமான், திருஞானசம்பந்தரை முருகனது அவதாரமென்றே பல பாடல்களிற் குறிக்கின்றார். இறைவனே அடியவராகக் கருப்பையுள் தங்கி மனித உருக்கொண்டு பிறந்தார் என்பது சித்தாந்த நெறிக்கு ஏற்றதன்று.

'பஞ்சவன் நீடு கூறும் ஒன்றிடு தாபமோடு
பஞ்சற வாது கூறு சமண்மூகர்
பண்பறு பீலியோடு வெங்கழு ஏறு ஓது
பண்டித ஞான நீறு தருவோனே[17]'

என்றும்,

'மாள அன்று அமண் நீசர்கள் கழுவேற
வாதில் வென்ற சிகாமணி மயில்வீரா'

என்றும், திருஞானசம்பந்தரைப் பல இடங்களில் முருகனது அவதாரமாகக் கூறுகின்றனர். ஒட்டக்கூத்தரும் இக்கருத்துடையவரே. இதனைக் குறித்துப் பாம்பன் சுவாமிகள்,

"அச்சம்பந்தர் பரசுப்பிரமணியரல்லர்; அபரசுப்பிரமணியர். பரசுப்பிரமணிய மூர்த்தியின் வழிபாட்டால் அவர் உருவமெனும் சாருபகதியடைந்த அடியார்களே அபரசுப்பிரமணியர்கள்; அன்னோர்பால் பரசுப்பிரமணிய மூர்த்தியின் திருவருட்சத்தி பதிந்து அவ்வுரு நல்குமாற்றான் அவர்களையும் சுப்பிரமணியரென்று உபசரித்துரைக்க இடனுண்டாம். அது பிடித்தே ஞானசம்பந்தரைக் குமார தெய்வமென அவர் புராணம் கூறுதல் கண்ணுற்ற அருணகிரிநாதரும் அவ்வாறு கூறுவாராயினர் எனச் சிலர் கூறுவர். 'பதியான ஞான முனிவன்' என்று அச்சம்பந்தரே கூறியபடி பதித்தன்மையை உற்ற அவர் அபரசுப்பிரமணிய மூர்த்திகளும் சிவசாயுச்சியத்தை அவாவும் காரணத்தால்

16. திருப்புகழ் மேலது 511
17. திருப்புகழ் மேலது 437

சுப்பிரமணிய சாரூபம் உறுதிப்படா நிலையினின்று வெளிப்பட்டவரென்பது எமது அபிப்பிராயமாகும்''

என்று கூறக் காணலாம். இறையனார் களவியலுரையின் சிறப்பைப் புலப்படுத்தற்குக் கருவியாயமைந்த உப்பூரி குடி கிழான் மகன் உருத்திரசன்மனைக் குமார தெய்வம் என்று கூறினாற் போலச் சம்பந்தரையும் கூறிய நிலையை அருணகிரியாரிடத்து நாம் காணுகின்றோம். இது பரசமயப் பெருக்கத்தினின்றும் தமிழ்நாட்டை மீட்டுச் சைவநெறிப்படுத்திய தொண்டின் பெருமையை நினைந்து களிகூர்ந்த நிலையிற் பிறந்த பாராட்டெனவே கொள்ளத்தகும்.

சைவ சமய நெறியிலும் சித்தாந்தத்திலும் ஊறி உளம் கன்றிய யாரும், வைணவத்தைச் சைவத்திற்கு இணக்கமான ஒரு நெறியாகக் கொள்ளாத நிலையில், அருணகிரியார்,

'எந்தை வருக ரகுநாயக வருக
மைந்த வருக மகனே இனிவருக
என்கண் வருக எனதாருயிர் வருக அபிராம
இங்கு வருக அரசே வருக முலை
உண்க வருக மலர் சூடிட வருக
என்று பிரிவினொடு கோசலைபுகல வருமாயன்[18]'

என்று இராமனுக்குப் பிள்ளைத் தமிழின் வருகைப் பருவம் போலப் புனைந்து பாடக் காண்கிறோம். தமிழ்நாட்டுச் சமய நெறியில் அருணகிரியார் கண்ட திருப்புமுனை ஈதாகும்.



18. திருப்புகழ் மேலது 47

# 4. அருணகிரியாரின் செய்யுட் கோட்பாடு

அருணகிரிநாதரின் பாடுபொருள் முருகப்பெருமானின் பீடும் பெருமையும் திருவருளுமேயாகும். பிற தெய்வங்களைச் சிறப்புறப் பாடினாலும் முருகனோடு அத்தெய்வங்கள் கொண்ட உறவும் தொடர்பும் குறித்தே அவற்றைப் பாடுதல் அமைந்தது.

'அருவமொரு நான்காகி உருவமொரு
நான்காகி அவையி ரண்டும்
மருவியுள அருஉருவம் ஒன்றாகி
முத்திறமும் வழுத்த ஒண்ணாப்
பெருவெளிக்கு அப்பாலாய் உள்ளபொருள்
ஃதெனவே பெரிதும் சேயோன்
ஒருவனையே புகழ்ந்த அருள் அருணகிரி
சேவடிப்போது உளத்தில் வைப்போம்'

என்று கூறுமாறு அவர் சிந்தை முழுதும் முருகப்பெருமான் மீதே அமைந்தது. சமய உலகம் தாண்டிய நிலையில் அவர் பிரபுடதேவ மகராசன், பழனிப்பதி சார்ந்த கவிசைச் சேவகன் ஆகிய இருவரையே குறிக்கின்றனர். பிரபுடதேவன் காணுமாறு மயிலில் ஆடி முருகப்பெருமான் வரவேண்டும் என வேண்டுதலும், கவிசைச்சேவகன் முருகற்குரிய கோயிற் பணி புரிந்தமை குறித்தலும் எண்ணத் தக்கன. தம் செய்யுட் படைப்புகள் அனைத்தும் முருகப்பெருமானுக்கே உரியன என்பதில் அவர் உறுதி பூண்டிருந்தார்.

செல்வர்களை அண்டி வாழ்ந்து அவர்களின் புகழ்பாடிப் பரிசு பெற்று வாழும் வாழ்வைப் பெரியோர் வெறுத்தனர். அதுவும் செல்வர்களுக்கு இல்லாத பண்புத்தகுதிகளை அவர்கள் மேலேற்றிப் பாடுதல் தம் புலமைக்கு இழிவானது எனக் கருதினர்.

'சொன்னால் விரோதம் இது, ஆகினும் சொல்லுவன் கேண்மினோ
என்னாவில் இன்கவி யானொருவர்க்கும் கொடுக்கிலேன்[1]'

என்றும்,

'என்னாவது எத்தனை நாளைக்குப் போதும் புலவீர்காள்
மன்னா மனிசரைப்பாடிப் படைக்கும் பெரும்பொருள்
மின்னார் மணிமுடி விண்ணவர் தாதையைப் பாடினால்
தன்னாகவே கொண்டு சன்மம் செய்யாமையும் கொள்ளுமே[2]'

என்றும் மனிதரைப் போற்றிப் பாட உடம்படாமல் தெய்வத்தைப் பாடும் பணியே பணியாக கொண்டனர்.

'உடையவர்கள் ஏவர் எவர்களென நாடி
உளமகிழ ஆசு கவிபாடி
உமதுபுகழ் மேருகிரியளவு மானது
எனவுரமுமான மொழிபேசி
நடைபழகி மீள வறியவர்கள் நாளை
நடவுமென நாடி முகம்வேறாய்
நலியும் முனமே உன் அருணஒளிவீசு
நளின இருபாதம் அருள்வாயே[3]'

என்று பாடக் காணலாம். அருணகிரியார் காலத்திலும் அதற்குச் சற்றுமுன்னும் செல்வமுடையவர்களை இந்திரன் சந்திரன் எனப் புகழ்ந்து பாடிப் பிழைக்கும் நிலையில் புலவர் பலர் மஞ்சரி, தூது, கோவை எனப்பல இலக்கியங்களைப் புனைந்து தள்ளினர். அருணகிரியார் இதனைக் கண்டு மிகவும் வெறுப்புற்றார்.

'வஞ்சக லோப மூடர் தம்பொருள் ஊர்கள் தேடி
மஞ்சரி கோவை தூது பலபாவின்
வண்புகழ் பாரி காரி என்றிசை வாதுகூறி
வந்தியர் போல வீணில் அழியாதே[4]'

முருகனையே பாட அருள்பெற வேண்டும் என்கிறார் அருணகிரியார். இன்ன இலக்கியம், இன்ன பா ஆகியவற்றைப் புனைவதில் இவர் இவர் வல்லவர் என்பதைச் சுட்டிக் கூறுவதையும், பொன் முதலியவற்றைப் பரிசாகப் பெறுதற்காகப்

1. நாலாயிரத் திவ்விய பிரபந்தம் 2392
2. நாலாயிரத் திவ்விய பிரபந்தம் 2395
3. திருப்புகழ் மேலது 251
4. திருப்புகழ் மேலது 437

புலவர்கள் அலைந்து துன்புறுவதையும் அவர் மனம் நொந்தும் வெறுத்தும் பேசுகின்றார். எனவே கவிதை என்பது இறைவனை, அதுவும் முருகனையே குறித்ததாக அமைய வேண்டுமென்பது அவர் கருத்தென்பது தெளிவு.

யாப்பும் நடையும்

திருப்புகழ் செந்தமிழ்ச் சந்த விருத்தங்களால் அமைந்த நூல். இயற்றமிழும் இசைத்தமிழும் கலந்து மணக்கும் ஒப்பரிய பாடல்களின் தொகுப்பாக அந்நூல் விளங்குகின்றது. தொல்காப்பியர் சந்த வேறுபாடுடைய இருபது வண்ணங்களை எடுத்துரைக்கின்றார். இவ்வண்ண இலக்கணத்தைப் பின்பற்றிப் பற்பல பாடல்கள் பண்டிருந்தே எழுந்தன.

'உருமுரறு கருவிய பெருமழை தலைஇய'

என அகநானூற்றிலும்,

'எரியுறு வுறழ விலவ மலர'

எனக் கலித்தொகையிலும் உருட்டு வண்ணம் வந்ததென்பர் பேராசிரியர்[5]. இதே போலப் பிற வண்ணங்களும் பயின்று வரும். அருணகிரியார் பழந்தமிழ்க் கல்விமிக்கவர். இலக்கண இலக்கியங்களில் அளவற்ற தேர்ச்சி உடையவர். பல சந்தப் பாடல்களையும் பயின்ற அடிப்படையில் புதிய ஒரு சந்தக் குழிப்பு வகையை அவர் உருவாக்கிக் கொண்டிருக்கின்றார். சிலப்பதிகாரக் கானல்வரியில் அமைந்த சந்தப்பாடல்கள் அவருடைய பாடல்களுக்குத் தக்கமுன்னோடி என்பர்.

'பொழில்தரு நறுமலரே புதுமணம் விரிமணலே
பழுதறு திருமொழியே பணைஇள வனமுலையே
முழுமதி புரைமுகமே முரிபுரு வில்லிணையே
எழுதரு மின்னிடையே யெனையிடர் செய்தவையே[6]''

என்ற வரிப்பாட்டு,

'தனதன தனதனனா தனதன தன தனனா
தனதன தனதனனா தனதன தன தனனா'

என்ற தாள அமைப்பில் அமைந்தது எனக் காட்டுவர்[7]. கி.பி. ஆறாம் நூற்றாண்டினரான திருஞானசம்பந்தர் யாப்பில் பல

5. தொல்காப்பியம் நூற்பா 55 பேராசிரியர் உரை
6. சிலப்பதிகாரம் கானல்வரி
7. இசைத்தமிழ் வரலாறு - து.ஆ. தனபாண்டியன் ப. 6

புதுமைகளையும் சோதனைகளையும் செய்து வெற்றி கண்ட தமிழ்விரகர். ஞானசம்பந்தரை முருகனது அவதாரமாகவே கருதுகின்றவர் அருணகிரியார். சம்பந்தப் பெருமான் பாடிய பிரமபுரத் திருவிராகப்பாடல், சந்த அலைகொழிக்கும் சிறப்புடையது. அருணகிரியாரை இப்பாடல் உளங்கவர்ந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

'சுரருலகு நரர்கள் பயில் தரணிதலம் முரணழிய அரணமதில்முப்
புரமெரிய விரவுவகை சரவிசைகொள் கரமுடைய பரமனிடமாம்
வரமருள வரன்முறையின் நிரை நிறைகொள் வருசுருதி
சிரவுரையினாற்
பிரமனயர் அரனெழில்கொள் சரணவிணை பரவவளர்
பிரமபுரமே[8]'

எனத் தொடங்கித் திருவிராகப் பதிகம் பாடியுள்ளார் சம்பந்தர். இப்பாடலுக்குத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் யாழ் கூட்டினர். இஃதன்றிச் சம்பந்தர் மாலைமாற்று, மடக்கு, யமகம், ஏகபாதம், தமிழ் இருக்குக் குறள், எழுகூற்றிருக்கை, ஈரடி ஈரடிவைப்பு, நாலடி மேல் வைப்பு, சக்கரமாற்று, கோமூத்திரி, மாலைமாற்று எனப் பலவகைப் பாடல்களைப் பாடியுள்ளார். இவற்றுக்கெல்லாம் மேலாகத் தருமபுரத்தில் சம்பந்தர் 'மாதர் மடப்பிடி' எனத் தொடங்கும் யாழ்மூரிப் பண்ணமைந்த பதிகம் பாடி அதற்கு யாழ்ப்பாணர் இசைக்க இயலாமை காட்டினர். யாழினை முரிக்கும் திருப்பாட்டாக அமைந்தது அது. ஞானசம்பந்தரின் இத்தகைய இயலிசைத் திறங்களெல்லாம் அருணகிரிப் பெருமானால் உளங்கொளப் பெற்றன. அவரையே முன்னோடியாகக் கொண்டு இயலிசைத் திறம் வாய்ந்த அருப்புலவராக அருணகிரியார் ஒளிர்ந்தார். சம்பந்தர்க்குப் பின்வந்த புலவர் பலரும் சந்தவிருத்தங்கள் இயற்றியுள்ளனர். அருணகிரியார்க்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன்வாழ்ந்த வேதாந்த தேசிகர் 6, 13, 14 சீர்கொண்ட சந்த விருத்தங்களை இயற்றியுள்ளார். இவற்றின் பின்னே அருணகிரிநாதர் மேலும் பல புதுமைகளைச் செய்யுள் வடிவில் கண்டுள்ளார்.

அருணகிரிப் பெருமான் பாடிய ஓராயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களில் ஆயிரத்தெட்டுச் சந்தக் குழிப்புகளைக் காட்டியுள்ளார்

8. திருஞானசம்பந்தர் தேவாரம் திருப்பிரம்மபுரம்

என்று தணிகைமணி குறிப்பிடுகின்றார். 'பனியின் விழுந்துளி' எனத் தொடங்கும் திருப்புகழில்,

'தனன தந்தன தானனா தனதனன
தினன திந்தன தீததோ திருததிரு
தத குந்தது தாகுதோ எனமுழவு வளைபேரி'

முழங்குவதாகக் கூறி அவரே ஒரு சந்தக் குழிப்பைக் காட்டியுள்ளதைச் சுட்டி இசைப் புலவர் தனபாண்டியன்,

''இப்பாடல் 3, 4, 5, 5 என்னும் லய அமைப்பில் 17 அட்சரங்களைக் கொண்டுள்ளது. இது ஒரு அங்க தாளமாகும்''

என்று கூறுகிறார். மூன்று அட்சரம், நான்கு அட்சரம், ஐந்து அட்சரம் என்ற அளவில் பாடல் நடப்பதால் இவற்றுக்குப் பண் வகுக்கவில்லை. ஒவ்வொரு பாடலுக்கும் ஒரு முடிப்பு வரும்போது சந்த அமைப்பு வேறுபடும். பெருமாளே, முருகோனே என தனதான என்ற தாளத்தில் முடியும். இதனைத் தொங்கல் என்பர். இதனைத் தனிச்சீர், சொற்சீர் எனவும் கூறுவர். இதனைத் துள்ளல் என்பர் தண்டபாணி சுவாமிகள். இந்தத் தொங்கல் என்பதைச் செய்யுளில் அமைத்த முதல்வர் அருணகிரியாரே. தொங்கலை சிறு இடைவெளி விட்டுப் பாடுதலும், பாட்டோடு தொடர்ந்து பாடுதலும் உண்டு. இத்தொங்கல்களைப் பற்றிக் கூறுங்கால்,

''பெரும்பாலான தொங்கல்கள் தனதானா என்னும் வாய்பாட்டுச் சொற்களாகவே அமைந்துள்ளன. பெருமாளே, வருவாயே, முருகோனே, அருளாயே முதலிய தொங்கல்கள் தனதானா என்னும் சந்தத்தில் அமைந்தவை. இவை கண்டிகையின் கால அளவுக்கு ஒவ்வுமாறு நீட்டியும், திரள் அல்லது கூடை நடையிலும் பாடப்படும். அகார இகார உகாரங்களை நிறையப் பெய்து விரைவு நடையில் பாடும் இசைமுறைகட்குத் திருப்புகழின் தொங்கலிசையே அடிகோலி வழிகாட்டியது எனலாம். மேலும் வர்ணம், கீதம், சதிசுவரம், கீர்த்தனை முதலிய இசை வகைப் பாடல்களில் காணப்படும் தாளக் கால உட்பகுப்பு முறைகட்கும் இத்தொங்கலிசையமைப்பு பெரிதும் வழிகாட்டியது எனலாம்'[9]'

என்று அறிஞர் கூறுவது நினைக்கத்தக்கது. இன்று வாய்ப்பாட்டிலும், கருவியிசையிலும், திருப்புகழ் இடம் பெற்றேயாக வேண்டும் என்ற நிலையுள்ளது. அருணகிரியார்

9. தமிழிசையியல், வீ.ப.கா. சுந்தரம் ப. 203.

செய்யுளை இயற்றமிழ்க் கூறாக மட்டும் கருதாது, இயலிசை கலந்த நிலையில் யாப்பமைப்பும் லயக் கட்டுப்பாடும் அமைந்ததாகக் கருதினார் என்பதை நாம் அறிய வேண்டும்.

செய்யுளின் அமைப்பில் ஓர் ஓசை நயம் இயல்பாக அமையும். அதனை மேலும் ஓசை, ஒலிச் சிறப்புடையதாக ஆக்கக் கருதியிருக்கிறார் அருணகிரியார். அதற்குச் சந்தக் குழிப்புகளைக் காட்டும் தாளக் கட்டுமானங்கள், ஒலிக் குறிப்புச் சொற்கள், இரட்டைக் கிளவிகள், அடுக்குத் தொடர்கள், எதுகை மோனை இயைபுத் தொடைகள் ஆகியவற்றை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளார்.

'திதிதி ததததந் திந்தித் தந்தட்
டிடிடி டடடடண் டிண்டிட் டண்டத்
தெனன தனதனந் தெந்தத் தந்தத் தெனனாரை
திகுர்தி தகிர்ததிந் திந்தித் திந்தித்
திரிரி தரரவென் றென்றொப் பின்றித்
திமிலை பறையறைந் தெண்டிக் கண்டச் சுவர்சோர'

எனப் பறை ஒலி எழுப்புவதைப் பாடுகின்றார். இத்தகைய அமைப்பு ஓர் அடி முழுதும் வருவதைப் பிறர் செய்யுளிற் காண இயலாது.

'ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம் என்று பூதி
ஆகமணி மாதவர்கள் பாதமலர் சூடும்அடி
யார்கள் பதமே துணையது என்று நாளும்'

என்ற பாட்டில் ஆறுமுகம் என்ற பெயர் ஆறுமுறை அடுக்கி வந்துள்ளது. இதுபோன்ற அமைப்பு திருப்புகழில் இன்னும் உள்ளது. வந்தமொழியே வருவதை இரட்டைத் தொடையெனினும் இத்தனை முறை அடுக்கி வருவதை வேறு எங்கும் காண இயலாது. 36 சீர்களில் ஒலிக்குறிப்புச் சொற்கள் அல்லது தாளங்கள் தொடர்ந்து தொடுக்கப் பெறுவதைத் திருப்புகழ் மட்டுமே காட்டும். இவை பெரும்பான்மைய. 49 சீர்களில் அவ்வகைச் சொற்கள் தொடர்வதை 'ககுபநிலை' எனத் தொடங்கும் திருப்புகழில் காணலாம். இவற்றைக் கொன்னக்கோல் இசைக்குப் பயன்படுத்தும் போது பாட்டின் பெருமிதம் புலப்படும். தவுல், கஞ்சிரா போன்ற தோற்கருவிகளிலும் இசை நன்கு வெளிப்படும். சிதம்பரம் திருப்புகழ் 104 சீர்களைக் (தொங்கல் உட்பட)

கொண்டுள்ளது. கலம்பகத்தில் புயவகுப்புப் போன்ற உறுப்புக்கள் இவ்வளவு நீளமாக அமைவது உண்டு. ஓசை நயத்தை மிகுப்பதற்குரிய எல்லா உத்திகளும் திருப்புகழில் உண்டு.

'ஓலமிட்ட கரும்பு தனா தனாவென
வேசிரத்தில் விழுங்கை பளீர்பளீரென
ஓசைபெற்ற சிலம்பு கலீர் கலீரென விரகலீலை
ஓர் மிடற்றில் எழும்புள் குகூ குகூவென
வேர்வை மெத்த எழுந்து சலா சலாவென
ரோம குச்சு நிறைந்து சிலீர் சிலீர் என அமுதமாரன்'

என்று ஒவ்வொரு தொடரிலும் ஒலிக்குறிப்படுக்குக் காணப்படும். ஏகார இடைச் சொல்லைத் தொடர்தோறும் சேர்ப்பதால் உருவாகும் சந்த ஒருமை பல பாடல்களிற் காணப்பெறுகின்றது.

'அவனிதனிலே பிறந்த மதலையெனவே தவழ்ந்து
அழகுபெறவே நடந்து'

என்று தொடங்கிப் பாடல் முழுதும் இவ்வமைப்பில் நடக்கக் காணலாம். வினையெச்சங்கள் தொடர்ந்து ஒரு தொங்கலில் முடியும் நடையும் பல பாடல்களில் சந்த இன்பம் கூட்டக் காணலாம்.

'கருவினுருவாகி வந்து வயதளவிலே வளர்ந்து
கலைகள் பலவே தெரிந்து மதனாலே'

என்பது போன்ற பாடல்களில் இந்நடையமைப்பைக் காணலாம். பல்வேறு சந்த அமைப்புகளில் திருப்புகழ்ப் பாடல்கள் அமைந்துள்ளன. கூட்ட வழிபாட்டிற்கும், கூட்டப் பாட்டிசைக்கும் திருப்புகழ் ஏற்றது.

அருணகிரியார் தமிழ் உணர்வு மிக்க அருட்கவிஞர். தம்மைத் திருப்புகழ் பாடுமாறு பணித்தது இறையருள் என அவர் எண்ணினார்.

'பாத பங்கயம் உற்றிட உட்கொண்டு
ஓதுகின்ற திருப்புகழ் நித்தம்
பாடும் அன்பது செய்ப்பதியில்தந் தவன்நீயே'

என அவர் உரைக்கக் காணலாம். 'சரண கமலாலயத்தை' எனத் தொடங்கும் பாட்டில் முருகனைத் துதிக்க அப்பெருமான் 'அரியதமிழ்' அளித்ததாகக் கூறுகின்றார். முருகப்பெருமான் நக்கீரருக்கு அருள்செய்து, இலக்கணம் கற்பித்துப் புகழ் பெறச்

செய்தான் என மொழிகின்றார். 'யாப்பாராயும் சொற்றமிழ் அருள் தரு முருகோனே' என்பதால் யாப்பிலக்கண ஆராய்ச்சியில் மனம் பதியச் செய்து கற்பித்த தமிழ் முதல்வன் முருகன் என்ற கருத்து அருணகிரியாரால் வலியுறுத்தப்பெறக் காணலாம். முருகனைப் போற்றும்போது, அப்பெருமான் தமிழ்க்கிறையாய்ப் பொலிவதைப் பல பாடல்களில் முனிவர் குறிக்கின்றார்.

'அலகில் தமிழால் உயர் சமர்த்தனே போற்றி'

என்று கூறி முருகன் முத்தமிழால் உயர்வு பெற்றான் எனக் காட்டித் தமிழின் சீரைக் கடவுளினும் உயர்ந்ததாக ஓதுவது ஒன்றே அருணகிரியாரின் தமிழ்ப்பற்றைக் காட்டும். 'முந்து தமிழ்மாலை கோடி கோடி சந்தமொடு நீடு பாடிப்பாடி' வாழக் கிடைத்த பேற்றுக்கு அவர் மகிழ்கின்றார்.

இத்தகைய தமிழ்ப்பற்றுடைய ஒருவரின் மொழிநடை ஏன் இவ்வளவு வடசொற் கலப்புற்று அமைய வேண்டும்? சில பாடல்களில் வடசொற்களே மிகுதியாக உள்ளன.

'நாத விந்து கலாதீ நமோநம
வேத மந்த்ர சொரூபா நமோநம
ஞான பண்டித ஸாமி நமோநம'

எனத் தொடங்கும் பாடலில் ஓரடியில் இருபது சொற்கள் உள்ளன. இவற்றில் இரண்டு சொற்களே தமிழ்ச்சொற்கள். மணிப்பிரவாளம் என்ற இலக்கையும் வரையறையையும் கடந்து வடமொழிக் கலப்புற்ற பாடல்களாகத் திருப்புகழ்ப் பாடல்கள் விளங்குகின்றன. இதற்குரிய காரணங்கள் இரண்டு. முதலாவது, வடமொழிக் கலப்பு என்பது விலக்கப்படாத ஒரு செயலாக அக்காலப் புலவர் உலகாற் கருதப்பெற்றுச் சமய உலகில் இந்தப் போக்குப் பெரிதும் பயன்படுத்திக் கொள்ளப்பட்டதாகும். சமய, தத்துவ வட்டங்களில் உருவான சாத்திர நூல்களில் வடமொழிச் சொற்கள் கலைச் சொற்களாகவும் பயின்றன. எனினும், செய்யுளைவிட உரையும் உரைநடையுமே மிகுந்த கலப்பைக் காட்டின. செய்யுள் வரையும் போது மிகுந்த கலப்பின்றி அமைந்தது. ஆனால், அருணகிரிநாதர் அந்த எல்லைகளைத் தாண்டி வடமொழிக் கலப்பை மிகுதியாகச் செய்யுளில் இடம்பெறச் செய்துள்ளார். அதற்குரிய இரண்டாவது காரணம் இசைத்தமிழில் தாள லய ஏற்ற இறக்கங்களுக்குத் தக எழுதும்போது, வடசொற்களின் தேவை அவருக்குச் சரியானதெனத் தோன்றியிருக்கிறது. வடமொழியினை விலக்கி எழுத வேண்டும் என்ற கருத்தும் நிலைபெறாக் காலம் அக்காலம் என்பதையும் நாம் மறந்துவிடலாகாது.

'தவஞானக் கடலாட்டி என்றனை
சதுராகத்தோடு கூட்டி அண்டர்கள்
அறியா முத்தமிழ் ஊட்டி முண்டக
தளிர் வேதத்துறை காட்டி'

என்று கூறுவதால், வேத வைதிக, சமஸ்கிருதக் கூறுகள் தமிழுக்குப் புறம்பாக எண்ணப்படவில்லை என்பது தெளிவு. எனினும்,

'பாதிமதி நதி போது மணிசடை
நாத ரருளிய குமரேசா'

என்ற பாடலில் மூன்றே வடசொற்கள் அமையக் காணலாம்.

அருணகிரியாரின் திருப்புகழில் இயல்பான வழக்குச் சொற்கள் பலவும் காணப்பெறுகின்றன. இவற்றைச் சைவ சித்தாந்த சமாஜப் பதிப்புத் தொகுத்துத் தந்துள்ளது. 'கசுமாலம்' என்ற சொல் இவராலேயே முதன்முதல் தமிழிலக்கியத்தில் புகுந்துள்ளது. இது சமஸ்கிருதச் சொல்லாகும். சபாஷ், சலாம் போன்ற உருதுச் சொற்கள் திருப்புகழில் இடம் பெற்றுள்ளமை இசுலாமியர் தமிழகத்தில் பரவலாக இருந்த நிலை காட்டும். விருதா என்ற சமஸ்கிருதச் சொல், லண்டி என்ற இந்துஸ்தானிச் சொல் லச்சை என்ற தெலுங்குச் சொல், சோலி என்ற தெலுங்குச் சொல் ஆகியன போன்ற பலமொழிச் சொற்கள் இடம் பெற்றுள்ளன. இவையெல்லாம் அக்கால மக்களோடு அருணகிரியார் விலகாமல் கலந்து பழகியதற்கான அடையாளங்கள் ஆகும். அருணகிரிநாதரின் திருப்புகழ் அவர்க்குப் பின்வந்த குமரகுருபரர் தாயுமானவர் போன்றவர்களின் படைப்புகளுக்கு வழிகாட்டியாக அமைந்துள்ளது. எனவே அருணகிரிநாதரின் சமய சமரச நோக்கு, மொழிநடை ஆகியவற்றின் கூறுகள் பிற்காலத்தவர் படைப்புக்களிலும் இடம் கொண்டன. தேவார, திருவாசக, திவ்வியப் பிரபந்த காலத்திற்குப்பின் தமிழ்க முழுதும் பக்தி உணர்வை இசையொடு கலந்து பரப்பிய பெருமைக்குரியவர், காவடிச்சிந்து போன்ற இலக்கியங்கள் தோன்ற அடிப்படையாக அமைந்த இசைப் பாடல்களைப் பாடியவர் அருணகிரியாரே. உ.வே. சாமிநாதையரின் கருத்துப்படி சிந்து இலக்கியம் பதினைந்தாம் நூற்றாண்டுக்கு முற்பட இருந்தது எனினும் அது பக்தித்துறை இலக்கியமாக இல்லாமல் மருத்துவம், சோதிடம் ஆகியவற்றுக்கே உரியனவாக இருந்திருக்கிறது. ஏழாம் நூற்றாண்டுக்கும் பதினைந்தாம் நூற்றாண்டுக்கும் இடையே அமைந்த பெரிய இடைவெளியை இசையைப் பொறுத்தவரை ஈடு செய்தவர் அருணகிரியாரே என்று டி.வி. குப்புசாமி அவர்கள் கூறுவது எண்ணத்தக்கதாகும். ❖

# 5. அருணகிரியார் கண்ட பெண்ணுலகம்

அருணகிரிப் பெருமான் முருக வழிபாட்டையே தம் வாழ்வின் தலையாய குறிக்கோளாகக் கொண்டவர். முருகனைப் பற்றிய கருத்துக்களும், வழிபாடும் உலகெங்கும் பரவி நிலைபெற வேண்டுமென்று அவர் விழைந்தார். தம் பிறவியின் ஈடேற்றம், முத்தி பெறுதல் போன்ற அளவில் அவர் தம்மை நிறுத்திக் கொள்ளவில்லை. திருப்புகழில் கூறப்பெறும் உலகத் துன்பங்களும், மனிதர்களை அல்லற்படுத்தும் சிற்றின்ப வேட்கையும், பொருள் நாட்டமும், ஐம்புலன்களின் வழிச் சென்று இறைவனை எண்ணாத நிலையும் அருணகிரியார் என்ற மனிதர் ஒருவர்க்கு உரியன அல்ல எனத் தெளிதல் வேண்டும். இத்தெளிவு ஏற்படின் அருணகிரியார் பெண்களிடம் காம இச்சை கொண்டு சிற்றின்பத்துறையில் அழுந்தி அதன் விளைவாய்த் தொழு நோயுற்று வருந்தினார் என்ற கற்பனைக் கட்டுக் கதைகளெல்லாம் தோன்ற மாட்டா.

மக்களுக்கு ஒரு நெறியை அறிவுறுத்தும் பண்புமிக்க பெரியார் ஒருவர் அந்நெறியைத் தான் பின்பற்றாது அமையார். பிறர்பால் உள்ள குறையெல்லாம் தம்பால் ஏற்றிக் கொண்டு தீர்வு உரைக்கும் அச்சால்பு நெஞ்சம். பாம்புக் கடிபட்டவரை மந்திரிக்காமல், தமக்குத் தாமே மந்திரித்துக் கொள்வர் மருத்துவர் சிலர். அதனால் கடிபட்டவர்க்கு நோய் குணமாகிவிடும். இந்நிலையிலேயே அருளாளர்கள் மக்களின் பழிபாவங்களையெல்லாம் தம்முடையனவாகக் குறித்து அவற்றினின்றும் மீட்சி வேண்டுவர். அருணகிரியாரும் இவ்வாறே தம்மேலிட்டு உலகர் துன்பங்களைக் களைதல் திருவருட்செயல் எனக் கூறுகின்றார்.

'புலையனான மாவீனன் வினையிலேகு மாபாவி
பொறையிலாத கோபீகன் முழுமூடன்

புகழிலாத மாமூகன் அறிவிலாத காபோதி
பொறிகளோடு போய்வீழு மதிசூதன்
நிலையிலாத கோமாளி கொடையிலாத ஊதாரி
நெறியிலாத ஏமாளி குலபாதன்
நினது தாளை நாடோறும் மனதிலாசை வீடாமல்
நினையுமாறு நீமேவி அருள்வாயே[1]'

மனிதன் ஒருவன் இவ்வளவு தகுதியின்மைகளும் கொண்டிருக்க இயலாது. ஈனன், பாவி, சூதன், மூகன், காபோதி, ஏமாளி, குலபாதன் இவ்வளவு தன்மைகளும் கொண்ட ஒருவன் தான் இத்தகையவன் எனத் தன்னை உணர்ந்தவனாதலும், தனக்கு இறைவன் அருள்செய இரத்தலும், அதற்காகப் புகழ்ப்பா இசைத்தலும் முற்றிலும் முரண்பாடுடையன. இவையனைத்தும் அருணகிரியார்க்கே உரியன எனக் குறித்தார் உளர். இத்தகு பண்புக்குறைபாடுகள் உடைய ஒருவர்,

'ஓதுவித்தவர் கூலி கொடாதவர்
மாதவர்க்கு அதிபாதகமானவர்
ஊசலிற் கனலாய் எரி காளையர் மறையோர்கள்
ஊர்தனக்கு இடரே செயும் ஏழைகள்
ஆர்தனக்கும் உதாசினதாரிகள்
ஓ்டி உத்தமர் ஊதியம் நாடினர் இரவோர்க்கு
ஏதும் இத்தனை தானம் இடாதவர்
பூதலத்தினில் ஓரமதானவர்
ஈச்ர் விஷ்ணுவை சேவை செய்வோர்தமை இகழ்வோர்கள்
ஏக சித்த தியானம் இலாதவர்
மோக முற்றிடு போகித மூறினர்
ஈனர் இத்தனை பேர்களும் மேல்நரகு உழல்வாரே![2]'

என்று பாட முடியுமா? எனவே தம்மைத் தாழ்த்தி, பண்புக் குறையுடைய எளிமையில் இருத்திக் கொண்டு இறைவனின் இன்னருள் வேண்டுதல் ஒரு பக்தி நெறி. உடையார் முன் இல்லார் போல் ஏக்கறும் நிலை இது. ஆகவே, மாதர் மையலில் தாம் சிக்கித் தவித்ததாகவும், சீரழிந்ததாகவும் அவர் பாடுவனவற்றை இக்கண் கொண்டு நோக்க வேண்டும். திரு.வி.க. அவர்கள்,

1. திருப்புகழ் மேலது 550
2. திருப்புகழ் மேலது 1029

''பெண்ணைச் சிற்றின்பப் பொருள் என்று நினைந்து கொண்டிருக்கு மட்டும் மெய்யுணர்வு பிறத்தலரிது. அருணகிரியார் உலகோரை நோக்கிப் 'பெண்ணைச் சிற்றின்பப் பொருளாகக் கருதி இடர்ப்படாதேயுங்கள்' என்னும் பொருளை அறிவுறுத்தும்வழித் தமது உள்ளத்தை நொந்தவாறு காண்க[3]''

என்று குறிப்பது நினைவில் கொள்ளத்தக்கதாகும். ஆடவர் உள்ளத்தைத் திருத்தப் பிறந்தன அருணகிரியார் மொழிகள் என்கிறார் திரு.வி.க. அருணகிரியார் பெண்ணினத்தினையே வெறுத்தார் எனக் கொள்ளுதல் தவறாகும். திரு.வி.க. அவர்கள்,

''அருணகிரியார் பெண்ணாசையைக் கடிந்து கூறியிருத்தல் உண்மை. பெண்ணைக் கடிதலுக்கும் பெண்ணாசையைக் கடிதலுக்கும் வேற்றுமையுண்டு. பெண்ணைக் காமமெனும் ஆசைப் பொருளாகக் கொள்வதொன்று; பெண்ணைத் தெய்வமாகக் கோடல் இன்னொன்று. பெண்ணை ஆசைப் பொருளாகக் கருதுவது அறியாமை. அவ்வழகைக் கடவுளாகக் கருதுவது அறிவு... அருணகிரிநாதரும் பெண்ணின் மாட்டெழும் காம வேட்கையைக் கடிந்தாரேயன்றிப் பெண்ணைக் கடிந்தாரில்லை[4]''

என்று கூறுகிறார். அருணகிரியார், ஆடவரும் பெண்டிரும் மணந்து வாழும் இல்லறத்தை வெறுத்து மொழிபவர் இலர். அவரே இல்லறத்தார்தாம்.

'மனையவள் நகைக்க ஊரின் அனைவரும் நகைக்க லோக
 மகளிரும் நகைக்க தாதை தமரோடும்
மனமது சலிப்ப நாயன் உளமது சலிப்ப யாரும்
 வசைமொழி பிதற்றி நாளும் அடியேனை
அனைவரும் இழிப்ப நாடும் மனவிருள் மிகுந்துநாடின்
 அகமதை யெடுத்த சேமம் இதுவோவென்று
அடியனும் நினைத்து நாளும் உடலுயிர் விடுத்தபோது
 அணுகி முன் அளித்த பாதம் அருள்வாயே[5]'

இப்பாட்டு அவருடைய வாழ்க்கைக் குறிப்பைத் தெளிவாகக் காட்டுவதாகும். மனைவி, பெற்றோர், தமர் எனப்பலரும் இவரை உதறுமாறும் இவரைக் குறித்துச் சலிக்குமாறும் இவர் இருந்தார்;

3. முருகன் அல்லது அழகு திரு.வி.க. ப. 83.
4. முருகன் அல்லது அழகு திரு.வி.க. ப. 83.
5. திருப்புகழ் மேலது 400

இவருடைய உள்ளமே இவரைக் குறித்துச் சலிப்பெய்தியது. அனைவரும் வசைமொழிய வாழ்ந்தார். அனைவரும் இழித்துரைத்தனர். இதற்கு என்ன காரணம்?

'மிடியெனப் பெரு வடவை சுட்டிட
விதன முற்றிட மிகவாழும்
விரகு கெட்டு அருநரகு விட்டு இரு
வினையறப் பதம் அருள்வாயே'

எனத் தாம் வடவைக் கனல்போலும் வறுமையாற் சுடப்பட்டு வருந்தியது கூறுகின்றார். இல்லானை இல்லாளும் வேண்டாள் என்பதற்கிணங்கியதாக அவர் வாழ்க்கை அமைந்திருக்க வேண்டும். பெண்களால் அவர் இரங்கத்தக்க நோய்களையும் அவலத்தையும் அடைந்தார் எனப் பலர் கூறுவதற்கு மாறாக,

'நஞ்சினைப் போலும் மன வஞ்சகக் கோளர்களை
நம்புதல் தீதெனநி னைந்து நாயேன்
நண்புகப் பாதமதில் அன்புறத் தேடியுனை
நங்களப்பா சரண மென்றுகூறல்
உன்செவிக்கு ஏறலைகொள் பெண்கள்மேற் பார்வையைகொல்'

என்று கூறுவது கவனிக்கத்தக்கது. முருகனை 'நீ பெண்கள் மேற்பார்வை கொண்டதனாற் போலும் என்சொல் உன் செவியில் ஏறவில்லை' என்று கூறுவது கருதத்தக்கது. அவர் பெண்ணை வெறுத்த துறவு வாழ்க்கையர் அல்லர் என்பதற்குப் பாட்டிற் சான்றுகள் பல உள்ளன.

அருணகிரியார் இருவகைப் பெண்களைக் குறித்துப் பேசுகிறார். ஒரு வகையினர் நெறியின் நீங்கிய வாழ்வினை மேற்கொண்ட பரத்தையர். ஆடவரின் காம இச்சையைத் தூண்டிப் பொருள் பறிக்கும் விலைமாதராகிய அன்னோரைக் குறித்துப் பல பாடல்கள் உள்ளன. இவை மூன்று வகையின.

'சோரா மயல்தரு மானார் உறவுஇடர்
சூழா வகையருள் புரிவாயே'

எனத் தம் அழகாலும் உறுப்புகளின் கவர்ச்சியாலும் தம்மை ஈர்ப்பவர்பாற் செல்லாத மனநிலையை அருள்க என வேண்டும் பாடல்கள் ஒருவகை.

'ஆசையை விரும்பியே விரக சிங்கி
தானுமிக வந்து மேவிட மயங்கும்
ஆழ்துயர் விழுந்து மாளும் எனை அன்பு புரிவாயே'

எனத் தீய மாதர்பால் உறவு கொண்டு நோயுற்று வருந்தும் தம்மை அத்துயரிலிருந்து மீட்டருள் புரிக என வேண்டும் பாடல்கள் இரண்டாவது வகை.

'காதல் புரியும் அநுபோக நதியினிடை
வீழுகினும் அடிமை மோச மறவுனது
காமர் கழலிணைகள் ஆனது ஒருசிறிதும் மறவேனே'

என மாதர்பால் மயங்கிய நிலையிலும் என்றும் முருகனின் கழல் மறவேன் எனக் கூறி இறைவன் அருள் வேண்டும் பாடல்கள் மூன்றாவது வகை. இம்மூன்று வகைப் பாடல்களும் உலக மக்களின் சார்பான விண்ணப்பக் குரல்களைப் பதிவு செய்வனவேயாகும். இம்மூன்றிலும், பரத்தையர்பாலான நேசம், உல்லாச சல்லாபம், உடலுறவுச் செயல்கள், மதன நூல் நுட்பங்கள், அகத்திணை மெய்ப்பாடுகள், சிருங்கார வர்ணனைகள் ஆகியன எல்லாம் இடம் பெற்றுள்ளன. இவற்றை ஆராய்வதால் நாம் அறிந்துகொள்ள வேண்டிய செய்திகள் இரண்டாகும். அவை :

1. அருணகிரியாரின் சொந்த வாழ்க்கைக் குறிப்பாக இவை கொள்ளுதற்குரியன அல்ல.
2. புலவன் தான் பாடும் பொருளை அதன் தன்மைகள் அனைத்தும் குறைவறப் புலப்படுமாறு பாடப்பட வேண்டும். படிப்பவர்க்கும் கேட்பவர்க்கும் பாடுபொருளின் அழகு, தோற்றச் சிறப்பு, பரிமாணம், இயக்கம், அழகின்மை, அருவருப்பு, இழிவு, ஆகியன எல்லாம் மனத்தில் உணருமாறு செய்யும் தொழில்நுட்பம் கைவந்த கலையாக வேண்டும். இவ்வகையில் இவை பாடப்பெற்றன.

ஆகவே அருணகிரியார் கண்ட பெண்ணுலகில், இப்பகுதி மேலோராயினும், நூலோராயினும், பால்வகை தெரிந்த பகுதியோர் ஆயினும் பிணி எனக் கொண்டு நீக்கத்தகும் பிரிவாகும்.

அருணகிரியார் கண்ட மற்றொரு வகைப் பெண்கள் காதலரைப் பிரிந்த துயரால் வருந்துவோர் குரலாக வெளிப்படுகின்றது. இவர்களின் காதலர் தேவதேவப் பெருமாளாகிய முருகப்பெருமானாராவர். ஆன்மா பேரின்பப் பெருவீடடைதலை மானிடப் பெண்களின் மையலில் வைத்து விளக்கும் பத்திமை இலக்கியப் புலப்பாட்டு நெறியிற் பிறந்தவையாகும்.

'கூர்வாய் நாராய் வாராய் போனார்
கூடாரே சற்று அலஆவி

கோதானேன் மாதா மாறானாள்
 கோளே கேள் மற்று இளவாடை
ஈர்வாள் போலே மேலே வீசா
 ஏறா வேறு இட்டதுதீயின்
ஈயா வாழ்வோர் பேரே பாடா
 ஈடேறாரிற் கெடலாமோ[6]''

என்பது விரகதாபத்தில் தவிக்கும் மங்கையின் குரலாக வெளிப்படுகிறது. பண்டைத் தமிழ் அகத்திணை நெறியில் தன் உளக் காதலை அஃறிணைப் பொருள் ஒன்றன்பால் அறைவதாக அமைந்தது இப்பாட்டு. உயர்காதல் நெறி என்ற ஊடகத்தின் வாயிலாகப் பக்தி வெள்ளத்தை உருவாக்கும் முயற்சியாக இதனைக் கருதும்போது அருணகிரியார் பெண்களிடம் கொள்ளும் அகனன்புத் திணைக் காதலை மறுத்தும் வெறுத்தும் பேசுபவரல்லர் என்பதை அறியலாம். பொதுமாதர் எனப் பெறுவாரையே அவர் வருணித்து மொழிகிறார் என்பது தவறு.

'இரசபாகு ஒத்தமொழி அமுர்த மாணிக்கை நகை
 இணையிலா சத்திவிழியார் பசும்பொனிகர்
எழிலி நேரொத்த இருள்அளக பாரச்செயல்கள்
 எழுதொணாதப் பிறையினாரரும் புருவர்
எழுதுதோடிட்ட செவி பவள நீலக்கொடிகள்
 இகலியாடப் படிகமோடும் பொன்உரு திங்கள்மேவும்[7]''

என அரம்பைநிகர் மாதரின்அழகை வருணிப்பர். கேசாதி பாதமான இவ்வருணனை 59 சீர்களால் நிகழ்கின்றது. இவ்வருணனை பொதுமாதர் வருணனையின் வேறானது.

'ஓலையிட்ட குழைச்சிகள் சித்திர
 ரூபமொத்த நிறத்திகள் விற்கணை
 யோடிணைத்த விழிச்சிகள் சர்க்கரை அமுதோடே
ஊறி ஒத்த மொழிச்சிகள் புட்குர
 லோடு வைத்து மிழற்றும் மிடற்றிகள்
 ஓசை பெற்ற துடிக்கொள் இடைச்சிகள்[8]''

என்ற அவ்வருணனை நிகழ்கிறது. இத்தகைய மாதர் 'மனத்தை அழித்திடும் மடமாதர்' எனப் பெறுகின்றனர். அத்தகைய மாதர்

6. திருப்புகழ் மேலது 831
7. திருப்புகழ் மேலது 598
8. திருப்புகழ் மேலது 256

உறவில் மயங்காவண்ணம் அன்பர் தடுத்தாளப் பெற வேண்டுமென்பது அருணகிரியாரின் வேண்டுகோளாகும்.

ஆணும் பெண்ணும் உளக் கலப்பெய்தும் அன்புநிலையைத் துறவு என்ற பெயரால் அருணகிரியார் வெறுத்தொதுக்கவில்லை. மாறாக அத்தகு காதல் இறைவனிடமே இடம் பெற்றதாகக் காட்டுவர். உலகமெலாம் அன்பினாற் கலந்த இல்லற நெறி இயற்றுக என்பதே இறைவனின் கருத்தாதலின் அவனே மாதொருபாகனாக நின்றனன். முருகப்பெருமானும் ஞான விச்சையும் காதல் இச்சையும் மானிடர் எவராலும் கொள்ளத்தக்கன எனக் காட்டுதற்கு,

'கின்னங் குறித்தடியேன் செவி நீயன்று கேட்கச் சொன்ன
குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது கோடுகுழல்
சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னங் குறிச்சியிற் சென்று கல்யாணம் முயன்றவனே''

என முருகப்பெருமான் குறிஞ்சி சார்ந்த புனத்தின்கண் சென்று மொய்தார் அணி குழல் வள்ளியைக் களவுக் காதலால் அணைந்த செயலை எடுத்துக்காட்டுவர். கிரியாசத்தியாகத் தேவசேனையும் இச்சா சத்தியாக வள்ளியும் உருவகிக்கப்பட்ட நிலை, மாந்தர் யாவரும் அறிவும், அன்பும் உடையவராய் இலங்க வேண்டுமென்பதை உணர்த்துவதேயாகும்.

அருணகிரிப் பெருமான் மாதரைப் போற்றிக் கூறும் இடங்கள் பல உள. இறையாற்றலைச் சத்திவடிவாகவும், அச்சத்தி பயந்த பேராற்றலை முருகவடிவாகவும் அவர் கண்டனர்.

'சகல காரணி சத்தி பரம்பரி
இமய பார்வதி ருத்ரி நிரஞ்சனி
சமய நாயகி நிஷ்களி குண்டலி எமதாயி'

என்று தொடங்கிப் பலப்பல பெயர்களால் இறைவியைப் போற்றி அவள் பயந்த முருகப்பெருமானை வாழ்த்துகின்றார். மண்ணுலகப் பெண்களிற் சிறந்தோரைக் குறிக்கும் இடத்தில் 'கமல மாதுடன் இந்திரையும் சரி சொலவொணாத மடந்தையர்' எனக் குறிப்பிடக் காணலாம்.

பெண்களைக் குறித்துவரும் பல பாடல்கள் பெண்ணாசையினை விடத் தூண்டுவனவாகவே அமைகின்றன.

9. கந்தரலங்காரம் 24

'விநோதமிடும் விழி மடவார்பால் ஏகாப்பழி பூணும் மருளற' ஈடேற்றுக என வேண்டும் முறையில் அவை அமைந்தன. மண், பொன், பெண் என்ற மூவாசைகளில் பெண்ணாசையால் பல திறத்தினரும் அழியக் கண்ட நிலையில், அவ்வாசையைக் கடியுமாறு கூறுவது அருணகிரிப் பெருமானின் கடமையாக இருந்தது. 'மருவு பெண்ணாசையை மறக்கவே வேண்டும்' என்று வள்ளலார் கூறியதும் நினைக்கத்தக்கது. பட்டினத்தார் காலத்திலிருந்து, பெண்ணாசையைக் கடுஞ்சொற்களால் கடியும் ஒரு நிலை தமிழிலக்கியத்தில் உருவாகியிருக்கிறது. பட்டினத்தார், அருணகிரியார், தாயுமானவர், இராமலிங்கர் ஆகிய அருளாளர்கள் வைராக்கியமிகுந்த பாடல்கள் எனும் அருட்புனலால் மக்களின் காமக் கடுங்கனலை அணைத்துள்ளனர் என்பது தெளிவாகும்.



## 6. அருணகிரியார் காட்டும் சமூக வாழ்வியல்

அருணகிரிப் பெருமானின் இலக்கியங்கள் அனைத்தும் பக்தி நெறியே பரவுவன; அதனினும் ஒருமுகமாக அறுமுக இறைவனே அனைத்தும் என இயம்ப எழுந்தன. இவ்விலக்கியங்களில் பத்திமைச் சமூக அமைப்பு என்பது எப்படி இருக்க வேண்டுமென்பது தெளிவுறக் கூறப்பட்டுள்ளது. கடவுட் பற்றுக் கொண்ட அடியவர்களைக் குறித்துப் பல செய்திகள் இப்பாடல்களின் வழியே புலனாகின்றன. வரலாற்று நெறியில் சமயம், சமய உட்பிரிவுகள், சமய சித்தாந்தங்கள் ஆகியன தெளிவான உருவோடும் வரையறையோடும் காழ் கொள்ளாத சங்க காலத்துச் சமய நிலைக்கும், அருணகிரியார் காலச் சமய நிலைக்கும் உள்ள வேறுபாட்டைத் திருமுருகாற்றுப்படையையும் திருப்புகழையும் ஒப்பிட்டுக் காண்பதனாலேயே அறியலாம். சங்க காலத்தை அடுத்துக் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றிய சைவ பக்தி இலக்கியத்திற்கும், அருணகிரிநாதர் இலக்கியங்களையும் ஒப்பீடு செய்வதன்வழி இருவேறு கால நிலைகளையும் அறியலாம். கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டிற்குப் பின் ஏற்பட்ட சைவ எழுச்சி, சாத்திர நூல்களின் தோற்றம், சிற்றிலக்கியங்களின் தோற்றம் ஆகியவற்றோடு அருணகிரியாரின் படைப்புகளை ஒப்பிடுகையில் அவ்விரு காலங்களுக்கும் உரியனவாக அமைந்த பண்புகளை அறியலாம்.

அருணகிரியார் சமய உலகில் புதுமை காண விழைந்த பெரியார். திருமுறைகளும் சாத்திரங்களும் சிவனே முழுமுதல் என்ற கருத்தை வளர்த்திருந்த நிலையில் முருகனை முழுமுதலாகக் காட்டினார். முழுமுதலாகிய சிவனினின்றும் அவன் வேறல்லன் என்ற கருத்தையும் நிலைநாட்டினார்.

'சிவமய ஞானம் கேட்கத் தவமுனி வோரும் பார்க்கத்
திருநட மாடும் கூத்தர் முருகோனே'

எனச் சிவபெருமானை முருகனாகவே காண்கிறார். சங்க இலக்கியங்களில் 'வேலன்' எனும் தெய்வம் திணைநில மக்களிடையே மிக நெருக்கமுற்றிருந்தது. முருகு, வேலன் என்னும் பெயர்களுடைய அத்தெய்வம் தீண்டப்பெற்ற நிலையில் ஆடுவோனும் வேலன் எனப்பட்டான். எளிய சிற்றூர்ப் பகுதிகளில் வாழ்ந்த மக்கள் வீரமிக்க ஒரு தெய்வமாக முருகனைக் கருதி வழிபட்டனர். அவர்கள் வாழ்வின் எல்லா நிகழ்ச்சிகளிலும் முருகன் இடம் பெற்றான். அத்தெய்வத்தை மிக உரிமையோடும் நட்போடும் மக்கள் அணுகி வழிபடவும் செய்தனர்.

'கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்
கடவுளாயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே[1]''

எனத் தோழி ஒருத்தி, முருகனை அறிவற்றவன் நீ எனக் கடிந்து கொள்வதாகச் சங்கப் பனுவல் காட்டுகின்றது. 'இவள் காதல் நோயுற்றவள் என்பதை அறியாது வேறு ஏதோ கூறும் நீ அறிவற்றவன். நீ கடவுளாகவே இருப்பினும் அறிவற்றவனே' எனச் சொல்லும் உரிமை மிகுதியை அக்காலப் பெண் பெற்றிருந்தாள். இத்தகைய முருகனை மலை முழைஞ்சுகளிலும், மேற்பரப்பிலும், சந்தியிலும் சதுக்கத்திலும் வழிபட்டனர். பழமுதிர் சோலைகளில் இவ்வழிபாடு நிகழ்ந்த தன்மையை நக்கீரர் காட்டுகின்றார். கடம்பமரம் உள்ள இடம், பொதியில், மன்றம், ஆதீண்டு குற்றியையுடைய வெளி, முச்சந்தி, நாற்சந்தியாகிய இடங்களில் இவ்வழிபாடு குன்றவர்களாலும் கானவர்களாலும் நிகழ்த்தப் பெற்றுள்ளது. மறியறுத்துக் குருதி தோய்ந்த செந்தினை பரப்பிச் செவ்வலரி மாலை நாற்றி இன்னியம் கறங்க இவ்வழிபாடு நடைபெற்றது. பரங்குன்றிலும், கடற்கரைப் பகுதியாகிய செந்திலிலும், பழனியிலும், செய்குன்றாகிய ஏரகத்திலும், பிற குன்றுகளிலும் சோலைகளிலும் முருகவழிபாடு நிகழ்ந்தது. முருகன், சிவன், திருமால், பலராமன் ஆகிய நால்வரும் குறிப்பிடத்தக்க தெய்வங்களாகப் புறநானூற்றில் போற்றப் பெறுகின்றனர். சிவபெருமானின் மகனாகவும், குன்றம் எறிந்தவனாகவும், தமிழுக்குத் தலைவனாகவும் விளங்கிய முருகன் பண்டைத் தமிழ்த் தெய்வமாகப் போற்றப் பெற்ற நிலையில் எளிய மக்களின் வழிபாட்டுத் தெய்வமாகவே விளங்கினான். சிவன்

---

1. நற்றிணை 34:8-11

கோயில்களில் தொடக்க காலத்தில் முருகன் இடம் பெறவில்லை. பெருங்கோயில்களின் திருச்சுற்றுகளி'லும் முருகன் பிற்காலத்திலேயே இடம் பெறக் காண்கிறோம். படிப்படியாக முருக வழிபாடு பலதிற மக்களிடம் பரவிய நிலையில், எளிய மக்களால் வழிபடப் பெற்ற முருகக் கடவுள் அந்தணர், முனிவர், அரசர், செல்வர் எனும் சமூக தளத்தின் மேனிலையிருந்தவர்களாலும் வழிபாடு செய்யப்பெற்ற நிலையை அறியலாம். திருவேரகத்தில், அறுதொழிலோரும் இருபிறப்பாளரும் முத்தீ வளர்க்கும் வேள்வி செய்வோருமாகிய அந்தணர் ஈர ஆடையோடு உச்சிக்கூப்பிய கையினராக வந்து முருகனை வழிபட்டனர் என்று நக்கீரர் கூறுகின்றார். அருணகிரியாரும் 'ஞான தபோதனர்கள் சேரும் சுவாமிமலை' எனப் போற்றுகின்றார். வடமொழி மந்திரங்களைச் சொல்லி அவர்கள் வழிபாடு செய்வதை,

'ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி
நாவியல் மருங்கின் நவிலப் பாடி[2]'

எனத் திருமுருகாற்றுப்படை கூறும். இதனையே அருணகிரிப் பெருமானும்,

'வகைவகை எழுந்து சாமவதி மறைவியந்து பாட
மதிநிழலிடும் சுவாமி மலைவாழ்வே'

எனச் சாமவேத கீதம் கொண்டு வழிபட்டனர் எனக் கூறுவர். இத்தலத்தில் அருணகிரிப் பெருமானுக்குப் பாத தரிசனம் கிடைக்கப் பெற்றது.

'தகையா தெனக்கு உன் அடி காண வைத்த
தனி ஏரகத்தின் முருகோனே
தருகாவிரிக்கு வடபாரிசத்தில்
சமர்வேலெடுத்த பெருமாளே'

அருணகிரிப் பெருமான் இவ்வாறு பாடியதோடு அமைந்திலர். வேத மந்திரங்களும் வேள்விகளும் அந்தணரும் தவமுனிவரும் போற்றி வழிபடும் இம்முருகன் யார் தெரியுமா என்ற வினாவிற்கு விடையளிப்போர் போல்,

'வனத்தில் வந்ததொரு பழையவன் என ஒரு
குறத்தி மென்புனம் மருவிய கிளிதனை
மயக்கி மந்திர குருமலை தனில் அமர் பெருமாளே'

என்று கூறுகிறார். எளிய மக்கள் இன்று காவடி சுமந்து வேல் வேல் என முழங்கித் திருப்புகழ் பாடிக் கொண்டு சென்று வழிபடுவதற்கு

2. திருமுருகாற்றுப்படை 186-7

வழிசமைத்தவர் அருணகிரியாரேயாவர். இராசராசன் காலத்திற்குப் பின்பே சுற்றுக்கோயில் தெய்வங்கள் திருச்சுற்றுகளில் இடம் பெற்றன. முருக வழிபாடு பெருகப் பெருகச் சிவாலயங்களில் முருகன் சன்னதியும் சோமாஸ்கந்தராகச் சிவபெருமானின் திருவுருவும் இடம் பெற்றன. இவற்றுக்கெல்லாம் மேலாக முருகன் தலைமைத் தெய்வமாக ஏற்கப்பட்ட நிலையும் கௌமார சமய நெறியும், கௌமார மடாலயங்களின் தோற்றமும் தோன்றி வளர்ச்சி பெற்றன.

## சிவனுக்குரியன எல்லாம் முருகனுக்குரியன

நமசிவாய, சிவாயநம எனும் மந்திரங்கள் சிவனுக்குரியன. ஆனால் இவற்றை முருகனுக்கு உரியனவாக ஆக்குகின்றார் அருணகிரியார். சிவபெருமானையும் நடராசர் முதலான மூர்த்தங்களையும் முருகனாகக் காணும் அருணகிரியார், முருகனை,

'சிவயநம நமசிவய காரணன் சுரந்து
அமுதமதை அருளி எமையாளும் எந்தை தன்
திருவுருவின் மகிழ் எனது தாய் பயந்திடும் புதல்வோனே'

என்றும்,

'சிவாயநம எனும் நாமம் ஒருகாலும் நினையாததி
மிராகரனை வாவென்று அருள்வாயே'

என்றும் கூறுவதோடு முருகன் சிவஞானசித்தியினையும் தருபவனாகக் கூறுப்பெறுகின்றான். 'சிவபதத்தே பதித்தருள்வாயே' என முருகனை வேண்டவும் செய்கிறார் அருணகிரியார். ஓம் என்பதனுள்ளே முருகனே உறைவதாகவும் காட்டுகின்றார் அப்பெருமான்.

'ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருகன் உருவம்கண்டு
தூங்கார் தொழும்பு செய்யார்'

என்ற அலங்காரப் பகுதி நினைக்கத் தக்கது. மேலும் மயிலையே ஓங்கார மந்திரத்தின் உருவமாக அவர் காண்கிறார். அவ்வோங்காரப் பொருளைச் சிவபெருமானுக்குத் தமிழில் பகர்ந்ததாகக் கூறுவதும் நயக்கத்தக்கதாகும்.

அருணகிரியார், முருகன், தமிழ் என முழங்கி இவ்விரண்டிற்கும் சிறப்புமிகுதி எனக் கருதுமாறு அறிவுறுத்தல் நாம் ஊன்றி நோக்கத்தக்க கருத்தாகும். எளிய மக்கள் கோயிலுக்குள் சென்று வழிபடுவதற்குரிய சூழலை அவர் உருவாக்கியிருக்கிறார். முருகன் வழிபடு தெய்வமாகவும் முதன்மைக் கடவுளாகவும்

ஓதப்பட்ட சூழலில் எல்லாவகை மக்களுக்கும் கோயில் வழிபாடு உரியதாகியிருக்கிறது.

## இறையன்பு எல்லாம் ஆற்ற வல்லது

முருகக் கடவுளை வழிபட்டால், பற்பல நன்மைகள் சேரும்; துன்பங்கள் துடைக்கப்படும் என்கிறார் அருணகிரியார். நாளும் கோளும் தீங்கு செய்யமாட்டா எனக் கோளறு பதிகத்தில் சம்பந்தர் குறித்தார். கந்தரலங்காரத்தில் முருகப்பெருமான் தாள் துணையாக நிற்கும்போது நாளென்செயும் வினைதான் என்செயும், எனை நாடிவந்த கோள் என்செயும் கொடுங்கூற்று என்செயும் என்று கூறுகின்றார்.

மக்கள் யாவருக்கும் இறப்புக் குறித்த அச்சம் உள்ளது. திருவள்ளுவர் சாதலின் இன்னாதது இல்லை என்கிறார். சாவை வெல்வதற்குரிய வழி சாவுக்கஞ்சாமைதான். அவ்வஞ்சாமை எப்படி நம்மை எய்தும்? இறைவன் தாள்மீது நம்பிக்கை இருப்பவர்க்கு அவ்வஞ்சாமை தானே வந்தெய்தும்.

'தண்டாயுதமும் திரிசூலமும் விழத்தாக்கி உன்னைத்
திண்டாட வெட்டி விழவிடுவேன் செந்தில் வேலனுக்குத்
தொண்டாகிய என்னவிரோத ஞானச் சுடர்வாள்
கண்டாயடா அந்தகா வந்துபார் சற்றென் கைக்கு எட்டவே[3]'

என்று காலனை அறைகூவும் அஞ்சாமை காட்டுவர். கவிஞர் சுப்பிரமணிய பாரதியாரும் 'காலா உனை நான் சிறு புல்லென மதிக்கிறேன் - என்றன் காலருகே வாடா சற்றே உனை மிதிக்கிறேன். வேலாயுத விருதினை மனதிற் பதிக்கின்றேன்' என்று கூறுவது அருணகிரிநாதரின் மொழியைப் பின்பற்றியேயாம். 'இயமன் என்உயிரைக் கொள்ளைகொள்ளாமல் காப்பாற்றும் பொருட்டாக என் புந்தியில் முருகா! நீ வந்த பொருந்துக' என அந்தாதியிலும் அருணகிரிநாதர் கூறுவர். 'திருப்புகழ்' என்ற சொல்லை அருணகிரியார் முருகப்பெருமானின் பெரும்புகழை உணர்த்தவும், அப்புகழ் பேசும் பாடலைக் குறிக்கவும் தம் பாடல்களிற் பயன்படுத்துவர். திருப்புகழைப் படித்தால் காலனைக் குறித்த அச்சம் நீங்கும் என்பது அவர் மொழி.

'படிக்கும் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினாற்
பிடிக்கும் பொழுது வந்து அஞ்சல் என்பாய்[4]'

3. கந்தரலங்காரம் 25
4. கந்தரலங்காரம் 50

என இறைவனை வேண்டுகின்றார். இந்திரன் மனைவி சசிதேவி தன் கழுத்திலிருந்த அம்பொன் மணி நூலாகிய தாலி வாங்கப்பெறாது காத்தவனன்றோ திருமுருகன் எனக் குறிப்பிட்டு அதனால் எனக்கு 'மரணப்ரமாதம் நமக்கில்லை' என அறிவிக்கின்றார். சமூதாயத்தில் பக்தி நெறி பரவுவதற்கு மக்களிடையே வாழ்க்கையைப் பற்றிய நம்பிக்கையை உண்டாக்க வேண்டுமென்று அறிந்த நிலையில் அருணகிரிநாதர் இறப்பைக் குறித்து அஞ்ச வேண்டியதில்லை என உணர்த்துகின்றார்.

இறப்பச்சத்தை அடுத்துச் சமூதாயத்தைத் துன்புறுத்தும் தன்மை உடையனவாக விளங்கியவை நோய்கள். நோய்களிலிருந்து விடுபடுதல் எவ்வாறு? எந்த மருந்தையும் விடப் பெரிய மருந்தாகத் திகழ்வது இறை நம்பிக்கையேயாம் என ஆன்மீக உலகம் இயம்புகின்றது.

'எலுப்புத் தோல்மயிர் நாடி குழாமிடை
இறுக்குச் சீ புழுவோடு அடை மூளைகள்
இரத்தச் சாகரம் நீர்மலம் மேவிய கும்பியோடை
இளைப்புச் சோகைகள் வாதம் விலாவலி
உளைப்புச் சூலையொடே வலுவாகிய
இரைப்புக் கேவல மூலவியாதியொடு அண்டவாதம்
குலைப்புக் காய்கனல் நீரிழிவு ஈளையொடு
அளைப்புக் காதடை கூனல் விசூசிகை
குருட்டுக் கால்முடம் ஊமை உள் ஊடறு கண்டமாலை[5]'

என்றவாறு மனிதனை அலைக்கும் நோய்கள் பலப்பல பேசப்பெறுகின்றன. பட்டினத்தார் நிலையாமையைக் காட்டும் வகையில் ஓரளவு நோய்கள் குறித்தும் உடற்கூறு குறித்தும் பேசுவர். நோய்களின் வகைகள், குணங்கள், நோய்த்துன்பம், உடற்கூறு, முதுமைக்குறிகள் குறித்து வேறெவரும் அருணகிரியார் போல விரிவாகக் கூறவில்லை. நோய், முதுமை, வறுமை ஆகியவற்றால் ஒரு மனிதன் தன் வீட்டிலேயே அந்நியன் ஆகிறான். காதல், பாசம், பற்று, உயிர்கலந்த நேயம் ஆகியன எல்லாம் விட்டுவிடுகின்றன. இந்த நிலையை அருணகிரியார் விரிவாகக் கூறுகின்றார்.

'வறுமைகளும் முடுகிவர உறுபொருளும் நழுவச் சில
வாத மூதுகாமாலை சோகைநோய்

5. திருப்புகழ் மேலது 653

பெருவயிறு வயிறுவலி படுவன்வர இருவிழிகள்
பீளை சாறிடா ஈளை மேவிடா
வழுவழென உமிழுமது கொழுகொழென ஒழுகிவிழ
வாடி ஊனெலாம் நாடி பேதமாய் மனையவள் மனம்வேறாய்
மறுகமனையுறும் அவர்கள் நணுகு நணுகு எனும் அளவில்
மாதர் சீயெனா வாலர் சீயெனா
கனவுதனில் இரதமொடு குதிரைவர நெடியசுடு
காடு வாவெனா வீடு போவெனா
வலதழிய விரகழிய உரைகுழறி விழிசொருகி
வாயு மேலிடா ஆவிபோகும்நாள் மனிதர்கள் பலபேச[6]''

அமையும் வாழ்க்கையை இவ்வளவு விரிவுற யாரும் கூறவில்லை. பலப்பல நோய்களும் முதுமையும் நெருங்கி வரும்போது எல்லா உறவுகளும், உடைமைகளும் பொய்யாய்ப் போய்விடுகின்றன. இவ்வாறு அந்நியப்படாதிருக்க ஒரு மெய்த்த உறவைப் பெறுதல் வேண்டுமென்றும் அவ்வுறவு முருகப்பெருமானோடு அமையுமென்றும் அருணகிரியார் அறிவுறுத்துகின்றார்.

'கிருகவாசியாகிய மயக்கக் கடல்' என்று அருணகிரியார் இல்லறத்தை வருணிப்பர். தேவைகளை நாடிய பயணமாக வாழ்க்கை அமைகிறது. 'தீரவே யோசிக்கும் வேளையில் உண்பதும் உறங்குவதுமாய் முடியும்' என்பர் தாயுமானவர். வாழ்க்கையின் இன்றியமையாத் தேவை எது?

'உடுக்கத் துகில் வேணும் நீள்பசி
அவிக்கக் கனபானம் வேணும்நல்
ஒளிக்கும் புனலாடை வேணும்மெய் உறுநோயை
ஒழிக்கப் பரிகாரம் வேணும் உள்
இருக்கச் சிறுநாரி வேணும் ஓர்
படுக்கத் தனிவீடு வேணும்[7]''

என்று ஒவ்வொருவரும் அவாவுகின்றனர். இவையெல்லாம் கிடைத்துவிட்டால் நிறைவு வருமா? மகிழ்ச்சியாய்ப் போதும் எனக் கூறும் மனநிலை வருமா? இவை வாழ்க்கையின் உன்னதக் குறிக்கோள்களா? இவை மாயையின் பிணிப்புகளாக உயிரை அலைப்பவை. இவற்றைத் தேடுவதிலும் அனுபவிப்பதிலும் மனித

6. திருப்புகழ் மேலது 868
7. திருப்புகழ் மேலது 419

வாழ்க்கை கழிந்துவிடுகிறது. 'நல்வாயில் செய்தார் நடந்தார் உடுத்தார், நரைத்தார் இறந்தார் என்று சொல்லாய்க் கழிகின்றது' என்றனர் சுந்தரர். 'தேடிச் சோறு நிதம் தின்று பல சின்னஞ்சிறு கதைகள் பேசி வாடித் துன்பமிகு உழன்று பிறர் வாடச் செயல்கள் பல செய்து நரை கூடிக் கிழப்பருவமெய்திக் கூற்றுக்கு இரையெனப் பின் மாயும் வேடிக்கை மனிதர்' என்று பாரதியார் கூறுவது போல் பயனற்ற வெற்று வாழ்க்கையாகவே இஃதமைகிறது. முருகனை உணர்ந்து உணர்ந்து நிர்க்குணம் பூண்டு நம்மை மறந்தால் உடம்பு பற்றிய துயரமெல்லாம் ஒழியும் என்கிறார் அருணகிரிப் பெருமான். உடம்பு ஒரு பொக்கக் குடில் என்பர் அவர்.

'புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சில் இருந்த உயிர்க்கு[8]'

என்று கூறுவர் திருவள்ளுவர். இந்த உயிர்க்கு இருக்க நல்ல இடம் கிடைக்காமற் போயிற்றே என்ற இரக்கம் இங்குப் புலனாகின்றது. இக்குறட்பாவுக்கு உரையெழுதும் பரிமேலழகர், வாத முதலிய பிணிகளுக்கு இடமாக அமைந்த இந்த உடம்பில் ஒருபக்கம் ஒதுங்கி இருக்கும் உயிர் என்ற பொருள்பட எழுதுவர். பட்டினத்தார் உடம்பின் இழிந்த இயல்பை மிகுதியும் கூறியுள்ளார்.

'ஐவர் கலகமிட்டு அலைக்கும் கானகம்
சலமலப் பேழை; இருவினைப் பெட்டகம்;
வாத பித்தம் கோழை குடிபுகும் சீறூர்;
ஊத்தைப் புன்தோல் உதிரக் கட்டளை;
நாற்றப் பாண்டம்; நான்முழத்து ஒன்பது
பீற்றல் துண்டம்; பேய்ச்சுரைத் தோட்டம்[9]'

இப்படித் தொடர்கிறது அவர் வருணனை. உடம்பு உயர்ந்த பொருளா? இழிந்த பொருளா? அது பயன்படுத்தப்பெறும் விதத்திலேயே விடை அமையும். உடம்பு அழிவதுதான், இழுக்கானதுதான்; மேலே சொன்ன இழிவெலாம் உடையதுதான். ஆனால் 'செவ்விது ஆங்கன்ன வினைபடுபாலாற் கொளல்' என்று வள்ளுவர் கூறியது போல, எதற்குப் பயன்படுகிறது என்று பார்க்க வேண்டும். காம வெகுளி மயக்கங்களுக்கு இடனாக அமைந்தால் உடம்பினால் வரும் கேடுகளே மிகுதியாம். உலகம் நன்கு வளர வேண்டுமென்று கருதிய திருமூலர்,

8. திருக்குறள் 340
9. பட்டினத்தார் பாடல்கள் - கோயில் திருவகவல் 2

'உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே[10]'

என்று கூறினார். அருணகிரிப் பெருமானும் உடலின் இழிதகவெல்லாம் உணர்த்தி, இவ்வுடலைக் கொண்டே இறைவனது அருள்பெற்றுப் பிறவா நிலையடைய வேண்டுமென்பதைக் காட்டுகின்றார். இந்திரியங்கள் வழியான இன்பநாட்டம் குலைந்த நிலையில் உடம்பு முத்திக்குரியதாகுமெனக் கூறுகின்றார்.

'காய மாய வீடு மீறிய கூடு நந்து
புற்புதந் தனிற் குரம்பை கொண்டுநாளும்
காசில் ஆசை தேடி வாழ்வினை நாடி இந்த்ரி
யப்ர மந்தடித்தலைந்து சிந்தைவேறாய்
வேயிலாய தோள மாமடவார்கள் பங்க
யத்து கொங்கையுற்றிணங்கி நொந்திடாதே
வேதகீத போத மோன மெய்ஞ்ஞான நந்த
முற்றிடு இன்ப முத்தியொன்று தந்திடாயோ'

என உடம்பின் இயல்பான வேட்கையை நீக்கி ஆளுமாறு வேண்டுகின்றார். உயிருக்குத் தனுகரண புவன போகங்களை மாயையிலிருந்து படைத்துக் கொடுப்பதே உயிர் பக்குவமுற்று, உலகின் உண்மை உணர்ந்து விடுபடுதற்கே என்பதை அருணகிரிப்புலவர் பல பாடல்களில் தெளிவுற எடுத்தோதியுள்ளார். தொடர்ந்து இத்தகைய சமய ஞானிகளின் அறிவுறுத்தலால் வரையறையற்ற இன்ப நுகர்வும், சிற்றின்பக் காமக் கயத்திடை மூழ்கிச் செருக்கும் சீர்குலைவும், ஒழுக்கக் கேடும் கட்டுப்படுத்தப்பட்ட நிலையையும் சமுதாயம் கண்டது. திமிர்த்து மதர்த்துப் பாயும் வலிமைமிக்க குதிரையைத் தகைக்கும் கடிவாளங்களாக எந்த நூற்றாண்டிலும் 1. சட்டம்; 2. சான்றோர் அறநெறி; 3. உலக மக்கள் தம்மை இழிவாக நினைக்கக் கூடாதென்ற தன்மதிப்பு ஆகியன இருந்தன. சமயம் ஒழுக்கநெறியைச் சமுதாயத்தில் பேணிக் காக்கும் கருவியாக அமைந்தது. அருணகிரியாரின் பாடல்கள் சமுதாயத்தில் தவறு

10. திருமந்திரம் கழகப் பதிப்பு 704

செய்வோரை, செய்ய விழைவோரை, ஒழுக்கநெறிப் பிறழ்வு உடையோரை,

1. நோய்க் கொடுமைகளைக் கூறி, வருணித்து மொழிந்து நன்னெறிக்கண் செல்லப் பணித்தன;
2. பாவ வினை மிகுந்து பிறவிகள் தொடர்ந்து துன்பப்பட வேண்டிவரும் என அச்சுறுத்தித் திருத்த முயன்றன;
3. உலகோர் பார்வையில் அருவருக்கத்தக்க நிலையடைய வேண்டி வரும் என உணர்த்திச் சரியாக ஒழுக அறிவுறுத்தின;
4. அந்தமில் இன்பம் முருகன் சேவடியே எனக் காட்டி அதனை நாடும் மனநிலையை உருவாக்கின.

### தமிழும் பக்தியும் தழைக்கப் பாடினார்

திருமுறைகளின் தோற்றத்தின்பின் பக்தி இயக்கம் தமிழ்ச் சமுதாயத்தில் தேங்காமல் வளர அருணகிரியாரின் பாடல்கள் ஆற்றியுள்ள பணி மிகப் பெரியது. 'முத்தமிழ்' என்ற சொல்லை மிகப்பல இடங்களில்ஆளும் அருணகிரியார் தமிழால் விளைந்த அளப்பரும் செயல்களைத் தம் பாடல்களிற் குறித்துக் காட்டத் தவறவில்லை. நாயன்மார்களின் தமிழ் விளைத்த அருட்செயல்கள் பலவற்றையும் அவர் எடுத்துரைக்கின்றார். உருது, தெலுங்கு போன்ற மொழிகள் தமிழகத்திற்குள் பரவி வருங்காலத்தில் அருணகிரியாரின் சந்தத் திருப்புகழ் தமிழின் தலைமையையும் பெருமையையும் நிலைநாட்டிக் காத்தது.

அருணகிரிப் பெருமான் பதினைந்தாம் நூற்றாண்டில் பற்பல சிறுதெய்வ வழிபாடுகள் பெருகாமல் முருக வழிபாடு பெருகக் காரணமானவர். பக்தி இயக்கத்தில் அடியார்கள் பெருமை பேசியதாகத் திகழ்வது என்பதை அவரே எடுத்துக்காட்டினார். ''மாசில் அடியார்கள் வாழ்கின்ற ஊர் சென்று தேடி விளையாடியே அங்ஙனே நின்று வாழும் மயில்வீரன்'' என்பதால் அடியவர்களை முருகன் தேடிச் சென்று அருள்வான் எனக் கூறினர். சோதிடம், வேள்வி, பலியிடல் ஆகியன வேண்டாம் என்று சொன்ன பெரும் சீர்திருத்த உணர்வைப் பதினைந்தாம் நூற்றாண்டில் பரப்பிய கவிக்கோமகன் அவர்.

மொழிக்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்பை அருணகிரிபோல எவரும் கூறவில்லை. முருகனின் தமிழ்ப் பற்று எத்தகையது எனக் கூற வந்த அருணகிரியார் 'முத்தமிழால்

வைதாரையும் வாழ வைப்போன்' என்று கூறினர். தமிழ் உணர்வைச் சமுதாயத்தில் இதனைப் போற் பரப்பிய தொடர் ஒன்று இருக்க முடியாது. அருணகிரியாரின் தொண்டு இன்னும் பலப்பல நூற்றாண்டுகளுக்குத் தொடர்ந்து நிற்பது. தமிழும் முருகனும் நினைக்கப்படும் இடமெல்லாம் ஆசு கவிக்கோமான், சந்தத் தமிழ் நாவீறு அருணகிரிநாதரெனும் கருணைக் குன்றம் நம் கண்முன் நிற்கும் என்பது உறுதி.

'வள்ளி மணவாளன் மயிலேறும் வள்ளல்தனைத்
தெள்ளு தமிழாற் புனைந்து சீர்பெறவே - உள்ளபடி
வைப்பாம் அருணகிரி வாழ்த்தும் திருப்புகழைக்
கற்பார் கரையேறு வார்'



# குமரகுருபரர்

## பொருளடக்கம்

# குமரகுருபரர்

## 1. வாழ்க்கைச் சித்திரம்

"குமரகுருபர சுவாமிகளுடைய சரித்திரம் பல வகையிலும் சிறந்த குறிக்கோள்களை நமக்கு உணர்த்திக்கொண்டே யிருக்கிறது."

- எஸ். வையாபுரிப் பிள்ளை[1]

ஒன்பது கைலாசங்களும் ஒன்பது திருப்பதிகளும் தன் கரையில் அமையப்பெற்றது தாமிரபரணி நதி. இதன் வடகரையில் திருவைகுண்டம் என்று வழங்கும் திருப்பதியின் வடபாலில் திருக்கைலாசம் என ஒரு பகுதி உண்டு. அங்கே வழிவழியாகத் தமிழ்ப் புலமையும் முருகக் கடவுளின்மீது பக்தியும் கொண்டு வாழ்ந்துவந்த ஒரு பெரியவர் சண்முகசிகாமணிக் கவிராயர் என்பவர். சைவ வேளாள குலத்தைச் சார்ந்தவர் அவர். அவருடைய வாழ்க்கைத்துணைவியாராக விளங்கியவர் சிவகாமசுந்தரி அம்மையார். சண்முகசிகாமணி - சிவகாமசுந்தரி ஆகிய இருவருக்கும் 1625-இல் ஆனித் திங்கள் திருவாதிரை நன்னாளில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அதற்குக் 'குமரகுருபரன்' என்னும் அழகிய பெயரினைச் சூட்டி அவர்கள் வளர்த்துவந்தனர். இதனை,

'அருள்மிகும்ஓர் வேளாளன் அரும்தவத்தின் பயனாகி,
ஒருபுதல்வன், எழில்மிக்கான்; ஊமையாப் பிறந்தானே' (1)

எனக் 'குமரகுருபரசாமி சருக்க'த்தின் முதற்பாடலில் குறிப்பிடுவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.[2]

1. தமிழ்ச் சுடர் மணிகள், ப. 206.
2. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தம் 'புலவர் புராண'த்துள் படைத்துள்ள 'குமரகுருபரசாமி சருக்க'த்தின் அடிப்படையிலேயே இவ்வியல் எழுதப்பெற்றுள்ளது. பக்க எண்கள் 'குமரகுருபரசாமி சருக்க'த்தில் இடம்பெறும் பாடல்களைச் சுட்டுவனவாகும்.

## 'பூ' எனப் புகன்ற புத்திரன்

குமரகுருபரர் ஐந்து வயதுவரையில் பேச்சின்றி ஊமையைப் போல் இருந்துவந்தார். அது கண்டு வருந்திய பெற்றோர்கள் அவரைத் திருச்செந்தூருக்கு எடுத்துச் சென்றனர். முருகப் பெருமானிடம், ''இம்மகன் ஓர் மண்டலத்தில் இனிய சொல் பேசிட வேண்டும்; அங்ஙனம் அவன் பேச நீ அருள் புரியவில்லையெனில், இக்கடலிலே வீழ்ந்து நாங்கள் மாய்ந்தொழிவோம்'' எனக் கூறி விரதம் மேற்கொண்டனர். அவர்கள் உப்பில்லாத வெறுஞ்சோற்றினை ஒரு நாளைக்கு ஒரு வேளையே உண்டனர்; உறங்காமல் விழித்திருந்து கடுமையான தவ விரதம் இருந்தனர். இவ்வாறாக நாற்பத்தைந்து நாட்கள் கழிந்தன. நாற்பத்தாறாம் நாளன்று பகல் பூசை முடிந்து, கதிரவன் மறைந்ததன் பின்னர், 'இன்று பயன் கைவருமோ? இறப்பு வருமோ?' என்று எண்ணியவராய்ச் செந்திலாண்டவர் திருச்சந்நிதியிலே அவர்கள் குழந்தையுடன் கை தொழுது நெஞ்சுருகி நின்றனர். இவ்வேளையில் முருகப்பெருமான் அருளால் கோயில் அருச்சகர் மீது ஆவேசம் வந்துற்றது. அவர் பெருமானின் திருக்கை வேலினை எடுத்து, பூமாலை ஒன்றினை அக்குழந்தையின் கழுத்தினில் இட்டு, திருநீறும் கமண்டல தீர்த்தமும் பெய்தார். பண்டை வினைத்திறம் தீரவே, 'பூ என்னப் புகன்றான் அப்புத்திரன்.' வாழ்வில் முதன்முதலாக உச்சரித்த அம்மொழியே பற்றிப் 'பூ' எனத் தொடங்கிப் பாவினத்தில் உயர்ந்ததான பஃறொடை வெண்பாவில் தம் முதல் நூலான 'கந்தர் கலிவெண்பா'வினைப் பாடினார் ஐந்தே வயதான குமரகுருபரர்! 'ஆ!' என அங்குற்றார் அனைவரும் அதிசயித்தனர்.



வாய்மையால் தவம் புரிந்த தாயும் தந்தையும் தம் புதல்வன் வாய்மொழி உரைத்தது கேட்டுப் பெருமகிழ்வு கொண்டனர்; 'ஊமையாய்ப் பிறந்த இவன் உருத்திரசன்மனோ?' எனப் பலரும்

குழந்தையைத் துதித்துத் தொழுதனர். ஊமையாக இருந்த குழந்தை பேசியதும், உயர்பாவினால் பாடிப் பரவியதும் கண்ட உலகோர் வியந்து போற்றினர்; 'ஓதாமல் உணர்ந்தவன்' என்று அவனது பாதார விந்தம் பணிந்தனர்.

'கந்தர் கலிவெண்பா' என்ற பிரபந்தத்தைப் பாடியதற்குப் பிறகு குமரகுருபரர் தம் ஊரில் எழுந்தருளியுள்ள கைலாயநாதர்மீது 'கைலைக் கலம்பகம்' என ஒரு பிரபந்தம் இயற்றினார் என்பர். இவருக்குக் 'குமாரசுவாமிக் கவிராயர்' என ஒரு தம்பியார் இருந்தனர் என்பர் உ.வே. சாமிநாத ஐயர் (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்', ப xii).

## அரங்கேற்றத்தின்போது நிகழ்ந்த அற்புதம்

குமரகுருபரர் தமிழ் இலக்கண இலக்கியங்களையும் ஞான சாத்திரங்களையும் திருவருளால் விரைவில் கற்றுத் தேர்ந்தார்; மருவுக்கு வாசனை வாய்த்தாற்போன்று பக்தி ஞான வைராக்கியங்கள் அவரிடத்தே உண்டாகி வளரத் தொடங்கின. அப்பால் பல்வேறு சிவ தலங்களுக்கும் சென்று சிவ தரிசனம் செய்யத் தொடங்கினார் அவர். மதுரையிலே சில காலம் தங்கியிருந்தார். அப்போது அவர் மீனாட்சியம்மையின்மீது ஒரு பிள்ளைத் தமிழ் பாடினார். அதனை அக்காலத்தில் மதுரையை அரசாண்டுவந்த திருமலை நாயக்கரின் முன்னிலையில் அரங்கேற்றம் செய்தார். நூல் அரங்கேற்றத்தின் போது மீனாட்சியம்மையே குழந்தையுருவாக எழுந்தருளி வந்து கேட்டு மகிழ்ந்தனர் என்றும், குமரகுருபரர் முத்தப் பருவத்தை அரங்கேற்றிக் கொண்டிருக்கையில் தம் திருக்கழுத்தில் இருந்த முத்துமாலை ஒன்றை எடுத்து அவருக்கு அணிந்துவிட்டு மறைந்தனர் என்றும் கூறுவர் (உ.வே. சாமிநாத ஐயர், ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கம், பக். xii-xiii). இந்த அற்புத நிகழ்வினையே பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை தம் 'இலக்கிய வரலாற்றி'ல் (இரண்டாம் பாகம்) பிறிதொரு வடிவில் பதிவு செய்துள்ளார்: "அவர் (குமரகுருபரர்) மதுரை சென்று மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் பாடித் திருமலை நாயக்கர் முன் அரங்கேற்றிய போது, அங்கயற் கண்ணம்மை பூசாரியின் குழந்தை வடிவாய்த் தோன்றி, அரசன் கழுத்திலிருந்து முத்தாரத்தை எடுத்து அடிகள் கழுத்தில் அணிந்திட்டு மறைந்தருளினமை கண்டு



யாவரும் வியப்புற்றனர்'' (ப. 381). முத்தப் பருவத்திற்கு மாறாக, வருகைப் பருவத்தில் இடம்பெறும் 'தொடுக்கும் கடவுள் பழம்பாடல்' என்ற பாடலைப் பாடிய போது, இந்த அற்புதம் நிகழ்ந்ததாகக் கருத்துரைக்கும் அறிஞரும் உண்டு (சக்தி பி. சுப்பிரமணியன், நெல்லை மாவட்டச் சித்தர்கள், ப. 82). மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழைக் கேட்டு மனமுவந்த திருமலை நாயக்கர் குமரகுருபரருக்குப் பல வகையான பரிசில்களை அளித்துச் சிறப்பித்தார்.



குமரகுருபரர் பின்னும் சில காலம் மதுரையிலே தங்கி 'மதுரைக் கலம்பகம்' என்னும் பிரபந்தத்தை இயற்றினார். பிறகு அவர் சோழ நாட்டுத் தலங்களைத் தரிசிக்கத் தொடங்கித் திருவாரூருக்குச் சென்றார். அங்கே எழுந்தருளியுள்ள தியாகப் பெருமானைத் தரிசித்துக் கொண்டு சில காலம் தங்கி இருந்தார். அக்காலத்தில் 'திருவாரூர் நான்மணிமாலை' என்னும் பிரபந்தத்தை அவர் இயற்றினார்.

## தேசிகரைத் தேடிச் சரணடைதல்

'சிவஞான உபதேசம் பெற வேணடும்' என்ற எண்ணம் - சித்தம் - குமரகுருபரருக்கு வர வர மிகுதியாயிற்று. தமக்கு உரிய ஞானாசிரியரைத் தேடித் தேர்ந்து சரணடைய வேண்டும் என்று

அவர் மனம் ஆவலுற்று நின்றது. அக்காலத்தில் தருமபுர ஆதீனத்தில் நான்காம் பட்டத்தில் குருமூர்த்தியாக விளங்கிய மாசிலாமணி தேசிகர் சிவஞானச் செல்வராக இருப்பதை அறிந்து அவரிடம் சென்றார். அப்போது அங்கே உண்டான சில குறிப்புக்களால் அப்பெரியாரே தமக்கு உரிய ஆசிரியர் என்பதைக் குமரகுருபரர் தேர்ந்தார். குமரகுருபரர், மாசிலாமணி தேசிகரைத் தேடிச் சரணடைந்த விதம் குறித்துப் பாடுகையில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தம் 'குமரகுருபரசாமி சருக்க'த்துள் திட்பமும் நுட்பமும் வாய்ந்த ஒரு செய்தியினைக் கூறுகின்றார். 'மடாலயம்தோறும், தமிழ்ப் பேரவைதோறும் புலிஏறு ஒத்து உலவி உபசாரங்கள் பல பெற்று வந்த' குமரகுருபரர், தருமபுர மடம் நோக்கி வந்து கொண்டிருந்தார். அவரது வருகையை முன்னரே உணர்ந்த மாசிலாமணி தேசிகர் அவருக்காக, ''இனிய பரிகலம் எடுத்துத் தொன்னையில் வைத்து இருமின்'' (13) எனச் சொல்லி உட்சென்றார். மாசிலாமணி தேசிகரின் இக்கூற்று இரு வகையாகப் பொருள் கொள்ளத் தகுந்ததாகும். ''அதாவது பரிகலத்தைத் தொன்னையில் எடுத்து வைத்திருக்கும்படி கூறினார். இதன் பொருள்: தான் உண்டு எஞ்சிய திருவமுதை - சேடம் - அவர்க்காகத் தொன்னையில் எடுத்து வைக்கும்படி கூறினார் என ஒரு பொருளும், அவர்க்கு ஞானோபதேசம் செய்து துறவு வாழ்க்கையின் அடையாளமாகக் காசாயம் (பரிகலம் - பிட்சைப் பாத்திரம்) தர இருக்கின்றார் எனப் பிறிது ஒரு பொருளும் உட்பொதிந்து இவ்வாறு கூறினார் என்பதாம்'' (சி. மெய்கண்டான், 'வண்ணச்சரபம் கூறும் குருபரர் வரலாறு', குமரகுருபரர் ஆய்வு மாலை, தொகுதி இரண்டு, ப. 1274).

குமரகுருபரர் தருமபுரம் மடத்திற்குச் சென்று மாசிலாமணி தேசிகரைச் சந்தித்த போது நடந்தது யாது என்பதனைத் தண்டபாணி சுவாமிகளின் சொற்களிலேயே இங்கே காண்போம்:

"அன்னவன் வந்து அம்முனியே அருட்செந்தூர் ஆசானாத்
தன்னது கண்களில் தோற்றச் சாட்டாங்கமாத் தொழுதான்'' (13)

குமரகுருபரரின் கண்களுக்கு மாசிலாமணி தேசிகர் திருச்செந்தூர் முருகனாகத் தோற்றம் அளித்தார்; தமக்குப் பேசும் திறம் அருளிய முருகனே அம்முனிவன் என உணர்ந்த குமரகுருபரர், அவரது திருவடிகளில் சாட்டாங்கமாய் வீழ்ந்து தொழுதார். பிறகு மாசிலாமணி தேசிகர், குமரகுருபரரை ஆரத் தழுவி, அவருக்கு,

"நடனம்செய் திருவடியின் நன்நிலைமை உணர்வித்து,
திடம்மிஞ்சப் பரிகலத்தைச் சிவவேடத் துடன் ஈந்தான்'' (14)

எனக் கூறுகின்றார் தண்டபாணி சுவாமிகள். இதுவே நடந்த நிகழ்ச்சி, உண்மை நிகழ்ச்சி. இதற்கு மாறாக, ''திருத்தொண்டர் புராணத்தின் கவி ஒன்றால் ('ஐந்து பேரறிவும் கண்களே கொள்ள' என்ற பாடலால்), 'ஈனம் உறச் செயித்தாண்டான்' (16) எனச் சொல்வது ஏற்றுக் கொள்ளத்தக்க கருத்தன்று'' என்கிறார் தண்டபாணி சுவாமிகள். மேலும், முருகப்பெருமான் அருளால் ஐந்து வயதில் பாடும் திறம் பெற்றவரும் ஓதாது உணர்ந்த ஞானியுமான குமரகுருபரர் பெரியபுராணப் பாடல் ஒன்றனுக்கு அனுபவப் பொருள் கூற முடியாமல் திகைப்புற்றதாகக் கூறுவது பொருத்தமற்றது என்பதும் சுவாமிகளின் அழுத்தம் திருத்தமான கருத்தாகும்.



மாசிலாமணி தேசிகரே தமக்கு உரிய ஞானாசிரியர் எனக் கண்டுகொண்ட நிலையில், தமக்குத் துறவுநிலை அருள வேண்டும் என்று தேசிகர்பால் குமரகுருபரர் வேண்டுகோள் விடுத்தார். அங்ஙனம் செய்வதற்குமுன் தல யாத்திரை செய்துவரும்படி பணித்தல் தருமபுர ஆதீனத்தின் மரபாதலின் அதன்படி காசி யாத்திரை சென்றுவருமாறு தேசிகர், குமரகுருபரர்க்குக்

கட்டளையிட்டார். காசிக்குச் சென்று வருவதில் நெடுங்காலம் கழியுமே என்று கவன்ற குமரகுருபரரை நோக்கிச் சிலகாலம் சிதம்பரவாசமேனும் மேற்கொள்ளும்படி பணித்தார் தேசிகர்.

ஞானாசிரியரின் கட்டளையை ஏற்றுக் குமரகுருபரரும் சிதம்பரத்திற்குப் பயணம் மேற்கொண்டார்; இடைவழியில் வைத்தீசுவரன் கோயிலில் தங்கித் தரிசனம் செய்தார். அங்கே கோயில் கொண்டு எழுந்தருளி இருக்கும் முத்துக்குமார சுவாமியின் மீது ஒரு பிள்ளைத் தமிழ் இயற்றினார். பிறகு சிதம்பரம் சென்று நடராசப் பெருமானைத் தரிசனம் செய்துகொண்டு சில காலம் அங்கே தங்கினார். அக்காலத்தில் 'சிதம்பர மும்மணிக் கோவை' என்னும் பிரபந்தம் அவரால் இயற்றப்பெற்றது. அதில் முதல் பாடலில் காசிக்குச் செல்வதில் நேரும் துன்பங்களையும், சிதம்பரத்திற்குச் சென்று தரிசனம் செய்வதில் உள்ள எளிமையையும் 'காசியில் இறத்தல் நோக்கி' (*451: 59-68*) என்பது முதலான அடிகளில் குமரகுருபரர் உணர்த்தியிருக்கின்றார். அவ்வடிகள், தம்மை ஆசிரியர் காசிக்குச் செல்லப் பணித்ததும் அதன் அருமையைத் தாம் விண்ணப்பித்துக் கொண்ட போது சிதம்பரவாசம் செய்யும்படி கட்டளையிட்டதும் ஆகிய நிகழ்ச்சிகளின் நினைவில் இருந்து எழுந்தன என்றே எண்ணத் தோன்றுகின்றது.

சிவநேசச் செல்வர்களும் தமிழறிவு உடையவர்களுமாகிய சில அன்பர்கள் குமரகுருபரரிடம், ''யாப்பருங்கலக் காரிகையில் காணப்படும் உதாரணச் செய்யுட்கள் பெரும்பாலும் ஜைன சமயச் சார்பு உடையனவாக விளங்குகின்றன; ஆதலின் அந்நூலின் இலக்கணங்களுக்கு உதாரணமாக நடராசப் பெருமான் தொடர்பான செய்யுட்களை இயற்றித் தர வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டனர். குமரகுருபரர் அன்பர்களின் அவ்வேண்டுகோளை ஏற்று அங்ஙனமே 'சிதம்பரச் செய்யுட் கோவை' என்னும் பிரபந்தத்தை இயற்றித் தந்தார்.

குமரகுருபரர் சிதம்பரத்தில் தங்கியிருந்த காலத்திலேயே 'நீதிநெறி விளக்கம்' என்னும் நீதி நூலும் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும் என்று தோன்றுகின்றது. அந்நூலுக்குச் சிதம்பரம் நடராசப் பெருமானது துதியை முதலில் காப்பாக அமைத்திருத்தல் இதற்கு ஓர் ஆதாரமாகும் என்பர் உ.வே. சாமிநாத ஐயர் ('ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கம், ப. xiv). திருமலை நாயக்கரின் வேண்டுகோளின்படி குமரகுருபரர் மதுரையில் இருந்தபொழுதே இந்நூல் பாடப்பெற்றது எனக் கூறுவாரும் உண்டு.

சிதம்பரத்தில் இங்ஙனம் வாழ்ந்துவந்த குமரகுருபரர் பின்பு தம் ஞானதேசிகரிடம் சென்று, தம்முடைய வேட்கையை மீண்டும் ஒருமுறை விண்ணப்பித்துக்கொண்டார். அவருடைய பரிபக்குவத்தை அறிந்து ஞானதேசிகர் அவருக்குக் காஷாயம் உதவினர். அதுமுதல் அவர் 'குமரகுருபர முனிவர்' என வழங்கப் பெறுவாராயினர். அப்பொழுது அவர் தம் ஞானதேசிகர்மீது 'பண்டார மும்மணிக் கோவை' என்ற பிரபந்தம் ஒன்றை இயற்றினார்.

குமரகுருபரருக்கும் மாசிலாமணி தேசிகருக்கும் இடையில் ஏற்பட்ட முதற் சந்திப்பு, விவேகாநந்தருக்கும் இராமகிருஷ்ண பரமஹம்சருக்கும் இடையில் ஏற்பட்ட முதற்சந்திப்புக்கு இணையாகக் கருதத்தக்கது எனச் சுட்டிக்காட்டி, அதன் இன்றியமையாமையையும் புலப்படுத்துகின்றார் நீதியரசர் டி.என். அருணாசலம் (T.N. Arunachalam, Saint Kumara Guruparar and the two great Mutts associated with him, p.p. 5-6).

## வடநாடு சென்ற வண்டமிழ்ப் புலவர்

தமிழகத்தில் தனிப்பெருஞ் சிறப்பும் செல்வாக்கும் பெற்றிருந்த - ஒட்டுப் பற்றற்று உலகப் பற்று அனைத்தையும் விட்டுத் துறந்து வாய்மைத் துறவியாக விளங்கிய - குமரகுருபரர் வடநாடு செல்ல வேண்டிய காரணம் யாது? தண்டபாணி சுவாமிகளின் கருத்தில் அதனைக் காண்பது பொருத்தமாக இருக்கும். இதோ சுவாமிகள் கூறும் காரணம்:

"... அப்பெருந்தேயத்து
ஏதில் மாற்றமும் தருமம் இல்லாமையும்
இலங்கல் கண்டு உளம் நொந்தே" (29)

வடநாட்டில் - இந்துத்தானி நாட்டினில் - தருமம் இல்லாத நிலையினைப் பலரும் எடுத்துக்கூற, அதனைக் கேட்டு மனம் நொந்தார் குமரகுருபரர். அங்கே தருமத்தை - அறத்தை - நிலைநாட்ட வேண்டும் என்ற எண்ணத்திலேயே அவர் வடநாட்டுப் பயணம் மேற்கொண்டார். இந்துத்தானி நாட்டினில் அருந்தமிழ் நிறுவிடுதல் என்பது அரிது என்றாலும், அங்கே நல்லறத்தை நிலைநாட்டுதல் அருமையோ? இந்த உறுதிப்பாட்டுடனும் உணர்வுடனுமே குமரகுருபரர் தில்லி மாநகர் நோக்கிப் புறப்பட்டார்; தில்லியை அடைந்து 'வீரசேகரன்' எனத் திகழும் மன்னனைக் கண்டார். குமரகுருபரரைக் கண்ட மன்னன் அவரைப் பார்த்து, "நீர் யார்?"

என வினவினான். அதற்குக் குமரகுருபரர், 'கடல், நிலவுலகம் அனைத்தையும் ஆட்சி செய்யும் தலைவனாம் இறைவனின் அடிமை நான்' என்னும் பொருள்படும்படியாக,

"கடல்புவி முழுதும் செய்
அண்டர் நாயகன் அடிமை; என்றன்னுடன்
அவன் உளன்" (31)

என மறுமொழி கூறினார். அதற்கு அம்மன்னன், "போற்றும் தொண்டர் யாவர்க்கும் பொதுவனோ?" என்று மீண்டும் வினவினான். இதற்குக் குமரகுருபரர் துணிந்து "ஆம்" என்று விடையளித்தார். உடனே மன்னன் "அவ்வாறானால் எம்முடன் ஒருங்கமர்ந்து உண்பீர்களோ?" என்று உசிதம் இல்லாத ஒரு வினாவினைத் தொடுத்தான். இதற்கும் தயங்காமல் தம் இசைவினைத் தெரிவித்தார் குமரகுருபரர்.

தன்னுடன் ஒருங்கமர்ந்து உணவு உண்ண இசைந்த குமரகுருபரர்க்கு - கொல்லா விரதம் பூண்ட அவர் புலால் உண்ண மாட்டார் என அறிந்தும் - வேண்டும் என்றே புலால் உணவு படைத்தான் மன்னன். நெருக்கடியான ஒரு சூழலில் உண்ணாது இருந்த குமரகுருபரரைக் கண்டு, "எம்மொடு சேர்ந்து உண்ணாதது ஏன்?" என்று கேட்டான் மன்னன்.

"ஏனக்கறி (பன்றிக் கறி) எங்கே?" என்று மன்னனை நோக்கிக் கேட்டார் குமரகுருபரர். அதனைக் கேட்ட மன்னன் "யாம் அதனை உண்ணோம்" என்றான். "ஏன்?" என்று குமரகுருபரர் கேட்க, "எம் குரு அதனை உண்ணும்படியாகச் சொல்லவில்லை!" என்று மன்னன் மறுமொழி சொன்னான். உடனே குமரகுருபரர், "அவ்வாறே சிவன் என்னும் குரு எமக்கு மாமிசம் தின்னச் செப்பிடவில்லை" (32) என்று உறுதியான குரலில் உரைத்தார். குமரகுருபரரின் இந்த மறுமொழியைக் கேட்ட மன்னன் பின்னும் பேசுவதறியாமல் வாயடங்கிப் போனான்.

பின்னர் அம்மன்னன் குமரகுருபரரைப் பார்த்து, "உவகையோடு தெய்வீகம் உணர்த்தும் அற்புதம் ஒன்றையேனும் நீங்கள் இங்கே நிகழ்த்திக் காட்டுங்கள்" என வேண்டினான்.

அதற்குக் குமரகுருபரரும் "இன்று இரவில் உன்னுடைய தெய்வமே என்னைப் பற்றி உனக்குத் தெரிவிக்கும்" எனக் கூறினார். இவ்வாறு மன்னனிடம் கூறிய அவர் இரவு முழுவதும்

முருகப்பெருமானை எண்ணியே தியானித்திருந்தார். முருகப்பெருமான், மன்னனின் கனவில் அவன் நித்தமும் தொழுகின்ற அவனுடைய குரு உருவிலேயே தோன்றி 'இங்கு உற்றவன் விருப்பம் ஈந்து அனுப்புதி சீக்கிரம்' (33) என்னும் பொருள்படும்படியாக, ''உன்னை நாடி வந்த குமரகுருபர சுவாமி விரும்புகின்ற பொருள்கள் அனைத்தையும் கொடுத்து, அவரை விரைவில் அனுப்புக'' என்று மன்னனிடம் உரைத்தான்.

செந்தூர் உறையும் கந்தப் பெருமான் மிலேச்ச மன்னனின் கனவில் எந்த வடிவில் தோன்றினான்? உருவமற்ற இறைவனைத் தொழும் அம்மன்னனுக்குக் கந்தப் பெருமான் காட்சி தந்த உருவம் எது? 'முகமது நபி' வடிவில் - இறுதி இறைத் தூதராம் 'நபிகள் நாயகம்' வடிவில் - மன்னனின் கனவில் தோன்றினானாம் கந்தப் பெருமான். இதனை,

''எம், மக்க தேசிகன் மொழியினால் நின்பெரு
மான்மியம் அறிந்துற்றேன்'' (34)

என அம்மன்னவனே உரைத்த மொழியினைக் கொண்டு உய்த்துணரலாம். 'மக்க தேசிகன்' என்பது 'மக்காவின் குருவாம் இறைத்தூதர் நபிகள் நாயகம்' அவர்களைக் குறிப்பதாகும்.

பின்னர் அம்மன்னன் குமரகுருபரரிடம் ''தங்கள் விருப்பங்களை முழுமையாக நிறைவேற்றுவேன்; என்ன வேண்டும் கேளுங்கள்'' என்று உரைக்கக் குமரகுருபரரும், ''காசியில் அறுபத்து நான்கு மடங்கள் தோற்றுவிக்க வேண்டும்; அதற்கு வேண்டிய நிலம், பொன், செல்வம் முதலானவையும் ஆள் உதவியும் வேண்டும்'' (34) என 'இதத்தொடு' கேட்டார். அம்மன்னனும் குமரகுருபரர் கேட்டவற்றை யெல்லாம் செய்து கொடுத்தான். அவற்றைப் பெற்ற குமரகுருபரரும், அந்தத் தேசத்தில் உள்ள மக்கள் எல்லோரும் நாணம் உறும்படி, வேதத்தில் சொல்லப் பெற்ற அறங்கள் அனைத்தையும் செய்தார்; உலகோர் வியந்தனர். இதனை,

''கதத்த ராகும்அத் தேயத்தார் நாணுறக்
கமல நான்முகன் நூல்சொல்
விதத்த வாம்அறம் முழுமையும் செய்தான்;
விண்ணவர் வியந்தாரே'' (35)

எனக் குறிப்பிடுகின்றார் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.

ஒட்டகம், பசு, ஆடு முதலான பற்பல உயிர்களை வதைத்து அவற்றின் ஊனினை உண்ணும் துட்டரின் கைப்பொருள் கொண்டு தூய மாதவத்தோரான குமரகுருபரர் மிகுந்த தருமங்கள் இயற்றியது சரியா என்று வினா இங்கே எவருக்கும் எழுவது இயல்பு. இதற்கும் உரிய விடையினைக் கூறுகின்றார் தண்டபாணி சுவாமிகள். மழை மேகம், உப்புநீர்க் கடலில் இருந்துதானே நீரினை முகந்து மேலே சென்று நன்னீராகப் பெய்து நானிலத்தை வாழ வைக்கின்றது? இத்தகைய மழை மேகம் போன்றவரே குமரகுருபரர்.

"எறிகடல் உவர்நீரால்,
வட்ட மாநிலம் உய்ய நன்னீர்பெயும்
மழைமுகில் உறழ்ந்தானே" *(36)*

என்பது வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் வாக்கு.

"அடிகள் காசியிலே நிகழ்த்திய பல அற்புதங்களைப் பற்றிய விவரம் நமக்கு நன்கு கிடைத்திலது. சிங்க முதுகின்மேற் குருபரனார் ஏறிச் சென்றமைக்கறிகுறியாகக் காசி மடத்திலே ஒரு கல் வடிவம் அமைந்துள்ளது. இக்காரணம் பற்றியே அம்முத்தி மாநகரின்கண் ஏனைய மடங்களினுங் குமாரசாமி மடத்திற்கு மிகுந்த மதிப்பு ஏற்பட்டிருக்கின்றது. புறச்சமயத்தார் நடுவே அற்புதங்களாலன்றி வழக்கீட்டினால், சமயத்தை நிலைநாட்டுதல் அரிதாகும்" (குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், ப. 27) என்னும் பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளையின் கருத்து ஆழ்ந்து சிந்திக்கத்தக்கதாகும்.



காசி மாநகரிலேயே இன்னும் சிற்சில ஆண்டுகள் வாழ்ந்து, அருந்தவம் நனி ஆற்றி, *1688*-ஆம் ஆண்டு வைகாசித் தேய்பிறைத் திருதியை நாளில் அங்கே எழுந்தருளியுள்ள வயிரவப் பெருமானுள் இரண்டறக் கலந்தார் குமரகுருபரர். இதனைத் தண்டபாணி சுவாமிகள்,

''வயிரவப் பெருமானுள்,
பொங்கு கங்கையிற் சிறியகாற் புனல்புகல்
போல் கலந்து ஒன்றானான்'' (37)

எனக் குறிப்பிடுகின்றார்; மேலும், இங்கு மற்றொரு பிறப்பு குமரகுருபரருக்கு இல்லை என்றும் அறுதியிட்டுக் கூறுகின்றார்.

''குமரகுருபரர் பின்னும் ஒருமுறை தருமபுரம் வந்து ஞானாசிரியரைத் தரிசித்து மீட்டும் காசிக்கே சென்று வாழ்ந்து விளங்கியிருந்து ஒரு வைகாசி மாதத்தில் கிருஷ்ண பக்ஷத் திருதியையிலே சிவபெருமான் திருவடி நிழலிற் கலந்தனர்'' என்பது உ.வே. சாமிநாத ஐயரின் கருத்தாகும் (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சரித்திரச் சுருக்கம்', ப. xv).

'குமாரசாமி மடம்'

பேராசிரியர் மு. வரதராசனார் தம் 'தமிழ் இலக்கிய வரலாறு' என்னும் நூலில் குறிப்பிடுவது போல், ''தமிழ்ப் புலவர்களுள் வடநாட்டுக்குச் சென்று தங்கியிருந்து தமிழ் நூல்கள் பாடியவர் அவர் (குமரகுருபரர்) ஒருவரே'' (ப. 210) ஆவார். அவர் தம்முடைய கல்வியறிவினாலும் தவப்பண்பினாலும் தில்லியை ஆண்ட முகலாய மன்னரின் - பாதுஷாவின் - உள்ளத்தைக் கவர்ந்தார். அப்பாதுஷாவின் தாய்மொழியாகிய இந்துஸ்தானியை விரைவில் கற்றுக்கொள்ள வேண்டும் என்று கருதிச் 'சகலகலாவல்லி மாலை' என்னும் பிரபந்தத்தை இயற்றிக் கலைமகளின் அருளை வேண்டினார். கலைமகளின் திருவருளால் அம்மொழியிலே சிறந்த புலமை பெற்றுப் பாதுஷாவினிடம் பேசிப் பழகினார். பாதுஷா குமரகுருபரர்பால் ஈடுபட்டு அவருடைய விருப்பத்தின்படியே அவர் காசியில் தங்குவதற்குரிய மடம் அமைப்பதற்குக் கேதார கட்டத்தில் இடம் உதவினார். குமரகுருபரர் அதுவரை மறைபட்டிருந்த விசுவலிங்கப் பெருமானை வெளிப்படுத்தி அங்கே கோயில் முதலியன நிறுவச்செய்து நாள்தோறும் திருப்பணிகள் பலவும் குறைவற நடக்கும்படிச் செய்தார்.

குமரகுருபர சுவாமிகள் காசியில் தங்கியிருந்த இடத்திற்குக் 'குமாரசாமி மடம்' என்று பெயர். அங்கே அவர் சிவயோகம் செய்து கொண்டு வாழ்ந்து வந்தார். அக்காலத்தில் 'காசித் துண்டி விநாயகர் பதிக'மும் 'காசிக் கலம்பக'மும் அவரால் இயற்றப்பெற்றன.

குமரகுருரபரர் வடநாட்டில் தங்கியிருந்தபோது தமது மடாலயத்தில் புராண சாலை ஒன்று நிறுவினார். அங்கே

இந்துஸ்தானி மொழியிலும் தமிழிலும் புராணப் பிரசங்கங்களும் ஆற்றினார். சிறந்த இராமபக்தராகிய துளசிதாசர் அந்தப் பிரசங்கங்களைக் கேட்டு உவந்தனர் என்றும், கம்பராமாயணத்தில் உள்ள கருத்துக்களைத் தாம் இந்துஸ்தானியில் இயற்றிய இராமாயணத்தில் அமைத்துக் கொண்டனர் என்றும் கூறுவர் அறிஞர்.

**சுவாமிகளின் வாழ்க்கை**
**தற்காலத்தார்க்கு உணர்த்தும் குறிக்கோள்**

பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை 'தமிழ்ச் சுடர் மணிகள்' என்னும் தம் நூலில் குமரகுருபரர் குறித்துக் கூறியுள்ள ஒரு கருத்து பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்கது; குறிப்பாக, இன்றைய இளைய தலைமுறையினர் ஊன்றி நோக்கத்தக்கது. அக்கருத்து வருமாறு:

''தமிழ், வடமொழி இரண்டிலும் மிகப் பரந்த கல்வி, கேள்வியுடையவர்களா யிருந்த (குமரகுருபர) சுவாமிகளது வாழ்க்கை வேறோர் அம்சத்திலும் தற்காலத்தாருக்கு ஒரு லட்சியத்தைக் காட்டுவதா யுள்ளது. இவர் காசிக்குச் சென்று பாதுஷாவின் தாய்மொழியாகிய இந்துஸ்தானியை விரைவில் கற்று, இவ்வரசாங்க மொழியிலேயே பாதுஷாவோடு நேரில் சம்பாஷணைகள் நடத்தினர். காசியில் மடம் ஒன்று அமைத்து, அங்கே இந்துஸ்தானி பாஷையிலும், தமிழிலும் புராணப் பிரசங்கங்கள் செய்துவந்தனர். இச்செய்தியை இவரது வரலாறு தெரிவிக்கிறது. இது உண்மையே என்பதற்கு இவர் காசியில் அமைந்துள்ள குமாரசுவாமி மடமே தக்க சான்றாகும். சலாம் முதலிய இந்துஸ்தானிச் சொற்களை இவர் ஆண்டிருப்பதும் இங்கே கவனித்தற்குரியது. இந்தி மொழியைத் தமிழ் மக்கள் கற்க வேண்டிய அவசியம் இல்லை என்று கொண்டு, 'இந்தி ஒழிக' என்று இக்காலத்துச் சிலர் கூச்சலிடுகின்றனர். இக்கொள்கை சுவாமிகளுக்கு உடன்பாடன்று என்பது இவர்களது வாழ்க்கை நமக்கு நன்கு தெளிவுறுத்துகிறது. இவ்வாறாக, குமரகுருபர சுவாமிகளுடைய சரித்திரம் பலவகையிலும் சிறந்த குறிக்கோள்களை நமக்கு உணர்த்திக் கொண்டேயிருக்கிறது. இப்பெரியாருடைய திருவடிச் சுவட்டைப் பின்பற்றித் தமிழ் மக்கள் ஒழுகுவார்களாக'' (ப. 206).

இன்னொரு கருத்தும் இங்கே எண்ணிப்பார்க்கத்தக்கது: 'நான் ஒரு நிரந்தரமான நாத்திகன்' என்று சூளுரைத்த பாவேந்தர்

பாரதிதாசனே குமரகுருபரின் வாழ்விலும் வாக்கிலும் தம் உள்ளத்தைப் பறிகொடுத்துள்ளார்; குமரகுருபரரின் வாழ்வினை ஒரு நாடகமாகப் படைத்துத் தந்துள்ளார். கவிஞர் தமிழ்நாடன் குறிப்பிடுவது போல், ''குமரகுருபரர் தமிழ்த் தொண்டராய், வடநிலத்தை, மொழியை வென்றவராய்க் கவிஞருக்கு முன்மாதிரி காட்டியிருக்கக் கூடும்'' (பாரதிதாசன், குமரகுருபரர், ப. 3).

''செந்தமிழுஞ் சிவமாநெறிக் கொள்கையும் சிறப்புற்றோங்கிய தென்பாண்டி நாட்டிலே தோன்றி அவ்விரண்டும், குமரி முனை முதற் பனிமலைச்சாரல் வரை மிக்க மாண்பொடு திகழும் வண்ணம் திருவருட் பெருவாழ்க்கை நடத்தித் தமது நிறைமொழியால் நாயக்க மன்னரையும் முகம்மதிய அரசரையும், தமது வயப்படுத்திச் செந்நெறி செலுத்திப் பெருநன்மையாற்றிய பெருந்தகையார் குமரகுருபர அடிகளாவர். ஆதலின் அவர் வரலாற்றினையும் அருள் நூல்களையும் ஆராய்ச்சி செய்தல் நம்மவர் கடமையாகும்'' (பக். 7-8) எனப் பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை 'குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும்' என்னும் தம் நூலினுள் குறிப்பிட்டிருக்கும் கருத்துடன் இவ்வியல் நிறைவு பெறுவது சாலவும் நன்றாகும்.





# 2. படைப்புலகம்

''குமரகுருபரர் கருவிலே அருளுடையவர்; பிறக்கும்போதே அருள்கூட்ட நல்லிளமையில் தமிழறிவும் தெய்வ பக்தியும் வாய்ந்த பல கலையும் அறிந்து தல வழிபாடு செய்து ஞானாசிரியரது உபதேசம் பெற்றார்; புலமையாற் பெற்ற பெருமையோடு தவவொழுக்கத்தாற் பெற்ற பெருமையும் சேர்ந்து 'பொன்மலர் நாற்றமுடைத்து' என்பது போல இவருடைய சிறப்பை மிகுதியாக்கியது.''

- உ.வே. சாமிநாத ஐயர்[1]

குமரகுருபரர் இயற்றிய பிரபந்தங்களாகப் 'பதிப்பு வேந்தர்' உ.வே. சாமிநாத ஐயர் தம் 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு' நூலின் முகவுரையில் குறிப்பிட்டிருப்பவை பதின்மூன்று. அவையாவன:

1. 'கந்தர் கலிவெண்பா'
2. 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்'
3. 'மதுரைக் கலம்பகம்'
4. 'நீதிநெறி விளக்கம்'
5. 'திருவாரூர் நான்மணிமாலை'
6. 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்'
7. 'சிதம்பர மும்மணிக்கோவை'
9. 'பண்டார மும்மணிக்கோவை'
10. 'காசிக் கலம்பகம்'
11. 'சகலகலாவல்லிமாலை'
12. 'கைலைக் கலம்பகம்'
13. 'காசித் துண்டி விநாயகர் பதிகம்'

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு. 'ஆராய்ச்சி', ப. cxxii.



இவற்றுள் 'கைலைக் கலம்பக'த்தில் சில பாடல்களே கிடைக்கின்றன; 'காசித் துண்டி விநாயகர் பதிகம்' கிடைக்கவில்லை.

''சென்ற நூற்றாண்டில் தேவர்பிரான் கவிராயரென்பவரால் இயற்றப் பெற்ற சிறப்புப் பாயிரம் ஒன்றில் இவர் (குமரகுருபர சுவாமிகள்) இயற்றிய பிரபந்தங்கள் பதினான்கு என்ற குறிப்புக் காணப்படுகின்றது. 'மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை', 'மீனாட்சியம்மை குறம்', 'சிவகாமியம்மை இரட்டைமணி மாலை' என்னும் மூன்று பிரபந்தங்களும் குமரகுருபர சுவாமிகள் இயற்றியனவாக அச்சுப் பிரதிகளிற் காணப்படுகின்றன. ஆயினும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்திலுள்ள பழமையான ஏட்டுப் பிரதிகளிலும் வேறு பழைய ஏட்டுப் பிரதிகளிலும் இம்மூன்றும் காணப்படவில்லை. பரம்பரையாகப் பாடம் சொல்லுபவர்கள் இம்மூன்றையும் குமரகுருபர சுவாமிகள் நூல்களோடு சேர்த்துச் சொல்வதில்லை. என்னுடைய தமிழாசிரியராகிய மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களும் வேறு பல வித்துவான்களும் இவற்றைக் குமரகுருபர முனிவர் வாக்காகக் கருதுவதில்லை. இவற்றின் சொற்பொருளமைதிகளை ஆராய்ந்தாலும் இவற்றிற்கும் இம்முனிவர் இயற்றிய பிரபந்தங்களுக்கும் உள்ள வேறுபாடு தெளிவாகப் புலப்படும். இதற்கு முன் வெளிவந்துள்ள பதிப்புகளில் இவையும் சேர்க்கப்பட்டுள்ளதை எண்ணி யானும் இவற்றைத் தனியே பின்னால் இப்பதிப்பில் சேர்த்திருக்கிறேன்'' (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'முகவுரை', ப. ii-iii) என்னும் உ.வே. சாமிநாத ஐயரின் முகவுரைக் குறிப்பு இங்கே மனங்கொளத்தக்கது ஆகும்.

உ.வே. சாமிநாத ஐயரின் கருத்தின்படி, ஒரு கலிவெண்பா, இரண்டு பிள்ளைத்தமிழ்கள், மூன்று கலம்பகங்கள், ஒரு நான்மணி மாலை, இரண்டு மும்மணிக் கோவைகள், ஒரு மாலை, 'நீதிநெறி

விளக்கம்' என்னும் நீதிநூல் ஒன்று, சிதம்பரச் செய்யுட் கோவை எனப் பன்னிரண்டு பிரபந்தங்களைக் குமரகுருபரர் இயற்றியுள்ளார். அவர் இயற்றியதாகக் கருதப்படும் 'காசித் துண்டி விநாயகர் பதிகம்' கிடைக்கவில்லை; இருப்பினும் இதனைச் சேர்த்தால் சுவாமிகள் படைத்துள்ள பிரபந்தங்களின் எண்ணிக்கை பதின்மூன்று என ஆகும். சுவாமிகள் இயற்றியனவாக ஒரு சில அச்சுப் பிரதிகளில் காணப்படும் 'மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை', 'மீனாட்சியம்மை குறம்', 'சிவகாமியம்மை இரட்டைமணி மாலை' என்னும் மூன்று பிரபந்தங்களையும் கணக்கில் சேர்த்தால் சுவாமிகள் இயற்றியுள்ள பிரபந்தங்கள் மொத்தம் பதினாறு என ஆகும். ''பதினாறு கலைகளையுடைய முழுமதி போல அவர் நூற்கோவை விளங்குகின்றது'' (குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், ப. 25) என்னும் பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளையின் கருத்து இதன் அடிப்படையில் எழுந்த ஒன்றாகும்.

இனி, குமரகுருபர சுவாமிகள் இயற்றியுள்ள பிரபந்தங்களின் அமைப்பும் அழகும் குறித்துச் சுருங்கக் காண்போம்.

### 'கந்தர் கலிவெண்பா'

ஐந்தாண்டு வரையில் பேச்சின்றி இருந்த குமரகுருபரர், செந்திற் குமரன் திருவருளால் பேச்சும் கல்வியும் கைவரப் பெற்ற நிலையில் இயற்றிய முதல் நூல் 'கந்தர் கலி வெண்பா', 122 கண்ணிகளால் ஆன இந்நூல் முருகப் பெருமானிடம் விண்ணப்பம் செய்து கொள்ளும் முறையில் அமைந்துள்ளது. முருகக் கடவுளுக்கும் சிவபெருமானுக்கும் வேற்றுமை இல்லை என்பதை உணர்த்தும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது.



'பூமேவு செங்கமலப் புத்தேளும்' எனத் தொடங்கும் கந்தர் கலிவெண்பாவில் முருகக் கடவுளுடைய திருவுருவ வருணனை, திருமுகங்களின் செயல்கள், திருக்கரங்களின் செயல்கள், தசாங்கம், திருவவதாரம், திருவிளையாடல்கள், முருகக் கடவுள் தெய்வயானை அம்மையாரையும், வள்ளி நாச்சியாரையும் முறையே திருமணம் செய்து அருளியது முதலான செய்திகள் நிரந்ினிது கூறப்பெற்றுள்ளன. முத்தாய்ப்பாக, இப்பிரபந்தத்தின் முடிவில் குமரகுருபர சுவாமிகள் முருகப்பெருமானிடம் விடுக்கும் வேண்டுகோள் திட்பமும் நுட்பமும் வாய்ந்தது. அவ்வேண்டுகோள் வருமாறு:

"இம்மைப் பிறப்பில் இருவா தனைஅகற்றி
மும்மைப் பெருமலங்கள் மோசித்துத் - தம்மைவிடுத்து

ஆயும் பழைய அடியா ருடன்கூட்டித்
தோயும் பரபோகம் துய்ப்பித்துச் - சேய

கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்டு
அடியேற்கு முன்னின்று அருள்" (கண்ணிகள் *120-122*)

"இப்பிறப்பில் தோன்றும் அகப்பற்று, புறப்பற்று ஆகிய இருவகைப் பற்றுக்களையும் விலக்கி, ஆணவம் கன்மம் மாயை என்னும் மூதிர்ந்த மும்மலங்களையும் நீக்கி, தன்முனைப்பைத் தவிர்த்து, திருவருள் உணர்வுடன் ஞான நூல்களை ஆராயும் பழைய அடியாருடன் (எளியேனையும்) சேர்ப்பித்து, அவ்வடியவர் நுகரும் பேரின்பத்தை எளியேனும் நுகருமாறு செய்து, நெடுந்தூரத்தும் நறுமணம் கமழும் அழகிய தாமரை அனைய திருவடிகளைக் கண்டு மகிழுமாறு செய்து, எளிய என்னை ஆளாகக் கொண்டருளி, அடிமையாகிய எனக்கு முன்னின்று திருவருள் வழங்குவீராக" என்பதே சுவாமிகள் முருகக் கடவுளிடம் விடுக்கும் பணிவன்பான வேண்டுகோள்.

வீர. உலகநாதன் 'கந்தர் கலிவெண்பா'வுக்கு எழுதிய மெய்யுரையில் குறிப்பிடுவது போல், "இந்நூலின் சிறப்பு சைவ சித்தாந்தம் சாறாகப் பிழியப்பட்டு ரசமாகத் தரப்பட்டிருப்பதேயாம்" (ப. *16*).

**'பிள்ளைத்தமிழ்கள்'**

கடவுளரையோ ஆசிரியரையோ வள்ளல்களையோ குழந்தையாக வைத்துக் காப்பு முதலான பத்துப் பருவங்களை அமைத்துப் பாராட்டுவது பிள்ளைத்தமிழ். சந்தப் பாக்கள் இதில்

விரவி வரும். பிள்ளைத் தமிழ் ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இரு வகைப்படும். இவ்விரு வகையான பிள்ளைத்தமிழ்களில் அமையும் பருவங்களுக்கு இடையே சில வேறுபாடுகள் உண்டு. குமரகுருபர சுவாமிகள் இவ்விரண்டு பிள்ளைத்தமிழ்களையும் வகைக்கு ஒன்றாக இயற்றியுள்ளார். சுவாமிகள் பாடிய பெண்பாற் பிள்ளைத்தமிழ் 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்'. பிள்ளைத்தமிழ் என்ற அளவிலே தமிழ் பயில்வார் யாவருக்கும் ''மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் என்னும் நூலுக்குப் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் சிறப்பான இடம் உண்டு. அதில் உள்ள பாட்டுகள் பக்திச் சுவையும் இலக்கிய நயமும் இனிய ஓசைச் சிறப்பும் உடையவை'' (ப. 210) எனப் பேராசிரியர் மு. வரதராசனாரும் தம் 'தமிழ் இலக்கிய வரலாறு' நூலில் குறிப்பிடுவர். சுவாமிகள் படைத்துள்ள ஆண்பாற் பிள்ளைத்தமிழ் 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்'. இரண்டிலும் பிள்ளைத்தமிழின் இலக்கண அமைதிகள் நன்கு பொருந்தி இருக்கக் காணலாம்.

திருமால் முதலான தெய்வங்கள் பாட்டுடைத் தலைவராகிய குழந்தையைப் பாதுகாக்க வேண்டும் என்று அமைப்பது காப்புப் பருவம். காப்புக் கடவுள் திருமால் ஆதலின், காப்புப் பருவத்தின் முதற் பாடலை அவரது காப்பாக அமைத்தல் மரபு. குமரகுருபரர் மதுரை 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமி'ழின் காப்புப் பருவத்தில் முறையே திருமால், வெள்ளியம்பலவாணர், சித்தி விநாயகக் கடவுள், முத்துக்குமாரர், பிரமதேவர், தேவேந்திரன், திருமகள், கலைமகள், துர்க்கை,



மீனாட்சி அம்மன்

சத்த மாதர்கள், முப்பத்து மூவர் ஆகியவர்களின் காப்பை வேண்டுகின்றார். இவர்களுள் வெள்ளியம்பலவாணர், சித்தி விநாயகக் கடவுள், முத்துக்குமாரர் ஆகிய மூவரும் தலத்து மூர்த்திகள். 'வைத்தீசுவரர் கோவில் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமி'ழில் திருமால், வைத்தியநாதர், தையல்நாயகியம்மை, கற்பக விநாயகக் கடவுள், பிரமதேவர், தேவேந்திரன், திருமகள் - கலைமகள், சத்த மாதர்கள், முப்பத்து முக்கோடி தேவர்கள் என்பவர்களுக்கு உரிய காப்புக் கூறுகின்றார். இவர்களுள் வைத்தியநாதர் முதலான மூவரும் தலத்து மூர்த்திகள். 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழி'ல் துர்க்கையின் காப்பு இடம்பெற்றுள்ளது. அது 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழி'ல் காணப்படவில்லை. ''வெள்ளியம்பலவாணர் காப்புக் கூறினபின் மீனாட்சியம்மைக்கும் கூற வேண்டியவர் பாட்டுடைத் தலைவி அவ்வம்பிகையாயிருத்தலின் கூறாமல், அக்குறையை நிரப்புவார் போன்று துர்க்கையை வேண்டும் காப்புக் கூறினர் போலும். முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் தையல் நாயகியம்மை காப்பு இருத்தலைக் காண்க. பின்னதில் முருகக் கடவுள் காப்பு இல்லை, பாட்டுடைத் தலைவர் அவரேயாதலின்'' (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஆராய்ச்சி', ப. lxxvi) என்னும் உ.வே. சாமிநாத ஐயரின் விளக்கம் இங்கே நினைவுகூரத்தக்கதாகும்.

குழந்தை பிறந்த ஏழாவது நாள் காப்பிடல் என்னும் வழக்கம் ஒன்று உண்டு. அதனை ஒட்டி இலக்கிய வழக்கில் அமைந்தது இக்காப்புப் பருவம் எனலாம்.

இரண்டாவது செங்கீரைப் பருவம். குழந்தை 'ங்க்', 'ங்க்' என்றாற் போல் பொருள் தெரியாத ஒலியை எழுப்புவதைக் கேட்டுத் தாய்மார் உவக்கும் பருவம் இது. தொடையமைதிகள் இல்லாத ஒன்றைச் 'செந்தொடை' என்பது போலச் சொல்லுக்கு உரிய அமைதி இல்லாததைச் 'செங்கீர்' என்றனர் போலும்; கீர் - சொல். 'செங்கீரை யாடுக' என்னும் வழக்கிற்குக் 'குழந்தைகள்பால் இயல்பின் அமைந்த ஒரு சிறப்பு வகை ஆடல்' என்றே பொருள் கொள்வர் அறிஞர். இவ்வாடலின் இலக்கணத்தைச் சுவாமிகள்,

> ''ஒருதாள் உந்தி எழுந்துஇரு கையும் ஒருங்கு பதித்து நிமிர்ந்து
> அருள்பொழி திருமுகம் அசைய அசைந்து இனிது ஆடுக
> செங்கீரை''[2] (367)

---

2. அடைப்புக் குறிகளுக்குள் உள்ள எண்கள் உ.வே. சாமிநாத ஐயர் பதிப்பித்துள்ள 'ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு' நூலில் இடம் பெற்றுள்ள சுவாமிகளின் பாடல் எண்களைக் குறிப்பனவாகும். இது இந்நூல் முழுமைக்கும் பொருந்தும்.

என்னும் அடிகளில் அழகுறப் புலப்படுத்துகின்றார். 'ஆடுக செங்கீரை', 'செங்கீரை ஆடியருளே' என்னும் முடிவுகள் 'செங்கோ செங்கீரை' (22, 23; 368, 369) எனவும் வழங்குகின்றன.

மூன்றாவது தாலப் பருவம். 'தாலாட்டு' என்பது 'தால்' என மருவி வழங்கியது. குழந்தைகளைத் தூங்கச் செய்வார் தம் நாவை அசைத்தலும் பாட்டுப்பாடுதலும் வழக்கம். குமரகுருபரரே 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழி'ல்,

''சிறிய பருமணித் தொட்டில் ஏற்றித் தாலாட்டி'' (38)

என்று கூறுவதும் காணலாம். 'தாலோ தாலேலோ' என்னும் அநுகரணத்துடன் இப்பருவப் பாடல்கள் முடிகின்றன.

நான்காவது சப்பாணிப் பருவம். சப்பாணி கொட்டும்படி - அதாவது கையோடு கை சேர்த்துக் கொட்டும்படி - குழந்தையிடம் கூறுவதாக அமைப்பது இது. கால் வலியின்றிக் கைவலி கொண்டு நகர்ந்து செல்லும் குழந்தைகளைச் 'சப்பாணி' என்று கூறும் வழக்கு இன்றும் உண்டு.

ஐந்தாவது முத்தப் பருவம். குழந்தையை முத்தம் தா என்று அதன் தாயாரும் பிறரும் வேண்டுவதாகக் கூறுதல் மரபு. 'முத்தம்' என்னும் சொல் உலக வழக்கில் முத்தையும் குறிப்பது. அதன் அடிப்படையில், 'பிற இடங்களில் கிடைக்கும் பல வகையான முத்தங்களினும் நின் வாய் முத்தமே சிறந்தது, ஆதலின் அதனைத் தருக' என்னும் கருத்தில் அமைந்த இரு பாடல்களை (47, 48) 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழி'ல் பாடியுள்ளார் குமரகுருபரர்.

ஆறாவது வருகைப் பருவம். தளர்நடையிட்டு வரும் குழந்தையை 'வா' என்று அழைப்பதாகக் கூறுவது இப்பருவச் செய்தி.

ஏழாவது அம்புலிப் பருவம். சந்திரனைக் குழந்தையோடு விளையாட வா என்று அழைத்தலைக் கூறுவது. அம்புலி - சந்திரன். இப்பருவம் ஏனைய பருவங்களைக் காட்டிலும் பாடுவதற்கு அரியது என்பது ''பிள்ளைக் கவிக்கு அம்புலி புலியாம்'' என்னும் வாக்கால் விளங்கும். 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழி'ல் அம்புலியைக் குழந்தையுடன் விளையாட அழைக்கும் போது சாம, பேத, தான, தண்ட வகைகளால் கூறியும் (412, 413), விளையாட வந்தால் அம்புலிக்கு விளையும் நன்மை கூறியும் (414, 415), வராவிட்டால் நிகழும் துன்பம் கூறியும் (416 - 419) பாங்குறப் பாடல்களை இயற்றியுள்ளார் குமரகுருபரர்.

இவ்வேழு பருவங்களும் இருவகைப் பிள்ளைத்தமிழுக்கும் பொதுவானவை. அடுத்து வரும் மூன்று பருவங்களும் முறையே பெண்பாற் பிள்ளைத்தமிழில் அம்மானைப் பருவம், நீராடற் பருவம், ஊசற் பருவம் என்றும், ஆண்பாற் பிள்ளைத்தமிழில் சிற்றிற் பருவம், சிறுபறைப் பருவம், சிறுதேர்ப் பருவம் என்றும் அமைத்தல் பிள்ளைத்தமிழ் பிரபந்தத்தில் பின்பற்றப்படும் மரபு.

அம்மானைப் பருவமாவது பாட்டுடைத் தலைவியை அம்மானை ஆடும்படி கூறுவது. மகளிருக்கே உரிய இவ்விளையாட்டினை ஆடுமாறு 'மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழி'ல் பத்துப் பாடல்களை இயற்றியுள்ளார் சுவாமிகள். 'அம்மானை ஆடியருளே' என்றும், 'ஆடுக அம்மானையே' என்றும் இப்பருவப் பாடல்கள் முடிகின்றன.

நீராடற் பருவத்தில் பாட்டுடைத் தலைவியை நீராட வேண்டும் என்று வேண்டுதலும், ஊசற் பருவத்தில் ஊசலாட வேண்டுதலும் காணப்படும். ஊசல் என்பது மகளிருக்கு உரிய ஒரு விளையாட்டு. 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழி'ல் 'வெள்ளநீராடியருளே' என்றும், 'புதுநீராடி யருளுகவே' என்றும் நீராடற் பருவப் பாடல்கள் முடிகின்றன. 'பொன்னூச லாடியருளே' என்று ஊசற் பருவப் பாடல்கள் முடிகின்றன.

ஆண்பாற் பிள்ளைத்தமிழில் வரும் சிற்றிற் பருவத்தில் சிற்றில் விளையாடும் சிறுமியர் பாட்டுடைத் தலைவர் தம் சிற்றிலை அழிக்க முற்படும்போது 'எம் சிற்றிலை அழியாதொழிக' என வேண்டுதல் கூறப்படும். சிறுபறைப் பருவத்தில் பாட்டுடைத் தலைவரைச் சிறுபறை முழக்கும்படியும், சிறுதேர்ப் பருவத்தில் சிறுதேர் உருட்டும்படியும் வேண்டுதல் கூறப்படும். இம்மரபுகளை அடியொற்றி 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழி'ல் இறுதி மூன்று பருவங்களை இயற்றியுள்ளார் குமரகுருபரர்.

பிள்ளைத்தமிழ் இயற்றுவதில் குமரகுருபரருக்கு இருந்த பேராற்றலைப் பறைசாற்றும் ஒரு பதச்சோறு இதோ:

'தொடுக்கும் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே, நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்
சுவையே, அகந்தைக் கிழங்கை அகழ்ந்து
எடுக்கும் தொழும்பர் உளக்கோயிற்கு
ஏற்றும் விளக்கே, வளர்சிமய

இமயப் பொருப்பில் விளையாடும்
இளமென் பிடியே, எறிதரங்கம்
உடுக்கும் புவனம் கடந்து நின்ற
ஒருவன் திருவுள் ளத்தில் அழகு
ஒழுக எழுதிப் பார்த்திருக்கும்
உயிரோ வியமே, மதுகரம்வாய்
மடுக்கும் குழற்காடு ஏந்தும்இள
வஞ்சிக் கொடியே வருகவே,
மலயத் துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே' (62)

பக்திச் சுவையும் கவிதை நயமும் ஓசைச் சிறப்பும் களிநடம் புரியும் அற்புதமான பாடல் இது. அகமும் புறமும் ஆகிய துறைகளை உடைய இனிய தமிழ் என்பதைச் சுட்டுவது 'துறைத் தீந்தமிழ்' என்னும் அழகிய தொடர்; 'அகந்தைக் கிழங்கு' - அற்புதமான உருவகம்; 'தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கு', 'இமயப் பொருப்பில் விளையாடும் இளமென் பிடி' - மீனாட்சியம்மையைக் குறிக்கும் வகையில் பொருத்தமாக அமைந்திருக்கும் விளிகள்; 'சிவபெருமான் தம் திருவுள்ளத்தில் அழகொழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிரோவியம்' - கவிதை நயம் ததும்பி நிற்கும் சொற்சித்திரம்; பொதுவாக, காட்டில் கொடி இருக்கும்; இங்கோ குழலாகிய காட்டை இளவஞ்சிக் கொடி ஏந்தி நிற்பது ஒரு நயம். முத்தாய்ப்பாக, மலயத்துவசன் பெற்ற பெருவாழ்வு மீனாட்சியம்மை. இங்ஙனம் 'பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு' போல, நவில்தொறும் இப்பாடலின் நயமும் வளர்ந்து கொண்டே போகும்.

'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழை'ப் பற்றிய ஒரு சுவையான தகவல்; திருவாவடுதுறை ஆதீனத்தில் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் உ.வே. சாமிநாத ஐயர் மாணவராகப் பயின்ற காலத்தில் இந்நூல் முழுவதையும் பாராயணம் செய்த பிறகே காலை உணவைக் கொள்ளும் வழக்கத்தைக் கைக்கொண்டிருந்தார் என்பா (சி.சு. மணி, குமரகுருபர முனிவர் உணர்த்தும் சைவ சித்தாந்தம், ப. 7).

**கலம்பகங்கள்**

'கலம்பகம்' என்பதற்குப் பலரும் பல வகையான பொருள் விளக்கங்களைக் கூறியுள்ளனர். எனினும், 'பலவகை மலர்களும்

கலந்து அமைந்த கலம்பக மாலை' என்று பொருள் கொள்வதே பொருந்தும் எனத் தோன்றுகின்றது. உ.வே. சாமிநாத ஐயரும், 'களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த, அலங்கலந் தொடையல்' (திவ். திருப்பள்ளி. 5) என்றும், 'பல பூக்கள் கலந்து நெருங்கிய கலம்பகமாகிய மாலை' (பெரும்பாண். 174-ந.) என்றும் வரும் இரு இலக்கியச் சான்றுகளை எடுத்துக்காட்டி, ''கதம்பமென்பது இங்ஙனம் திரிந்தது போலும். இப்பிரபந்தத்தில் பலவகைப் பொருள்களும் அகப் புறத் துறைகளிற் பலவும் பலவகை யாப்புக்களும் விரவிக் கலந்தமையின் இப்பெயர் வந்தது'' (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஆராய்ச்சி', ப. lxxix) என்ற முடிவுக்கே வருகின்றார். இக்கருத்தினை வழிமொழிவது போலவே, பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளையும் ''கலம்பகமென்பது, பாவும், பாவினங்களும், சொல்லணி பொருளணிகளும் விரவப் பெற்று உலகியலை நன்கு தெரிக்குஞ் சிறுகாப்பியமாகும். கலம்பகத்திற்கு உறுப்புக்கள் பதினெட்டென்ப. அவற்றின் மேலும் உள்ளன. அந்தாதித் தொடையால் அது செய்யப்படுவது'' (குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், ப. 23) எனக் கூறுகின்றார்.

குமரகுருபர சுவாமிகள் 'மதுரைக் கலம்பகம்', 'காசிக் கலம்பகம்', 'கைலைக் கலம்பகம்' என்னும் மூன்று கலம்பகங்களை இயற்றியுள்ளார். இவற்றுள் முதல் இரு கலம்பகங்களே இன்று முழுமையாகக் கிடைக்கின்றன; கைலைக் கலம்பகத்தில் சில பாடல்களே கிடைக்கின்றன.

மதுரையில் கோயில் கொண்டு எழுந்தருளி இருக்கும் சொக்கநாதப் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இயற்றப்பெற்றது 'மதுரைக் கலம்பகம்.' காசி விசுவநாதரைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு அருளிச் செய்யப் பெற்றது 'காசிக் கலம்பகம்.' காப்புச் செய்யுளையும் சேர்த்து மொத்தம் 103 பாடல்களை உடையது 'மதுரைக் கலம்பகம்'; 101 பாடல்களை உடையது 'காசிக் கலம்பகம்.'

உலகியல் நயங்களை அமைத்துக் கற்பவர் உள்ளத்தைக் கவருவதற்குக் கலம்பகமே சிறந்த முறையில் பயன்படுவதாகும். இதனை நன்கு உணர்ந்த குமரகுருபர சுவாமிகள் தம் கலம்பகங்களில் உலகியல் சார்ந்த - பொதுமக்களுக்குச் சென்று சேரத்தக்க - எளிய உறுப்புகளைப் பயன்படுத்திப் பாடல்கள் புனைந்துள்ளார். மதுரை மற்றும் காசிக் கலம்பகங்களில்

இடம்பெற்றுள்ள 'மதங்கியார்' (119, 649), 'பிச்சியார்' (136, 614), 'கொற்றியார்' (139, 620), 'இடைச்சியார்' (166), 'வலைச்சியார்' (170) என்னும் உறுப்புக்கள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கவை ஆகும். சிலவகை மகளிரைக் கண்டு காமுற்ற இளைஞர்கள் தம் காமக் குறிப்புத் தோன்ற அவர்களோடு பேசும் உலகியல்பைத் தழுவி இவ்வுறுப்புக்களைத் தம் கலம்பகங்கில் கையாண்டுள்ளார் சுவாமிகள். 'மதங்கி' என்பவள் இரு கைகளிலும் வாட்படைகளை ஏந்தி வீசிப் பாடி ஆடுபவள்; 'பிச்சி' என்பவள் சிவ வேடம் புனைந்து பிச்சை வாங்கச் செல்பவள்; 'கொற்றி' என்பவள் வைணவ வேடம் பூண்டு பிச்சைக்கு வருபவள்; தயிர் விற்கும் இடைச்சாதி மங்கை 'இடைச்சி'. மீன் விற்கும் பெண் 'வலைச்சி', இவ்வுறுப்புக்களில் அவ்வம்மகளிருடைய தொழிலுக்கு உரிய செய்திகளைச் சிலேடை நயத்துடன் சுவையாகப் பயன்படுத்திக் கொண்டுள்ளார் சுவாமிகள். சான்றாக, மீன் விற்கும் வலைச்சியை நோக்கி அவள்மீது காமம் கொண்ட ஓர் இளைஞன் கூறுவதாக 'மதுரைக் கலம்பக'த்தில் வரும் பாடலை இங்கே எடுத்துக்காட்டலாம்:

'மொழிக்குஅய லாகி வேத முடிவினின் முடிந்து நின்ற
வழிக்குஅய லாகார் கூடல் வலைவாணர் பெருவாழ்வு அன்னீர்
கழிக்கயல் விற்பீர் மற்றுஇக் காசினி ஏழும் உங்கள்
விழிக்கய லுக்கே முற்றும் விலைஎன்ப விளக்கிட்டீரே' (170)

'கழிக்கயல்' என்பது உப்பங்கழியிலே உள்ள கயல்மீன். 'விழிக்கயல்' என்பது மீன் விற்கும் வலைச்சியின் விழியாகிய கயல். 'பரந்து விரிந்த உலகு ஏழும் வலைச்சியின் இரு கயல் விழிக்கே முற்றும் விலையாகும்' என்பது வலைச்சியின் இரு விழியழகில் மயங்கிய ஓர் இளைஞனின் கூற்று.

இவ்வுறுப்புக்களேயன்றி, 'மறம்', 'குறம்', 'சம்பிரதம்', 'சிந்து', 'காலம்', 'மடல்', 'ஊர்', 'புயவகுப்பு', 'களி' எனக் கலம்பகங்களில் வரும் பிற உறுப்புக்களும் சுவைமிக்கனவே ஆகும். 'மறம்' என்பது மறக்குடியில் பிறந்த பெண் ஒருத்தியை மணம் செய்து கொள்ள எண்ணிய ஒரு மன்னனிடமிருந்து வந்த தூதனைப் பார்த்து, அப்பெண்ணின் தந்தையாகிய மறவன் சினந்து கூறுவது (180, 643). ஒரு குறத்தி தலைவியை நோக்கிக் குறி கூறுவது 'குறம்' (181, 641). இந்திரசால வித்தையில் வல்லவன் ஒருவன் தன் சிறப்பைத் தானே கூறுவது 'சம்பிரதம்' (185, 671). இரசவாதம் செய்யும் ஆற்றல் பெற்ற சித்தனாகத் தன்னை ஒருவன் கூறிக்கொள்வது 'சித்து' (161, 635). கார்கால வரவு கண்டு தலைவி இரங்கிக் கூறுவது 'காலம்' (159). தலைவன் மடலேறுவேன் எனக்

கூறுவது 'மடல்' (175). பாட்டுடைத் தலைவனது ஊரைச் சிறப்பிப்பது 'ஊர்' (204, 630, 676); வீரத்தினைப் புகழ்வது 'புய வகுப்பு' (603). கள்ளுண்டு ஊனுண்ணும் வழக்கம் உடைய ஒருவன் தன் வழக்கத்தைச் சிறப்பித்துக் கூறுவது 'களி' (638).

பதச் சோறாக, மறக்குடியில் பிறந்த பெண் ஒருத்தியை ஒரு மன்னன் மணம் பேசி விடுக்க, அச்செய்தியை அறிவிக்கும் திருமுகத்தைக் கொணர்ந்த தூதுவனை நோக்கி அம்மறக்குடித் தலைவன் சினந்து கூறுவதாக 'மறம்' என்னும் உறுப்பில் அமைந்த 'மதுரைக் கலம்பக'ப் பாடலை இங்கே சுட்டிக்காட்டலாம்.

'தருமுகத்து நிமிர்குடுமி மாடமலி கூடல்
சவுந்தரபாண் டியர்குடியாம் சமரினிடை ஆற்றாது
ஒருமுகத்தில் ஒருகோடி மன்னர்மடிந்து ஒழிந்தார்
உனைவிடுத்த மன்னவன்யார் உரைத்திடுவாய் தூதா
மருமுகத்த நெறிக்குழல்எம் மறக்கொடியை வேட்பான்
மணம்பேசி வரவிடுத்த வார்த்தையது சொன்னாய்
திருமுகத்தில் எழுத்துஇதுவேல் திருமுடியில் எழுத்தும்
தேர்ந்தறியக் கொண்டுவா சிகையினொடும் சென்றே'(180)

இப்பாடல் 'மகட்பாற் காஞ்சி' என்னும் புறத்திணைத் துறையின்பாற்படும். 'தூது விட்ட அரசனது தலையை வெட்டிக் கொண்டு வா' என்று மறக்குடித் தலைவன் தூதுவனிடம் சினந்து கூறுவதாக வரும் பகுதியில் மறக்குடிக்கே உரித்தான வீர உணர்வின் சீரிய வெளிப்பாட்டினைக் காணலாம்.

மகளிர் அம்மானை ஆடுவதற்கும் ஊசல் ஆடுவதற்கும் உரிய பாடல்கள் முறையே அம்மானையே ஊசலும் ஆகும். இவற்றுள், 'அம்மானை' (117, 632) என்பது மகளிர் மூவர் பாடுவதாக அமைவது. 'அம்மானை', 'ஊசல்' ஆகிய உறுப்புக்களுக்கு இலக்கியமாக உள்ள பாடல்களைக் குமரகுருபரர் சொற்சுவையும் பொருட்சுவையும் ஒருங்கே திகழப் பாடியுள்ளார். காட்டாக. 'மதுரைக் கலம்பக'த்தில் 'அம்மானை' என்னும் உறுப்பில் அமைந்த பாடலை இங்கே காணலாம்:

'இருவருக்கும் காண்பரிய ஈசர்மது ரேசனார்
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனர்காண் அம்மானை
விருதுகட்டி அங்கம் வெட்டி வென்றனரே யாமாகில்
அருமைஉடம்பு ஒன்றுஇரு கூறுஆவதுஏன் அம்மானை
ஆனாலும் காயம்இலை ஐயர்அவர்க்கு அம்மானை' (117)

இப்பாடல் மூன்று மகளிர் தமக்குள் வாதம் செய்துகொண்டே அம்மானை ஆடுவதாக அமைந்தது. இதில் முதல் இரண்டு அடிகளும், அடுத்த இரண்டு அடிகளும், ஈற்றடியும் தனித்தனியே ஒவ்வொருத்தியின் கூற்று ஆகும். இறைவன் கூறும் அம்பிகையின் கூறும் ஒன்றாக இணைந்து அமைந்த அர்த்தநாரீசுவர வடிவத்தை வைத்துச் சுவையான சொல் விளையாட்டு ஒன்றினை இப்பாடலில் நடத்தியுள்ளார் சுவாமிகள். 'காயம்' என்ற சொல் புண், உருவத் திருமேனி என்னும் இரு பொருள்படும்படியாகச் சிலேடை நயத்துடன் இப்பாடலில் கையாளப் பெற்றுள்ளது.

## நீதிநெறி விளக்கம்

'நீதிநெறி விளக்கம்' நூலைக் குறித்து ஒரு சுவையான கதை வழங்குகின்றது. திருமலை நாயக்கர் ஒருநாள் உணவு உண்ணக் காலத் தாழ்வு நேர்ந்தது. அதை அறிந்த குமரகுருபர அடிகள் அவரிடம், "வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி, தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது" (377) என்னும் திருக்குறளை எடுத்துரைத்தார். அதனைக் கேட்ட மன்னன், "இது எங்கே உள்ளது?" என அடிகளிடம் வினவினான்; இது திருக்குறளில் உள்ளது என்றார் அடிகள். அந்நூல் விரிந்தது ஆகலின், சுருக்கமான ஓர் அரிய நீதி நூலினை அடிகள் இயற்றித்தர வேண்டும் என்று கேட்டுக்கொண்டான் மன்னன். அதற்கு இணங்கிக் குமரகுருபர அடிகள் 'நீதிநெறி விளக்கம்' பாடினார் என்பர். திரிசிரபுரம் வித்துவான் சி. தியாகராச செட்டியார் 'திருக்குறள் பருவத்திலேயே பெற்ற பிள்ளை' என்ற இந்நூலைப் பாராட்டுவார்.

"'நீதிநெறி விளக்கம்' உயரிய செந்தமிழ்ச் சொன்னடையுடையதாய்க் குருபரனாரது உலகியலறிவு ஆழத்தையும் அகலத்தையும் உணர்த்துங் கண்ணாடி போல்வது" (குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், பக். 24-25) என்பது பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை இந்நூலுக்குச் சூட்டும் புகழாரம் ஆகும்.

*1881*-ஆம் ஆண்டிலேயே அறிஞர் கால்டுவெல் இந்நூலைக் குறித்து, "திருநெல்வேலி நாட்டுப் புகழ் பெற்ற சான்றோர்களுள் அண்மையில் இருந்தவர் நீதிநெறி விளக்க ஆசிரியர் என்று கூறலாம். நீதிநெறி விளக்கம் நீதிச் செய்யுட்களைக் கொண்ட நூல்; குறளையும் நாலடியாரையும் ஒட்டி வகுக்கப் பெற்றது. இந்நூலின் செய்யுட்கள் பொதுமக்கள் நன்மதிப்பில் உயர்ந்த இடம்பெற்றுள்ளன" (மேற்கோள்: கு.வெ. பாலசுப்பிரமணியன், ஆய்வுக் களங்கள், ப. *77*) எனக் கூறியிருப்பதும் இங்கே மனங்கொளத் தக்கதாகும்.

குமரகுருபரர் நீதிகளைச் சொல்வதிலும் தெளிவும் திறனும் உடைய பெரும்புலவர், எதைப் பாடினாலும் நயமும் சுவையும் விளங்கப் பாடும் ஆற்றல் படைத்த பெருங்கவிஞர் என்பதற்குக் கட்டியம் கூறும் நூல் 'நீதிநெறி விளக்கம்'. அது 101 வெண்பாக்களால் ஆகியது; அழகிய உவமைகள் மலிந்தது.

நீதிகளைச் சொல்லும் இடத்தில் சுவை குறையாமல் அழகாக எடுத்துரைக்கும் திறன் குமரகுருபரரிடம் இயல்பாக அமைந்துள்ளது. உள்ளங்கவர் ஓர் எடுத்துக்காட்டு இதோ: ''நீரில் தோன்றும் குமிழி போன்றது இளமை. நீரில் எழும் அலைகள் போன்றது செல்வம். நீரில் எழுதப்படும் எழுத்துப் போன்றது உடம்பு. ஆகவே, நம்மவர்களே, எம் சிவனுடைய அம்பலத்தை வணங்காமல் இருப்பது ஏன்?'' நிலையாமையைப் பற்றிக் கூறும் இடத்திலும் இலக்கியச் சுவையும் உவமை நயமும் ததும்பி நிற்கப் பாடல் புனைந்துள்ளார் குமரகுருபரர்.

இங்கே எல்லோரும் எளிதில் அறியும் பொருட்டு, இளமை முதலியவற்றிற்கு நீரில் தோன்றுவனதாகிய குமிழி முதலிய ஓரினப் பொருள்களையே சுவாமிகள் உவமைகளாகக் கையாண்டிருப்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

'நீரில் குமிழி இளமை, நிறைசெல்வம்
நீரில் சுருட்டும் நெடுந்திரைகள் - நீரில்
எழுத்தாகும் யாக்கை, நமரங்காள், என்னே
வழுத்தாதது எம்பிரான் மன்று?'

(நீதிநெறி விளக்கம், காப்புச் செய்யுள்)

## 'நான்மணி மாலை'

'நான்மணி மாலை' என்பது வெவ்வேறு வகையான நான்கு மணிகளைத் தொடுத்து அமைத்த மாலையைப் போல வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா ஆகியவை முறையே அந்தாதியாக அமைய நாற்பது பாடல்கள் பாடுவது. குமரகுருபர சுவாமிகள் பாடிய 'திருவாரூர் நான்மணி மாலை'யில் அகத்துறைப் பாடல்கள் பல விரவி வருகின்றன.

திருவாரூரில் எழுந்தருளி யிருக்கும் தியாகேசர் 'இருந்தாடழகர்' என்னும் திருநாமமும் உடையவர். அவர் இருந்தபடியே நடனம் ஆடுவதற்குக் குமரகுருபர சுவாமிகள் 'திருவாரூர் நான்மணி மாலை'யில் ஒரு பாடலில் இரண்டு சுவையான காரணங்களைக் கற்பிக்கின்றார். ''திருவடி தூக்கி நடனம் புரியின் திருமால் முன்

திருப்பதங் காணாது வருந்தியவர் ஆதலின் இப்போது தூக்கிய திருவடியைத் தரிசித்து 'நான் திருவடிகளைக் கண்டேன்' என்று பிரமதேவனைப் போலப் பொய்ச்சூள் புகல்வார் என்று கருதியோ, முன்னொருகால் யமன் திருவடியால் உதைபட்டவன் ஆதலின் இப்போது தூக்கிய திருவடி கண்டு மீண்டும் உதை விழும் என்று அஞ்சுவன் என்பது கருதியோ நீ இருந்து ஆடுகின்றாய்?'' என்று வினவுமுகத்தால் அவ்விரண்டு காரணங்களையும் நயமாகப் புலப்படுத்துகின்றார் சுவாமிகள். பயில்வார் நெஞ்சை அள்ளும் அப்பாடல் இதோ:

'கண்ணனார் பொய்ச்சூள் கடைபிடித்தோ தென்புலத்தார்
அண்ணலார் அஞ்சுவர்என்று அஞ்சியோ - விண்ணோர்
விருந்தாடும் ஆரூரா மென்மலர்த்தாள் தூக்காது
இருந்துஆடு கின்றவா வென்?' (325)

## 'மும்மணிக் கோவைகள்'

'மும்மணிக் கோவை' என்பது மூன்று வேறு அணிகளால் ஆன மாலையைப் போல ஆசிரியப்பா, வெண்பா, கலித்துறை ஆகிய அந்தாதியாக அமைய முப்பது பாடல்கள் பாடுவது. குமரகுருபர சுவாமிகள் பாடியுள்ள மும்மணிக்கோவைகள் இரண்டு. ஒன்று, 'சிதம்பர மும்மணிக் கோவை'; இதில் இடம்பெற்றுள்ள 25-ஆம் பாடல் மாத்திரம் அகத்துறை அமைதியை உடையது; இரண்டாவது 'பண்டார மும்மணிக்கோவை'. இது குமரகுருபர சுவாமிகள் தம் ஞானாசிரியர் மாசிலாமணி தேசிகர்மீது பாடிய பிரபந்தம். இதில் அகத்துறைப் பாடல்கள் எதுவும் இடம்பெறவில்லை.

'சிதம்பர மும்மணிக் கோவை'யில் ஒரு பாடலில் உண்மையான செல்வம் யாது, வறுமை யாது என்பது குறித்துக் குமரகுருபர சுவாமிகள் இரத்தினச் சுருக்கமாக எடுத்துரைத்துள்ளார். சுவாமிகளின் கருத்தில் மனநிறைவு ஒன்றே பெருஞ்செல்வம்; தணியாத ஆசைதான் கடுமையான வறுமை. இதனை,

'செல்வம் என்பது சிந்தையின் நிறைவே
அல்கா நல்குரவு அவாஎனப் படுமே' (26: 20-21)

என்னும் சுவாமிகளின் வைர வரிகள் கவிதை நயத்தோடு உணர்த்தி நிற்கின்றன.

'பண்டார மும்மணிக்கோவை'யில் சுவாமிகள் தம் ஞானாசிரியருடைய திருவருட் சிறப்பினைப் பலபடப் பாராட்டிக்

கூறியுள்ளார். அவற்றுள் இலக்கிய நலமும் இலக்கண வளமும் ஒருங்கே சிறந்து விளங்கும் ஓர் இடம் வருமாறு:

'மாசி லாமணி ஞானசம் பந்த
வாக்கு மனனும் யாக்கையும் ஒன்றாச்
சொற்றரு கரணம் மற்றிவை மூன்றும்
நின்புகழ் நவிற்றியு நினைத்துநின் றுணைத்தாள்
அன்புடன் இறைஞ்சியும் இன்பமுற் றனவால்
அவகர ணங்களே யல்லமற்று அம்ம
சிவகர ணங்களாய்த் திரிந்தன வென்றே, அதனால்
திரிகர ணங்கள்என்று உரைசெயும் அப்பெயர்
ஒருபொருட் கிளவிஎல் லோர்க்கும்
இருபொருட் கிளவியாய் இருந்ததுஇன்று எனக்கே' (587: 24-33)

இங்கே சுவாமிகள் தம் ஞானாசிரியரிடம், ''நின் திருவருளால் என்னுடைய கரணங்கள் சிவ கரணங்கள் ஆயின. பிறர் திறத்தே 'திரிகரணங்கள்' என்னும் தொடர், 'மூன்று கரணங்கள்' என்னும் ஒரே பொருளைத் தருவதாக வழங்குகின்றது. என் திறத்திலோ, 'மூன்று கரணங்கள்', 'பழைய இயல்பு மாறிச் சிவ கரணங்களாகத் திரிந்த கரணங்கள்' என இரண்டு பொருள்படும் தொடராக அது நிற்கின்றது'' என்கின்றார். 'ஒரு பொருட் கிளவி', 'இருபொருட் கிளவி' என்னும் கிளவிப் பெயர் வகைகளை இங்கே சுவாமிகள் சுவையாகக் கையாண்டுள்ளார்.

### 'சிதம்பரச் செய்யுட் கோவை'

பல வகை யாப்புக்களையும் விரவிப் பாடுவதில் மிகுந்த விருப்பம் கொண்டவர் குமரகுருபர சுவாமிகள். இது, பலவகை யாப்புக்களும் விரவி அமைந்த கலம்பகங்கள் மூன்றையும், செய்யுட் கோவை ஒன்றையும் சுவாமிகள் இயற்றியிருத்தலால் விளங்கும்.

'சிதம்பரச் செய்யுட் கோவை' 84 பாடல்களால் ஆனது; வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா எனப் பல்வகைப் பாக்களும் பாவினங்களும் விரவி வருவது. ''பாவும் பாவினமுமாகிய யாப்புக்களைப் பொருட் சிறப்பமையப் பாடுவதில் இவர் (குமரகுருபர சுவாமிகள்) வல்லவரென்பதற்குச் சிதம்பரச் செய்யுட் கோவை ஒன்றே சான்றாகும். மதுரைக் கலம்பகம், காசிக் கலம்பகமென்னும் இரண்டனுள்ளும் பாவும் பாவினமுமாகிய செய்யுட்கள் பல அமைந்துளவெனினும், சிதம்பரச்

செய்யுட்கோவை யாப்பிலக்கணத்துக்குரிய இலக்கியமாகவே செய்யப்பெற்ற தாதலின் அதன்கண் பாவுக்கும் பாவினங் களுக்குமுரிய இலக்கண அமைதியை நன்றாகக் காணலாம். அந்நூற் செய்யுட்களின் பின் உள்ள குறிப்புக்கள் அவ்விலக்கண அமைதியைத் தெளிவாகப் புலப்படுத்தும்'' (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஆராய்ச்சி', ப. xliv-xlv) எனச் 'சிதம்பரச் செய்யுட் கோவை'யின் யாப்பிலக்கண அமைதியைப் போற்றுவர் உ.வே. சாமிநாத ஐயர். அவரது கருத்திற்குத் தக்கதொரு சான்றாகச் 'சிதம்பரச் செய்யுட் கோவை'யின் இறுதிப் பாடல் விளங்குகின்றது. அப்பாடல் வருமாறு:

'வாழ்த்துமின் தில்லை நினைமின் மணிமன்றம்
தாழ்த்துமின் சென்னி தலைவற்கு - வீழ்த்த
புறநெறி ஆற்றாது அறநெறி போற்றி
நெறிநின்று ஒழுகுதிர் மன்ற
துறையறி மாந்தர்க்குச் சூழ்கடன் இதுவே' (564)

இது செவியறிவுறூஉ மருட்பா. 'வாழ்த்துமின்' என வாக்காலும், 'நினைமின்' என மனத்தாலும், 'தலைவற்குச் சென்னி தாழ்த்துமின்' எனக் காயத்தாலும் செய்யும் தொண்டுகளைச் சுவாமிகள் கூறியிருப்பது, முக்கரணங்களாலும் வழிபடல் வேண்டும் என்னும் தம் கருத்தைப் புலப்படுத்துவதற்காக ஆகும். அறத்தாறு அல்லாத நெறியில் நின்று செயல்புரியாமல், தாம் ஒழுகும் வழி இஃது என அறிந்து, அதில் நிலைத்து நிற்கும் மாந்தர்க்குத் தலையாய கடன் இதுவே என்பது சுவாமிகளின் கருத்து.

**'சகலகலாவல்லி மாலை'**

தில்லியை ஆண்ட முகலாய மன்னரின் உள்ளத்தைக் கவர்வதற்காக அவரது தாய்மொழியான இந்துஸ்தானியை விரைவில் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற நோக்குடன் கலைமகளின் அருளை வேண்டிக் குமரகுருபர சுவாமிகள் பாடிய பிரபந்தம் 'சகலகலாவல்லி மாலை'. இப்பிரபந்தம் 'சகலகலாவல்லி மாலை என்னும் சரசுவதி தோத்திரம்' என்றும் வழங்குகின்றது. இப்பிரபந்தத்தில் கட்டளைக் கலித்துறையில் அமைந்த பத்துப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

'சகலகலாவல்லி மாலை'யின் பத்தாவது பாடலில் முகலாய மன்னர் பாதுஷாவின் அன்பு தமக்குக் கிடைக்க வேண்டும் என்னும்

விருப்பத்தைக் குமரகுருபர சுவாமிகள் வெளியிட்டிருக்கும் பாங்கு பயில்வார் நெஞ்சை அள்ளுவதாகும். அப்பாடல் இதோ:

'மண்கண்ட வெண்குடைக் கீழாக
மேற்பட்ட மன்னரும் என்
பண்கண் டளவில் பணியச்செய்
வாய்; படைப் போன்முதலாம்
விண்கண்ட தெய்வம்பல் கோடிஉண்
டேனும் விளம்பில் உன்போல்
கண்கண்ட தெய்வம் உளதோ
சகல கலாவல்லியே' (10)

குமரகுருபர சுவாமிகள் தம் தமிழ்ப் புலமையின்மீது கொண்டிருக்கும் நம்பிக்கை பெரிதா? கண்கண்ட தெய்வமாம் சகலகலாவல்லியின்மீது வைத்திருக்கும் பற்றுப் பெரிதா? 'தந்தது உன்தன்னை; கொண்டது என்தன்னை; யார் கொலோ சதுரர்?' என்ற மணிவாசகரின் வாக்கே இங்கே நம் நினைவுக்கு வருகின்றது.

"'மூர்த்தி சிறிதாயினும் கீர்த்தி பெரிது' என்பது போலப் பத்தே பாடல்கள் கொண்ட இந்நூலும் சொற்சுவை, பொருட்சுவை தோய்ந்து அனைவரையும் ஈர்த்து வழங்கிவருகின்றது" என்பர் அறிஞர் சி.சு. மணி (குமரகுருபரர் உணர்த்தும் சைவ சித்தாந்தம், ப. 10).

"பத்தே பாடல்களைக் கொண்ட 'சகலகலாவல்லி மாலை' என்னும் இச்சிறு படைப்பு பலகால் படித்துணரத்தக்கது. இளம்பருவத்தினர் நாள்தோறும் ஓதி ஓதி உணரத்தக்கது" (கவண்கற்களும் சிறகுகளும், ப. 39) என்னும் பேராசிரியர் மா. இராமலிங்கத்தின் கருத்தும் இங்கே மனங்கொளத்தக்கது ஆகும்.

## பரந்த உள்ளமும் விரிந்த உலகியலறிவும் உடையவர்

குமரகுருபர சுவாமிகள் இயற்றிய பிரபந்தங்கள் இலக்கிய, இலக்கண நயங்கள் நிறைந்து, அவரது சமய, சாத்திர, தோத்திரப் பயிற்சியையும் நுண்மாண் நுழைபுலத்தையும் ஒருசேரப் புலப்படுத்தி, இன்றளவும் அவரது புகழைப் பரப்பி நிற்கின்றன. "மதிநுட்பமும் நூலறிவும் ஒருங்கு வாய்ந்த இப்பெரியார் (குமரகுருபர சுவாமிகள்) உலகியலறிவும் நன்கமைந்தவர்... ஒரு கடவுள், ஒரு மொழி, ஒரு கலை, ஒரு நாடு என்னும் வரையறையின்றிப் பல கடவுளையும் பல மொழிக்

கருத்துக்களையும் பல கலைச் செய்திகளையும் பல நாட்டு வருணனைகளையும் இவருடைய செய்யுட்களிற் காண்கின்றோம். இந்நாட்டின் தென்றிசையிலுள்ள செந்தூரையும் வடநாட்டிலுள்ள காசியையும் இவர் கண்டறிந்து பாடுகின்றார். தாம் பிறந்த பாண்டி நாட்டையும், குருவைப் பெற்ற சோழ நாட்டையும், வாழ்ந்து வந்த கங்கைக் கரையையும் வருணிக்கின்றார். சிவபெருமான் முதல் கலைமகள் வரையுள்ள தெய்வங்களைப் பாராட்டுகின்றார். தென்றமிழ் மொழியையும் ஹிந்துஸ்தானிச் சொல்லையும் இணைத்துப் பாடுகின்றார். சைவ பரிபாஷைகளோடு வைணவ பரிபாஷைகளையும் ஒருசார் அமைக்கின்றனர். இவற்றால் இவர் 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்னும் மனோபாவமும் விரிந்த உலகியலறிவும் உடையவரென்பதை உணரலாகும்'' (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஆராய்ச்சி', ப. lxxxix-xc) என உ.வே. சாமிநாத ஐயர், குமரகுருபர சுவாமிகளைக் குறித்துக் கூறியுள்ள ஆய்வு முடிவு நூற்றுக்கு நூறு சரியானதே ஆகும்.





# 3. 'கொழிதமிழ்க் கவி'

''எதைப் பாடினாலும் நயமும் சுவையும் விளங்கப் பாடிய பெருங்கவிஞர் குமரகுருபரர்... அவருடைய எந்த நூலிலும் கற்பனை வளம் காணலாம்; இனிய ஓசை நயமும் பொருட்சுவையும் காணலாம்.''

- மு. வரதராசன்[1]

நன்னூலார் ஒரு நூலுக்கு வேண்டுவனவாகக் குறிப்பிடும் அழகுகள் பத்து. அவையாவன:

'சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல்,
நவின்றோர்க்கு இனிமை, நன்மொழி புணர்த்தல்,
ஓசை யுடைமை, ஆழமுடைத் தாதல்,
முறையின் வைப்பே, உலகமலை யாமை,
விழுமியது பயத்தல், விளங்குஉதா ரணத்தது
ஆகுதல் நூலிற்கு அழகெனும் பத்தே.'

(பொதுப் பாயிரம், நூற்பா 13)

இனி, குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தங்களில் சிறந்த நூலிற்கான இப்பத்து வகை அழகுகளும் பொருந்தி இருக்கும் பான்மை குறித்து முறையே காண்போம்.

**'சுருங்கச் சொல்லல்'**

'பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர்' (649)

என்பது 'சொல்வன்மை' அதிகாரத்தில் இடம்பெறும் ஒரு சீரிய

---

1. தமிழ் இலக்கிய வரலாறு, ப. 213; 210.

குறட்பா. 'மாசற்ற சில சொற்களால் சொல்லத் தெரியாதவரே, உண்மையில் பல சொற்களால் சொல்லிக் கொண்டிருக்க விரும்புவர்' என்பது இக்குறட்பாவின் பொருள்.

'பாட்டுக்கொரு புலவ'ரான பாரதியாரும் 'ஜப்பானியக் கவிதை' என்னும் தம் கட்டுரையில் கீழ்த்திசைக் கவிதையின் சிறப்புப் பண்பாகச் சுருங்கச் சொல்லலைச் சுட்டுகின்றார்: '' 'சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்' ஜப்பானியக் கவிதையின் விசேஷத்தன்மை'யென்று நோகுச்சிப் புலவர் சொல்லுவதுடன் ஆங்கிலேயரின் கவிதை இதற்கு நேர்மாறாக நிற்கிறதென்றும் சொல்கிறார். நமக்குள்ளே திருக்குறள் இருக்கிறது; 'கடுகைத் தொளைத்தேழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்த குறள்.' கிழக்குத் திசையின் கவிதையிலே இவ்விதமான ரஸம் அதிகந்தான். தமிழ்நாட்டில் முற்காலத்தில் இது மிகவும் மதிப்பெய்தி நின்றது'' (பாரதியார் கட்டுரைகள், ப. *261*) என்னும் அவரது கருத்து இவ்வகையில் நினைவுகூரத்தக்கது ஆகும்.

கவிதை படைக்கும்போது - குறிப்பாக, கவிதையில் நீதி சொல்லும் போது - சுற்றி வளைத்துச் சொல்லாமல், இரத்தினச் சுருக்கமாகச் சொல்வதையே அனைவரும் விரும்புவர்; எதையும் நீட்டி முழக்கிச் சொல்லிக்கொண்டிராமல், நறுக்குத்தறித்தாற் போல் சில சொற்களால் சொல்ல வேண்டும் என்றே எல்லோரும் எதிர்பார்ப்பர். இதுவே உலகத்து இயற்கை; மக்களின் விருப்பமும்கூட. இதனை நன்கு உணர்ந்த குமரகுருபர சுவாமிகள் தமது 'நீதிநெறி விளக்க'த்தில் உயரிய நீதிகளை - வாழ்வியல் நெறிகளை - 'சுருங்கச் சொல்லல்' என்னும் அழகினைக் கையாண்டு நன்கு உணர்த்தியுள்ளார். சான்றாக, 'மாந்தர்க்குக் கல்வியைக் காட்டிலும் சிறப்பான துணை வேறு இல்லை', 'கல்வியழகே அழகு', 'கல்விச் செருக்கு இருத்தல் ஆகாது' என்னும் கல்வி தொடர்பான கருத்துக்களை - நீதிகளை - சுவாமிகள் பொன்னெழுத்துக்களால் பொறிக்கத்தக்க வகையில் எங்ஙனம் சுருக்கமாகவும் செறிவாகவும் புலப்படுத்தியுள்ளார் எனக் காண்போம்.

'கல்வியின் ஊங்கு இல்லை
சிற்றுயிர்க்கு உற்ற துணை' (*207*)

'கற்றார்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோர் அணிகலம் வேண்டாவாம்' (*218*)

'முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க' (219)

இன்னமும் சுண்டக் காய்ச்சியது போன்ற மொழிநடையில் சில சொற்களில் மந்திரம் போல் கருத்துக்களை எடுத்துரைக்கும் சதுரப்பாட்டிலும் குமரகுருபர சுவாமிகள் வல்லவராக விளங்குகின்றார். சில சான்றுகள் இதோ:

'பொன்மலர் நாற்றம் உடைத்து' (210)

'பூத்தலிற் பூவாமை நன்று' (211)

'யாரே அழகுக்கு அழகு செய்வார்?' (218)

'நும் தாலிக்கு வேலி' (40)

குமரகுருபர சுவாமிகளின் சுருங்கச் சொல்லும் திறனுக்கு 'நீதி நெறி விளக்க'த்தில் இருந்து பிறிதொரு சான்றினையும் இங்கே எடுத்துக்காட்டலாம். திருக்குறளில் 'காலமறிதல்' முதலிய அதிகாரங்களில் பல குறட்பாக்களில் விரிவாகக் கூறப்பட்ட நீதிகளைச் சுவாமிகள் 'நீதிநெறி விளக்க'த்தில் ஒரே பாடலில் சுருக்கிக் கூறியுள்ளார். சிந்தனைக்கு விருந்தாகும் அப்பாடல் இதோ:

'காலம் அறிந்து, ஆங்கு இடம்அறிந்து, செய்வினையின்
மூலம் அறிந்து, விளைவுஅறிந்து - மேலும்தாம்
சூழ்வன சூழ்ந்து, துணைமை வலிதெரிந்து,
ஆள்வினை ஆளப் படும்' (257)

ஒரு முயற்சியைத் தொடங்கும் முன் ஆராய வேண்டுவன இவை எனத் திருக்குறளில் பல குறட்பாக்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ள செய்திகளை இங்கே ஒரே பாடலில் சுருக்கமாகவும் செறிவாகவும் அடக்கிக் கூறியுள்ளார் சுவாமிகள்.

## 'விளங்க வைத்தல்'

சுருங்கச் சொல்லலின் சிறப்பைச் சுட்டிக்காட்டும் கவியரசர் பாரதியார், ''ஆனாலும், ஒரேயடியாகக் கவிதை சுருங்கியே போய்விட்டால் நல்லதன்று'' (பாரதியார் கட்டுரைகள், ப. 261) என எச்சரிக்கை செய்யவும் தவறவில்லை. ஒரு கவிதைப் படைப்பிற்குச் 'சுருங்கச் சொல்லல்' என்னும் அழகு எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் 'விளங்க வைத்தல்' என்னும் அழகும். ஒரு தேர்ந்த கவிஞர் சுருங்கச் சொல்லிப் படிப்பவருக்கு விளங்க வைப்பாரே தவிர, விளங்கச் சொல்லி - அதாவது விளக்கமாகச்

சொல்லி - படிப்பவர் முகத்தைச் சுருங்க வைக்க மாட்டார். வேறு சொற்களில் கூறினால், 'சுருங்கச் சொல்லல்' எப்படி ஓர் அழகோ - அரிய கலையோ - அதே போல் சொல்லும் பொருளை எவ்வித ஐயப்பாட்டிற்கும் இடம் இன்றிப் படிப்பவருக்கு 'விளங்க வைத்த'லும் ஓர் அரிய கலையே - சீரிய அழகே - ஆகும். தாம் எடுத்துக்கொண்ட முயற்சியில் எப்படியேனும் வெற்றி பெற்றே தீரவேண்டும் என முனைப்புடன் ஈடுபடுவோரின் இலக்கணம் யாது? இதோ, குமரகுருபர சுவாமிகள் 'நீதிநெறி விளக்க'த்தில் ஒரு பாடலில் அதனை விளக்கமாக எடுத்துரைத்துள்ளார்.

'மெய்வருத்தம் பாரார், பசி நோக்கார், கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார் - செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்' (258)

இதேபோல், வீடு பெற முயல்வாரின் இயல்பினையும் 'நீதிநெறி விளக்க'த்தில் பிறிதொரு பாடலில் சுவாமிகள் விளக்கமாகக் கூறியுள்ளார். நூல்களில் கற்றறிந்தவற்றைத் தெளிந்து, அதன் பயனாய் அடங்கி நடந்து, தீய செயல்களை விலக்கி, நல்ல செயல்களைச் செய்து முடித்து, பெற்றது கொண்டு மனம் நிறைவுற்று, எல்லாச் செயலும் அடங்கும்படி நின்று, எல்லாரும் பற்றுவதாகிய பரம்பொருளையே பற்றி, அந்நெறியில் நிலைத்து நிற்பவரே வீட்டு நெறியை அடைய முயல்வோர் ஆவர். இக்கருத்தினைத் தன்னகத்தே கொண்ட பாடல் இதோ:

'கற்றாங்கு அறிந்து அடங்கித் தீதுஒரீஇ நன்றுஆற்றிப்
பெற்றது கொண்டு மனந்திருத்திப் - பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறநின்று ஒன்றுஉணர்ந்து
நிற்பாரே நீணெறிச்சென் றார்' (306)

இங்ஙனம் எதனையும் சுருக்கமாகச் சொன்னாலும் விளங்கும்படி சொல்லுவது என்பது குமரகுருபர சுவாமிகளுக்குக் கைவந்த கலை ஆகும்.

### 'நவின்றோர்க்கு இனிமை'

ஒரு சிறந்த படைப்பு என்பது சுவையுடன் அமைந்து படிப்பவர்க்கு இன்பத்தைத் தந்து நிற்கும்; அதாவது அதன் தொடக்கமும் நடுவும் முடிவும் நன்கு அமைந்து, கையில் எடுத்தவுடன் வாசகரைப் படிக்கத் தூண்டும்; அவரைத் தொடர்ந்து படிக்க வைக்கும்; படைப்பு முடிந்தாலும் அதன் தாக்கம்

படிப்பவரின் நெஞ்சில் என்றென்றும் இருந்து கொண்டே இருக்கும். ஒரு நல்ல படைப்புக்கு இருக்க வேண்டிய இந்த இன்றியமையாத பண்பினை நன்கு உணர்ந்த குமரகுருபர சுவாமிகள், படிப்பவருக்கு மகிழ்ச்சியும் மன நிறைவும் தருவதற்கு என்ன என்ன சுவைக் குறிப்புக்கள் - கூறுகள் - வேண்டுமோ, அத்துணைச் சுவைக் குறிப்புக்களையும் கூறுகளையும் தம் படைப்புக்களில் ஆங்காங்கே அழகுறச் சேர்த்துக் கொண்டுள்ளார். தம் படைப்பினை 'அனைவரும் ஆர்வத்துடன் படித்து மகிழும் வகையில் சுவையாக வெளியிடுதல்' என்ற பொன்னான விதியைச் சுவாமிகள் கவனமாகவும் கருத்தாகவும் கையாண்டுள்ளார். இவ்வகையில் சுவாமிகளுக்குப் பெரிதும் பயன்பட்டிருப்பது இலக்கணப் புலமையும் இலக்கியப் பயிற்சியும் ஆகும்.

'சிதம்பரச் செய்யுட் கோவை'யில் ஒரு பாடல்: எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்னும் ஐந்திலக்கணமும் கைவரப் பெற்ற சுவாமிகளுக்கு ஒரு சந்தேகம் வந்துவிடுகின்றது. 'அட்டமூர்த்தம் கொண்ட சிவபெருமானுக்கும் உமாதேவியாருக்கும் உருவொன்று; அவ்வுருவை ஒருத்தன் என்று சொல்வதா? ஒருத்தி என்பதா?' என்று யோசிக்கின்றார்; சொல்லிலக்கணம் முழுவதும் நினைத்துப் பார்க்கின்றார். அப்போது அவருக்கு,

'ஒருவர் என்பது உயிர்இரு பாற்றாய்ப்
பன்மை வினைகொளும் பாங்கிற்று என்ப' (289)

என்னும் நன்னூல் நூற்பா நினைவுக்கு வருகின்றது. ''ஆஹா! இந்தச் சொல்லை இலக்கண நூலால் பெறாவிட்டால் எவ்வளவு திண்டாட்டம் நேரும்; இந்த 'ஒருவர்' என்னும் சொல்லும் இதன் இலக்கணமும் அர்த்தநாரீசுவரத் திருவுருவத்துக்காகவே ஏற்பட்டன போலல்லவோ தோன்றுகின்றது!'' என்று வியக்கின்றார். அவ்வியப்பின் முடிவில் பிறந்த பாடல் வருமாறு:

'அருவருக்கும் உலகவாழ்வு அடங்க நீத்தோர்க்கு
ஆனந்தப் பெருவாழ்வாம் ஆடல் காட்ட
மருவருக்கன் மதிவளிவான் யமானன் தீநீர்
மண்எனும்எண் வகை உறுப்பின் வடிவு கொண்ட
ஒருவனுக்கும் ஒருத்திக்கும் உருவொன் றால்அவ்
வுருவைஇஃது ஒருத்தன் என்கோ ஒருத்தி என்கோ
இருவருக்கும் உரித்தாக ஒருவர் என்றோர்
இயற்சொல்இலது எனின்யான் மற்றுஎன்சொல் கேனே?' (534)


அர்த்தநாரீஸ்வரர்

சொல் இலக்கணம் சுவாமிகளுக்கு ஒரு சமயத்தில் உதவி செய்தது போல அணியிலக்கணம் மற்றொரு சமயத்தில் சுவாமிகளைத் தர்ம சங்கடத்தில் இருந்து காப்பாற்றுகின்றது; அங்கே அவருக்குச் சிலேடை துணையாக வருகின்றது. ''தேவிக்கும் எம்பெருமானுக்கும் ஒரே திருவுருவம் உள்ளது; அங்ஙனம் ஒன்றுபட்ட திருவுருவத்தை நாம் எவ்வாறு விளித்துப்பாடுவது? 'தாயே' என்றால் எம்பெருமானைச் சாராது; 'தந்தையே' என்றால் உமாதேவியாரைச் சாராது; 'அம்மையப்பா' என்றால் ஒருமை போய் இருமை ஆகுமே?'' என்று யோசிக்கின்றார்; அப்போது இருவருக்கும் பொருந்தும்படி ஏதாவது சொல்லலாமே என்று ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வருகின்றார்; அந்த முடிவு பின்வரும் பாட்டிலே வெளியிடுகின்றது:

'செவ்வாய்க் கருங்கண்பைந் தோகைக்கும் வெண்மதிச்
சென்னியற்கும்
ஒவ்வாத் திருவுரு ஒன்றே உளதுஅவ் வுருவினைமற்று
எவ்வாச் சியம்என்று எடுத்திசைப் பேம்இன் னருட்புலியூர்ப்
பைவாய்ப் பொறியரவு அல்குல்எந் தாய் என்று பாடுதுமே' (553)

இங்கே 'பைவாய்ப் பொறியரவு அங்குல் எந்தாய்' என்பது சிலேடை; 'அரவு (பாம்பு) போன்ற அல்குலை உடைய எம் தாயே' எனவும், 'அரவை (பாம்பை) அணிந்த அல்குலை உடைய எம் தந்தையே' எனவும் இருவகையாகப் பொருள் கொள்ளும்படி நயமாகக் கையாண்டுள்ளார் சுவாமிகள்.

இலக்கணப் புலமைமட்டு மன்றி, இலக்கியப் பயிற்சியும் குமரகுருபர சுவாமிகளுக்குக் கருத்துக்களைச் சுவையாகவும்

செவிப்புலன் கொண்டே வேறுபடுத்திவிடலாம். இவற்றைக் கேட்கும்போது நமக்குத் தென்பாண்டி நாட்டுப் பொருநை நதியின் ஓட்டம் ஞாபகத்துக்கு வருகின்றது. சொற்களும் சொற்றொடர்களும் ஒன்றனோடு ஒன்று செவிக்கினிமை தரும் வண்ணம் பொருந்தி அமைந்துள்ளன. பொருளிலே கருத்துச் சொல்வதற்குமுன் செய்யுட்களின் ஓசை நம் கருத்தை இழுக்கின்றது'' (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஆராய்ச்சி', ப. xvii) என்பர் உ.வே. சாமிநாத ஐயர்.

குமரகுருபர சுவாமிகளின் கவிதை நடை கம்பீரமாகச் செல்லுகின்றது. சொல்லின்பத்தை விளைவிக்க வல்ல கூறுகள் அனைத்தும் அவருடைய மொழி நடையில் நன்கு அமைந்துள்ளன. எவ்வகையான யாப்பையும் பேராற்றலுடன் இயற்றும் திறம் சுவாமிகளுக்கு எளிதில் கைவந்துள்ளது. தேர்ந்தெடுத்த சொற்களும் தொடை நயங்களும் எவ்வித முயற்சியும் இன்றி இயல்பாகவே வந்து அவருக்குக் குற்றேவல் செய்கின்றன. குறிப்பாக, வழியெதுகையும் முரண்தொடையும் அவர்தம் கவிதைகளிலே ஓசை நயம் சிறப்பாக அமையக் காரணங்களாக விளங்குகின்றன. சந்தத்தைத் தம் கவிதைகளிலே சுவாமிகள் மிக எளிதாகக் கையாண்டுள்ளார்.

விருத்தங்களிலும் வெண்பாக்களிலும் குமரகுருபர சுவாமிகளுக்கே உரிய ஓசை நயம் மேம்பட்டு விளங்குகின்றது. அகவல்களிலும் கலி, வஞ்சி முதலான வேறு பா வடிவங்களிலும் அவருடைய கருத்துக்கள் தெளிவாக விளக்கப்பெற்றுள்ளன. பதச்சோறாக, 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்'ல் செங்கீரைப் பருவத்தில் இடம்பெறும் பாடல் ஒன்றை இங்கே காண்போம்:

'முகமதி ஊடுஎழு நகைநிலவு ஆட
முடிச்சூ ழியமாட
முரிபுரு வக்கொடி நுதலிடு சுட்டி
முரிப்பொ டசைந்தாட
இகல்விழி மகரமும் அம்மக ரம்பொரும்
இருமக ரமுமாட
இடுநூ புரஅடி பெயரக் கிண்கிண்
எனுங்கிண் கிணியாடத்
துகிலொடு சோர்தரு கொடிநுண் மருங்குல்
துவண்டு துவண்டாடத்

தொந்தி சரிந்திட உந்தி கரந்தொளிர்
சூலுடை ஆலடைமற்
றகில சராசரம் நிகிலகமா டாடிட
ஆடுக செங்கீரை
அவனி தழைந்திட மவுலி புனைந்தவள்
ஆடுக செங்கீரை' (19)

செங்கீரை என்பது குழந்தைகள்பால் இயல்பாகவும் சிறப்பாகவும் அமையும் ஒரு வகை ஆடல் ஆகும். செங்கீரையும் ஒரு 'நிருத்த விசேஷம்' என்று கூறுவர் பெரியவாச்சான் பிள்ளை. மீனாட்சியம்மை பெண் குழந்தை ஆதலின் முடிச்சூழியம் (உச்சிக்கொண்டை), நெற்றிச்சுட்டி, மகரம் (மகர வடிவிலான குண்டலம்), நூபுரம் (காலணி), கிண்கிணி ஆகிய அணிகள் எல்லாம் ஆடிடச் செங்கீரை ஆடுமாறு வேண்டுகின்றார் குமரகுருபரர். மேலும், அம்மையின் முகம், பற்கள், புருவம், கண்கள், இடை, வயிறு முதலான உறுப்புக்களின் அழகுக்கு அழகு சேர்ப்பது போல் சுவாமிகள் பாடியுள்ள திறமும், அம்மை எல்லாப் பொருள்களிலும் கலந்துறையும் தெய்வம் ஆதலின் அவள் ஆடும்போது எல்லாம் ஆடின எனக் கூறும் நயமும் பயில்வார் நெஞ்சை அள்ளும் பான்மையின வாகும். இனி, 'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமி'ழில் செங்கீரைப் பருவத்தில் இடம்பெறும் பாடல் ஒன்றை ஒப்பீட்டு நோக்கில் இங்கே காண்போம்:

'விரல்களை உண்டு கனிந்தமு தூறிய
மெல்லிதழ் புலராமே
விம்மிப் பொருமி விழுந்துஅழு தலறிஉன்
மென்குரல் கம்மாமே
கரைவுறும் அஞ்சன நுண்துளி சிந்திக்
கண்மலர் சிவவாமே
கலுழ்கலு ழிப்புனலருவி படிந்துடல்
கருவடிவு உண்ணாமே
உருவ மணிச்சிறு தொட்டில் உதைந்துநின்
ஒண்பதம் நோவாமே
ஒருதாளுந்தி எழுந்திரு கையும்
ஒருங்கு பதித்துநிமிர்ந்
தருள்பொழி திருமுகம் அசைய அசைந்தினிது
ஆடுக செங்கீரை
ஆதி வயித்திய நாத புரிக்குகன்
ஆடுக செங்கீரை' (367)

முத்துக்குமார சுவாமி ஆண் குழந்தை ஆதலின் 'விம்மிப் பொருமி விழுந்து அழுது அலறி' என்றும், 'உருவ மணிச்சிறு தொட்டில் உதைந்து' என்றும் இங்கே வன்மைக் குறிப்பு விளங்கச் சுவாமிகள் பாடியுள்ள திறம் அறியத்தக்கது. மேலும், 'ஒருதாள் உந்தி எழுந்து, இருகையும் ஒருங்கு பதித்து நிமிர்ந்து, அருள்பொழி திருமுகம் அசைய அசைந்து இனிது ஆடுக' என்னும் அடிகளில் முத்துக்குமார சுவாமி செங்கீரை ஆடுதலை அழகிய சொல்லோவியமாகப் படைத்துள்ளார் சுவாமிகள். இங்ஙனம் இன்னோசையால் பயில்வார் நெஞ்சைக் கொள்ளை கொள்ளுவதில் மோனையைப் போல் முன்னிற்கின்றன சுவாமிகளின் பாடல்கள்.

**'ஆழம் உடைத்துஆதல்'**

ஒரு கலைப்படைப்பு எளிமையாக இருந்தால்மட்டும் போதாது; ஒவ்வொரு வாசிப்பின் போதும் ஆழ்ந்த, நுண்ணிய, புதிய கருத்துக்களைப் புலப்படுத்துவதாகவும் விளங்குதல் வேண்டும். அப்போதுதான் அந்தக் கலைப்படைப்பைத் தரமும் திறமும் வாய்ந்ததாக அறிஞர் உலகம் மதித்துப் போற்றும். வள்ளுவர் பெருமானும், ''பழகப் பழக நற்பண்பு உடையவரின் நட்பு இன்பம் தருதல், நூலின் நற்பொருள் கற்கக் கற்க மேன்மேலும் இன்பம் தருதலைப் போன்றதாகும்'' என 'நட்பு' அதிகாரத்தில் உவமை வடிவில் இக்கருத்தினை வெளியிடுவார்.

'நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு' *(783)*

என்பது அவர் வாக்கு.

குமரகுருபர சுவாமிகளின் வாக்கில் அவரது ஆழமான சிந்தனைத் திறன் அழுத்தமாக வெளிப்பட்டுள்ள ஓர் இடத்தினைக் காண்போம். 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் ஒரு பாடலில், இல்லறம், துறவறம் என்னும் இரண்டன் இலக்கணங்களையும் சுவாமிகள் அழுத்தமாகவும் ஆழமாகவும் எடுத்துரைத்துள்ளார்.

''நல்ல நூல்களைக் கற்று அவற்றின் வழி நின்று, கற்புடைய மனைவியோடு மகப்பேற்றை விரும்பி நன்னாளில் இன்பம் துய்த்து, அன்பும் அருளும் உடையவனாகி இன்சொற் கூறி விருந்தினரை உபசரித்து அருந்தவத்தினரைப் பாதுகாத்து, பிரமம், தெய்வம், பூதம், பிதிர், மானிடம் என்னும் ஐவகை வேள்விகளை ஆற்றிப் பிற நல்ல அறங்களை நிறைவேற்றிப் புகழ் பூண்டு,

பிறன்மனையை நயவாமல் வாழ்தல் இல்லறம்'' என்பது சுவாமிகள் கூறும் இல்லற இலக்கணம்:

'இல்லறம் துறவறம் எனச்சிறந் தனவே
அந்நிலை இரண்டனுள் முன்னது கிளப்பின்
கற்றநூல் துறைபோய்க் கடிமனைக் கிழவன்
நற்குண நிறைந்த கற்புடை மனைவியொடு
அன்பும் அருளும் தாங்கி இன்சொலின்
விருந்து புறந்தந்து அருந்தவர்ப் பேணி
ஐவகை வேள்வியும் ஆற்றி இவ்வகை
நல்லற நிரப்பிப் பல்புகழ் நிறீஇப்
பிறன்மனை நயவான் அறன்மனை வாழ்க்கைக்கு
வரையா நாளின் மகப்பேறு குறித்துப்
பெருநலம் துய்க்கும் பெற்றித்து அன்றே' *(451: 23-33)*

இனி, துறவறம் என்பதற்குச் சுவாமிகள் கூறும் இலக்கணம் யாது எனக் காண்போம். ''இல்லறம் பூண்டு வாழ்ந்தபின் ஞான சாத்திரங்களைக் கேட்டு மெய்யறிவு வாய்க்கப் பெற்று, பொருளையும் இன்பத்தையும் நீங்கி, அருள், பொறை, ஆற்றல், ஒழுக்கம், வாய்மை, தவம், தூய்மை என்னும் குணங்கள் பொருந்தி, ஓரறிவுயிர்க்கு வரும் துன்பத்தையும் பாதுகாத்துக் காலால் நடந்து தோலுடுத்து என்பு தோற்றும்படி உடம்பிளைத்து, துன்பங்களுக்கு நடுங்காமல் மலை காடு ஆகியவற்றிற்குச் சென்று சருகையும் நீரையும் காற்றையும் அருந்திப் பனிக்காலத்தில் தண்புனலில் மூழ்கியும் வேனிற் காலத்தில் பஞ்சாக்கினியில் இருந்தும் தவம் புரிந்து ஒழுகுவது துறவறம்'' என்பது சுவாமிகள் கூறும் துறவற இலக்கணம்:

'மற்றையது கிளப்பின் மனையற நிரப்பி
முற்றுணர் கேள்வியின் முதுக்குறைவு எய்திப்
பொருளும் இன்பமும் ஒரீஇ அருளொடு
பொறையும் ஆற்றலும் நிறைபே ரொழுக்கமும்
வாய்மையும் தவமும் தூய்மையும் தழீஇ
ஓரறி வுயிர்க்கும் உறுதுயர் ஓம்பிக்
காலோய் நடைய னாகித் தோலுடுத்து
என்பெழு மியாக்கையன் துன்புறத் துளங்காது
வரையும் கானும் எய்திச் சருகொடு

கானீர் அருந்திக் கடும்பனிக் காலத்து
மாநீர் அழுவத்து அழுங்கி வேனிலில்
ஐவகை அழலின்மெய் வருந்த வருந்தி
இவ்வகை ஒழுகும் இயல்பிற் றன்றே' (451: 34-46)

சுவாமிகளின் சொல் தேர்வில்தான் எத்துணை அழுத்தம்! ஆழம்! ஒற்றைச் சொல்லிலேயே உணர்த்த வேண்டும் என்றால் 'துய்ப்பது' இல்லறம்; 'ஒழுகுவது' துறவறம். இங்ஙனம் அருமையும் ஆழமும் பொருந்திய கருத்துக்கள் சுவாமிகளின் வாக்கில் பரக்கக் காணப்படுகின்றன.

## 'முறையின் வைப்பு'

ஒரு சிந்தனையை அல்லது செய்தியைக் காரண காரிய முறைப்படி அமைத்துச் சொல்லும்போதுதான் அச்சிந்தனை அல்லது செய்தி அனைவருக்கும் எளிதில் சென்று சேரும். 'ஆருயிர் முறை வழிப்படூஉம் என்பது திறவோர் காட்சியில் தெளிந்தனம்' என்பதுபோல், 'ஓர் அருங்கருத்து முறைவழிப் படூஉம் என்பது திறவோர் சொல்லாட்சியில் தெளிந்தனம்' என நாம் அறுதியிட்டு உரைக்கலாம். உலக நடைமுறையைக் கொண்டு பிறிதொரு கோணத்தில் இக்கருத்தினை நாம் விளக்கலாம். 'நிகழ்ச்சி நிரலி'லில் கண்டவாறு இறைவணக்கம் முதல் நாட்டுப்பண் வரை உள்ள நிகழ்ச்சிகள் யாவும் ஒன்றன்பின் ஒன்றாக, வரிசையாக நடைபெற்றால்தான் ஒரு விழா சிறப்பாக அமையும்; அங்ஙனம் இன்றிக் 'கண்டவாறு' - மனம் போனபடி யெல்லாம் - நிகழ்ச்சிகளில் ஒழுங்கின்றி நடைபெற்றன என்றால், எந்த விழாவும் சிறப்பாக அமையாது; எவ்வளவு செலவழித்து நடத்தினாலும் செம்மையாக இருக்காது. 'காமா சோமா' என்றுதான் ஆகும்; 'கன்னா பின்னா' என்றுதான் போகும்.

திருக்குறள் 'சொல்வன்மை' அதிகாரத்தில் வரும் ஓர் இன்றியமையாத கருத்து இங்கே ஆழ்ந்து சிந்திக்கத் தக்கதாகும். ''கருத்துக்களை ஒழுங்காகக் கோத்து இனிமையாகச் சொல்ல வல்லவரைப் பெற்றால், உலகம் விரைந்து அவருடைய ஏவலைக் கேட்கும்'' எனத் தெள்ளத் தெளிவாகக் கூறுகின்றார் வள்ளுவர்.

'விரைந்து தொழில்கேட்கும் ஞாலம் நிரந்துஇனிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்' (648)

என்பது அவர் குறள். இக்குறட்பாவுக்கு எழுதிய உரை விளக்கத்தில், ''இங்ஙனம் நிரந்தினிது சொல்லுதல் வல்லான் நூறாயிரவருள்

ஒருவன்'' என்ற அரிய வடமொழிக் கருத்தை மேற்கோள் காட்டுகின்றார் பரிமேலழகர்.

குமரகுருபர சுவாமிகள் கல்வியைப்பற்றி 'நீதிநெறி விளக்க'த்தில் கூறியுள்ள செய்திகளை இவ்வகையில் எண்ணிப் பார்க்கலாம். 'தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்' என்ற பாடலில், கல்வி இன்பத்திற்கும் காம இன்பத்திற்கும் உள்ள வேற்றுமையைச் சுவாமிகள் அழகுற எடுத்துரைக்கின்றார். கல்வி தொடங்கும்போது துன்பமாகிப் பிறகு இன்பத்தைப் பயக்கும்; அறியாமையை நீக்கி அறிவை விரிவுபடுத்தும். காமமோ, தொடக்கத்தில் இன்பம் தருவதுபோலத் தோன்றி முடிவில் பெருந்துயர் விளைக்கும். ஆதலின், காமத்தில் பெறும் இன்பத்தினும் கல்வியில் பெறும் இன்பமே சாலச் சிறந்தது ஆகும்.

'தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்கும்
மடம்கொன்று அறிவுஅகற்றும் கல்வி - நெடுங்காமம்
முற்பயக்கும் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது' (208)

கல்வியின் உயர்வையும் காமத்தின் இழிவையும் இங்கே காரண காரிய முறையில் அழகுறப் புலப்படுத்தியுள்ளார் சுவாமிகள்.

இனி, 'கல்வி, கவித்துவம், பாடங்கூறும் வன்மை, சொல்வன்மை என்பன ஒன்றைக் காட்டிலும் ஒன்று சிறப்புடையன' என்னும் கருத்தைச் சுவாமிகள் எங்ஙனம் வெளிப்படுத்தியுள்ளார் எனக் காண்போம். அவரது நோக்கில் கல்வி என்பது கற்புடைய மனைவியை ஒப்பது; அம்மனைவியினால் பெறும் செல்வப்புதல்வனே இனிய கவிதை ஆகும்; தாம் கற்றறிந்தவற்றைப் பிறருக்கு உரைக்கும் சொல்வன்மை செல்வம் ஆகும். அந்தச் செல்வத்தால் அறிஞர்கள் நிறைந்த மாட்சிமிக்க அவையை மகிழ்வுறும்படி செய்யும் இயல்புடையோர் சிலரே ஆவர். நறுக்குத் தறித்தாற் போன்ற இந்த நான்கு செய்திகளை நிரந்தினிது கூறும் சுவாமிகளின் வாக்கு வருமாறு:

'கல்வியே கற்புடைப் பெண்டிர்அப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே ஈர்ங்கவியாச் - சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்தும்
செல்வமும் உண்டு சிலர்க்கு' (209)

'முறைவைப்பு' என்னும் இவ்வழகினை 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்', 'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்' என்றாற் போல் நூல் முழுவதிலும் பொருத்திப் பார்த்தும் ஆராயலாம்; 'நீதிநெறி விளக்க'ப் பாடல் ஒன்றில் கருத்துக்களின் வைப்புமுறை,

பொருள் புலப்பாட்டிற்குப் பயன்படும் பான்மை பற்றியும் ஆராயலாம். மேனாட்டார் இதனை 'இயைபுடைமை' (Sequence) என்பர்.

**'உலகம் மலையாமை'**

உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறுகொள்ளாத வகையில் ஒரு கவிஞர் தம் படைப்பில் கருத்துக்களைப் புலப்படுத்த வேண்டும். வள்ளுவர் மொழியில் சொல்ல வேண்டு மென்றால், 'கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப' (சொல்வன்மை, 643) மொழியும் திறம் கைவரப்பெற்றவராக அவர் விளங்குதல் வேண்டும். இங்கே 'கேளாரும் வேட்ப மொழிவது' என்பதற்குக் 'கேளாதவரையும் கேட்கத் தூண்டுவது' என்ற வழக்கமான பொருளைக் கொளளாமல், 'இதுவரை நம் கருத்துடன் முரண்பட்டு, நம் கருத்தைக் கேளாமல், மாற்றுக் கருத்துக் கொண்டிருந்தோரும் மதித்துக் கேட்கும் வண்ணம் - காது கொடுத்துக் கேட்க வேண்டும் என்ற எண்ணத்தை அவர்கள் மனத்திலும் தோற்றுவிக்கும் வண்ணம் - கூறுவது' என்று புதியதொரு பொருளையும் கொள்ளலாம். இவ்வகையான கருத்துப் புலப்பாட்டுத் திறத்திற்குக் காட்டாகக் குமரகுருபர சுவாமிகளின் 'பண்டார மும்மணிக் கோவை'யில் இருந்து ஒரு பகுதியைக் காணலாம். இந்நூலில் சுவாமிகள் தம் ஆசிரியராகிய மாசிலாமணி தேசிகருடைய பெருமைகளைப் பல வகைகளில் பாராட்டிப் போற்றுகின்றார்; ஆசிரியரின் பெயர் தொடர்பாகவே பல செய்திகளைக் கற்பனை நயத்துடன் கூறுகின்றார். ஆசிரியராகிய மாசிலாமணிக்கும் பிற மணிகளுக்கும் இன்ன இன்ன வேறுபாடுகள் உண்டு என்று பயில்வார் நெஞ்சை அள்ளும் பாங்கில் பல கருத்துக்களை எடுத்து மொழிகின்றார்.

கடலில் பெறப்பட்ட சிந்தாமணி கருதியவற்றையே தரும்; இம்மணி (ஆசிரியராகிய மாசிலாமணி) ஓர் அருட்கடலையே தான் பெற்றுக் கருத்துக்கு எட்டாத பேரின்பத்தை நல்கும் (571). உலகில் உள்ள பிற மணிகளை அரிதின் முயன்று வருந்திப் பெறவேண்டும்; இந்த மணியைச் சொல்லறச் செயல்மாண்டு சும்மா இருந்தாரே பெற்றார். இக்கருத்தினை வெளிப்படுத்தும் பாடல் இதோ:

'எம்ஆ ருயிராம் எழில்மாசி லாமணியை
அம்மா பெறுதற்கு அரிதன்றோ? - சும்மா
இருந்தாரே பெற்றார்மற்று எவ்வுலகில் யாரே
வருந்தாது பெற்றார் மணி?' (573)

பிற மணிகள் தம்மைக் கைக்கொண்டவர்களுடைய பொருளாகும்; இதுவோ கொண்டவரைத் தான் கொண்டு ஆளும்; கொள்வோம் என்று எண்ணிப் பார்க்கு முன்னே ஆட்கொள்ளும் (574). அவை பல பஞ்சினால் ஆகிய நூல்களில் கோக்கப்படுவன; இது தமிழ் நூலில் கோக்கப்படுவது (579). மணி மந்திர மருந்து மூன்றினாலும் தீராத பிறவி நோயை இந்த மணி ஒன்றே தீர்த்துவிடும் (586). உலகத்தில் உள்ள மற்ற மணிகள் பொன் மாத்திரம் கொடுத்துக் கொள்வன; இந்த மாசிலாமணியோ உடல் உயிர் பொருள் மூன்றையும் கொடுத்துக் கொள்வது (594). ஞானாசிரியருக்கு இம்மூன்றையும் அர்ப்பணம் செய்யும் மரபை நினைந்து இங்ஙனம் கூறியுள்ளார் சுவாமிகள்.

உலகம் மலைக்கும்படியும் திகைக்கும்படியும் எழுதாமல் - அதாவது உலகியலுக்கு மாறுபட எழுதாமல் - உலகம் உவந்து ஏற்கும் வண்ணமும் போற்றும்படியும் தம் கருத்துக்களை எழுதிச் செல்கின்றார் குமரகுருபர சுவாமிகள்.

'விழுமியது பயத்தல்'

'யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்லநின்பால்
அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருள்இணர்க் கடம்பின் ஒலிதா ரோயே' (5)

என்பது பரிபாடலில் கடுவன் இளவெயினனார் செவ்வேளிடம் விடுக்கும் வேண்டுகோள். இவ்வேண்டுகோளின் ஊடே புலனாகும் புலவரின் உள்ளத்து உயர்வும் ஒழுக்கத்தின் விழுப்பமும் மலையினும் மாணப் பெரியவை. கடுவன் இளவெயினனாரைப் போலவே குமரகுருபர சுவாமிகளும் சகலகலாவல்லியிடம் உயரிய வேண்டுகோள் ஒன்றினை விடுக்கின்றார்:

'வெண்டா மரைக்கன்றி நின்பதந்
தாங்க என் வெள்ளையுள்ளத்
தண்டா மரைக்குத் தகாதுகொலோ?' (700)

'வெண்டாமரையில் நீ எழுந்தருளி யிருத்தல் போல, அடியேனது வெள்ளையுள்ளத்திலும் எழுந்தருளுதல் தக்கதே' என்று கலைமகளிடம் சுவாமிகள் பணிவுடன் கூறிக்கொள்கின்றார்.

'பல்லுயிர்த் தொகுதியும் பவக்கடல் அழுந்த
அல்லல் செய்யும் அவாஎனப் படும்அவ்
வறுமையி னின்றும் வாங்கி
அறிவின் செல்வம் அளித்துஅருள் எனக்கே' (475: 35-39)

எனச் 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் சுவாமிகள் விடுக்கும் வேண்டுகோளும் இங்கே நினைவுகூரத்தக்கது ஆகும்.

சத்தும் சாரமும் சுவையும் சமமாகக் கலந்து விளங்கும் சரிவிகித உணவு போல், விழுமிய பொருளை (content) - விழுமிய வடிவில் (form) - விழுமிய முறையில் (technique) எழுதிச் செல்வது ஒரு விழுமிய கவிஞரின் தலையாய பண்பாகும். ''சிலர் அதன் செல்வி தலைப்படுவார்.'' அங்ஙனம் தலைப்படும் மிகச் சில கவிஞருள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர் குமரகுருபர சுவாமிகள். பதச் சோறாக, 'நீதிநெறி விளக்க'த்தில் ஒரு பாடலில் மக்களாகப் பிறந்தார் யாவருக்கும் சுவாமிகள் கூறும் அறிவுரை யாது எனக் காண்போம்:

'பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதுஒன்று உண்டு - பிறர்பிறர்
சீரெல்லாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல்.' (225)

பிறரால் பெருமதிப்புடனும் மிகுந்த மரியாதையுடனும் சுட்டப்பட வேண்டும் என விரும்புகின்றவன் எவ்விடத்தும், எக்காலத்தும் மறவாமல் மனத்துட் கொண்டு அயர்வின்றிச் செய்யத்தக்க செயல் ஒன்று உண்டு. விளையும் பயன் பெரிது ஆதலால், அச்செயலை 'நோற்றல்' என்ற விழுமிய சொல்லால் சுட்டுகின்றார் சுவாமிகள். பிறர்பிறர் சீரெல்லாம் பலர் அறியச் சொல்லி, அவர்தம் சிறுமையெல்லாம் தாம் அறிந்திருந்தாலும் அவற்றை வெளியிடாமல் அடக்கி, யாவரிடமும் வணக்கத்தைப் புலப்படுத்தும் சொற்களைப் பேசி வாழ்வதே சுவாமிகளின் நோக்கில் 'நோற்றல்' ஆகும். 'நோற்பது ஒன்று உண்டு; அது யாவரிடத்தும் தாழ்ச்சி சொலல்' என்பது சுவாமிகள் வலியுறுத்தும் விழுமிய வாழ்க்கை நெறி. மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதற்கான - வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கு உரிய - விழுமிய நெறிகளின் களஞ்சியமே குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தங்கள் எனலாம்.

## 'விளங்கு உதாரணத்தது ஆகுதல்'

உவமை என்பது ஒரு பொருளைப் பிறிதொரு பொருளுக்கு ஒப்பிட்டுக் கூறுதல்; அதாவது, அறிந்த ஒன்றனைக் கூறி அறியாத ஒன்றனை விளக்குவது உவமை. இளம்பூரணர் 'புலன் அல்லாதன

புலனாக்குதலும் அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தலும்' என உவமையின் பயன்கள் இரண்டு எனக் குறிப்பிடுவார். பேராசிரியர் மெய்ப்பாடு போல உவமத்தானும் 'பொருள் புல்பாடே' கூறப்படுகிறது என்பார். இன்றைய திறனாய்வாளரும் ''உவமையற்ற கவிதை உப்பற்ற கறிக்குச் சமம். கவிஞன் கையாளும் உவமையே அவன் கற்பனை வளத்துக்குச் சாட்சி கூறும். கவிதைக்கு வலக்கை போல் பணிபுரிவது உவமையே'' (க. வீரகத்தி, கடலும் படகும், ப. 30) என உவமையின் சிறப்பினைச் சுட்டுக்காட்டுவர்.

அழகிய உவமைகளைக் கையாண்டு கருத்துக்களைப் புலப்படுத்துவது என்பது எல்லாக் கவிஞர்களிடமும் இயல்பாகக் காணப்படுகின்ற ஒரு போக்கே ஆகும். ஆயின், அனைவருக்கும் எளிதில் விளங்கக்கூடிய உவமைகளைக் கையாளுவது என்பது ஓர் அரிய முயற்சியே ஆகும். ஒரு சிறந்த கவிஞர் 'கற்றார்க்கும் கல்லார்க்கும் களிப்பருளும்' வகையில் - படிப்பறிவில்லாப் பாமரர் முதல் மெத்தப் படித்தவர் வரை அனைவரும் விரும்பிப் பயிலும் வண்ணம் - 'விளங்கு உதாரணங்க'ளைக் கையாண்டு தம் கவிதையைப் படைப்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பார். குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தங்களில் அணி வகுத்து வரும் உதாரணங்கள் அவர்தம் கருத்துக்களை 'விளக்கும் உதாரணங்கள்' மட்டும் அல்ல; அனைவருக்கும் எளிதில் 'விளங்கும் உதாரணங்க'ளும் ஆகும். இவ்வகையில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க சில உதாரணங்களை இங்கே காண்போம்.

சுவாமிகள் சில இடங்களில் ஒரு பொருளுக்கு ஒரு பொருளை உவமையாகக் கூறுகின்றார்: ''சோர்வுற்ற சமயம் பார்த்துப் பிறரை வஞ்சித்து எளியாரது உடைமையைக் கவர்ந்து இன்புறுவாருடைய செல்வம் முதற்கண் மகளிர் முலை போலப் பெருத்தாலும், பின்னர் அவர்களது இடை போலத் தேய்ந்து அழிந்துவிடும்.'' இவ்வுவமையைத் தன்னகத்தே கொண்ட 'நீதிநெறி விளக்க'ப் பாடல் வருமாறு:

'இடைதெரிந்து அச்சுறுத்து வஞ்சித்து எளியார்
உடைமைகொண்டு ஏமாப்பார் செல்வம் - மடநல்லார்
பொம்மல் முலைபோல் பருத்திடினும் மற்றவர்
நுண்ணிடைபோல் தேய்ந்து விடும்.' (268)

'நீதிநெறி விளக்க'த்தில் பிறிதொரு பாடலில் தலையாயார், இடையாயார், கடையாயார் ஆகிய முத்திறத்தினருடைய

செல்வங்களுக்குச் சுவாமிகள், பொதுமகள், குலமகள், கைம்பெண் என்னும் மூவகை மகளிரது நலத்தை உவமைகளாகக் காட்டியுள்ளார். இங்கே அவர் ஓரினப் பொருள்களையே உவமைகளாகக் கையாண்டிருப்பது அறியத்தக்கது:

'பொதுமகளே போல்வ தலையாயார் செல்வம்
குலமகளே ஏனையோர் செல்வம் - கலனழிந்த
கைம்மையார் பெண்மை நலம்போல் கடையாயார்
செல்வம் பயன்படுவது இல்.' (271)

''தலையாயார் செல்வம் பொதுமகளே போல்வ; பலர்க்கும் பயன்படுதல்பற்றிப் பொதுமகளை உவமையாகக் கூறினார்... தமக்குமட்டும் பயன்படுதல் பற்றி இடையாயார் செல்வத்திற்குக் குலமகளை உவமையாக்கினார்... ஒருவருக்கும் பயன்படாமை பற்றிக் கடையாயார் செல்வத்திற்குக் கைம்பெண்டிர் நலம் உவமையாயிற்று'' (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, ப. 230) என்னும் ஐயரவர்களின் உரை விளக்கம் இங்கே மனங்கொளத்தக்கது ஆகும்.

அருளியல் சார்ந்த ஓர் அரிய பொருளை, உலகியல் சார்ந்த ஓர் எளிய உவமையைக் கொண்டு விளக்கும் போக்கும் குமரகுருபர சுவாமிகளிடம் காணப்படுகின்றது. சான்றாக, 'கல்வியில் சிறந்த காதலர்க்குக் கற்பில் சிறந்த காதலி பெற்றுக் கொடுத்த முதல் மகன் போல, அகப்பற்று புறப்பற்றுக்களை ஒருங்கே துறந்தார்க்கு மெய்ஞ்ஞானத்தில் தோன்றும் இன்பமே உயர்ந்த இன்பமாம். மற்றைய எல்லாம் துன்பங்களின் வேறல்லவாம்' என்னும் அழகிய உவமை அமைந்த 'நீதிநெறி விளக்க'ப் பாடலை இங்கே சுட்டிக்காட்டலாம்.

'கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல் - முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்வில் தோன்றுவதே இன்பம்
இறந்தவெலாம் துன்பமலாது இல்.' (305)

கல்வித் துறையிலே கரை கண்ட ஒரு காதலன்; அவனது வாழ்க்கைத் துணைவி கற்புத் திண்மை வாய்ந்தவள்; இல்லற வாழ்வின் பயனாய் - பரிசாய் - இருவருக்கும் பிறந்தது அழகிய ஓர் ஆண்குழந்தை. தலைமகன் இவனால் பெற்றோர்க்குக் கிடைக்கும் இன்பம், முற்றத் துறந்த முனிவர்களுக்கு மெய்யுணர்வில் தோன்றும் இன்பத்திற்கு இணையானது என்கிறார் சுவாமிகள். எல்லாம் கடந்த நிலையில் -

இரண்டறக் கலந்த நிலையில் - கிடைக்கும் இன்பம் ஒன்றே என்பதை உணர்த்தும் அற்புதமான உவமை இது!

இங்ஙனம், நன்னூலார் குறிப்பிடும் சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல், நவின்றோர்க்கு இனிமை, நன்மொழி புணர்த்தல், ஓசை உடைமை, ஆழம் உடைத்தாதல், முறையின் வைப்பு, உலகம் மலையாமை, விழுமியது பயத்தல், விளங்கு உதாரணத்தது ஆகுதல் என்னும் பத்து வகை அழகுகளையும் பாங்குறப் பெற்றுத் தமிழ் இலக்கிய உலகில் பீடு நடை போட்டு நிற்கின்றது குமரகுருபரரின் 'கொழிதமிழ்.' தமிழுக்கு எத்தனையோ அடைமொழிகளை வழங்கினாலும், சுவாமிகள் தம் கவிதைக்குச் சூட்டிக் கொண்டிருப்பது 'கொழிதமிழ்க் கவி' என்னும் அடைமொழியே ஆகும்.

'சிறுகட் பெருஞ்செவிக் குஞ்சரக் கன்றின்இரு
செஞ்சரணை அஞ்சலிப்பாம்...
குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவும்என்
கொழிதமிழ்க் கவிதழையவே' (349)

என்பது 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமி'ழில் சுவாமிகள் பாடியுள்ள விநாயகக் கடவுள் துதி. சுருங்கக்கூறின், குமரகுருபரரின் தமிழ் பல்வகை அழகுகளும், சுவைகளும் திறங்களும் நயங்களும் ததும்பி நிற்கும் 'கொழிதமிழ்' எனலாம்.



# 4. மொழிக் கொள்கை

''வடக்கையும் தெற்கையும் இணைத்து, தமிழையும் இந்தியையும் இணைத்து, அருளையும் பொருளையும் இணைத்து, துறவறத்தையும் அறத்தையும் இணைத்து வாழ்ந்தவர் குமரகுருபரர்.''

- கி.வா. ஜகந்நாதன்[1]

குமரகுருபரர் சுவாமிகளின் வாழ்வையும் வாக்கையும் கூர்ந்து நோக்குவார்க்கு ஓர் அரிய உண்மை புலனாகும்; நிலம், மொழி, உணர்வு, வாழ்வு என எந்த நிலையிலும் பிரிந்து நிற்பதைச் சுவாமிகள் ஒருபோதும் விரும்பியதே இல்லை; 'ஒன்றாகக் காண்பதே காட்சி' என்றபடி, அவர் தெற்கையும் வடக்கையும் இணைத்தார்; தீந்தமிழையும் வடமொழியையும் இணைத்தார்; அருளையும் பொருளையும் இணைத்தார்; துறவறத்தையும் இல்லறத்தையும் இணைத்தார். இந்த இணைப்பே - ஒருமைப்பாடே - ஒற்றுமைப் பண்பே - குமரகுருபர சுவாமிகளின் தாரக மந்திரமாக இருந்தது; அவரது வாழ்வையும் வாக்கையும் இயக்கும் தனிப்பெரும் பண்பாகவும் அமைந்தது. இதன் வெளிப்பாடே அவரது மொழிக் கொள்கையிலும் சிறப்பாகவும் முனைப்பாகவும் இடம்பெற்றிருக்கக் காண்கிறோம்.

## பழுத்த தமிழ்ப் புலமை பாலித்து அருளுமாறு வேண்டுதல்

தமிழின்மீது குமரகுருபர சுவாமிகளுக்கு இருந்த அன்பு அளவிடற்கரியது. சங்கத் தமிழால் சுட்ட வேண்டும் என்றால் அது, 'நிலத்தினும் பெரிது; வானினும் உயர்ந்தது; கடலினும் ஆழம்

1. கந்தர் கலிவெண்பா விளக்கம், ப. 17.

மிக்கது.' இறைவனிடம் அன்பையும், அன்பர் தொடர்பையும், துறவுள்ளத்தையும் வேண்டும் சுவாமிகள், உலகியற் பொருள்களில் எதனையும் கேட்கவில்லை. ஆயினும், முத்தமிழ்க் கல்வியும் நாற்கவியும் பாடும் கவித்துவமும் நாவன்மையும் அட்டாவதானமும் பெற வேண்டும் என்ற வேட்கைமட்டும் அவரை விடாமல் சிக்கெனப் பிடித்துக்கொண்டது. இவ்வேட்கையின் வெளிப்பாட்டினை அவரது வாக்கில் பரக்கக் காணமுடிகின்றது.

இளமையில் முருகப்பெருமான் அருளால் பேசும் திறம் பெற்றதும் குமரகுருபரர் 'பூமேவு செங்கமல' என்று தொடங்கிப் பாடிய முதல் பிரபந்தம் 'கந்தர் கலிவெண்பா.'

'ஆமைக் குளஉறுப் பென்னப் பொறிகள் அடங்கநின்று,
மாமைப் புயல்வண்ண மாலென்ன வார்புவி வாழ்வுகண்டு,
தீமைக்குச் சத்துரு ஆவார் பராவிய செந்திலில்ஓர்
ஊமைக் குழந்தை அருளாற் பயின்றிட்டது, ஒண்தமிழே'

(தமிழலங்காரம், *64*)

என இந்நிகழ்வைப் புனைவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்.

'கந்தர் கலிவெண்பா'வின் முடிவில் குமரகுருபர சுவாமிகள் முருகக் கடவுளிடம் விடுக்கும் வேண்டுகோள் இங்கே நினைவுகூரத்தக்கது:

'ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமும் சீர்ப்
பேசும்இயல் பல்காப் பியத்தொகையும் - ஓசை

எழுத்துமுத லாம்ஐந்து இலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்து... அருள்'

(கண்ணிகள், *118-119; 122*)

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞரான பாரதியார் தம் 'பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்திட வேண்டும்' எனப் பராசக்தியிடம் வேண்டினார்; பாரதியாரின் முன்னவரான குமரகுருபரரோ, தமக்குப் 'பழுத்த தமிழ்ப் புலமை பாலித்து அருளுமாறு' முருகப்பெருமானிடம் வேண்டுகின்றார். வாழையடி வாழையாக வந்த தமிழ்ப்புலவர் பெருமக்களுள் காசி நகர்வரை சென்றவர்கள் குமரகுருபரர், பாரதியார் என்னும் இருவர் மட்டுமே என்பது இங்கே சிறப்பாக நினைவுகூரத்தக்க செய்தி ஆகும்.

துறவு பூண்டபின் குமரகுருபர சுவாமிகள் பாடியது 'சகலகலாவல்லி மாலை.' இதில் சுவாமிகள் கலைமகளிடம் தமக்கு அருளுமாறு வேண்டும் சில வேண்டுகோள்கள் இதோ:



'நாடும் பொருட்சுவை சொற்சுவை தோய்தர நாற்கவியும்
பாடும் பணியிற் பணித்தருள் வாய்' *(701)*

'பண்ணும் பரதமும் கல்வியும் தீஞ்சொற் பனுவலும் யான்
எண்ணும் பொழுது எய்தநல் காய்' *(705)*

'பாட்டும் பொருளும் பொருளாற் பொருந்தும் பயனும்என்பால்
கூட்டும் படிநின் கடைக்கண் நல்காய்' *(706)*

'சொல்விற் பனமும் அவதானமும் கவி சொல்லவல்ல
நல்வித்தை யும்தந்து அடிமை கொள்வாய்' *(707)*

குமரகுருபர சுவாமிகள் தம் வாழ்வில் பொன், பொருள், போகம் முதலான உலகியல் இன்பங்களுக்கு எள்ளளவும் முதன்மை தரவில்லை; அவற்றைத் தந்தருளுமாறு கடவுளரிடம் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க வேண்டவும் இல்லை. மாறாக, கந்தவேள் ஆயினும் சரி, கலைமகள் ஆயினும் சரி சுவாமிகள் தந்து அருளுமாறு வேண்டும் வேண்டுகோள்கள் அவரது ஆழ்ந்தகன்ற தமிழ் உள்ளத்தையும் பரந்து விரிந்த அருள் உணர்வையும் புலப்படுத்த வல்லனவாய் விளங்குகின்றன. அவ்வேண்டுகோள்கள் வருமாறு:

1. ஆசுகவி, மதுர கவி, சித்திர கவி, வித்தார கவி என்னும் நாற்கவியும் - ஒரே சமயத்தில் எட்டு வகை வினாக்களுக்கு விடையளிக்கும் அட்டாவதானமும் - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இல்கணமும் - தோய்ந்து பழுத்த தமிழ்ப் புலமையும் பாலித்து அருளல் வேண்டும்.
2. பொருட்சுவை, சொற்சுவை பொருந்த வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா, கலிப்பா என்னும் நான்கு கவிகளையும் பாடுகின்ற பணிவிடையில் பணித்தருளல் வேண்டும்.
3. பண் (இசைத்தமிழ்), பரதம் (நாடகத்தமிழ்), கல்வி (நூலறிவு), தீஞ்சொற் பனுவல் (இனிய சொல்லமைதியை உடைய கவி) ஆகிய நான்கும் எண்ணும்பொழுது எளிதில் எய்தியிடல் வேண்டும்.
4. பாட்டும் பொருளும் பொருளால் பொருந்தும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு வகைப் பயனும் கூட்டப்பெறல் வேண்டும்.
5. சொல் விற்பனம் என்னும் நாவன்மையும் ஒரே சமயத்தில் பல காரியங்களைக் கவனிக்கும் அவதானமும் கவி சொல்ல வல்ல நல்வித்தையாம் கவித்துவமும் தந்து அடிமை கொள்ளல் வேண்டும்.

'ஆழ்ந்திருக்கும் கவியுளம்' காட்டும் அற்புதமான வேண்டுகோள்கள் இவை. இவை எல்லாவற்றையும் 'பழுத்த தமிழ்ப் புலமை' என்ற ஒன்றிலேயே அடக்கிவிடலாம்.

## தமிழ்ப் பாமாலை கொண்டு இறைவனையும் ஞானாசிரியரையும் போற்றல்

இறைவன் திருவடிக்குப் புரியும் பலவிதத் தொண்டுகளுள் சொன்மாலை சூட்டுதலும் ஒன்று. குமரகுருபர சுவாமிகளின் கருத்தின்படி, காலை அரும்பி, பகல் எல்லாம் போதாகி, மாலை மலர்ந்து, மறுநாள் வாடும் மலர் மாலையினும், என்றென்றும் வாடாத பாமாலையே இறைவனுக்கு மிகவும் விருப்பமானது ஆகும். இதனை,

> 'கமலேசர்க்குச் சாத்துகின்ற ஒண்மலர் சொன்மலர்க்கு ஒவ்வாது
> போலும்' (338)

எனத் 'திருவாரூர் நான்மணிமாலை'யில் வரும் சுவாமிகளின்

வாக்கால் உணரலாம். இங்கே 'ஒண்மலர்' என்பது 'ஒள்ளிய மலர்' என்றும், 'சொன்மலர்' என்பது 'தோத்திரமாகிய மலர்' என்றும் பொருள்படும். மேலும், சுந்தரமூர்த்தி நாயனார் பண்மலர் சாத்தி - அதாவது பண்ணிறைந்த திருப்பதிகங்களாகிய மலர்களைச் சாத்தி - இறைவனை ஏவல் கொண்டார்; இறைவனைத் தம் பொருட்டுப் பரவையிடம் தூது போகச் செய்தார். தூது சென்றவை இறைவனின் திருவடிகளே ஆதலின் இங்கே அவற்றைப் பணிகொண்டதாகக் குறிப்பிடுகிறார் சுவாமிகள். திருமால் கண்மலர் சாத்தியும் காண்பதற்கு அரிதாகிய இறைவனின் திருவடியைச் சுந்தரர் சொன்மலர் சாத்திப் பணிகொண்டார். 'கண்மலர்' என்ற தொடரைக் 'கண்ணாகிய மலர்' என்றும், 'கள்ளையுடைய மலர்' என்றும் இரு பொருள் படும்படியாகச் சிலேடை நயத்துடன் கையாண்டுள்ளார் சுவாமிகள். சொன்மலரே சிறந்தது என்பதைத் தக்க காரணம் காட்டித் 'திருவாரூர் நான்மணிமாலை'யில் ஒரு பாடலில் அழகுற நிறுவுகின்றார் சுவாமிகள்.

எழுத்து முதலாம் ஐந்து இலக்கணமும் தோய்ந்து பழுத்த தமிழ்ப்புலமை கொண்டு பல்வேறு தெய்வங்களையும் ஞானாசிரியரையும் பலவாறு போற்றிப் பாடித் தம் வாழ்வில் மனநிறைவு பெற்றவர் குமரகுருபர சுவாமிகள். அவரைப் பொறுத்தவரையில், ஞானாசிரியருக்குச் சாத்துவதற்குப் 'பண்டார மும்மணிக்கோவை' என்னும் தமிழ்ப் பாமாலையை இயற்றியது 'சரியை' ஆகும்; அவர் தரிக்கும்படி இப்பாமாலையைச் சாற்றியது 'கிரியை' ஆகும். இதனை,

'விரிக்கும் சரியைஇப் பாமாலை
சேர்த்தது மெய்க்கிரியை
தரிக்கும் படிக்குஇன்று சாற்றியதே' (598)

எனப் 'பண்டார மும்மணிக்கோவை'யில் வரும் பாடற்பகுதியால் உணரலாம். இவ்வாறு கவிதை பாடி இறைவன் திருவருள் பெறுதல் எளிது என்பது குமரகுருபர சுவாமிகளின் கொள்கை. ''எம் கவிதை கொண்டு ஆட்கொண்ட காசிநாதர்'' (634) என்னும் 'காசிக் கலம்பக'ப் பாடலில், அன்பினால் மனமுருகி இயற்றும் கவிதை, இறைவன் திருவருளைக் கூட்டும் கருவி என்பதைச் சுவாமிகள் உய்த்துணர வைத்துள்ளார். இங்ஙனம் தமிழ்ப் பாமாலை கொண்டு இறைவனைப் போற்றும் திருப்பணியைச் சுவாமிகள் குறைவறச் செய்தமையால் அவருக்குச் 'சிந்தையின் நிறைவு' ஏற்பட்டது. அதன் பயனாய்ச் 'செய்வினை முடித்த செம்மல் உள்ள'மோடு,

'வாழிய பெருமநின் தகவே
வாழிஎம் மனனும் மணிநா வும்மே' (206)

என்று தம் மனத்தையும் நாவையும் பாராட்டிக்கொள்கின்றார் சுவாமிகள். 'இறைவா, நின் பெருமையை எம்மனோர் பாடுவது எம் ஆற்றலால் அன்று; நின் தகவினால் அதாவது தகுதியினால். சிறப்பினால் அமைந்தது அது; ஆதலின் நின் தகவு வாழ்க. நின் பெருமையை நினைத்தற்குக் கருவியாகிய எம் மனமும் பாடுதற்குக் கருவியாகிய எம் நாவும் வாழி' என்னும் கூற்று, சுவாமிகளின் அன்பான, எளிய, நிறைவான, பணிவான, பெருமிதமான உள்ளத்தைப் புலப்படுத்துவதாகும். உ.வே. சா. தம் 'ஆராய்ச்சி'யில் குறிப்பிடுவது போல், "இங்ஙனம் தம் மனத்தையும் நாவையும் வாழ்த்திக்கொள்ளும் செயல் இவர் நெஞ்சத்தில் நிரம்பியுள்ள உவகையினால் வந்த பெருமிதத்தைக் காட்டுகின்றது. இராமபிரான் வந்தன னென்ற செய்தியைப் பரதன் கேட்ட காலத்து அவன் செயல்களை வருணிக்க வந்த கம்பர்,

'வேதியர் தமைத்தொழும் வேந்த ரைத்தொழும்
தாதியர் தமைத்தொழும் தன்னைத் தான்றொழும்' (மீட்சிப். 253)

என்று கூறுகின்றார். அவனுடைய உவகை தன்னைத் தான் தொழும் செய்கையில் உச்சநிலை பெற்று நிற்கின்றது. அங்ஙனமே தாம் பெற்ற தமிழ்ப் புலமையை நல்லாற்றினுய்த்துப் பாமாலை சூட்டி நின்றதனாற் பெற்ற உவகை தம் மனத்தையும் நாவையும் வாழ்த்தும் போது உச்சநிலையில் நிற்பதாயிற்று. 'மதுரைக் கலம்பக' இறுதியிலே இவ்வடிகள் அமைந்துள்ளன. அக்கலம்பகமாலை சூட்டி நிறைவேறுஞ் செவ்வியில் அத்தகைய உள்ள நிறைவும் உவகையும் உண்டாதல் இயல்பேயாகும்" (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு. ப. xix)

## தமிழின்பால் நிறைந்த வேட்கையும் நெருங்கிய தொடர்பும் கொண்ட தெய்வங்கள்

குமரகுருபர சுவாமிகள் தமிழினிடத்தே தெய்வத்தன்மையைக் கண்டு போற்றியுள்ளார். அவர் அதனைத் 'தெய்வத் தமிழ்' என இரு இடங்களில் சுட்டியுள்ளார்.

'தெய்வத் தமிழ்க்கூடல் தழையத் தழைத்தவள்' (49)

'தேத்தந்த கொன்றையான் தெய்வத் தமிழ்க்கூடல்' (152)

'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்', 'மதுரைக் கலம்பகம்' ஆகிய

இரு நூல்களிலும் கூடல் நகருடன் சேர்த்தே 'தெய்வத் தமிழ்' என்னும் தொடர்மொழியைக் கையாண்டுள்ளார் சுவாமிகள்.

'தெய்வத் தமிழ்' என்று தமிழைப் பாராட்டுவதோடு நின்றுவிடாமல், சுவாமிகள் தாம் போற்றிப் பரவும் தெய்வங்களை யெல்லாம் தமிழ்த் தொடர்பும் தமிழின்பால் மிகுந்த வேட்கையும் கொண்டவர்களாகக் கூறியுள்ளார். முத்தமிழுக்குச் சிவபெருமானே பயனாக விளங்குகிறார் என்பது சுவாமிகளின் கொள்கை. இதனை அவர் 'மதுரைக் கலம்பக'த்தில் ஒரு பாடலில்,

'பண்முத் தமிழ்க்கொர் பயனே சவுந்தர பாண்டியனே' (149)

எனக் குறிப்பிட்டுள்ளார். மீனாட்சியம்மையை,

'தெளிதமிழ் மதுரையில் வளருமொ ரிளமயில்' (22)

என்றும்,

'தமிழொடு பிறந்துபழ மதுரையில் வளர்ந்தகொடி' (35)

என்றும்,

'தெய்வத் தமிழ்க்கூடல் தழையத் தழைத்தவள்' (49)

என்றும்,

'முதுதமிழ் உததியில் வரும்ஒரு திருமகள்' (53)

என்றும்,

'நறைபழுத்த துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ் சுவை' (62)

என்றும், சுவாமிகள் 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமி'ழில் சிறப்பித்துப் பாடியுள்ளார். தமிழ்க் கடல் ஆகவும், தமிழின் சுவையாகவும் சுவாமிகள் மீனாட்சியம்மையை உருவகம் செய்துள்ளார். முருகக் கடவுளைத் தமிழோடு தொடர்புபடுத்தி 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமி'ழில் மூன்று இடங்களில் சுவாமிகள் பாடியுள்ளார். அவை வருமாறு:

'சங்கத் தமிழின் தலைமைப் புலவா' (375-377)

'தோலாத முத்தமிழ் நாவா' (378)

'இழுமென்மொழித் தெளிதமிழின் வடித்திடு நவரசமே' (439)

இவற்றுள் தலைச்சங்கத்தில் முருகக் கடவுள் இருந்து தமிழாராய்ந்தமையைமட்டும் மூன்றுமுறை சிறப்பாகக் குறிப்பிட்டுள்ளார் சுவாமிகள்.

திருவெஃகாவில் கோயில் கொண்டு எழுந்தருளிய பெருமாள், 'கணிகண்ணன் போகின்றான்' என்ற திருமழிசை ஆழ்வாரின் பாடலைக் கேட்டுத் தாம் பாயலைச் சுருட்டிக் கொண்டு அவருடன்

சென்றார் என்பது ஒரு வரலாறு. இதனைச் சுவாமிகள், 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்'ல்,

'பழமறைகள் முறையிடப் பைந்தமிழ்ப் பின்சென்ற
பச்சைப் பசுங்கொண்டலே' (3)

என்னும் அடிகளில் அழகுறப் பதிவு செய்துள்ளார்.

'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்'ல் பிறிதொரு பாடலில் சுவாமிகள் கலைமகளை,

'மதுரம் ஒழுகும்
கொழிதமிழ்ப் பனுவல் துறைப்படியும் மடநடைக்
கூந்தல் அம்பிடி' (55)

எனப் பாடியுள்ளார். இங்கே இனிமை சொரியும் தமிழ்மொழிக் கடலின் நூலாகிய துறையில் மூழ்கும் பெண்யானை, கலைமகளைக் குறிக்கும் உருவகம் ஆகும்.

உமாதேவியார் தடாதகைப் பிராட்டியாராகவும், சிவபெருமான் சுந்தரேசராகவும், முருகக் கடவுள் உக்கிர குமாரர் ஆகவும் அவதரித்ததற்குக் காரணம் அம்மூவருக்கும் தமிழினிடத்துள்ள வேட்கையே என்று 'மதுரைக் கலம்பக'ப் பாடல் ஒன்றில் குறிப்பிட்டுள்ளார் குமரகுருபர சுவாமிகள்.

'தமரநீர்ப் புவன முழுது ஒருங்கு ஈன்றாள்
தடாதகா தேவி என்று ஒருபேர்
தரிக்கவந் ததுவும் தனிமுதல் ஒருநீ
சவுந்தர மாறன் ஆனதுவும்
குமரவேள் வழுதி உக்கிரன் எனப்பேர்
கொண்டதும் தண்டமிழ் மதுரம்
கூட்டுண எழுந்த வேட்கையால் எனில்இக்
கொழிதமிழ்ப் பெருமையையார் அறிவார்?' (196)

இங்கே சிவபெருமான், உமையம்மை, முருகக் கடவுள் ஆகிய மூவருக்கும் இருந்த 'தண்டமிழ் மதுரம் கூட்டுண எழுந்த வேட்கை'யைச் சுட்டிக்காட்டி, இம்மூவருக்குமே தமிழ்மீது இவ்வளவு வேட்கை இருந்தது எனில், 'இக் கொழிதமிழ்ப் பெருமையை யார் அறிவார்?' என வினவுகின்றார் சுவாமிகள்.

## தமிழின் சிறப்பைப் புலப்படுத்தும் தொடர்மொழிகள்

தமிழின் சிறப்பைப் புலப்படுத்தும் வகையில் குமரகுருபர சுவாமிகள் தம் பிரபந்தங்களில் கையாண்டுள்ள தொடர்மொழிகள் வருமாறு:

| | |
|---|---|
| 'சொற்றமிழ்' | *(2)* |
| 'பைந்தமிழ்' | *(3, 158, 472)* |
| 'வடிதமிழ்' | *(4)* |
| 'தேக்கமழ் மதுரம் ஒழுகிய தமிழ்' | *(4)* |
| 'மதுரித்து வட்டெழு முத்தமிழ்' | *(5)* |
| 'கொழித்தெடுத்துத் தெள்ளித் தெளிக்குந் தமிழ்' | *(10)* |
| 'பண்ணுலாம் வடிதமிழ்' | *(15)* |
| 'தெளிதமிழ்' | *(22, 23)* |
| 'தென்னன் தமிழ்' | *(24, 388)* |
| 'முதுசொற் புலவர் தெளித்த பசுந்தமிழ்' | *(32)* |
| 'தெய்வத்தமிழ்' | *(49, 152)* |
| 'முதுதமிழ்' | *(53)* |
| 'செஞ்சொல் தமிழ்' | *(54)* |
| 'மதுரம் ஒழுகும் கொழிதமிழ்' | *(55)* |
| 'தீந்தமிழ்' | *(62)* |
| 'மும்மைத் தமிழ்' | *(69, 127, 140, 390-394)* |
| 'துறைத்தமிழ்' | *(88)* |
| 'புத்தமுதம் வழிந்தொழுகும் தீந்தமிழ்' | *(105)* |
| 'தருசுவை யமுதெழ மதுரமது ஒழுகு பசுந்தமிழ்' | *(115)* |
| 'தலைச்சங்கம் பொங்கும் பண்முத்தமிழ்' | *(149)* |
| 'சங்கத் தமிழ்' | *(157, 174, 375-377)* |
| 'முத்தமிழ்' | *(163, 176, 435-437)* |
| 'வண்டமிழ்' | *(191, 212)* |
| 'தண்டமிழ்' | *(191, 212)* |
| 'கொழிதமிழ்' | *(196, 349, 385-387)* |
| 'விரிதமிழ்' | *(206)* |
| 'அருந்தமிழ்' | *(344)* |
| 'கொத்துமுத்தமிழ்' | *(350)* |
| 'பசுந்தமிழ்' | *(352)* |
| 'தோலாத முத்தமிழ்' | *(378)* |
| 'தீஞ்சுவைக் கனியும் தண்டே னறையும் வடித்தெடுத்த சாரங் கனிந்தூற்றிருந்த பசுந்தமிழ்' | *(393)* |
| 'அஞ்சொல் தமிழ்' | *(407)* |
| 'இழுமென் மொழித் தெளிதமிழ்' | *(439)* |

'தெள்ளுதமிழ்' (448)
'பரசிருக்கும் தமிழ்' (515)
'சொற்றமிழ்' (581)
'சொற்சுவை பழுத்த தொகைத் தமிழ்' (584)
'கொழுத்த தமிழ்' (620)
'தேத்தமிழ்' (699)
'செழுந்தமிழ்த் தெள்ளமுது' (702)
'செழுந்தமிழ்ச் செல்வம்' (703)
'கலைத்தமிழ்த் தீம்பாலமுதம்' (706)

தமிழின் பல்வேறு பண்புகளையும் பரிமாணங்களையும் புலப்படுத்தும் இத்தொடர் மொழிகள் பயில்வார் நெஞ்சை அள்ளும் பான்மை பெற்றனவாகும்.

### ஒல்லும் வகையெல்லாம் ஓவாது தமிழைப் போற்றல்

'ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்' (33)

என்பது 'அறன் வலியுறுத்தல்' அதிகாரத்தில் இடம்பெறும் ஒரு குறட்பா. 'இயன்ற அளவு இடைவிடாது அறத்தை ஏற்கும் இடமெல்லாம் செய்க' என்பது இதன் பொருள். இங்கே 'அறவினை' என்பதற்குப் பதிலாகத் 'தமிழைப் போற்றிப் பரவல்' என்பதைக் கொண்டால், குமரகுருபர சுவாமிகள் இயன்ற வகைகளில் எல்லாம் - வாய்ப்பான இடங்களி லெல்லாம் - இடைவிடாது தமிழ் மொழியினைப் போற்றிப் பரவுவதை உணரலாம். அவரது ஆழ்ந்த தமிழ்க்காதல் தமிழை எல்லை கடந்த நிலையிலும் கொண்டுசென்று களிப்படைகின்றது. அவருடைய 'காசிக் கலம்பக'த்தில் வரும் கொற்றியார் - வைணவ வேடம் பூண்ட பெண் - காசி நகரின் வளமையை யெல்லாம் கொழுத்த தமிழால் பாடி ஆடுகின்றாள்:

'வழுத்துமவர்க்கு ஆனந்த வாழ்வையருள் வார்காசி
வளமையெல்லாம்
கொழுத்ததமி ழாற்பாடித் துளசிமணி தரித்தாடும்
கொற்றியாரே' (620)

'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழி'ல் வரும் ஒரு வண்டு கூடத் தாமரை மலரில் இருந்துகொண்டு தமிழ்ப் பாட்டை இசைக்கின்றது:

'மழலை வண்டுதட மலர்கு டைந்துபுது
மதுவ ருந்திநறு மல்லிகைச் சேக்கையின்
வடிப சுந்தமிழின் இசைப யின்றபெடை
யொடுது யின்று...' (352)

குமரகுருபர சுவாமிகள் தம்மைப் போன்ற செந்நாப் புலவர்களுக்கு விடுக்கும் செய்தியும் இங்கே மனங்கொளத்தக்கது:

'தேத்தமிழ் தெளிக்கும் செந்நாப் புலவீர்
மண்மகள் கவிகைத் தண்ணிழல் துஞ்சப்
புரவுபூண்டு இந்திரத் திருவொடும் பொலிந்து
முடிவினு முடியா முழுநலம் கொடுக்கும்
செந்நெறி வினவுதி ராயின் இன்னிசைப்
பாத்தொடுத் தடுத்த பரஞ்சுடரை
நாத்தழும்பு இருக்க ஏத்துமின் நீரே' (699)

தெய்வங்களால் விரும்பப் பெறும் தமிழினிடத்தே பெருமதிப்பும் பேரன்பும் கொண்ட சுவாமிகள், தம்மைப் போன்ற செந்நாப் புலவர்களையும் தாம் சென்ற நெறியே செல்லுமாறும் பரஞ்சுடரை நாத்தழும்பு ஏறப் பாத்தொடுத்துப் பாராட்டுமாறும் பிணிக்கின்றார்.

## தமிழ்மொழியையும் வடமொழியையும் ஒருங்கே மதித்துப் போற்றிப் பாடல்

தமிழின் நலமெலாம் நன்கு உணர்ந்து தமிழ்ப் பாமாலை புனைந்து மகிழும் குமரகுருபரர், வடமொழிக்கு உரிய நன்மதிப்பையும் தம் பிரபந்தங்களில் ஆங்காங்கே வெளிப்படுத்தத் தவறவில்லை. அவருக்கு வடமொழி இலக்கியங்களில் நல்ல பயிற்சி உள்ளது. வடமொழிச் சொற்களைத் தம் நூல்களில் தாராளமாக வழங்கும் போக்கும் அவரிடம் காணப்படுகின்றது. சான்றாக, 'மதுரைக் கலம்பக'த்தில் ஓர் இடம்:

'பால லோசன பானுவி லோசன
பற்ப லோசன பக்த சகாயமா
கால காலத்ரி சூல கபாலவே
கம்ப சாம்ப கடம்பவ னேசனே' (172)

இங்கு ஒரு தமிழ்ச் சொல்லேனும் காணாமை நோக்கத்தக்கது. பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை 'குமரகுருபரர்' பற்றிய தம் கட்டுரையில் 'வடமொழிச் சொற்களை எடுத்தாளுதலோடு வடமொழியிலுள்ள கருத்துக்களையும் இவர் (குமரகுருபரர்)

எடுத்தாண்டுள்ளார்'' (தமிழ்ச் சுடர் மணிகள், ப. 205) எனக் குறிப்பிட்டு, உதாரணமாக,

'வஞ்சித்து ஒழுகும் மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தேம் என்று மகிழன்மின் - வஞ்சித்த
எங்கும் உளன்ஒருவன் காணுங்கொல் என்றுஅஞ்சி
அங்கங் குலைவது அறிவு' (299)

என்னும் 'நீதிநெறி விளக்க'ப் பாடலை எடுத்துக்காட்டுகின்றார்; இச் ''செய்யுளின் கருத்து காளிதாஸ மகாகவி இயற்றிய சாகுந்தல நாடகத்தில் வந்துள்ளது'' (தமிழ்ச் சுடர் மணிகள், ப. 206) என்றும் கூறுகின்றார்.

சிறப்பாக, வேதங்களைப் பற்றிப் பலவாறு சுவாமிகள் தம் பிரபந்தங்களில் பாராட்டிச் செல்கின்றார். அவற்றின் பழமையையும் தெய்வத்தன்மையையும் இன்னிசையையும் போற்றுகின்றார்; அவை எழுதாக் கிளவியாக விளங்குவதைச் சுட்டுகின்றார். அவை சிவபெருமான் திருவாக்கு என்றும் குறிப்பிடுகின்றார். இவ்வகையில் குறிப்பிடத்தக்க சில தொடர்மொழிகள் வருமாறு:

'தேறரிய
பாமேவு தெய்வப் பழமறை' (1)
'செழுமறை' (43)
'ஏடகத்து எழுதாத வேதச் சிரம்' (73)
'சாற்றிய செழுமறைப் பொருளின்' (351)
'பயில்தரு முதுமறை நூல்' (358)
'ஆதிநான்மறை' (463)
'உரையாத பழமறை' (600)
'சொல்லாவது மறையே' (618)
'எழுதாக் கிளவிநின் மொழிஎனப் படுதலின்' (336)

சில இடங்களில் மறைகளின் பழமைப் பண்பையும் தமிழின் புதுமைக் கவினையும் சுவாமிகள் ஒருங்கே புகழ்ந்து பாடுகின்றார். கடவுளரைப் போற்றிப் பரவும் போதும் அவர், மறையையும் தமிழையும் இணைத்தே - வடநூற்கடலையும் செழுந்தமிழ்ச் செல்வத்தையும் சேர்த்தே - பாடிச் செல்கின்றார்.

'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழி'ல் மீனாட்சியம்மையைப் பழமையான வேதத்தின் பயனாகக் கூறிய சுவாமிகள், தொடர்ந்து தீந்தமிழின் சுவையாகவும் குறிப்பிடுகின்றார்:

'தொடுக்கும் கடவுட் பழம்பாடல்
தொடையின் பயனே, நறைபழுத்த
துறைத்தீந் தமிழின் ஒழுகுநறுஞ்
சுவையே!' (62)

இதேபோல் 'மதுரைக் கலம்பக'த்தில் சோமசுந்தரக் கடவுளைச் சுவாமிகள்,

'பொழிந்தொழுகு முதுமறையின் சுவைகண்டும் புத்தமுதம்
வழிந்தொழுகுந் தீந்தமிழின் மழலைசெவி மடுத்தனையே' (105)

என்று முதுமறையின் சுவையையும் தீந்தமிழின் மழலையையும் ஒருங்கே செவிமடுக்கின்றவராகக் காட்டுகின்றார்.

'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமி'ழில் முருகக் கடவுளின் திருவாயைக் 'கடவுள் மறையும் பசுந்தமிழும் மணக்கும் வாய்' (393) என்றும், முருகப் பெருமானைத் 'தென்கலைக்கும் பழைய வடகலைக்கும் தலைவன்' (433) என்றும் குறிப்பிடும் சுவாமிகள், 'சகலகலாவல்லி மாலை'யில் கலைமகளை,

'வடநூற் கடலும்,
தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும்
தொண்டர் செந் நாவினின்று
காக்கும் கருணைக் கடல்' (703)

என்று போற்றுகின்றார். மேலும் அவர், 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழி'ல் கலைமகளைத் 'துறைத் தமிழொடும் தொன்மறை தெளிக்கும் கலைக்கொடி என்னும் துணைத்தோழி' (88) எனச் சுட்டுகின்றார்; 'மதுரைக்கலம்பக'த்தில் ஒரு பாடலில் கலைமகள் 'முதுபாடல் எழுதா மறையோடும் இசைமுத்தமிழ் பாடுவதாகக்' (163) குறிப்பிடுகின்றார்.

'பண்டார மும்மணிக்கோவை'யில் தம்முடைய ஞானாசிரியராகிய மாசிலாமணி தேசிகரை 'நான்மறைக் கிழவ நற்றமிழ் முதல்வ' எனச் சிறப்பிக்கும் சுவாமிகள் தொடர்ந்து, 'சொற்சுவை பழுத்த தொகைத் தமிழ்க் கவிஞ' (584) என்றும் பாராட்டுகின்றார். 'மதுரைக் கலம்பக'த்தில், 'வடகலை தென்கலை பலகலையும் பொதி மதுரை வளம் பதியே' (204) என மதுரையைச் சுவாமிகள் போற்றிக் கூறுவதும் இங்கே நினைவுகூரத்தக்கது ஆகும். இதேபோல் 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழி'ல் சுவாமிகள். புள்ளிருக்கு வேளூரில் 'வடகலை தென்கலையொடு பயிலும் கவிவாணர்கள்' (437) வாழ்ந்துவருவதைச் சுட்டிக்காட்டவும்

தவறவில்லை. இங்ஙனம் குமரகுருபர சுவாமிகள் தம் வாழ்விலும் வாக்கிலும் அவ்வப்போது தமிழ் மொழியையும் வடமொழியையும் ஒருங்கே மதித்துப் போற்றிவந்திருப்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

## குமரகுருபரரின் வாழ்வும் வாக்கும் உணர்த்தும் மொழிக் கொள்கை

'அருட்செல்வர்' நா. மகாலிங்கம் 'ஓம் சக்தி' இதழில் எழுதிய தம் கட்டுரையில் குமரகுருபரரின் வாழ்வும் வாக்கும் உணர்த்தும் மொழிக் கொள்கை குறித்து வெளியிட்டிருக்கும் கருத்து மிகவும் முக்கியமானது. இன்றைய சூழலில் அரசியலாரும் கல்வியாளரும் இளைய தலைமுறையினரும் அலசி ஆராய்ந்து தெளிய வேண்டிய அக்கருத்து வருமாறு:

''நம்முடைய நாகரிகமும் பண்பாடும் வளர வேண்டுமானால் அதற்கு நம் தாய்மொழியைத்தான் நம் மக்களுக்குப் போதிக்க வேண்டும்.''

''நம் நாகரிகத்தை மற்ற மக்களுக்குப் பரப்புவதற்கு மற்ற மொழிகளையும், அதாவது இந்தி, ஆங்கிலம் போன்ற மொழிகளையும் பயில வேண்டும். மற்ற மொழிகளைக் கற்பதையும், மற்ற மொழிகள் நமது ஆட்சி மொழியாக வருவதையும் ஒன்றாகச் சேர்த்துக் குழப்பிக் கொள்ளக் கூடாது.''

''ஒரு மொழியைப் பயில்வது வேறு, அதை ஆட்சி மொழியாக ஏற்றுக்கொள்வது வேறு. இந்த அடிப்படை உண்மையை நாம் புரிந்துகொள்ள வேண்டும். இதை மூன்னூறு ஆண்டுகளுக்கு முன்னதாகவே புரிந்துகொண்டு செயல்பட் டிருக்கிறார் குமரகுருபரர்.''

''அந்த நாளிலேயே வடநாட்டு மக்களிடம் நம் நாகரிகத்தை அவர்கள் மொழியான இந்தி முதலிய மொழிகளைப் பயின்று அதில் வல்லமை பெற்று விளங்கினார்.''

''இதனால் குமரகுருபரர் இந்தி முதலிய வட இந்திய மொழிகளுக்கு அடிமையாகிவிட்டார் என்று எண்ணிவிடக் கூடாது. அவர் தாய்மொழிப் பற்று மிக்கவர். தாய்மொழியின் மூலமாகவே தாம் பெற்ற ஞான அனுபவங்களைத் தம் மக்களுக்கு முதலில் வழங்கியவர். பிறகு அவர் மற்ற மொழி பேசும் மக்களுக்கும் தம் ஞான அனுபவங்களைச் சொல்ல அவர்கள் மொழியைப் பயின்றவர் என்பதை மறந்துவிட வேண்டாம்.''

''குமரகுருபரர் இந்தி மொழியில் பாண்டித்தியம் பெற்றார். இதன்மூலமாக டெல்லி முகலாய மன்னரிடம் செல்வாக்குப் பெற்றார். அந்தச் செல்வாக்கைப் பயன்படுத்திக் காசி மாநகரில் இடம்பெற்று, குமாரசாமி மடத்தை அமைத்தார் குமரகுருபரர்.''

''கம்பராமாயணம் போன்ற தமிழ் இலக்கியங்களையும் சைவ சமயக் கருத்துக்களையும் வடநாட்டு மக்களிடையே இந்தியில் பிரசங்கம் செய்த பெருமைக்குரிய மகான் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்'' ('ஓம் சக்தி', மார்ச் *1989*, ப. *18*).

குமரகுருபர சுவாமிகளின் மொழிக் கொள்கையை மட்டுமன்றி, அவரது ஆளுமைத் திறத்தையும் அடையாளம் காட்டும் 'அருட்செல்வ'ரின் கருத்தோடு இவ்வியல் நிறைவு பெறுவது பொருத்தமாக இருக்கும்.



# 5. கவிதை நலம்

"செந்தமிழுஞ் சிவமாநெறிக் கொள்கையும் சிறப்புற்றோங்கிய தென்பாண்டி நாட்டிலே தோன்றி அவ்விரண்டும், குமரிமுனை முதற் பனிமலைச் சாரல் வரை மிக்க மாண்பொடு திகழும் வண்ணம் திருவருட் பெருவாழ்க்கை நடாத்தித் தமது நிறைமொழியால் நாயக்க மன்னரையும் மகம்மதிய அரசரையும் தமது வயப்படுத்திச் செந்நெறி செலுத்திப் பெருநன்மையாற்றிய பெருந்தகையார் குமரகுருபர அடிகளாவர்."

- கா. சுப்பிரமணிய பிள்ளை[1]

"இலக்கியத்திற்கு இன்றியமையாத கருத்து, உணர்ச்சி, கற்பனை, அழகிய வடிவம் ஆகிய இந்நான்கும் ஒருங்கே சிறந்து அமைதல் அரிது. மிகச் சிறந்த புலவரிடத்தில் நான்கும் ஒருங்கே சிறந்து அமைதல் உண்டு" (இலக்கியத் திறன், ப. 67) என்பர் அறிஞர் மு. வரதராசனார். மற்றவர்களின் பாட்டில் உணர்ச்சி நன்கு அமைந்திருந்து, அழகிய வடிவம் அமையாதிருத்தல் உண்டு. அழகிய வடிவம் அமைந்து, கற்பனை வளமுற அமையாதிருத்தலும் உண்டு. இவ்வாறு ஒன்று சிறப்புற்று, மற்றொன்று நன்கு அமையாதிருத்தலே பெரும்பாலான பாடல்களின் இயல்பாகும். ஆயின், மிகச் சிறந்த புலவராகத் திகழ்வதால் குமரகுருபரரிடத்தில் கருத்து, உணர்ச்சி, கற்பனை, வடிவம் ஆகிய நான்கும் ஒருங்கே சிறந்து விளங்கக் காண்கிறோம்; அவர்தம் பாடல்களில் கருத்து வளம், உணர்ச்சி வெளிப்பாடு, கற்பனை நயம், அழகிய வடிவம் ஆகிய நான்கும் நன்கு அமைந்திருக்கக் காண்கிறோம். கருத்து, உணர்ச்சி, கற்பனை, வடிவம் என்னும் இந்நான்கு இன்றியமையாத உறுப்புக்களும்

1. குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், ப. 7.

முறையே குமரகுருபரரின் பிரபந்தங்களில் பொருந்தி யிருக்கும் பான்மை குறித்து இவ்வியலில் காண்போம்.

## 1. கருத்து வளம்

குமரகுருபர சுவாமிகள் தம் பிரபந்தங்களில் ஆங்காங்கே பட்டறிவிலும் உண்மையறிவிலும் உணர்ந்த விழுமிய கருத்துக்களை எடுத்துரைத்துள்ளார்; தமது முன்னோர் படைத்த நூல்களிலிருந்தும் உயரிய கருத்துக்களைப் பொன்னே போல் போற்றிக் கையாண்டுள்ளார். சுவாமிகளின் கருத்துவளத்திற்குக் கட்டியம் கூறும் நூல் 'நீதிநெறி விளக்கம்.' ''அடிகளியற்றியருளிய நீதிநெறி விளக்கம் கல்வி, செல்வம், உலகியல், அரசியல், தவம், மெய்யுணர்வு முதலிய விழுமிய பொருள்களின் இயல்பினையும் பயனையும் திட்பநுட்பஞ் சிறக்க விளக்குந் தன்மையது'' (குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், ப. 98) என இந்நூலுக்குப் புகழாரம் சூட்டுவார் பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை. பேராசிரியர் தி.ப. சித்தலிங்கய்யாவும் இக்கருத்தினை வழிமொழிவது போல், ''நீதிநெறி விளக்கம், திருக்குறளைப் போலவே சமயச் சார்பின்றி இளம்பிள்ளைகளுக்கு நீதியும் வாழ்க்கை நெறியும் புகட்டும் ஓர் இனிய நூல்'' (மெய்யுணர்வு மலர்கள், ப. 33) எனக் கூறுவார். அறிஞர்கள் வெளியிட்டுள்ள இக்கருத்துக்களின் ஒளியில் முதற்கண், குமரகுருபர சுவாமிகள் திட்பமாகவும் நுட்பமாகவும், எவ்விதச் சார்புமின்றிப் பொதுமையாக உணர்த்தியுள்ள ஒருசில விழுமிய பொருள்கள் குறித்துக் காண்போம்.

### முயற்சியின் இன்றியமையாமை

முயற்சியின் இன்றியமையாமையைக் குமரகுருபர சுவாமிகள் 'நீதிநெறி விளக்க'த்தில் மூன்று பாடல்களில் அழகாக வலியுறுத்தியுள்ளார். இறக்கும்வரையிலும் ஒருவர் முயற்சி உடையவராய் இருத்தல் வேண்டும்; இடைவிடாமல் முயன்றால் ஆகாதனவும் கைகூடும் என்பது சுவாமிகளின் கருத்து. ஒருவர் நன்மையைத் தருவனவாகத் தாம் மேற்கொண்ட முயற்சிகளை, அவை முடிவு பெறாவிட்டாலும், கைவிட்டுவிடக் கூடாது; தாம் இறக்கும் காலம்வரையிலும் விடாமல் முயல வேண்டும். சாகும் தறுவாயில் உள்ள ஓர் உயிர்க்கு ஆயுள் நிலைத்தற்கு ஏதுவாகிய மருந்தினைச் சிறிது சிறிதாகக் கொடுத்தல் குற்றமன்று. சாவது போல் தோன்றி முடிவு பெறும் சில காரியங்களும் உண்டு. இவ்வழகிய கருத்தைத் தன்னகத்தே கொண்ட பாடல் இதோ: -

'உறுதி பயப்பக் கடைபோகா வேனும்
இறுவரை காறும் முயல்ப - இறும் உயிர்க்கும்
ஆயுள் மருந்துஒழுக்கல் தீதுஅன்றால் அல்லனபோல்
ஆவனவும் உண்டு சில.' (254)

அடுத்த பாடலில் முயற்சியின் சிறப்பைப் பிறிதொரு கோணத்தில் வெளியிடுகின்றார் சுவாமிகள். ஊழை நினையாமலே முயல வேண்டும் என்பது அவரது கருத்து. வலியற்ற விளக்கு அவிந்துவிடுவதுதானே என்று எண்ணிக் காற்றடிக்கும் இடத்தில் ஏற்றமாட்டார்கள்; அது சிறிது நேரமாவது எரியும் என்று கருதி அவ்வளவில் பயன்கொள்ளும் பொருட்டு அதைப் பாதுகாப்பார்கள். அதுபோல் ஊழின் வலிமையே கருதி வாளா இராமல் தம்மால் இயன்ற முயற்சி செய்து அம்முயற்சிக்கு ஏற்ற பயனைப் பெற முயல்வர். இக்கருத்தைப் புலப்படுத்தும் பாடல் வருமாறு:

'முயலாது வைத்து முயற்றின்மை யாலே
உயலாகா ஊழ்த்திறத்த என்னார் - மயலாயும்
ஊற்றம் இறுவிளக்கும் ஊழ்உண்மை காண்டும்என்று
ஏற்றார் எறிகால் முகத்து.' (255)

இன்னும் ஒருபடி மேலே சென்று மூன்றாம் பாடலில் சுவாமிகள் முயற்சியால் ஊழையும் வெல்லலாம் எனக் கூறுகின்றார்; மார்க்கண்டேயர் வரலாற்றை எடுத்துக்காட்டித் தம் கருத்திற்கு அரண் சேர்க்கின்றார். ஒருவரிடம் எத்தகைய முயற்சி இருத்தல் வேண்டும் தெரியுமா? இடுக்கண்களுக்கு மனம் அழியாத முயற்சி வேண்டும் என்கிறார் சுவாமிகள். 'உலையா முயற்சி' என்னும் தொடரால் அவர் அம்முயற்சியைச் சுட்டுகின்றார். இத்தகைய முயற்சியைப் பற்றுக்கோடாகக் கொண்ட ஒருவர் ஊழின் வன்மையையே அழித்துக்காட்டலாம். இதற்கு உதாரணம் தேடி வேறு எங்கும் போக வேண்டியதில்லை. உலகமே அறிய ஊழின் முறையை அழித்து யமனது உயிரைப் போக்கிய மார்க்கண்டேயரே சான்று. சீரிய இக்கருத்தினைத் தாங்கிநிற்கும் பாடலைக் காண்போமா?

'உலையா முயற்சி களைகணா ஊழின்
வலிசிந்தும் வன்மையும் உண்டே - உலகறியப்
பால்முளை தின்று மறலி உயிர்குடித்த
கான்முளையே போலும் கரி.' (256)

இங்ஙனம் உலகியலிலிருந்து எளிதாக விளங்குகின்ற உதாரணங்களைக் காட்டியும், புராணங்களி லிருந்து உயரிய வரலாறுகளை மேற்கோள் தந்தும் தம் கருத்துக்களைக் கற்பவர் நெஞ்சில் பதியும்வகையில் ஆற்றல் வாய்ந்த நடையில் எடுத்துரைக்கின்றார் குமரகுருபர சுவாமிகள்.

## வாழ்வாங்கு வாழ்வதற்கான நெறிமுறைகள்

வையத்துள் வாழ்வாங்கு வாழ்வதற்கான நெறிமுறைகள் குறித்தும் சுவாமிகள் 'நீதிநெறி விளக்க'த்தில் அழகுற எடுத்துரைத்துள்ளார். சுவாமிகள் பெரிதும் போற்றுவது சிந்தை நிறைவையே ஆகும். அவரது கருத்தில், எரிதழல் அழிவது போலப் பேராசை படைத்த ஒரு மனிதன் அதனோடு தானும் அழிந்து போவான். தான் பெற்றவற்றையே பெரியனவாகக் கருதிச் சிந்தை நிறைவைப் பெறாமல், பெற்றவை சிறியனவாகவும் பெறாதன பெரியனவாகவும் எண்ணி ஏங்குவானுக்கு என்றும் ஆக்கம் இல்லை. இக்கருத்தினை மொழியும் பாடல் வருமாறு:

'பெற்ற சிறுகப் பெறாத பெரிதுஉள்ளும்
சிற்றுயிர்க்கு ஆக்கம் அரிதுஅம்மா - முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழல் மாயாது இரா.' (269)

பேராசையைப் போலவே ஒருவனிடம் இருக்கக் கூடாத இயல்பு செருக்கு; முயற்சியைப் போலவே ஒருவனிடம் அவனது கடைசி மூச்சுவரை இருக்கவேண்டிய பண்பு ஆர்வம். இக்கருத்தினையும் தமக்கே உரிய பாங்கில் ஒரு பாடலில் உணர்த்துகின்றார் சுவாமிகள். செல்வருக்கு இருக்க வேண்டியது சிந்தை நிறைவு - மனத்திருப்தி. கல்வி உடையாருக்கு இருக்க வேண்டியது மேன்மேலும் கற்றல் வேண்டும் என்னும் ஆர்வம். செல்வர்கள் தம்மைக் காட்டிலும் செல்வ நிலையில் தாழ்ந்தவர்களை நோக்கித் தமது செல்வம் பெரியது என்று எண்ணி மனம் மகிழ வேண்டும். அதேபோல், கற்றவர்கள் தம்மைவிடக் கற்றவர்களை நோக்கி 'இவர்கள் கற்றவற்றிற்கு முன் நாம் கற்றதெல்லாம் எம்மாத்திரம்?' என்று எண்ணித் தங்கள் செருக்கு அழியப் பெறுதல் வேண்டும். செல்வரும் கற்றவரும் ஒருங்கே மனம் மகிழ்ந்து வாழ்வதற்கான வழிமுறை இது என்பது சுவாமிகளின் கருத்து. இதனை உணர்த்தும் பாடல் இதோ:

'தம்மின் மெலியாரை நோக்கித் தமதுஉடைமை
அம்மா பெரிதுஎன்று அகமகிழ்க -.தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லாம்
எற்றே இவர்க்குநாம் என்று.' *(220)*

இங்ஙனம் மனிதர் மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வதற்கான நெறிமுறைகள் சுவாமிகளின் வாக்கில் பரவலாகக் காணப்படுகின்றன.

## முன்னோர் மொழிபொருளும் சொல்லும் பொன்னே போல் போற்றல்

குமரகுருபர சுவாமிகள் பழந்தமிழ் இலக்கண, இலக்கிய நூல்களைப் பழுதறக் கற்றுத் தேர்ந்தவராக விளங்குகிறார்; அவற்றிலே பழுத்த புலமையும் பயிற்சியும் பெற்றவராகத் திகழ்கிறார். பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை குறிப்பிடுவது போல், ''கல்வி பற்றிய அளவில், ஓர் இலட்சிய புருஷராக இவர் (குமரகுருபர சுவாமிகள்) விளங்குகிறார். சுவாமிகள் ஓர் ஆசிரியரிடத்துங் கல்வி பயிலாதவர் என்றும் தம்முடைய ஆறாவது வயது வரை ஊமைப் பிள்ளையாயிருந்தார் என்றும் பொதுப்படக் கூறுவார்கள். ஆனால், அவருடைய பிரபந்தங்களைக் கற்குந்தோறும் கற்குந்தோறும் அவர் பெருங்கல்வியாளர் என்பது நமக்குப் புலப்பட்டுக்கொண்டே யிருக்கிறது'' (தமிழ்ச் சுடர் மணிகள், ப. 202).

குமரகுருபர சுவாமிகள் தொல்காப்பியம், நன்னூல் முதலிய இலக்கண நூல்களை நன்கு பயின்றவர். அவர் 'பண்டார மும்மணிக் கோவை'யில் ஒரு பாடலில்,

'முன்னர்க் கூறிய முறைமையிற் சிற்சில
முழுவதும் ஒவ்வாது ஒழியினும் ஒழிக
உயர்ந்தோன் தலைவன் ஒத்தோன் புணரினும்
இழிந்தோன் புணரினும் இழிபெனப் படாதே' **(572: 24-27)**

என்று கூறுகிறார். இது,

'ஒன்றே வேறே என்றிரு பால்வயின்
ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப
மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே'(பொருள். களவு. நூ. 2)

என்ற தொல்காப்பியக் களவியல் நூற்பாவைப் பின்பற்றி எழுதப்பெற்றதாகும்.

தொல்காப்பியத்தி லிருந்து சில இன்றியமையாத சொற்றொடர்கைளயும் சுவாமிகள் தம் பிரபந்தங்களில் உரிய இடங்களில் எடுத்தாண்டுள்ளார்.

'சிதம்பர மும்மணிக்கோவை'யில் ஒரு பாடலில், 'இடித்துரைத்து நன்னெறியிலே நிற்கச் செய்து' என்னும் பொருளில், ''எம்மனோரையும் இடித்துவரை நிறுத்தி'' (460) எனக் கூறியுள்ளார் சுவாமிகள். இதில் இடம்பெற்றுள்ள 'இடித்துவரை நிறுத்தி' என்னும் தொடர்,

''இடித்துவரை நிறுத்தலும் அவர தாகும்'' (கற்பு. நூ. 14) என்னும் கற்பியல் நூற்பாவில் இருந்து எடுத்துக்கொள்ளப் பெற்றதாகும்.

'வேம்பும் கடுவும் தேம்பிழி யாகச்
செஞ்செவி கைப்பயான் தெரித்த சின்மொழி' (699)

எனக் 'காசிக் கலம்பக'த்தின் இறுதிப் பாடலில், தம் சொற்களைக் குறித்துச் சுவாமிகள் கூறிக்கொள்கின்றார். இதில் உள்ள 'வேம்பும் கடுவும்' என்னும் தொடர்,

'வேம்பும் கடுவும் போல வெஞ்சொல்
தாங்குத லின்றி' (செய்யுள். நூ. 112)

என்னும் செய்யுளியல் நூற்பாவினை அடியொற்றி எழுந்ததாகும். இங்ஙனமே,

'தன்னுடை ஆற்றல் முன்னார் முன்னர்
தற்புகழ் கிளவியும் தகும்' (336)

என்று 'திருவாரூர் நான்மணிமாலை'யில் சுவாமிகள் கூறியிருப்பது, நன்னூற் பாயிரத்தில்,

'தன்னுடை ஆற்றல் உணரார் இடையினும்...
தன்னைப் புகழ்தலும் தகும்புல வோர்க்கே' (53)

என வரும் நூற்பாவை அடியொற்றியதாகும்.

பண்டைத் தமிழ் இலக்கியங்களிலும் நம் சுவாமிகள் நன்கு பயின்றவர். 'வட்கார்' பகைவர் (262) முதலிய சங்க நூல் வழக்குகளை அவர் எடுத்தாண்டுள்ளார். சங்க இலக்கியக் கருத்துக்களும் அவரது பிரபந்தங்களில் பல இடங்களில் வந்துள்ளன. குறிப்பாக, 'கந்தர் கலி வெண்பா'வில் இடம்பெற்றுள்ள முருகக் கடவுளுடைய திருமுகங்களின் வருணனையும், திருக்கரங்களின் வருணனையும் நக்கீரரின் திருமுருகாற்றுப்படையை அடியொற்றி அமைக்கப் பெற்றவையே ஆகும்.

நீதி நூல்களைப் பொறுத்தவரையில், சுவாமிகளுக்குத் திருக்குறளில் நல்ல ஈடுபாடு உள்ளது. அவரது 'நீதிநெறி விளக்கம்' திருக்குறளில் காணப்பெறும் கருத்துக்களை வேறு உருவத்திலே அழகுற அமைத்துக் கூறுகின்றது. சில இடங்களில் திருக்குறளில் இடம்பெற்றுள்ள சொற்றொடர்களையும் சுவாமிகள் பொன்னே போல் போற்றி எடுத்தாண்டுள்ளார்.

'செயக்கடவ அல்லனவும் செய்துமன் என்பார்
நயத்தகு நாகரிகம் என்னாம்?' (276)

என்னும் சுவாமிகளின் கூற்றில், 'பெயக்கண்டு நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க, நாகரிகம் வேண்டு பவர்' (580) என்னும் குறளின் தாக்கம் இடம்பெற்றிருப்பது நெற்றித் திலகம்.

''மனைத்தக்காள் மாண்பில ளாயின்'' (215) என்னும் சுவாமிகளின் வாக்கில், ''மனைத்தக்க மாண்புடையளாகி'' (51) என்னும் திருக்குறளின் சார்பு உள்ளது.

''கற்றாங்கு அறிந்துஅடங்கித் தீதொரீஇ நன்றாற்றி'' (306) என்னும் நீதிநெறியைச் சுவாமிகள் படைப்பதற்குத் ''தீதொரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு'' (422) என்னும் திருக்குறளே பின்புலம் ஆகும்.

'நீதிநெறி விளக்க'த்தில்மட்டு மன்றி, சுவாமிகளின் வேறு பிரபந்தங்களிலும் இங்ஙனமே திருக்குறளில் இருந்து எடுத்தாண்ட சொல்லாட்சியைக் காண முடிகின்றது. ஓர் எடுத்துக்காட்டு:

'புரவலர் புரத்தலும் இரவலர் இரத்தலும்
இருவேறு இயற்கையும் இவ்வுலகு உடைத்தே' (316)

'திருவாரூர் நான்மணிமாலை'யில் இடம்பெற்றிருக்கும் இவ்வடிகளுக்கும் ''இருவேறு உலகத்து இயற்கை திருவேறு, தெள்ளியர் ஆதலும் வேறு'' (374) என்னும் திருக்குறளுக்கும் இடையே காணப்படும் ஒப்புமை குறிப்பிடத்தக்கது.

'ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்' (370)

என்னும் திருக்குறளில் உள்ள 'பேரா இயற்கை' என்னும் தொடரைச் சுவாமிகள், 'சிதம்பர மும்மணிக்கோவை', 'பண்டார மும்மணிக்கோவை' ஆகியவற்றில் முறையே, ''பேரா இயற்கை பெற்றனர்'' (454) என்றும், ''பேரா இயற்கை பெற்றுஇனிது இருப்ப'' (572) என்றும் இரண்டு இடங்களில் எடுத்தாண்டுள்ளார்.

திருக்குறளே யன்றி, நாலடியார், திரிகடுகம், இனியவை நாற்பது, பழமொழி, சிறுபஞ்ச மூலம், முதுமொழிக் காஞ்சி, நன்னெறி, கொன்றை வேந்தன், அறநெறிச் சாரம் முதலான நீதி நூல்களும் சுவாமிகளால் ஆங்காங்கே எடுத்தாளப்பட்டுள்ளன.

தமிழ்க் காப்பியங்களுள் கம்பராமாயணத்தில் குமரகுருபர சுவாமிகளுக்கு ஈடுபாடு மிகுதி. காசி நகரில் இருந்த காலத்தில் அவர் சில சமயங்களில் கம்பராமாயணம் குறித்துச் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளமையை அறிய முடிகின்றது. அவருடைய பிரபந்தங்களில் ஆங்காங்கே கம்பருடைய கருத்துக்களும் கற்பனைகளும் சொல்லாட்சிகளும் உவமைகளும் விரவி வந்துள்ளன. அவற்றுள் சிலவற்றை இங்கே காண்போம்.

'மிதிலைக் காட்சிப் படல'த்தில் சீதை இராமபிரானைக் கண்ட அளவிலே காதல் கொண்டதை, ''கண்வழி நுழையும்ஓர் கள்வ னேகொலாம்'' (மிதிலை, 55) எனப் படைத்துக் காட்டுவார் கம்பர். இதனை அடியொற்றிக் குமரகுருபர சுவாமிகள், ''கண்பு குந்துஎன் கருத்துள் இருக்கவும்'' (113) என்று தலைவி ஒருத்தி கூறுவதாக 'மதுரைக் கலம்பக'த்தில் படைத்துள்ளார்.

'உனது, முகத்தின் அழகுஎம் வடிக்கண்ணால்
மொண்டு உண்டனம்' (423)

என்பது 'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமி'ழில் சுவாமிகள் தீட்டியுள்ள ஓர் அழகிய சொல்லோவியம். இது,

'இருந்தகுலக் குமரர்தமை இருகண்ணின் முகத்தழகு
பருக நோக்கி' (மிதிலை, 457)

என்னும் கம்ப சித்திரத்தை நினைவூட்டும் வகையில் அமைந்துள்ளது.

'மேகம்வெள்ளி விழுதை வீழ்த்துவது போல மழை பெய்ய' என்னும் பொருளில் ''மின்செய் கொண்டு வெள்ளிவீழ் வீழ்ப்ப'' (524) எனச் 'சிதம்பரச் செய்யுட் கோவை'யில் வரும் சுவாமிகளின் வாக்கு,

'வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள்...
வள்ளி யோரின் வழங்கின மேகமே' (ஆற்று. 4)

என்னும் கம்பர் வாக்கினைப் பின்பற்றியதாகும்.

குமரகுருபர சுவாமிகள் சில உவமைகளைக் கம்பர் கவிதைகளில் இருந்து எடுத்தாண்டுள்ளார்.

''வறிஞன் ஓம்பிய செறுஒன்று ஏய்ப்ப'' (584) எனப் 'பண்டார மும்மணிக்கோவை'யில் சுவாமிகள் கூறும் உவமை,

'வையக முழுவதும் வறிஞன் ஓம்புமோர்
செய்யெனக் காத்து' (அரசியற். 12)

என்னும் கம்பர் வாக்கில் உள்ள சொல்லையும் பொருளையும் பெற்று அமைத்ததே ஆகும்.

'நமரங்காள்' (நம்மவர்களே) என்னும் சொல்லைச் சுவாமிகள் ஐந்து இடங்களில் (நீதிநெறி விளக்கக் காப்புச் செய்யுள், 489, 506, 520, 564) கையாண்டுள்ளார். அச்சொல் கம்பராமாயணத்தில் 'வானரர் களங்காண் படல'த்தில் பல இடங்களில் வருகின்றது. இதில் கம்பர், சுவாமிகள் இருவருக்கும் இடையே வியப்பிற்கு உரிய ஓர் ஒப்புமையும் காணப்படுகின்றது. கம்பர் அச்சொல்லை ஐந்து சீருள்ள பாடலில் ஐந்தாம் சீராக வைத்துப் பாடியது போலவே, சுவாமிகளும் தம் பாடலில் ஐந்தாம் சீராக வைத்துப் பாடியுள்ளார்.

''நளினக் காடே ஒப்பன காண்மின் நமரங்காள்'' என்பது கம்பர் வாக்கு.

''வெஞ்சமன் அஞ்ச வேலொடு எதிர்ந்தான் நமரங்காள்'' (520) என்பது சுவாமிகள் வாக்கு. (சமன் - யமன். வேல் - இங்கே, யமனது சூலம்)

கம்பராமாயணத்திற்கு அடுத்து, சீவக சிந்தாமணியில் சுவாமிகளுக்கு ஈடுபாடு உள்ளது.

''நட்பிடைக் குய்யம் வைத்தான்'' (253) என்ற சீவக சிந்தாமணித் தொடர், சுவாமிகளின் 'நீதிநெறி விளக்க'த்தில், ''நட்பிடைக் குய்யம் வைத்து'' (262) என வந்துள்ளது (குய்யம் - வஞ்சனை).

தேவாரம், திருவாசகம் முதலான பக்தி இலக்கியங்களும் சுவாமிகளால் ஆங்காங்கே எடுத்தாளப்பட்டுள்ளன. திருநாவுக்கரசர் தேவாரத்தில் உள்ள,

''பொன்னார் திருவடிக்கு ஒன்றுஉண்டு விண்ணப்பம்'' என்னும் அடியைப் பின்பற்றி, ''பொன்னடிக்கு ஒன்றுஇது பன்னுவன் கேண்மதி'' (469) எனச் 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் பாடியுள்ளார் சுவாமிகள்.

நிறைவாக, பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை குறிப்பிடுவது போல், ''தமிழிலக்கியப் பயிற்சியினாலே மிகவும் கனிவடைந்து இன்புறுத்துகிறது இவரது (சுவாமிகளின்) செய்யுள் நடை'' (தமிழ்ச் சுடர் மணிகள், ப. 205).

## 2. உணர்ச்சி வெளிப்பாடு

''காமமும் வீரமும் அல்லது சிறந்த வாழ்க்கை யுணர்ச்சிகள் வேறில்லை. இவ்விரண்டிற்கும் இரண்டு இலக்கியங்கள் கண்ட தமிழ் மொழியின் முழுத்திறம் நமக்குப் பெருமிதம் தருவதாகும்'' (தமிழ்க் காதல், ப. *115*) என்பர் அறிஞர் வ.சுப. மாணிக்கம். அகம், புறம் என்னும் இவ்விரு இலக்கிய மரபின் ஆட்சியைக் குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தங்களில் பரவலாகக் காண்கின்றோம். குறிப்பாக, அவரது கலம்பகங்கள் இரண்டிலும் அகப்பொருட் செய்திகளும் புறப்பொருட் செய்திகளும் விரவி வந்துள்ளன.

### அகப்பொருள் செய்திகள்

'மதுரைக் கலம்பக'த்தில் 'தலைவன் பாங்கனுக்குத் தலைவியின் இயலிடங் கூறல்' என்னும் துறையில் அமைந்த பாடலிலும் இலக்கியச் சுவை ததும்பி நிற்கக் காண்கின்றோம். அப்பாடல் வருமாறு:

'புயல்வண்ணம் மொய்குழல் பொன்வண்ணம்
தன்வண்ணம் போர்த்தடங்கண்
கயல்வண்ணம் என்வண்ணம் மின்வண்ண
மேஇடை கன்னற்செந்நெல்
வயல்வண்ணப் பண்ணை மதுரைப்
பிரான்வெற்பில் வஞ்சியன்னாள்
இயல்வண்ணம் இவ்வண்ணம் என்நெஞ்சம்
மற்றுஅவ் விரும்பொழிலே.' (*116*)

''நான் கண்ட மங்கையினது அடர்ந்த கூந்தல் மேகத்தின் நிறமாகும். அவளது மேனியின் நிறம் பொன்னின் நிறமாகும். ஆடவரை வருத்தும் தன்மை கொண்ட அவளது பெரிய கண்கள் கயல் மீனின் தன்மையனவாம். இடையானது மெலிந்திருப்பதால் என்னுடைய தன்மையையும் மின்னலின் தன்மையையும் போன்றது. கரும்பும் செந்நெல்லும் விளைகின்ற வயல்களை உடைய அழகிய மருத நிலம் சூழ்ந்த மதுரையில் எழுந்தருளியுள்ள சிவபெருமானின் மலையில் உள்ள வஞ்சிக்கொடி போன்றது அவளது இயற்கையழகு. இத்தன்மை கொண்ட அவள் இருக்கும் பெரிய சோலை எனது மனம் ஆகும்'' என்பது காதல் வயப்பட்ட ஒரு தலைவனின் கூற்று. இப்பாடலில் 'வண்ணம்' என்ற சொல் ஒன்பது முறை பயின்று வந்திருப்பது ஒரு நயம்; சிறப்பு.

'மதுரைக் கலம்பக'த்தில் 'கார் கால வரவு கண்டு தலைவி இரங்கிக் கூறியது' என்னும் துறையில் அமைந்த பாடலில் தலைவியின் பிரிவாற்றாமை உணர்வும் இளவேனிற் கால வருணனையும் மிக அழகாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன:

'குறுமுகைவெண் தளவுஅளவுஇல் மணந்துவக்குங் காலம்
கொழுநரொடும் இளமகளிர் மணந்துஉவக்கும் காலம்
மறுகுதொறும் நின்றுஎமர்களும் உருத்துஇகழுங் காலம்
வரிசிலை கொண்டு உருவிலியும் உருத்திகழுங் காலம்
சிறுமதி நம்பெருமதியின் உகப்புஅடருங் காலம்
தென்றல் இளங் கன்றும் உயிர்உகப் படருங்காலம்
நிறையினொடு நாணினொடும் அகன்திரியுங் காலம்
நேசர் மதுரேசர் வரையகன்று இரியுங்காலம்.' *(159)*

"வெண்மையான முல்லைக் கொடிகளின் சிறிய அரும்புகள் அளவில்லாத நறுமணத்தை வீசத் தொடங்குகின்ற காலம்; இளம்பருவம் வாய்ந்த பெண்கள் தங்கள் தலைவர்களுடனே கூடி மகிழும் காலம்; சுற்றத்தார் தெருக்கள்தோறும் நின்று என்மேல் கோபம் கொண்டு இகழ்ந்து அலர் தூற்றும் காலம்; மன்மதனும் கட்டமைந்த கரும்பு வில்லைக் கையில் எடுத்துக்கொண்டு வடிவுடன் வெளிப்பட்டு விளங்கும் காலம்; இளம்பிறை நமது பெரிய அறிவின் விருப்பத்தை அழிக்கும் காலம்; இளந்தென்றல் காற்றும் உயிர் நீங்கும்படி இயங்கும் காலம்; எமது மனம் கற்பொடும் நாணொடும் மாறுபடும் காலம்; நம் அன்பராகிய மதுரைச் சொக்கநாதர் இம்மலையை விட்டு நீங்கி என்னைப் பிரிந்த காலம்" என்று 'மடக்கு' என்னும் சொல்லணியைக் கையாண்டு தலைவியின் ஆற்றாமை உணர்வையும் இளவேனிற் காலத்தையும் நயமாகச் சித்திரித்துள்ளார் குமரகுருபர சுவாமிகள். இப்பாடலின் முதலடியில் உள்ள 'மணந்துவக்கும்' என்பது, 'நறுமணம் வீசத் தொடங்கும்' (மணம் துவக்கும்), 'திருமணம் செய்து மகிழும்' (மணந்து உவக்கும்) என இருபொருள் உடையது. 'உருத்திகழும்' என்பது, 'உரு விளங்கும்' (உருத் திகழும்), 'கோபித்து இகழ்ச்சி செய்யும்' (உருத்து இகழும்) என்று இரு பொருள்படும். 'உகப்படரும்' என்பது, 'உகப்பினை (மகிழ்ச்சியினை) அழிக்கும்' (உகப்பு அடரும்), 'சிந்தும்படி பரவும்' (உகப்படரும்) என்று இரு பொருள்படும். 'அகன்றிரியும்' என்பது, 'அகமாகிய உள்ளம் திரியும்' (அகன் திரியும்), 'நீங்கி ஓடும்' (அகன்று இரியும்) என்று இருபொருள் உடையது.

ஒரு தலைவி காம மயக்கத்தால் உள்ளம் கலங்கிச் செய்யும் செயல்களைத் 'திருவாரூர் நான்மணிமாலை'யில் வரும் ஒரு பாடல் நயமாகச் சித்திரிக்கின்றது. தியாகப் பெருமானைக் கண்ட பிறகு அவரது பிரிவால் உண்டான பசலையையே தனது மயக்கத்தால் அவர் அளித்த கொன்றை மாலையாக எண்ணி மகிழ்கிறாள். தான் உண்ணும்படி வைத்த உணவை நஞ்சம் என்று பிறர் கூறுவதைக் கேட்டபோது, இறைவனுக்கு நஞ்சும் அமுதாகும் என்ற செய்தி நினைவுக்கு வரவே, 'அப்படியாயின் அவர் உண்ட நஞ்சத்தை நாமும் உண்ண வேண்டும்' என்று எண்ணி உணவை விழுங்குகின்றாள்; இடையே வேறொரு யோசனை வந்து தடுக்கின்றது; 'நம் மனத்துள் தலைவர் இருக்கின்றார்; நாம் உண்ட எச்சிலை அவர் உண்ணுதல் தகாது' என்று கருதி அதனை மீட்டும் உமிழ்ந்துவிடுகின்றாள்.

'கொண்டலை அலைத்தபல தண்டலை உடுத்து அழகு
கொண்ட கமலைப் பதியுளார்க்
கண்டபின் எனக்குஇதழி தந்தனர் எனப்பசலை
கண்டுஉயிர் தளிர்த்த மடவாள்
அண்டர் அமுது ஒத்தஅமுதந் தனை இருட்கடுஇது
அன்பர்உண் மிச்சில் கொல்எனா
உண்டிடும் உளத்தில்அவர் உண்குவர்என் மிச்சில்என
உண்டதை மறுத்து உமிழுமே.' *(343)*

''நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல், அஞ்சுதும் வேபாக்கு அறிந்து'' (குறள், *1128*) என்னும் குறட்பா இங்கே ஒப்புநோக்கற்கு உரியதாகும்.

## அகப்பொருட் செய்தியும் தலச் செய்தியும்

அகத்துறைப் பொருள் அமைந்த பாடல்களில் அவ்வத்துறைப் பொருளுக்கு ஏற்பத் தலச் செய்தியையும் இணைத்து ஒன்றனுக்கு ஒன்று இன்றியமையாத வண்ணம் புனைந்து செல்லுவதில் குமரகுருபர சுவாமிகளுக்கு ஈடுபாடு மிகுதி. இவ்வகையில் 'மதுரைக் கலம்பக'த்தில், மதுரைத் தலத்தில் சோமசுந்தரக் கடவுள் இயற்றிய திருவிளையாடற் செய்திகள் அகத்துறைச் செய்திகளோடு கலந்து அமைந்து பொருளைச் சிறப்பிக்கக் காண்கின்றோம். ஓர் எடுத்துக்காட்டு:

தலைவியின் நிலையைக் கூறி இரங்கும் ஒரு செவிலி, ''மன்மதனது கரும்பை இவள் வேம்பு என்கிறாள். தேவரீர்

திருத்தோளில் அணிந்த வேம்பைக் கரும்பு என்கிறாள். இவள் இவ்வாறு மாறியாடுகின்றாள் (மாறாகப் பேசுகின்றாள்); மாறியாடிய தேவரீரைத் தரிசித்தாருக்கும் மாறியாடும் வல்லபம் வருமோ?'' என்று இயம்புகின்றாள். இதன்கண் இறைவன் கால் மாறியாடிய திருவிளையாடல் குறிக்கப் பெற்றுள்ளது.

பிறிதொரு தலைவி காம நோயால் உடல் வெம்பிக் கிடக்கையில் அவளது தோழி அவள் மேல் திருநீற்றைத் தடவுகின்றாள். அது கண் தலைவி, ''அன்று ஞானசம்பந்தர், கூன் பாண்டியனுக்குத் திருநீற்றைத் தடவியது போல் என் மேல் நீ தடவுகின்றாயே; அதனால் அன்று அவன் சுர நோயும் கூனும் நீங்கப் பெற்றான்; இப்போது என் காம வெப்பமும் தீரவில்லை; மன்மதன் வளைத்த வில்லின் கூனும் நிமிரவில்லை; இது மதுரையன்று போலும்!'' *(169)* என்று கூறி இரங்குகின்றாள்.

சோமசுந்தரக் கடவுள் வளையல் விற்ற திருவிளையாடல் 'மதுரைக் கலம்பக'ப் பாடல் ஒன்றில் நகைச்சுவை ததும்பக் கூறுப்பட்டுள்ளது. இறைவன் மதுரையில் வளையல் விற்கப் போய்ப் பல மகளிர் மனங்களைக் கவர்ந்த அவர்கள் வளைகள் கழலும்படி செய்து, அவ்வளையல்களைக் கொண்டமையால், அவரை நோக்கி, 'நீர் வளையல்கள் விற்கப் புறப்பட்டீரா அல்லது கொள்ளப் புறப்பட்டீரா?' என்று கண்டோர் வினவுவதாக அப்பாடல் அமைந்துள்ளது.

'வலங்கொண்ட மழுவுடையீர் வளைகொண்டு
விற்பீர்போல் மதுரை மூதூர்க்
குலங்கொண்ட பெய்வளையார் கைவளையெல்
லாம்கொள்ளை கொள்கின்றீரால்
பலங்கொண்ட செட்டு உமக்குப் பலித்தது நன்றாய்
நீர்இப் பாவை மார்க்குப்
பொலங்கொண்ட வரிவளைகள் விற்பதற்கோ
கொள்வதற்கோ புறப்பட்டீரே?' *(111)*

இங்ஙனம் அகப்பொருட் செய்திகளைச் சுவாமிகள் மிக விரிவாகப் பலவகை நயங்களுடன் தம் பிரபந்தங்களில் கையாண்டுள்ளார். இது அவரது அகப்பொருள் இலக்கண நூற்பயிற்சியையும் புலமைத் திறத்தையும் ஒருங்கே எடுத்துக்காட்டுகின்றது.

இதே போலப் புறப்பொருட் செய்திகளையும் சுவாமிகள் தம் பிரபந்தங்களில் ஏற்ற இடங்களில் அமைத்துச் செல்கின்றார். இப்போக்கிற்கு ஓரிரு சான்றுகளைக் காண்போம்.

மறவர் தலைவன் ஒருவனின் மகளை மணம் செய்து கொள்ள விரும்பி ஓர் அரசன் தூதுவிட, அத்தூதனை நோக்கிச் சினந்து அம்மறவர் தலைவன் கூறுவதாகக் கலம்பக நூல்களில் இடம்பெறும் உறுப்பு 'மறம்.' இது மகட்பாற்காஞ்சி என்பதன்பாற்படும். 'காசிக் கலம்பகத்தில்' 'மறம்' என்னும் உறுப்பில் அமைந்த பாடல் வருமாறு:

'வையமுழுது ஒருங்குஈன்ற இடப்பாகர்
ஆனந்த வனத்தில் வாழும்
வெய்யதறு கண்மறவர் குலக்கொடியை
வேட்டுஅரசன் விடுத்த தூதா
கையில்அவன் திருமுகமோ காட்டுஇருகண்
தொட்டு முட்டைக் கதையிற்று ஆக்கிச்
செய்யகொடிறு உடைத்து அகல்வாய் கிழித்து அரிவோம்
நாசியொடு செவியுந் தானே' (643)

மறவர் குலத் தலைவனின் வீர உணர்வு இப்பாடலில் அழகுற வெளிப்பட்டிருக்கக் காண்கின்றோம்.

போர் செய்யப் புகுவாரும், போர் செய்வாரும், போரில் வென்றாரும் செய்யும் செயல்களையும், போர்க் களத்தே நிகழும் நிகழ்ச்சிகளையும் புறப்பொருள் இலக்கண மரபிற்கு ஏற்ற முறையில் புனைந்து கூறும் ஆற்றல் பெற்றவராகக் குமரகுருபர சுவாமிகள் விளங்குகின்றார். போர்க்கள நிகழ்ச்சிகளைக் காட்டும் வண்ணம் அவர் படைத்துள்ள பாடல்கள் ஓசையினாலும் பொருளாலும் வீரச் சுவையைத் தருவனவாக அமைந்துள்ளன.

### 3. கற்பனை நயம்

குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தங்களில், இயற்கையின் அழகை உள்ளவாறு எடுத்துக்கூறும் சொல்லோவியங்களைவிட, உயர்வு நவிற்சியாகப் புனைந்து கூறும் கற்பனைகள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. பதச்சோறு ஒன்று: ஒரு நகரத்தின் செல்வ வாழ்வைக் கற்பனை செய்கிறார் குமரகுருபரர். மேகங்கள் நிறைந்து வானத்தே படலம் இட்டாற் போல் உள்ளன. நகரத்தின் மாடிகளில் கட்டிய கொடிகள் அந்த முகில் படலத்தைக் கிழிப்பவைபோல் உயர்ந்துள்ளன. அந்தக் கொடிகள் மிகப் பலவாய் நெருங்கி

இருத்தலால், வானளாவி உயர்ந்த சோலை போல் தோன்றுகின்றன. மாடத்தின் தோரணம் அமைந்த முகப்பு மிக உயரமாக உள்ளபடியால், வானத்தே திரியும் சந்திரன் அவ்வழியாகச் செல்லும் போது தவழ்ந்து ஏறும்படியாக உள்ளது. சந்திரன் அவ்வாறு தவழ்ந்து செல்லும் காட்சியைக் காண்கின்றனர் மாடியில் உள்ள மகளிர். அவர்கள் அப்போது மது உண்டு மயங்கிய நிலையில் இருப்பதால் சந்திரனைத் தேன்கூடு என்று எண்ணிவிடுகின்றனர். உடனே தம் காதலரை அழைத்து, ''இந்தக் கூட்டின் தேன் வேண்டும்; இதைக் கொணர்ந்து தாருங்கள், வாருங்கள்'' என்று கைகூப்பி வேண்டுகிறார்கள். காதலராகிய ஆடவர் உடனே வந்து சந்திரனைப் பற்றிப் பிழிந்து ஊற்றத் தொடங்குகிறார்கள். அப்போது சந்திரன் நொந்து, ''அய்யோ, இது தண்டனையாக முடிந்ததே! நான் உங்கள் காதலியரின் ஒளிமிக்க முகத்துக்கு ஒப்பானவன் என்று இனிச் சொல்லமாட்டேன்; என்னை உயிரோடு விடுங்கள்'' என்று மன்னிப்புக் கோருகிறான். உடனே அவர்கள் சந்திரனை விட்டுவிடுகிறார்கள். சந்திரன், குடித்து மயங்கிய அவர்களிடமிருந்து விடுதலை பெற்றோம் என்று மிக மகிழ்கிறான்.

'துளிதூங்கு மழைமுகிற் படலம் கிழிக்கும்
துகிற்கொடிகள் சோலைசெய்யத்
தோரண முகப்பில் தவழ்ந்துஏறு கலைமதித்
தோற்றத்தை அறுகால்மடுத்து
அளிதூங்கு தேன்இறால் இதுதம்மின் வம்மின்என்று
அழிநறா ஆர்ந்தநிற்கும்
அந்நலார் கைகூப்ப ஆடவர் பிழிந்துஊற்றும்
அளவில்அப ராதம்இதுஎனா
ஒளிதூங்கு முகமதிக்கு ஒப்புஎன் கிலேன்விடுதிர்
உயிர்ஒன்றும் எனவிடலும்அவ்
உடுபதிக் கடவுள்நற வுண்டமற்று அவரினும்
உய்ந்தோம் ஒழிந்தோம் எனாக்
களிதூங்கு மாடமலி கந்தபுரி...' *(396)*

இங்ஙனம் உயர்வு நவிற்சியாக வருவனவற்றை, உண்மை என்னும் உள்ளீடு இல்லாக் காரணத்தால் 'வெறுங்கற்பனை' எனச் சுட்டுவர் அறிஞர். வெறுங்கற்பனை என்பது சுவையற்றதும் அன்று; கற்பனைக்கு முரணானதும் அன்று. அதிலிருந்து சிறிது வேறுபட்டது; சிறிது மிகையானது எனலாம்.

குமரகுருபரரின் கற்பனையிலே, மருத நிலத்தில் உள்ள சிறுபெண்கள் தங்கள் சிற்றிலில் மாணிக்கமே தீயாகவும் பவளமே விறகாகவும் தேனே உலைநீராகவும் சங்கே பானையாகவும் முத்தே அரிசியாகவும் கொண்டு சிறுசோறாக்கி விளையாடுகிறார்கள் (25). அவர்கள் தங்களது சிறுசுளகால் வாரிக் குவித்த மணிகள் பெரிய குவியல்கள் ஆகின்றன; ஆகாய வீதியளவும் உயர்ந்து வழியை அடைத்து நிற்கின்றன; ஆற்றின் குறுக்கே நின்று அவை அடைப்பதால், வையை ஆற்றின் நீரும் தடைப்பட்டுத் தேங்கி நிற்கின்றது; அந்த நீர்த்தேக்கத்தில் சூரியன் பொறப்பரிசிலாகவும் பிறை சிறுதோணியாகவும் நட்சத்திரங்கள் மிதப்புக்களாகவும் காட்சியளிக்கின்றன (59).

குமரகுருபரர் தம் கற்பனை உலகில் படைக்கும் சோலைகளின் உயரம் எவ்வளவு தெரியுமா? அவைகள் வானளாவி உயர்ந்து நிற்கின்றன. வண்டுகள் அந்தச் சோலையிலே உள்ள மலர்களின் மகரந்தப் பொடிகளை உதிர்க்க, அந்தப் பொடிகள் ஆகாய கங்கையைத் தூர்த்துவிடுகின்றன. அங்கே கள்ளைக் குடித்து மயங்கி நிற்கும் உழவர்கள் எருமைகளுக்கும் வானத்தில் படரும் கருநிற மேகங்களுக்கும் வேறுபாடு அறியாமல் தடுமாறுகிறார்கள். அந்த மேகங்களையும் தங்கள் எருமைகளோடு சேர்த்துக் கட்டி வேலை வாங்குகிறார்களாம் (28).

வயல்களில் விளையும் கரும்புகளின் உயரம் எவ்வளவு தெரியுமா? அவைகளும் வானளாவ வளர்ந்துள்ளன. கற்பக வனத்தின் இடையே சென்று வளர்ந்துள்ள அவற்றை இந்திரனுடைய யானையாகிய ஐராவதம் விண்ணுலகத்தில் இருந்தபடியே தின்கின்றது. அவ்வாறே மதுரை வயலிலே முளைத்த நெற்கதிர்களும் வானுலகத்தினுள் எட்டி உயர்கின்றன. காமதேனு அங்கே அந்தக் கதிர்களைத் தின்று அசைபோடுகின்றது (50). பூமியிலே வளர்ந்த கமுக மரம் தன் பாளையால் வானுலகத்தில் உலா வரும் இந்திராணிக்கு வெண்கவரி வீசுகின்றது (58).

ஒரு வாளை மீன் இங்கிருந்து துள்ளிப் பாய்ந்து சந்திர மண்டலத்தைத் தாக்கி அதன் அமிழ்த தாரைகள் பூமியில் பொழியுமாறு செய்துவிட்டுத் திரும்புகின்றது (18). மற்றொரு வாளை மீன் துள்ளிய துள்ளலில் விண்ணுலகத்தில் உள்ள காமதேனுவின் மடியிலே முட்டுகின்றது. அந்தக் காமதேனு, மடியில் முட்டியது தன் கன்று எனக் கருதிப் பாலைச் சொரிகின்றது (395).

இதேபோல், ஓர் எருமை தன் இளங்கன்றை நினைந்து சொரியும் பாலால் பொய்கை பாற்கடலைப் போன்ற தோற்றத்தைப் பெறுகின்றது (24, 324). இவ்வாறு குமரகுருபரர் உயர்வு நவிற்சியாக அமைந்த எத்தனையோ வருணனைகளைப் படைத்துள்ளார். உ.வே. சாமிநாத ஐயர் கூறுவது போல், ''இத்தகைய வருணனைகள் கவிகளுக்கென்றே அமைந்த ஒரு கற்பனையுலகத்தைப் படிப்போருடைய அகக்கண் முன் தோற்றுவிக்கின்றன'' (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஆராய்ச்சி', ப. xlviii).

குமரகுருபரரின் பிரபந்தங்களில் உயர்வு நவிற்சிப் புனைவுகள் இங்ஙனம் மிகுதியாகக் காணப்படுவதற்கு அவரது காலத்தின் தாக்கமே காரணம் என்கிறார் அறிஞர் மு. வரதராசனார். அவரது கருத்து வருமாறு:

''காப்பியங்களும் புராணங்களும் வளர்ந்தபின், இயற்கையின் அழகை உள்ளவாறு எடுத்துக்கூறும் சொல்லோவியங்கள் குறைந்து, உயர்வு நவிற்சியாகப் புனைந்து கூறும் வருணனைகள் மிகுந்தன... வேடிக்கைச் சுவைக்காக அளவு மீறிப் புனைந்து கூறும் வருணனைகளும் இடம்பெற்றன... கற்பனை என்னும் பறவை மண்ணை விட்டுப் பறந்தது மட்டும் அல்லாமல், விண்ணை விட்டும் பறந்துவிடுவதாயிற்று. வருணனைகள், வாழ்க்கையோடு ஓரளவிற்காவது தொடர்புபட்டிருக்க வேண்டும் என்ற கொள்கை கைவிடப்பட்டது. அவ்வாறு வரம்பு கடந்து கற்பனை செய்வதும் கவிஞர்களுக்கு உரிய ஒரு மரபு என்று கருதும் நிலைமை வந்தது. குமரகுருபரர் அக்காலத்துப் புலவர்களுள் ஒரு தனிச்சிறப்பு உடையவராக இருந்தபோதிலும், உண்மையான படைப்புத் திறன் வாய்ந்த பெருங்கவிஞராக விளங்கிய போதிலும், அந்தக் காலத்தின் வேகம் அவரையும் விடவில்லை. அளவு கடந்த கற்பனை வருணனைகள் அமைப்பதில் அவருடைய புலமை நெஞ்சமும் ஈடுபட்டது... பெரும்புலவராகிய அவரை, அந்தக் காலத்துச் சொல்லலங்கார மயக்கமும் விடவில்லை. சிலேடை, மடக்கு முதலிய அலங்காரங்கள் அமைந்த செய்யுள்களையும் இயற்றியுள்ளார்'' (தமிழ் இலக்கிய வரலாறு, பக். 210-212).

### இயல்பு நவிற்சியாக அமைந்த கற்பனை

'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்'ல் சப்பாணிப் பருவத்தில் இடம் பெற்றுள்ள ஒரு பாடலில் உக்கிரகுமார பாண்டியனை அம்பிகை வளர்த்த முறையைக் குமரகுருபர சுவாமிகள் உள்ளது உள்ளவாறு, இயல்பு நவிற்சியாகப் பாடுகின்றார். தாயாகிய

அம்பிகை தெய்வக் குழந்தையாகிய உக்கிரகுமார பாண்டியனைத் தன் சிறிய கணைக்காலில் கிடத்துகிறார்; குளிப்பாட்டுகிறார்; உச்சி மோந்து மகிழ்கிறார்; தலைமுடிக்கு எண்ணெய் பூசுகிறார்; காப்பாகத் திருவெண்ணீறும் இடுகிறார்; கொங்கையில் உள்ள பாலைச் சங்கில் வார்த்துப் பாலைக் குலுக்கி வாயிதழை நெரித்து ஊட்டுகிறார்; உடம்பில் இனிய வாசனைப் பொடியையும் பூசுகிறார்; பசும்பொன்னிறமான தனது தொடையில் தூங்க வைக்கிறார்; பிறகு குழந்தையைச் சிறியதும் பருத்த மாணிக்கங்கள் அழுத்தியதுமான தொட்டிலில் ஏற்றுகிறார்; நாவினை அசைத்துத் தாலாட்டுப் பாடுகிறார். ஒரு தாய் தன் குழந்தையைப் பாராட்டி, சீராட்டி, பாலூட்டி, தாலாட்டி, தூங்க வைக்கும் காட்சியை நம் மனக்கண்ணில் காண்பது போல் அழகொழுக ஓர் உயிரோவியமாகவே படைத்துக் காட்டியுள்ளார் சுவாமிகள்:

'...தெய்வக் குழந்தையைச் செங்
கோல்ஆட்டு நின்சிறு கணைக்கால் கிடத்திக்
குளிப்பாட்டி உச்சிமுச்சிக்
குஞ்சிக்கு நெய்போற்றி வெண்காப்பும் இட்டுவளர்
கொங்கையில் சங்குவார்க்கும்
பால்ஆட்டி வாயிதழ் நெரித்துஊட்டி உடலில்
பசுஞ்சுண்ண மும் திமிர்ந்து
பைம்பொன் குறங்கினில் கண்வளர்த் திச்சிறிய
பரூஉமணித் தொட்டில்ஏற்றித்
தாலாட்டி ஆட்டுகைத் தாமரை முகிழ்த்து அம்மை...'

இங்கே ஆண்பாற்புலவரான குமரகுருபர சுவாமிகள், ஒரு தாய் தன் குழந்தையைப் பாராட்டி, சீராட்டி, பாலூட்டி, தாலாட்டி மகிழும் காட்சியை உற்றுநோக்கி அதனை அப்படியே ஓர் அழகிய சொல்லோவியமாகப் படைத்துக் காட்டியிருக்கும் அழகே அழகு. எதையும் உயர்வு நவிற்சியாகப் பாடுவதில் கைதேர்ந்தவரான சுவாமிகள், இயல்பு நவிற்சியாக ஒன்றைப் பாடுவதிலும் வல்லவர் என்பதற்குக் கட்டியம் கூறும் இடம் இது! மேலும், இப்பாடலில் குழந்தையைக் கிடத்திக் குளிப்பாட்டிப் போற்றி இட்டு ஆட்டி நெரித்து ஊட்டித் திமிர்ந்து வளர்த்தி ஏற்றித் தாலாட்டி ஆட்டு கைத் தாமரை என வினையெச்சங்கள் ஒன்றை ஒன்று அடுக்கி 'ஆட்டு' என்ற பெயரெச்ச முதனிலை கொண்டும், அப்பெயரெச்சம் 'கை' என்ற பெயர் கொண்டும் முடிந்திருப்பதும் அழகுக்கு அழகு சேர்ப்பதாகும்.

## 4. அழகிய வடிவம்

பல்வகைப் பாவும் பாவினமும் ஆகிய யாப்புக்களைக் கையாண்ட ஓசை நயமும் பொருட் சிறப்பும் அமையப்பாடும் வல்லமை பெற்றவர் குமரகுருபர சுவாமிகள். அவரது பிரபந்தங்களுள் 'சிதம்பரச் செய்யுட்கோவை', 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்', 'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்', 'மதுரைக் கலம்பகம்', 'காசிக் கலம்பகம்' ஆகியவை இவ்வகையில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை. இன்னமும் குறிப்பாகச் சொல்ல வேண்டும் என்றால், சுவாமிகளின் 'சிதம்பரச் செய்யுட்கோவை' யாப்பிலக்கணத்திற்கு நல்லதோர் உதாரண நூல்.

''இவர் (சுவாமிகள்) பாடிய செய்யுட்களுள் வெண்பா 189; வெண்டாழிசை 5; வெண்துறை 5; வெளி விருத்தம் 2; ஆசிரியப்பா 41; ஆசிரியத் தாழிசை 2; ஆசிரியத்துறை 2; ஆசிரிய விருத்தம் 298; கலிப்பா 38; கலித்தாழிசை 7; கலித்துறை 96; கலிவிருத்தம் 6; வஞ்சிப்பா 2; வஞ்சித் தாழிசை 1; வஞ்சித்துறை 3; வஞ்சி விருத்தம் 4; மருட்பா 6'' (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஆராய்ச்சி', ப. xlv) என்பது உ.வே. சாமிநாத ஐயர் தரும் புள்ளி விவரப் பட்டியல். இதனை உற்றுநோக்குவோர்க்கு ஆசிரிய விருத்தம் (298), வெண்பா (189), கலித்துறை (96), ஆசிரியப்பா (41), கலிப்பா (38) ஆகியவற்றைப் பாடுவதில் சுவாமிகளுக்கு இருந்த பயிற்சியும் புலமையும் புலனாகும்.

'சிதம்பரச் செய்யுட்கோவை'யில் பல வகைத் தொடைகளும் பாங்குற அமைந்திருத்தலைக் காணலாம். திரிபு, வழியெதுகை ஆகிய நயங்கள் சுவாமிகளின் பாடல்களில் ஆங்காங்கே பொருந்தியுள்ளன. சான்றாக, 'மதுரைக் கலம்பக'த்தில் திரிபு அமைந்த ஒரு பாடலை இங்கே காணலாம்:

'உண்ணமுதம் நஞ்சாகில் ஒண்மதுரைச் சொக்கருக்குஎன்
பெண்ணமுதம் நஞ்சேயோ பேதையீர் - தண்ணிதழி
இந்தா நிலம்மேவு எனச்சொலார் என்செய்வாள்
மந்தா நிலமே வரின்?' (114)

செவிலி கூற்றாக வருவது இப்பாடல். இதில் சொக்கப் பெருமான் மாலை தாராமையால் தலைவி வருந்தினாள் என்று கூறுகின்றாள் செவிலி. 'சொக்கருக்கு உணவு நஞ்சு; அஃது இயல்பாகவே நஞ்சு தான். என் பெண்ணாகிய அமுதம் வெறுக்கத்தகும் நஞ்சாகுமோ?' என்பது செவிலியின் வினா. 'தண்ணிதழி இந்தா நிலம் மேவு எனச் சொலார்' என்பதற்கு 'இதோ பெற்றுக்கொள் கொன்றை மலர்மாலை. விரக தாபத்தால் உயிர் நீங்காமல் நெடுங்காலம்

இவ்வுலகத்தில் விரும்பியிரு என்று சொக்கநாதர் கூறார்' என்பது பொருள். 'இந்தா நிலமே எனச் சொலீர்' என்ற பாடத்திற்குத் 'தோழிகள் கூறுவதைக் கொண்டு கூறியதாகக் கொள்க; இதற்கு, நில் அம்மே என்று பிரித்துப் பொருள் கொள்க' என்பர் உ.வே. சாமிநாத ஐயர் (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, ப. *137*). மந்தா நிலம் - தென்றற் காற்று.

வழியெதுகை அமைந்த பாடற் பகுதிகளுள் சில வருமாறு:

'தொந்தி சரிந்திட உந்தி கரந்துஒளிர் சூலுடையாள்' *(19)*
'இரைத்துத் திரைத்து நுரைத்து ஒரு பேராறு' *(27)*
'மூதண்ட வேதண்ட கோதண்ட மோடு' *(34)*
'வாளிகள் கூளிகள் காளிகள் ஞாளியில் ஆளியென' *(41)*
'கொடிமுல்லை விடுகொல்லைக் கடிமுல்லை வெள்ளைப்
பள்ளை' *(108)*
'தோலாத முத்தமிழ் நாவா மூவா மாவாமச்
சூர்வே ரறத்தோடு வேலா நூலா நூலோதும்' *(378)*
'கரும்பும் கரும்பும் அரும்பும் பொரும்படைக் காமர் வில்வேள்'
*(554)*

சுவாமிகளின் பாடல்களில் அடுத்தடுத்து முரண்தொடை அமைந்திருக்கும். இவருடைய நடையின் தனிச்சிறப்புக்களுள் இதுவும் ஒன்று. முரண்தொடை அமைந்த இடங்களுள் சில வருமாறு:

'சிறியேம் பெற்ற பெரும்பேறே' *(45)*
'இடங்கொண்ட மானும் வலங்கொண்ட
வெண்மழுவும்' *(137)*
'புறம் நட்டு அகம் வேர்ப்பார்' *(261)*
'இளையம் முதுதவம் ஆற்றுதும் நோற்று' *(296)*
'மெய்யுணர்ந்தார் பொய்ம்மேற் புலம்போக்கார்' *(304)*
'பெற்றவர்க்கு உண்டோ பெறத்தகா தனவே' *(460)*
'கருமிடற்றன் செஞ்சடையன் வெண்ணீற்றன்' *(508)*
'அம்மநின் தன்மை எம்மனோர் உணர்தற்கு
அரிதே எளிதே ஆதல்
பெரிதே கருணை சிறியர் மாட்டே' *(547)*
'சிறுநுண் ணுசுப்பின் பெருந்தடங்கண் பைந்தேன்' *(648)*

இவற்றில் சொல்முரண், பொருள்முரண் என்னும் இருவகையும் விரவி வந்திருப்பது கண்கூடு.

சுவாமிகள் பாடிய இரண்டு பிள்ளைத்தமிழ்களிலும் இலக்கணப்படியே பலவகைச் சந்தப் பாக்கள் அமைந்துள்ளன. சான்றாக, 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழி'ல் ஓர் ஆண்குரங்கு தாவுவதை வருணிக்கும் விதத்தில் அவர் இயற்றியுள்ள பாடலின் சந்தம், அந்தக் குரங்கு குதித்துக் குதித்துத் தாவுவது போன்ற அமைப்பினைப் பெற்று விளங்குகின்றது. 'தனதன தனதன தத்தன தத்தன தத்தான' என்னும் சந்த அமைப்பில் இயங்கும் அந்தப் பாடலில் இருந்து சில வரிகள் வருமாறு:

'தழைகெழு பொழிலின் முசுக்கலை மையப்புய லிற்பாயத்
தவழிள மதிகலை நெக்குகு புத்தமு தத்தோடே
மழைபொழி இமயமயிற்பெடை கொட்டுக சப்பாணி
மதுரையில் வளரு மடப்பிடி கொட்டுக சப்பாணி' *(42)*

சிறப்புப் பெயர்களுக்கு ஏற்றபடி சந்தத்தை அமைத்துப் பாடுவதில் சுவாமிகள் திறமை படைத்தவர். சித்திவிநாயகன் *(5)*, முத்துக்குமாரன் *(6)*, மதுரை அழகிய சொக்கர் *(198)*, வேலூர் வயித்தியநாதன் *(351)*, தையல் *(352)*, சத்தமாதர்கள் *(358)*, முப்பத்து மூவர் *(13)*, முப்பத்து முக்கோடி தேவர்கள் *(359)* என்றும் பெயர்களுக்கு ஏற்ற சந்தத்தை அமைத்துச் சுவாமிகள் பாடியுள்ள பாடல்கள் ஓசை நயமும் பொருட்செவ்வியும் உடையன. சான்றாக, 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழி'ல் சத்தமாதர்கள் குறித்து இடம்பெற்றுள்ள பாடலை இங்கே காணலாம்.

'பயில்தரு முதுமறை நூலைத் தெரித்தவள்
பகைதொகு புரம்எரி மூளச் சிரித்தவள்
பனிவரை பகநெடு வேலைப் பணித்தவள்
படுகடல் புகையெழ வார்வில் குனித்தவள்
எயிறுகொடு உழுதுஎழு பாரைப் பெயர்த்தவள்
எறிதரு குலிசம் விடாமல் தரித்தவள்
இடுபலி கொளும்ஓர் கபாலக் கரத்தினள்
எனும்இவர் எழுவர்கள் தாளைப் பழிச்சுதும்' *(358)*

'தனதன தனதன தானத் தனத்தன' என்னும் சந்த அமைப்பில் இயலும் பாடல் இது. அறுமுகவேளைப் புரக்க அபிராமி, மாகேசுவரி, கௌமாரி, நாராயணி, வாராகி, இந்திராணி, காளி என்னும் எழுவரது தாளையும் துதிப்போம் என்று இங்கே நயமுறப் பாடியுள்ளார் சுவாமிகள்.

சுவாமிகள் பாடிய 'மதுரைக் கலம்பகம்', 'காசிக் கலம்பகம்' என்னும் இரண்டு கலம்பகங்களிலும் பாவும் பாவினமும் ஆகிய பல்வகை யாப்புக்களில் அமைந்த பாடல்கள் உள்ளன. குறிப்பாக, கலம்பகங்கள் இரண்டனுள்ளும் 'புய வகுப்பு' உள்ளது. சான்றாக, 'மதுரைக் கலம்பக'த்தில் 'புய வகுப்பு' என்னும் உறுப்பில் அமைந்த பாடலில் இருந்து ஓசை நயம் பொருந்திய ஒரு பகுதியைக் காண்போம்:

'தருசுவை அமுதுஎழ மதுரமது ஒழுகு
பசுந்தமிழ் மாலை நிரம்பப் புனைந்தன
தளிரியல் மலைமகள் வரிவளை முழுகு
தழும்புஅழ காக அழுந்தக் குழைந்தன
தளர்நடை யிடும்இள மதலையின் மழலை
ததும்பிய ஊறல் அசும்பக் கசிந்தன
தமிழ்மது ரையில்ஒரு குமரியை மருவு
சவுந்தர மாறர் தடம்பொற் புயங்களே' *(115)*

'தனதன தனதன தனதன தனன தனந் தனதான தனந்தத் தனந்தன' என்னும் சந்தத்தில் அமைந்த பாடற்பகுதி இது. இது தவிர, 'மதங்கியார்', 'பிச்சியார்', 'பறவைவிடு தூது', 'மேகவிடு தூது', 'ஊர்', 'மடல்', 'சம்பிரதம்', 'மடக்கு' முதலான உறுப்புக்களிலும் சுவாமிகள் சந்த நயம் அமைந்த பாடல்களை இயற்றியுள்ளார். காட்டாக, 'மதுரைக் கலம்பக'த்தில் 'சம்பிரதம்' என்னும் உறுப்பில் அமைந்த பாடலின் ஓசை நயத்தையும் பொருட் செவ்வியையும் இங்கே காணலாம். 'தத்தனை தத்தனை தத்தனை தத்தனை தத்தனை தந்த தனனா' என்னும் சந்தத்தில் அமைந்த அப்பாடல் வருமாறு:

'மட்டறுக டற்புவிய னைத்தும்ஓர் இமைப்பினின்
மறைத்துஉடன் விடுத்தி டுவன்ஏற்று
எட்டுவரை யைக்கடலை முட்டியுள் அடக்கிடுவன்
இத்தனையும் வித்தை அலவால்
துட்டமத னைப்பொடி படுத்தி மதுரைக்குள்உறை
சொக்கர்குணம் எட்டி னொடுமா
சிட்டர்கடு தித்திடு மகத்துவம் அனைத்தும்ஒரு
செப்பினுள் அடக்கிடுவேனே' *(185)*

இந்திரசால வித்தையில் வல்ல ஒருவன் தன் சிறப்பைத் தானே கூறுவதாக அமைந்தது இப்பாடல். செயற்கு எளிய செயல்களையே செய்தற்கு அரிய செயல்கள் எனப் பொருள்படுவதற்கு ஏற்ற சொல்லமைதியால் இதனைக் கூறுவர்

சுவாமிகள். 'ஓர் இமைப்பினின் மறைத்து உடன் விடுத்திடுவன்' - 'ஒரு கணத்துள் மறைத்து உடனே வெளிப்படுத்துவேன்' என்பது வேறு பொருள்; 'ஒருமுறை இமைத்தலினால் மறையச் செய்து உடனே இமைத்தலை விடுப்பேன்' என்பது செம்பொருள்; கண்ணை இமைக்கும் போது இமைப்பவனுக்கு அக்கணத்தில் உலகம் மறைதல் இயல்பே. 'ஏற்று எட்டு வரையைக் கடலை முட்டியுள் அடக்கிடுவன்' - 'தாங்கி எட்டு மலைகளையும் சமுத்திரத்தையும் மூடிய கைக்குள் அடக்கி விடுவேன்' என்பது வேறு பொருள்; 'வாங்கிக் கொண்டு எள் துவரை கடலை என்னும் தானியங்களை முஷ்டிக்குள் அடக்கிவிடுவேன்' என்பது செம்பொருள். 'இத்தனையும் வித்தையல' என்றது 'என் பெருவன்மையால் செய்வன்' என வேறு பொருளுக்கு ஏற்ற குறிப்பையும் கொண்டது. குணம் எட்டாவன: தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை என்பன. சிட்டர்கள் - திருஞான சம்பந்த மூர்த்தி நாயனார் முதலியோர். ஒரு செப்பு - ஒரு சொல் (பிரணவம்); ஒருவகைப் பாத்திரம் என்பது வேறு பொருள்.

**கற்றோர்க்குக் களிப்பருளும் கவிதைகள்**

'மாசில் பனுவற் புலவர் புகழ்புல
நாவிற் புனைந்த நன்கவிதை'

என்பர் நல்லந்துவனார் (பரிபாடல் *6: 7-8*).

'வினையொழியவே ராச,
காரியஞ் செய்யும் கவிதையே'

என்பர் 'தமிழ்விடுதூது' ஆசிரியர். இவ்விரு புலவர் பெருமக்களையும் அடியொற்றி,

'நாடும் கமலேசர் நான்மணி மாலைக்குமிகப்
பாடும் கவிதைநலம் பாலிக்கும்' *(308)*

என்பர் குமரகுருபர சுவாமிகள். அவர்தம் கவிதைகள் சொல்லினிமை, பொருளினிமை ஆகிய அழகுகள் யாவும் ஒருங்கே பெற்று,

'குமரகுருபரன் கவிதையிற் போல்
கற்றோர்க்கு இதயம் களியாதே'

எனக் கூறும் வண்ணம் விளங்குகின்றன



# 6. சைவ சித்தாந்த விளக்கம்

"அருணகிரியார், குமரகுருபரர், தாயுமானவர் பாடல்கள் பலவும் சித்தாந்த விளக்கமே யாகும்.''

- சோ.ந. கந்தசாமி[1]

குமரகுருபரர் ஒரு பரம்பரைச் சைவக் குடும்பத்தில் தோன்றியவர்; சைவ மரபுகளைக் கட்டிக் காப்பதில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தவர்; சைவ சமய ஒழுகலாறுகளைக் கடைப்பிடித்து வாழ்ந்து வந்தவர்; தருமபுர ஆதீனத்தின் நான்காவது குரவராக வீற்றிருந்த மாசிலாமணி தேசிகரைத் தம் ஞானாசிரியராக ஏற்றுக் கொண்டவர்; சமய குரவர்கள், நாயன்மார்கள், சிவனடியார்கள் ஆகியோர் பெருமைகளைத் தம் பிரபந்தங்களுள் பல இடங்களிலும் பேசி மகிழ்ந்தவர்; சைவ சித்தாந்த மெய்ப்பொருட் கொள்கைகளிலே பழுத்த புலமை கைவரப் பெற்றவர்; சைவ சித்தாந்த பரிபாஷைச் சொற்களைத் தம் நூல்களுள் பல இடங்களில் நுட்பமாகக் கையாண்டிருப்பவர். எனவே, குமரகுருபர சுவாமிகளின் வாழ்விலும் வாக்கிலும் சைவ சித்தாந்தத் தத்துவ நெறிகள் சிறப்பிடம் பெற்றிருப்பதிலே வியப்பேதும் இல்லை. ஆனாலும், வியப்பைத் தரும் செய்தி ஒன்றை அறிஞர் சி.சு. மணி 'குமரகுருபர முனிவர் உணர்த்தும் சைவ சித்தாந்தம்' என்னும் தம் நூலில் சுட்டிக்காட்டுகின்றார். சிந்தனையைத் தூண்டுகின்ற அச்செய்தி வருமாறு:

''சமய குரவர்களாகிய திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்தி, நாயனார், மாணிக்கவாசகர் ஆகிய மூவரையும் எடுத்து மொழிந்து பேசிய குமரகுருபரர், சந்தான ஆசாரியர்களாகிய மெய்கண்ட தேவ

---

1. இந்தியத் தத்துவக் களஞ்சியம்: தொகுதி 3, ப. 30.

நாயனார், அருள்நந்தி சிவம், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவம் ஆகியோரைத் தம் நூல்களுள் பெயர் சுட்டிக் குறிப்பிடவில்லை; அல்லது அவர்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை மறைமுகமாகவேனும் சுட்டினாரில்லை'' (ப. 25).

சைவ சமய குரவர்களைப் பெயர் சுட்டிப் பாராட்டியது போலவே, கமலை ஞானப்பிரகாசரையும், தருமபுர ஆதீனத்து முதல் குரவராக அருளாட்சி செய்த குருஞான சம்பந்தரையும், தம் ஞானாசிரியராகிய மாசிலாமணி தேசிகரையும் பெயர் சுட்டிப் பாராட்டியுள்ளார் குமரகுருபர சுவாமிகள்.

### கந்தர் கலிவெண்பாவில் சைவ சித்தாந்தம்

குமரகுருபர சுவாமிகளின் நூல்களுள் 'கந்தர் கலிவெண்பா'வுக்குத் தனியிடம் ஒன்று உண்டு; அதேபோல் சுவாமிகளின் உள்ளத்திலே முருகப்பெருமானுக்குச் சிறப்பான ஓர் இடம் உண்டு. பல கடவுளரையும் பாடும் இயல்பினராயினும் தம்மை இளமையிலே ஆட்கொண்ட முருகக் கடவுளிடத்தே சுவாமிகள் தனியன்பு பூண்டவர்; அவரையே வழிபடு கடவுளாகக் கொண்டவர். ''என்னுயிர்க்கு ஒக்கும் இளஞ்சேய்'' (326) என்று அவர் முருகப் பெருமானைத் தனிப்படச் சுட்டிக் கூறுவதில் இருந்து இதனை உணரலாம்.

குமரகுருபர சுவாமிகளின் நூல்களுள் 'கந்தர் கலிவெண்பா' ஒன்றில்தான் சைவ சித்தாந்தம் முழுமையாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது; நூலின் தொடக்கத்தில் இருந்து 36 கண்ணிகள் முடிய சைவ சித்தாந்தக் கோட்பாடுகள் நிரந்தினிது தரப்பட்டுள்ளன. 'சமயப் பயிற்சியோடு நாள்தோறும் சாத்திரக் கொள்கைகளையும் நியமமாகப் பயில்வதற்கு வழிவகுக்க வேண்டும்' என்ற ஒரு சீரிய



நோக்கத்தினை மனத்தில் கொண்டு சுவாமிகள் 'கந்தர் கலிவெண்பா'வினை யாத்துள்ளார் என்றும், எனவே தான் நூலின் தொடக்கத்திலேயே சுவாமிகள் சைவ சித்தாந்த சாத்திரச் செழும்பொருளைச் சாறாகப் பிழிந்து தந்துள்ளார் என்றும் எண்ணத் தோன்றுகிறது.

"கந்தர் கலிவெண்பாவினுள், குமரகுருபரர் சைவ சித்தாந்தக் கொள்கைகளைத் தொகுத்துரைத்தமை போலப் பிறர் எவரும் சிறு துதி நூலுள் அவற்றை யியம்பவில்லை. அவர் ஐந்தாண்டிலேயே இந்நூல் இயற்றினராகலின், முற்பிறப்பிலேயே அவர் சைவ சித்தாந்த நூற்பயிற்சியிற் றலைசிறந்தவ ரென்பது ஊகிக்கப்படும்" (குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், ப. 33) என்னும பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளையின் கூற்று இங்கே நினைவுகூரத் தக்கதாகும்.

அறிஞர் சி.சு. மணி 'கந்தர் கலிவெண்பா' குறித்துக் கூறியிருக்கும் ஒரு கருத்து முற்றிலும் மாறுபாடானது; எனினும், ஆய்வுலகம் ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது. அக்கருத்து வருமாறு: "குமரகுருபர முனிவரின் நூல்களை ஆழ்ந்து ப்டிப்பவர்களுக்கு ஓர் உண்மை புலப்படாமல் போகாது... தருமபுர மடத்திற்கு எழுந்தருளிய பின்னர் முனிவர் இயற்றிய நூல்கள் சிதம்பர மும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, பண்டார மும்மணிக்கோவை, காசிக் கலம்பகம் என்பனவாகும். இந்நூல்கள் யாவிலும் சைவ சித்தாந்தக் கருத்துக்களும், சித்தாந்த பரிபாஷைச் சொற்களும் மிகுதியாகக் காணப்படுகின்றன. இது தருமபுரத் தொடர்பு ஏற்பட்ட பிறகு குமரகுருபரர் திருவாக்கில் சைவ சித்தாந்தம் பெருமளவில் பயின்றுவந்ததை எடுத்துக்காட்டுகிறது... இவற்றை எல்லாம் ஒருங்கு வைத்து எண்ணும்போது கந்தர் கலிவெண்பா குமரகுருபர முனிவர் தருமபுர ஆதீனத்தின் அருட்குடைக்குள் சார்ந்த பிறகே இயற்றப் பெற்றிருத்தல் வேண்டும் என்று தோன்றுகிறது ... உயிர்க்குயிரான நாயகனைத் தொலைவில் இருந்து கொண்டும் துறவு நிலையின் முதிர்ச்சி பெற்ற பின்பும் குமரகுருபரர் பாடிப் பரவினார் என்பதே பொருந்தும்" (குமரகுருபர முனிவர் உணர்த்தும் சைவ சித்தாந்தம், ப. 52-53).

## சிவஞான போதச் சொற்பொருளாட்சி

சைவ சித்தாந்தத்தின் ஒப்பற்ற நூலான சிவஞான போதத்தின் முதல் நூற்பாவிலேயே மெய்கண்ட தேவ நாயனார், உலகம் அவன், அவள், அது என்று கட்டி அறியப்படுவதாயும், தோன்றி நின்று அழிவதாயும் உள்ளது என வரையறுத்து மொழிகின்றார்.

'அவன் அவள் அது எனும் அவைமூ வினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கிமலத்து உளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்'

என்பது அவரது திருவாக்கு. இவ்வாக்கினை மனம் கலந்து பயின்ற குமரகுருபர சுவாமிகள், இதன் சொல்லையும் பொருளையும் தம் பிரபந்தங்களில் இரண்டு இடங்களில் பொன்னே போல் போற்றிக் கையாளுகின்றார்.

'அவன்அவள் அதுவெனும் அவைகளில் ஒருபொருள்
இவன்என உணர்வுகொடு எழுதரும் உருவினை' *(105)*

என 'மதுரைக் கலம்பக'த்தில் ஒரு பாடலிலும்,

'அவன்அவள் அதுவெனும் அவைகளின் உளன்அலன்
எவன்அவன் இவன்என எதிர்தரு தகைமையை' *(600)*

எனக் 'காசிக் கலம்பக'த்தில் ஒரு பாடலிலும் சுவாமிகள் மெய்கண்ட தேவ நாயனாரை அடியொற்றிப் பாடியிருக்கக் காண்கின்றோம்.

சிவஞான போதம் எட்டாம் நூற்பாவின் முதல் அதிகரணத்தில் மெய்கண்ட தேவ நாயனார் எடுத்துரைக்கும் ஏது,

'மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய
ஞானத்தைக் காட்டி அல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்'

என்பதாகும். இங்ஙனம் சிவஞான போத ஏதுவில் வரும் பொருள் நுட்பங்களை யெல்லாம் குமரகுருபர சுவாமிகள் செவ்விதின் உணர்ந்திருந்தார் என்பதற்கு, அவர் இயற்றிய அருளிய 'கந்தர் கலிவெண்பா'வில்,

'விரதமுத லாயபல மெய்த்தவத்தின் உண்மைச்
சரியைகிரி யாயோகம் சார்வித்து...' *(1)*

என வரும் வரிகளே தக்க சான்றாகும். இங்கே சரியையைத் தனித்தும், கிரியா யோகம் என்பதைத் தொகுத்து ஒன்றாக்கியும் சுவாமிகள் கையாண்டிருப்பது கூர்ந்து நோக்கத்தக்கதாகும்.

### சைவ சித்தாந்தத் தேனமுது

சைவ சித்தாந்தத்தின் சிறப்பைச் சுவாமிகள் 'பண்டார மும்மணிக்கோவை'யில் ஒரு பாடலில் விரிவாக உரைக்கின்றார்: ''இறைவன் உயிர்த் தொகுதிகள் உய்யும்பொருட்டுச் சுத்த மாயை என்னும் வயலினிடையே அருளாகிய வித்தை இட்டுக் கருணையாகிய நீரைப் பாய்ச்சி வேதம் என்னும் மரத்தை வளர்த்தான். அம்மரத்தினைச் சார்ந்தவர்களுள் பலர் இலை

கொண்டு உவந்தனர்; பலர் தளிர் கொண்டு உவந்தனர்; ஏனையோர் அரும்பும் மலரும் பிஞ்சும் காயும் கொண்டு உவந்தனர். இங்ஙனம் இருப்ப, அம்மரத்தின் உச்சியிலே பழுத்த வேதாந்தம் என்னும் இன்பம் தரும் அருங்கனி பிழிந்து அதன் சாரம் ஆகிய சைவ சித்தாந்தத் தேனமுது நுகர்ந்தனர் சிலரே ஆவர்.''

'பல்லுயிர்த் தொகுதியும் பயங்கொண்டு உய்களனக்
குடிலை என்னும் தடவயல் நாப்பண்
அருள்வித்து இட்டுக் கருணைநீர் பாய்ச்சி
வேதம் என்னும் மாதவம் வளர்த்தனை
மாதவம் அதனில் படுபயன் பலவே, அவற்றுள்
இலைகொண்டு உவந்தனர் பலரே இலைஒரீஇத்
தளிர்கொண்டு உவந்தனர் பலரே தளிர்ஒரீஇ
அரும்பொடு மலர்பிஞ்சு அருங்காய் என்றுஇவை
விரும்பினர் கொண்டுகொண்டு உவந்தனர் பலரே
அவ்வாறு உறுப்பும் இவ்வாறு பயப்ப
ஒரும்வே தாந்தம்என்று உச்சியில் பழுத்த
ஆரா இன்ப அருங்கனி பிழிந்து
சாரம் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமுது அருந்தினர் சிலரே ஆனவர்' (575)

இங்கே சைவ சித்தாந்தத்தின் தனிப்பெருமையைச் சுவாமிகள் விளக்கியிருக்கும் திறம் அறிந்த மகிழ்தற்கு உரியது. வைதிக சைவத்தின் பிரிவுகளைச் சார்ந்தவர்கள் தத்தம் பக்குவத்திற்கு ஏற்றவாறு பயனைப் பெற்றனர் என்பதை மரம், இலை, தளிர், அரும்பு, மலர், பிஞ்சு, காய் என்னும் அழகிய உருவகத்தின் வாயிலாக உணர்த்தியுள்ளார் சுவாமிகள்.

இங்ஙனம் சைவ சித்தாந்தச் செந்நெறியின் சிறப்பினை எடுத்துக்காட்டியுள்ள சுவாமிகள், பல்வேறு சமயங்களைச் சார்ந்தவர்கள் பரம்பொருளின் உண்மை இயல்பினை உணராமல் தத்தம் மனத்திற்கு ஏற்றவாறு பேசித் திரிவதையும், தமக்குள் முரண்பட்டு நிற்பதையும் தம் பிரபந்தங்களில் ஆங்காங்கே அழகிய கற்பனைகள் வாயிலாகவும் சிறந்த உவமைகள் வாயிலாகவும் சுட்டிக்காட்டியுள்ளார். இவ்வகையில் சில சான்றுகளைக் காண்போம்.

அங்கயற்கண் அம்மை அம்மானை ஆடியருளுகிறாள். அவள் கையில் ஏந்திய முத்தால் இழைத்த அம்மனைக் கழங்கில்

அவளுடைய புன்முறுவல் படுகிறது. அதனால் கழங்கு வெண்மை நிறம் பெற்றுப் பொலிகிறது. இதனைக் கண்டவர்கள் அக்கழங்கு வெண்முத்தினால் இழைக்கப்பெற்றது என்கின்றனர். அம்மையின் கையிலே கழங்கு படிகிறபோது, அது அவள் கைம்மலரின் செந்நிறத்தைப் பெறுகிறது. அதனைக் கண்டவர்கள் அக்கழங்கு மாணிக்கத்தினால் இழைக்கப்பட்டது என்று கூறுகிறார்கள். அம்பிகை உயரே எறிந்த கழங்கில் அவளுடைய கண்ணின் கருமணி படுகிறது. அக்கடைக்கண்ணின் நிறம் பட்டு மீண்டும் நிறம் மாறுகிறது அக்கழங்கு. அப்போது அதனைக் கண்டவர்கள் அது நீலமணியால் இழைக்கப்பட்ட கழங்கு என்கிறார்கள். இவ்வாறு தத்தம் மனத்திற்கு ஒப்ப அவர்கள் உரைப்பது, பல்வேறு சமயங்களைச் சார்ந்தவர்கள் பரம்பொருளின் உண்மை இயல்பினை அறியாது தத்தமக்கு ஏற்றவாறு கூறுவதைப் போல இருந்தது என்கிறார் குமரகுருபர சுவாமிகள்.

'தம்மனம் ஒப்ப உரைப்பன மற்றைச்
சமயத்து அமைவுபெறார்
தத்தமின் நின்று பிதற்றுவ பொருவ.' (82)

சோழ நாட்டில் வாழும் இளநங்கையர் தம் நீண்ட கூந்தலை அகிற்புகையிட்டு ஈரம் புலர்த்துவார்கள். அந்த அகிற் புகையின் படலம் நாடு முழுவதும் பரந்து மூடும். இப்படலம் மறைப்பதனால் செழுமை மிக்க நெல்லைக் கரும்பு என்றும், கரும்பினைப் பூங்கமுகு என்றும் தலைமயங்கி மற்றையோர் பேசுவார்கள். இது மாயக் கடலுள் மூழ்கி மற்றைச் சமயவாதிகள் தடுமாறுவதை ஒத்திருந்தது என்று 'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்'ல் வருகைப் பருவப் பாடல் ஒன்றில் கூறுகின்றார் குமரகுருபர சுவாமிகள்.

'திருவாரூர் நான்மணிமாலை'யில் ஒரு பாடலில் சமயக் கணக்கர் மதி வழி கூறும் பல்வேறு சமயத்தவரைப் பற்றியும், அவற்றிற்கு மாறாகப் பொதுவினில் நிற்கும் மேன்மை கொள் சைவத் திறத்தைப் பற்றியும் குமரகுருபர சுவாமிகள் கூறுகின்றார். அவரது கூற்றினைத் தாங்கி நிற்கும் பாடல் வருமாறு:

'இதுவே பொருள்என்று எவர்எவர் கூறினும் ஏற்பதுஎது
அதுவே பொருள்என்று அறிந்துகொண்டேன்அப் பொருள் எவர்க்கும்
பொதுவே என்றாலும் பொருந்தும் எல்லோர்க்கும் பொதுவில் நிற்கும்
மதுவே மலர்ப்பொழில் ஆரூரினும் வைகும் வைகலுமே.'(330)

இப்பாடலில் 'இரட்டுற மொழிதல்' என்னும் உத்தியைக் கையாண்டு, 'பொதுவில் நிற்கும்' என்பதற்கு, 'சபையில் - அம்பலத்தில் - நிற்கும்' என்றும், 'பொதுவான இடத்தில் நிற்கும்' என்று இருபொருள்படும்படியும், 'ஆரூரினும் வைகும்' என்பதற்குத் 'திருவாரூரிலும் எழுந்தருளியிருக்கும்' என்றும், 'யாருடைய ஊரிலும் தங்கும்' என்றும் இருபொருள்படும்படியும் சுவாமிகள் கூறுவது நயம் மிக்கதாகும். ''விரிவிலா அறிவி னோர்கள் வேறொரு சமயம் செய்தே, எரிவினால் சொன்னாரேனும் எம்பிராற்கு ஏற்ற தாகும்'' என்னும் திருநாவுக்கரசர் கூற்றும், ''யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே, மாதொரு பாகனார்தாம் வருகுவர்'' என்னும் சிவஞான சித்தியார் வாக்கும் இங்கே நினைத்தற்கு உரியன.

இதுவரை, பொதுநிலையில் குமரகுருபர சுவாமிகளின் பாடல்களில் இடம் பெற்றிருந்த சைவ சித்தாந்த விளக்கம் குறித்துக் கண்டோம்; இனி, சிறப்புப் பார்வையாக, முப்பொருள் இயல்புகளாகச் சுவாமிகள் தம் பாடல்களில் கூறியுள்ளவற்றைக் காண்போம்.

## 1. இறைவனின் இயல்புகள்

சைவ சித்தாந்தப் பெருநூல்கள் எடுத்துரைக்கும் இறைவனின் இயல்புகளைக் குமரகுருபர சுவாமிகள் தம் பிரபந்தங்களுள் பல்வேறு இடங்களில் அமைத்துக் கூறியுள்ளார். பதச்சோறாக, 'சிதம்பரச் செய்யுட்கோவை'யில் இருந்து ஓர் இடத்தை இங்கே சுட்டிக்காட்டலாம்:

'அறிவினில் அறிபவர் அறிவதை அலதுஒரு
குறியினில் அறிவுறு குறியினையலை.

உளவயின்உளவளவு உணர்வதை யலதுஉரை
அளவையின் அளவிடு அளவினையலை.

அருவெனின் உருவமும் உளைஉரு வெனின்அரு
வுருவமும் உளைஅவை உபயமும் அலை.

இலதுஎனின் உளதுஉளது எனின்இலது இலதுஉளது
அலதுஎனின் நினதுஉருவு அறிபவர் எவர்?' (548)

என்று இறைவனின் இயல்புகளைச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார் சுவாமிகள்.

## அருள் சுரப்பவன் - இருள் துரப்பவன்

சைவ சித்தாந்தத் தத்துவ நெறியிலே திருவருளுக்கு மிகச் சீரிய இடம் உண்டு. அங்கிங்கு எனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறைவனின் திருவருட் பெருக்கிலே இவ்வுலகம் நிலைபெறுகிறது. இறைவன் திருவருளே உயிர்களைப் பாசங்களின் கட்டுக்களில் இருந்து விடுவித்து, வீடுபேற்றை நோக்கிச் செலுத்துகின்றது. இருள் மலப் பிணிப்பால் கட்டுண்டு கிடக்கின்ற உயிர்கள், தம் அவல நிலையை உணர முடியாத அளவிற்கு அறியாமையில் மூழ்கிக் கிடக்கின்றன. அவற்றின் துன்பத்தை முழுவதுமாக உணர்ந்தவன் இறைவன் ஒருவனே. துன்பங்களில் இருந்து அவற்றை மீட்க வல்லவனும் அவன் ஒருவனே. அவனது இன்னருளால்தான் இருள் அகலுமே தவிர, உயிர்களின் முயற்சியால் அது கைகூடாது. சைவ சித்தாந்தத்தில் பயின்று வரும் இக்கருத்துக்களை உள்ளடக்கி இரண்டே வரிகளில் 'காசிக் கலம்பக'த்தில் திருவருளின் பெருமையை எடுத்துரைக்கின்றார் சுவாமிகள்:

'அரள்சு ரந்தனை
இருள்து ரந்தனை' (600)

'இருள் துரந்தனை' என்பதற்கு 'அஞ்ஞானத்தை ஓட்டினை' என்று பொருள் கூறுவர்.

## அளப்பதற்கு அரிய பெருந்தன்மையன்

'இறைவன் தன் பெருந்தன்மையைத் தானே இரங்கி உள்நின்று உணர்த்த உணர்வதே அல்லாது உயிர்கள் தாமாக உணருமாறில்லை. தெளிவற்ற கேள்வியும், சில நூற்பயிற்சியும் இறைவனின் அளவற்ற பெருமையை அளப்பதற்குப் போதா. உயிர்களுக்கு வயது முதிர முதிர, அறிவு மயங்கும், ஆயுளும் குறையும், துன்பமும் பிணியும் மிகும்' என்று 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் ஒரு பாடலில் வலியுறுத்திக் கூறுகின்றார் குமரகுருபர சுவாமிகள்.

'நின்பெருந் தன்மை நீயே இரங்கி
உள்நின்று உணர்த்த உணரின் அல்லதை
நுண்ணூல் எண்ணி நுணங்க நாடிப்
பழுதின்று எண்ணிப் பகர்தும் யாம்எனின்
முழுதும் யாரே முதுக்குறைந் தோரே...
தெளிவில் கேள்வியின் சின்னூல் ஓதி

அளவா நின்னிலை அளத்தும் போலும்
அறிவும் ஆயுளும் குறையக் குறையாத
பையுணோய் எண்ணில படைத்துப்
பொய்யுடல் சுமக்கும் புன்மை யோமே' (466)

'பன்னூல் ஓதியும் அறியப்படாத இறைவனின் நிலையைச் சிற்றறிவும் சில்வாழ்நாளும் உடைய உயிர்கள் சின்னூல் ஓதி அளக்க முயலுதல் பேதைமை' என்பது சுவாமிகளின் கருத்து.

## எண்குணத்தான்

இறைவன் எட்டுக் குணங்கள் பொருந்தியவன் என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. அவை தன்வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவில் ஆற்றலுடைமை, வரம்பில் இன்பமுடைமை என்பனவாம். 'எண்குணத்தான்' என்னும் திருக்குறள் (9) தொடருக்கு எழுதிய உரையில் பரிமேலழகர் இவ்வெட்டுக் குணங்களைச் சுட்டுவர். குமரகுருபர சுவாமிகளும் 'மதுரைக் கலம்பக'த்தில் 'சம்பிரதம்' என்னும் உறுப்பில் அமைந்த பாடலில், 'சொக்கர் குணம் எட்டினொடும்' (185) என்னும் தொடரால் இக்கருத்தினைப் புலப்படுத்துவர்.

## உயிர்களோடு அத்துவிதமாய் நிற்பவன்

இறைவன் உயிர்களோடு அத்துவிதமாய் நிற்பான் என்பது சைவ சித்தாந்தத்தில் அழுத்தமாகக் கூறப்படும் கொள்கை. 'அத்துவிதம்' என்ற சொல் அபேதத்தைக் குறிக்கும் என்றும், பேதத்தைக் குறிக்கும் என்றும், பேதாபேதத்தைக் குறிக்கும் என்றும் மூவகையாகக் கருத்துரைப்பர் சமயவாதிகள். இம்மூவகைக் கருத்துக்களினின்றும் வேறுபட்டு, 'அத்துவிதம்' என்ற சொல்லுக்கு 'இறைவன் கலப்பினால் ஒன்றாய், பொருள் தன்மையால் வேறாய், உயிர்க்கு உயிராதல் தன்மையால்உடனாய் நிற்பதே அத்துவிதம்' எனப் பொருள்கூறும் சைவ சித்தாந்தம். இக்கருத்தினைத் தழுவியே குமரகுருபர சுவாமிகளும் தமது 'பண்டார மும்மணிக்கோவை'யின் ஐந்தாவது பாடலில்,

'அந்நியம் என்றும் அநநியம் என்றும்
இந்நிலை இரண்டும் எய்திற்று என்றும்
பல்வேறு உரைக்குநர் சொல்வழிப் படாது
திவ்வியம் பழுத்த சைவசித் தாந்தம்' (569)

என நுட்பமாக விளக்குகிறார். இதில் 'அந்நியம்' என்பது பேதத்தையும், 'அநநியம்' என்பது அபேதத்தையும், 'இந்நிலை இரண்டு எய்திற்று' என்பது பேதாபேதத்தையும் குறிக்கும். 'திவ்வியம்' என்பதற்குத் 'தெய்வத்தன்மை' எனப் பொருள் கூறுவர்.

### எண்வகை உறுப்பின் வடிவு கொண்ட ஒருவன்

சிவபெருமான் உயிர்களின் பொருட்டு அட்ட மூர்த்தமாம் வடிவு கொண்டு அருளுகிறான் என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. குமரகுருபர சுவாமிகள்,

'இருபெரும் சுடரும் ஒருபெரும் புருடனும்
ஐவகைப் பூதமோடு எண்வகை உறுப்பின்
மாபெரும் காயம் தாங்கி...' *(460)*

என்று 'சிதம்பர மும்மணிக்கோவை'யிலும்,

'மருவருக்கன் மதிவளிவான் யமானன் தீநீர்
மண்எனும் எண்வகை உறுப்பின் வடிவுகொண்ட
ஒருவன்...' *(534)*

என்று 'சிதம்பரச் செய்யுட்கோவை'யிலும் இறைவனின் அட்ட மூர்த்தங்களைக் குறிப்பிடுகின்றார். சூரிய சந்திரர், இயமானன், பஞ்ச பூதம் என்னும் எட்டும் இறைவன் திருவுருவம் ஆகும். "இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி இயமானனாய் எறியும் காற்றுமாகி, அருநிலைய திங்களாய் ஞாயிறாகி ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகி" என்னும் அப்பர் பெருமானின் வாக்கு இங்கே நினைவுகூரத்தக்கது.

## 2. உயிர்களின் இயல்பு

சைவ சித்தாந்தக் கொள்கையின்படி, உயிர்கள் எண்ணிறந்தன. அவைகள் படைக்கப்படுவதில்லை. பதியினைப் போலவே பசுக்களும் - உயிர்களும் - அநாதி. உயிர்கள் அறிவுடைப் பொருட்கள். ஆனால், அவ்வறிவு சிற்றறிவு; உணர்த்த உணரும் தன்மை உடையது; கருவி கரணங்களுக்குக் கட்டுப்பட்டு நிற்பது. தோற்றமில் காலந்தொட்டே ஆணவ மலப் பிணிப்பினுள் அகப்பட்டுக் கேவல நிலையில் இருக்கும் உயிர்களை உடல், கருவி, உலகம், நுகர்ச்சிப் பொருள்கள் ஆகியவற்றை வழங்கி, பக்குவப்படுத்தி, வீட்டுநிலையை நோக்கிச் செலுத்துகிறான் இறைவன். உடலோடு இருக்கும் காலத்து இறைவனின் மறைப்பாற்றலுக்குக் கட்டுப்பட்டு இவ்வுயிர்கள் வாழ்கின்றன.

உயிர்கள் யாவும் கட்டிலிருந்து விடுபட்டு வீடுபேற்றை அடைவதற்கு உரிமை உடையன.

குமரகுருபரர் தம் பிரபந்தங்களுள் பல இடங்களில் உயிர்கள் பற்றிய இக்கொள்கைகளை விளக்கிச் செல்லுகிறார். 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் ஒரு பாடலில் உயிர்கள் அநாதி என்பதையும், பல்வேறு பிறவிகள் எடுத்தும் உயிர்கள் தம் சிறுமையை உணர்வதில்லை என்பதையும், முற்றும் அறியும் அறிவு இல்லாதது உயிர் என்பதையும் சுவாமிகள் சுட்டிக்காட்டுகிறார். இக்கருத்துக்களைப் புலப்படுத்தும் பாடற் பகுதி வருமாறு:

'என்றுநீ உளைமற்று அன்றே யான்உளேன்
அன்றுதொட்டு இன்றுகாறு அலமரு பிறப்பிற்கு
வெருவரல் உற்றிலன் அன்றே ஒருதுயர்
உற்றுழி உற்றுழி உணர்வதை அல்லதை
முற்றும் நோக்க முதுக்குறைவு இன்மையின்' (469)

மேலும், இக்கருத்துக்களின் தொடர்ச்சியாக உயிருக்கும் இறைவனுக்கும் உள்ள ஒற்றுமைகளை - சிவத்துக்கும் சீவனுக்கும் உள்ள ஒப்புமைகளை - 'பண்டார மும்மணிக்கோவை'யின் எட்டாவது பாடலில் எடுத்துக்காட்டுகின்றார் சுவாமிகள்.

'எஞ்ஞான்று உளைஉளம் அஞ்ஞான்று யாமே
அழியாமை நிலைமையை அனையம் யாமே
வியாபகம் நினக்குஉளது யாமும்அஃது உளமே
அறிவுஎனப் பெயரிய பெயரினை அப்பெயர்
பிறிவரும் பெயராப் பெற்றனம் யாமே
இச்சா ஞானக் கிரியைஎன்று இசைக்கும்
சக்திகள் உளைஉளது அத்திறம் எமக்கே
இந்நிலை முழுவதூஉம் எமக்கும்உண்டு ஆகலின்
அந்நியம் அலநினக்கு அநநியம் யாமே' (572)

என்பது அப்பாடற் பகுதி.

இறைவனின் பேரறிவு தோயாது அறிவும் அறிவாகும். வள்ளுவர் மொழியில் சுட்டுவதானால் அது 'வாலறிவு'. உயிர்களின் அறிவோ சிற்றறிவு; அழுந்தி அறியும் அறிவு. 'சிதம்பர மும்மணிக்கோவை'யின் எட்டாவது பாடலில் சுவாமிகள் 'அதுஅது வாக அழுந்திப் புதிதுண்டு' (457) என்னும் அடியால் உயிர்களின் இயல்பை உணர்த்துகின்றார்.

### உயிர்களின் மூவகைப் பாகுபாடு

எண்ணிறந்த உயிர்களும் தத்தம் பக்குவத்திற்கு ஏற்ப மூவகைப்படும் என்பது சைவ சித்தாந்தக் கொள்கை. ஆணவம், கன்மம், மாயை எனப்படும் சகல மலங்களாலும் - மும்மலங்களாலும் - பிணிக்கப்பட்ட உயிர்களைச் 'சகலர்' என்று வழங்குவர். ஆணவம், கன்மம் ஆகிய இரு மலங்களால் கட்டப்பட்ட உயிர்கள் 'பிரளயாகலர்' என்ற பெயரால் அழைக்கப்பெறுவர். ஆணவ மலம் ஒன்றால் மட்டும் கட்டுப்பட்ட உயிர்கள் 'விஞ்ஞானகலர்' என்று அழைக்கப்படுவர். உயிர்களின் இம்மூன்று நிலைகளைக் குறித்துச் சுவாமிகள் 'கந்தர் கலிவெண்பா'வில் (1) விரிவாகச் சொல்லிச் செல்லுகின்றார்; 'ஆணவ மான படலங் கிழித்து' என்றும், 'கன்ம மலத்தார்' (பிரளயாகலர்) என்றும், 'ஒருமலத்தார்' (விஞ்ஞானகலர்) என்றும் மூவகையான உயிர்களைச் சுட்டிக் கூறுகின்றார். மேலும் 'பண்டார மும்மணிக்கோவை'யின் இருபதாவது பாடலில், ''சாயா மும்மலச் சகலரேம் உய்ய'' (584) எனக் குறிப்பிடும் இடத்தில், உயிர்களின் இப்பாகுபாட்டினைப் புலப்படக் கூறுகின்றார் சுவாமிகள்.

## 3. பாசத்தின் இயல்பு

உயிர்களின் துயரத்திற்குக் காரணமாய் அமைகின்ற கட்டுக்களைப் 'பாசம்' என்றும், 'மலம்' என்றும் குறிப்பது சைவ சித்தாந்த வழக்கு. இவை ஆணவம், கன்மம், மாயை என மூன்றாகவும், சில இடங்களில் ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி என ஐந்தாகவும் குறிக்கப்படும். இவ்வைந்தும் முந்தைய மூன்றனுள் அடங்கும் எனக் கொள்வதே பெருவழக்கு. உயிரைப் பற்றிய மலங்களை ஐந்தாகக் கொள்ளும் சைவ சித்தாந்த மரபினைச் சுவாமிகள் 'கந்தர் கலிவெண்பாவில்',

'பஞ்சமலம் காய்ந்த சிவ ஞானக் கடாக்களிறும்' (1)

எனக் கூறும் இடத்தில் பின்பற்றுகிறார். 'சிதம்பரச் செய்யுட்கோவை'யிலும் 'பண்டார மும்மணிக்கோவை'யிலும் மலங்கள் மூன்று என்னும் சைவ சித்தாந்தக் கருத்தினைச் சுவாமிகள் வலியுறுத்துகிறார். இவ்வகையில் குறிப்பிடத்தக்க அவரது பாடற் பகுதிகள் வருமாறு:

'நெஞ்சகம் குழைந்து நெக்குநெக்கு உருகநின்
குஞ்சித சரணம் அஞ்சலித்து இறைஞ்சுதும்
மும்மலம் பொதிந்த முழுமலக் குரம்பையில்
செம்மாந்து இருப்பது தீர்ந்து
பொய்ம்மையிற் பொலிந்த வீடுபெறற் பொருட்டே' (548)

'சாயா மும்மலச் சகலரேம் உய்ய
எம்உருக் கொண்டு எம்மொடு பயின்றும்
மும்மலக் கிழங்கை முதலொடும் அகழ்ந்து' (584)

## ஆணவ இருளும் ஞானச் சுடர் விளக்கும்

மலங்கள் மூன்றிலும் மிகக் கொடியது ஆணவ மலமே. தோற்றமில் காலந்தொட்டே உயிரைப் பற்றி நிற்பதாகிய இது உயிரின் குணமன்று; உயிரின் குற்றமே! எல்லாப் பெருங்கேடுகளுக்கும் காரணமான ஆணவ மலம் உயிரின் மீட்சிப் பாதையிலே மற்ற மலங்களின் பற்றுக் கழிந்த பின்னர் இறுதியிலேயே கழலுகிறது.

பிற பொருள்களையும் மறைத்துத் தன்னையும் மறைத்துக் கொண்டிருக்கிற ஆணவ மலத்தை 'இருள்' என்ற பெயரால் வழங்குவர். குமரகுருபர சுவாமிகள் இறைவனை, ''இதய இருட்டு உற, உணர்வில் உதித்திடு சுடரொளியே'' (439) என்று 'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழி'ல் குறிப்பிடுகிறார். இதன்மூலம், ஆணவம் என்ற இருட்டு, இறைவனின் திருவருள் துணையின்றி விலகாது என்பதைச் சுவாமிகள் வலியுறுத்துகிறார்.

ஆணவமாகிய பாசத்தில் இருந்து விடுபடும் வேட்கை உடைய அடியார்கள் தம் உள்ளமாகிய கோயிலில் இறைவனாகிய ஞானச் சுடர் விளக்கை ஏற்றி, அவ்விளக்கின் ஒளியால் திணிந்த இருளில் இருந்து விடுபடுவர் என்பதை 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழி'ல் வருகைப் பாடல் ஒன்றில் சுவாமிகள் குறிப்பிடுகிறார். இக்கருத்தினை அவர், ''அகந்தைக் கிழங்கை அகழ்ந்து எடுக்கும் தொழும்பர் உளக் கோயிற்கு ஏற்றும் விளக்கே'' (62) என்று அம்மையைப் போற்றுவதன் வாயிலாகப் புலப்படுத்துகின்றார். அவ்வாறே 'கந்தர் கலிவெண்பா'வில், ''ஆணவமான படலம் கிழித்து, அறிவில் காணரிய மெய்ஞ்ஞானக் கண்காட்டி'' (1) என்று பாடுகிறார் சுவாமிகள்.

இங்ஙனம் ஆணவ மலத்தை இருட்டாகவும், கிழங்காகவும், படலமாகவும் தம் பாடல்களில் ஆங்காங்கே உருவகம் செய்துள்ளார் சுவாமிகள்.

## வினைத் தொடர்பும் பவத் தொடர்பும்

வினையும் பிறப்பும் ஒன்றற்கு ஒன்று தொடர்பு கொண்டனவாகக் கடலின் அலைகள் போல் தொடர்ந்து வரும்

என்பது சைவ சித்தாந்தம் காட்டும் உண்மை. இதனை மனத்திற் கொண்டு குமரகுருபர சுவாமிகள்,

'..... ..... ..... தீர்வரிய
கன்மத்துக்கு ஈடாய்க் கறங்கும் சகடமும்போல்
சென்மித்து உழலத் திரோதித்து' (1)

என்று 'கந்தர் கலி வெண்பா'வில் குறிப்பிடுகிறார். வினையால் விளைகின்ற பிறப்பு, அப்பிறப்பால் விளைகின்ற வினை, இவ்வாறு மாறி மாறி வருகின்ற சுழற்சியில் இருந்து - வினைத் தொடர்பின் கொடுமையில் இருந்து - எங்ஙனம் விடுபடுவேன் என்று 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் பெருமானிடம் முறையிடுகின்றார் குமரகுருபர சுவாமிகள்.

'படர்தரும்வெவ் வினைத்தொடர்பால் பவத்தொடர்புஅப்
பவத்தொடர்பால் படரா நிற்கும்
விடல்அரும்வெவ் வினைத்தொடர்புஅவ் வினைத்தொடர்புக்கு
ஒழிபுண்டே வினையேற்கு அம்மா
இடர்பெரிதும் உடையேன்மற்று என்செய்கேன்
என்செய்கேன்
அடல்அரவம் அரைக்கு அசைத்து அடிகேளோ
அடிகேளோ.' (516)

பவத்தொடர்பு - பிறவியின் சம்பந்தம். வினையும் பிறவியும் ஒன்றுக்கு ஒன்று காரண காரியமாகத் தொடர்ந்து நிற்கும். 'காரண காரியத் தொடர்ச்சியாகக் கரையின்றி வருதலின் பிறவிப் பெருங்கடல் என்றார்' என்னும் பரிமேலழகரின் உரை விளக்கம் இங்கே நினைவுகூரத்தக்கது.

## எல்லாம் அவ்ன் செயல்

எல்லாம் அவன் செயல்; அவனின்றி ஓர் அணுவும் அசையாது. இது அருளாளர்கள் உணர்த்தும் ஓர் அடிப்படையான உண்மை. அப்படி இருக்க, உயிர்கள் செய்யும் நல்வினை, தீவினைகளின் பயன்கள் அவற்றைப் பற்றுவதனாலே உயிர்களுக்குப் பிறப்பு ஏற்படுகின்றது என்பது எப்படிப் பொருந்தும்? இவ்வினா எழுவது இயல்பே. ஆனால் ஒன்று மட்டும் உண்மை; உயிர்கள் இறைவன் திருவருள் வழிப்படாமல், தன் முனைப்போடு ஆற்றுகின்ற வினைப் பயன்களே அவற்றைப் பிறப்புக்கு உட்படுத்தும். 'நான்' என்ற முனைப்போடு ஆற்றுகின்ற செயல்களே உயிர்களைப் பவத்தொடர்புக்கு ஆட்படுத்துகின்றன. சைவ சித்தாந்த நுட்பம்

வாய்ந்த இவ்வினாவையும் விடையையும் குமரகுருபர சுவாமிகள் 'பண்டார மும்மணிக்கோவை'யில் ஒரு பாடல் வடிவில் தந்துள்ளார். அப்பாடல் வருமாறு:

'என்செய லால்ஒன்றும் யான்செய்வது
இல்லை எனக்கு அவமே
புன்செய லாம்வினைப் போகம்உண்
டாவதுஎன் போதம்இல்லேன்
தன்செய லாயஎல் லாம்மாசி
லாமணிச் சம்பந்தநின்
நன்செயல் ஆயினும் என்செய
லாச்செய்யும் 'நான்' என்பதே.' (583)

'அடியேன் செயல் எல்லாம் நின் செயலாய் இருப்ப, வினைப் போகத்தை அடியேன் அனுபவிப்பதற்குக் காரணம் அடியேனுக்கு உள்ள அகங்காரமே' என்பது சுவாமிகளின் தெள்ளத் தெளிந்த கருத்து.

## உருவக வடிவில் உயிரின் பயணம்

அநாதியே ஆணவ மலத்தைச் சேர்ந்ததனால் அலமந்த உயிர் தன் பழக்கத்தின் விளைவாக மீண்டும் மீண்டும் பொருள் அல்லவற்றைப் பொருள் என்று கொண்டு முயங்கியும், மயங்கியும் வருகிறது. வீடுபேற்றை நோக்கி உயிர் முன்னேறுவதைத் தத்துவக் கூட்டங்கள் தடுத்துநிற்கின்றன. இக்கூட்டத்தினின்று நீங்கினாலன்றி உயிர் உய்யுமாறில்லை. காமவான் கறவின் வயப்பட்டு உயிர்படுகின்ற அல்லலை ஒர் அழகிய உருவகத்தின் மூலம் குமரகுருபர சுவாமிகள் 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் விரிவாக விளக்குகின்றார்.

''தோற்றமில் காலந்தொட்டு ஆணவம் என்னும் கொடியைத் தழுவி இருந்தது உயிர். 'அலையா மரபின் ஆணவக் கொடி' என்னும் அடியால் ஆணவம் என்னும் கொடி மென்மையானது அன்று என்று உணர்த்துகிறார் சுவாமிகள். ஆணவம் என்னும் பெண்மணி பலரைப் புணர்ந்தும் கணவற்கும் தோற்றாத கற்பினை உடையவள். ஆகவே ஆணவ மலத்தைச் சேரிப் பரத்தையாக உருவகம் செய்கிறார் சுவாமிகள். சேரிப்பரத்தை பொதுமகள் ஆதலின் 'பலர்புகழ் சேரிப்பரத்தை' என்கிறார் அவர். பல காலம் அவளைத் தழுவித் தன்னையும் உணராது. ஆணவ மலத்தின் காரியங்களான மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம் ஆகியவற்றில் அழுந்திக் கிடந்தது உயிர்.

ஆணவமாகிய சேரிப்பரத்தைக்கு இரண்டு தங்கையர். ஒருத்தியின் பெயர் குடிலை (தூமாயை - சுத்த மாயை). மற்றொருத்தியின் பெயர் மோகினி (தூவா மாயை - அசுத்த மாயை). இருவருள் குடிலை என்பவள் எய்தற்கு அரிய புதல்வியர் ஐவரைப் பெற்றனள். அப்புதல்வியருக்குச் சுத்தவித்தை, ஈசுவரன், சதாக்கியம், சத்தி, சிவம் என்று பெயர். சுத்த மாயையில் இருந்து தோன்றுவனவாகிய சிவ தத்துவங்கள் ஐந்தினையும் சுவாமிகள் இங்ஙனம் உருவகப்படுத்துகிறார்.

பிறிதொரு தங்கையாகிய மோகினி என்பவள் மூன்று புதல்வியரைப் பயந்தனள். அந்த மூவரும் காலம், நியதி, கலை என்ற பெயர் பெற்றவர்கள். கலை என்ற பெண் வித்தை, அராகம், மான் என்ற பெயருடைய மூன்று பெண்களைப் பெற்றனள்.

மூலப் பிரகிருதி என்ற பெயர் கொண்ட பெண் இருபத்து நான்கு பெண் மக்களைப் பெற்றெடுத்தனள். அறிவுப் பொறிகள் (ஞானேந்திரியம்) ஐந்து, செயற்பொறிகள் (கன்மேந்திரியம்) ஐந்து, தன்மாத்திரைகள் ஐந்து, பூதங்கள் ஐந்து, அந்தக் கரணங்கள் நான்கு ஆக இருபத்து நான்கையும் இருபத்து நான்கு பெண்களாக உருவகம் செய்கிறார் சுவாமிகள். இந்த முப்பத்து ஐந்து பேருடன் கூடி உயிர் அளப்பற்ற காலம் முறை பிறழ்ந்து, முயங்கி, அழுந்தியது.

''இந்த உளைச் சேற்றில் இருந்து விடுபட்டு, முறை பிறழ்ந்த வாழ்க்கையை மாற்றி, உயிர் உய்வு பெற வேண்டும் எனின், ஞானமாகிய பெண்ணை மணந்து, அறிதற்கு உரிய பொருளாகிய பெருஞ்செல்வத்தை வழங்கி, இறவா வீட்டினில் குடியிருத்துதல் வேண்டும்'' என்று இவ்வருமையான உருவகத்தை நிறைவு செய்கிறார் சுவாமிகள். மீட்சியின் வழியில் உயிர் மேற்கொள்ளும் நெடும்பயணத்தைச் சுவாமிகள் தம்மீது ஏற்றிக் கூறுகிறார்.

'ஈதொன்று இயம்புவல் கேண்மதி பெரும
அலையா மரபின் ஆணவக் கொடிஎனும்
பலர்புகழ் சேரிப் பரத்தையொடு தழீஇ
ஏகலன் தணந்துஆங்கு என்னையும் உணராது
மோகமொடு அழுந்தி முயங்குறும் அமையத்து
அங்குஅவட்கு உரிய தங்கையர் இருவருள்
குடிலை என்னும் மடவரல் ஒருத்தி
எய்தரும் புதல்வியர் ஐவரைப் பெற்றனள்

மோகினி என்பவள் மூவரைப் பயந்தனள்
ஆகிய புதல்வியர் அங்கவர் மூவருள்
கலைஎனப் பெயரிய கணிகைமற் றொருத்தி
தானும் மூவரைத் தந்தனள் அவருள்
மான்எனப் பட்ட மடவரல் ஒருத்தி
எண்மூன்று திறத்தரை ஈன்றனள் இத்திறம்
நண்ணிய மடந்தையர் ஐயெழு வரையும்
கிளப்பருங் காமக் கிழத்திய ராக
அளப்பில் காலம் அணைந்தனள் முயங்குழி
முறைபிறழ்ந்து இவரொடு முயங்குதல் ஒழிகஎன
அறிஞர்ஆங்கு உணர்த்த அஞ்சினன் ஒரீஇ
நின்னிடைப் புகுந்தனன் மன்னோ என்னிடை
ஞான வல்லியை நன்மணம் புணர்த்தி
ஆனா ஏுயத்து அரும்பொருள் வழங்கி
இறவா வீட்டினில் இருத்திக்
குறையாச் செல்வரொடு கூட்டுதி மகிழ்ந்தே' (478)

''உலகியலில் முறை பிறழ்ந்த ஒழுக்கமற்ற வாழ்க்கை நடத்துகின்ற இளைஞன் ஒருவனைத் திருத்துவதற்கு, நற்பண்புகள் மிகுந்த நங்கை ஒருத்தியை அவனுக்கு மணம் செய்வித்து, அவ்விருவரும் இல்லறம் நடத்துவதற்குத் தேவையான அரும்பொருளும் வழங்கி அவர்களைத் தனி வீட்டில் குடிபுகச் செய்வது பெரியோர் கடைப்பிடிக்கும் வழி. பெருமானே நீயும் அவ்வாறே செய்க என்ற உள்ளுறைப் பொருளும் இப்பாடலுள் அமைந்திருப்பது நயம் மிக்கது'' எனச் 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் இடம்பெறும் இப்பாடலின் பொருட் சிறப்பினைப் போற்றுவர் அறிஞர் சி.சு. மணி (குமரகுருபர முனிவர் உணர்த்தும் சைவ சித்தாந்தம், ப. 42).

## சுவாமிகள் ஞானாசிரியரிடம் விடுக்கும் வேண்டுகோள்

குமரகுருபர சுவாமிகள் தம் ஞானாசிரியராகிய மாசிலாமணி தேசிகரிடம் விடுக்கும் உருக்கமான வேண்டுகோள் வருமாறு:

''கற்றவர்களாக இருந்தாலும், கல்லாதவரே ஆயினும் தம் துன்பத்தைச் சொல்லி அடைக்கலம் புகுந்தவர்க்கு உதவுவது பெரியோர் கடன். காலம் பாராமல், வந்தவர் கருத்து யாது என்று நீட்டித்திருக்காமல், சீலம் உடையவரா தீக்குணம் கொண்டவரா

என்றெல்லாம் ஆராயாமல், பரிசிலர் வேண்டிய பரிசு யாவற்றையும் வரிசையோடு அளிப்பது வள்ளல்களுக்கு உரிய கடமை என்பர். ஞான வள்ளலாகிய உம்மை நாடி நான் வந்துள்ளேன். உம் திருச்சந்நிதியில் எய்திய உடனே எளிதில் எனக்குச் சத்திநிபாதம் (அருட்சத்தி பதிதல்) வந்துற்றது. எனவே என்னை ஆட்கொள்ள வந்த ஞானதேசிகனே, சரியையில் நிற்குமாறு - கிரியைகள் இயற்றுமாறு - யோகம் பயிலுமாறு - காலம் தாழ்க்காமல் பரிபக்குவம் நோக்காமல் எனக்கு நற்கதி அருளுமாறு வேண்டுகின்றேன். நின் பொன்னடியே துணையாகப் பூண்டுகொண்டிருக்கிறேன். எனக்கு இப்பொழுதே அருள்புரிவாயாக!''

'செந்நெறிப் படர்ந்த சீர்புனைந்து ஏத்தலின்
சத்திநி பாதம்நின் சந்நிதிப் பட்ட
இத்திறத்து எளிதினில் எய்தியது எனக்கே. அதனால்
சரியையில் தாழ்க்கலை கிரியையில் பணிக்கலை
யோகத்து உய்க்கலை பாகமும் நோக்கலை
நாளை இன்று எனஒரு வேளையும் நவிற்றலை
ஈண்டு எனக்கு அருளுதி இறைவ
பூண்டகொண்டு இருப்பன்நின் பொன்னடித் துணையே'(593)

'பண்டார மும்மணிக்கோவை'யில் இடம்பெறும் இச்சீரிய வேண்டுகோள் சித்தாந்த நோக்கில் முத்தாய்ப்பான ஒன்றாகும்.

சைவ சித்தாந்தச் செம்பொருள் துணிவு, முப்பொருள் இயல்பு, நால்வகை நெறிகள், சைவ சித்தாந்த பரிபாஷைச் சொற்கள் ஆகியன பற்றிக் குமரகுருபர சுவாமிகள் தமது பிரபந்தங்களில் பல்வேறு இடங்களில் இரத்தினச் சுருக்கமாகவும் தெள்ளத்தெளிவாகவும் திட்பநுட்பமாகவும் எடுத்துரைத்துள்ளார். சுவாமிகளின் வாழ்வையும் வாக்கினையும் மனம் கலந்து பயில்வோர் அவரது சைவ சித்தாந்த சாத்திரப் பயிற்சியையும் புலமையையும் நன்கு உணரமுடியும். நிறைவாக, ''சைவ சமயத்தில் உதித்துச் சைவ ஆசிரியர் ஒருவருக்கு அடியவராகிச் சைவ சந்நியாசம் பூண்டு வாழ்ந்த இவருடைய சைவப் பற்றும், சைவ சித்தாந்த நூற்பயிற்சியும், மூர்த்தி தலத்தீர்த்தங்களிலுள்ள அன்பும், குரு பக்தியும், தொண்டர்பாலுள்ள பெருமதிப்பும் அளவிடற்கரியவை'' (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஆராய்ச்சி', ப. cii) என ஐயரவர்கள் குமரகுருபர சுவாமிகளுக்குச் சூட்டியுள்ள புகழாரம் உண்மை. வெறும் புகழ்ச்சி இல்லை. ஜ

# 7. குமரகுருபரரின் ஆளுமை

''குமரகுருபரர் தமிழறிவும் தவவொழுக்கமும் கவிதாசத்தியும் ஒருங்கே வாய்க்கப்பெற்றவர். தமிழ்ப் பாமாலை கொண்டு இறைவனைப் போற்றிய அப்பெரியார் இன்னிசை பொருந்திய பாக்களை எவ்வகை யாப்பிலும் அமைக்கும் ஆற்றல் வாய்ந்தவர்.''

- வி. செல்வநாயகம்[1]

குமரகுருபரர் பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியிலே தமிழகத்தில் தோன்றிய சைவத் தமிழ் ஞாயிறு; இமயம் முதல் குமரி வரை, திருமலை நாயக்கர் காலத்தில் சைவத்தை நிலைநாட்டிய பெருந்தகை. ''குமரகுருபரர் பழுத்த தமிழ்ப் புலமை பாலிக்கப் பெற்றவர்; நெஞ்சையள்ளும் செஞ்சொற் பனுவல்களால் தமிழுக்கு வளம் தந்த தன்னேரில்லாக் கவிஞர். வாக்கு வளம் கொண்ட அவரது பாடல்கள் வளங்குன்றா மலைச் சுனைகள்'' எனப் புகழாரம் சூட்டுவர் பேராசிரியர் எழில்முதல்வன் (கவண் கற்களும் சிறகுகளும், ப. 35). இவ்வியல், குமரகுருபர சுவாமிகளின் ஆளுமையிலும் படைப்பிலும் காணலாகும் தனித்தன்மைகளையும் சிறப்புக் கூறுகளையும் ஒருங்கே அடையாளம் காண முற்படுகின்றது.

## 1. பழுத்த தமிழ்ப் புலமையர்

குமரகுருபர சுவாமிகள் 'எழுத்து முதலாம் ஐந்திலக்கணமும் தோய்ந்து பழுத்த தமிழ்ப் புலமை' கைவரப் பெற்றவர்; 'சொல் விற்பனமும் அவதானமும் கவி சொல்ல வல்ல நல்வித்தையும்' ஒருசேரப் பொருந்தி இருப்பவர். 'குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தங்களில் ஐந்திலக்கணக் கோட்பாடுகள்' என்பது நுண்ணிய,

1. தமிழ் இலக்கிய வரலாறு. ப. 151.

விரிந்த ஆய்வுக்கான ஒரு தலைப்பு ஆகும். பதச் சோறாக, சுவாமிகளின் பிரபந்தங்களில் அணியிலக்கண அமைதி பொருந்தி இருக்கும் பான்மை குறித்து இங்கே காண்போம்.

உவமையைப் போன்றே உருவக அணியும் குமரகுருபர சுவாமிகளின் பாடல்களில் நன்கு அமைந்து அவரது புலமைத் திறத்தை விளக்கி நிற்கின்றது. நெஞ்சை அள்ளும் ஓர் எடுத்துக்காட்டு இதோ:

'கண்ணோக்கு அரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா - வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையார் அன்றே
சலியாத கற்பக தரு.' *(242)*

இங்கே கொடைப் பண்பு உடையாரைக் கற்பக மரமாக உருவகம் செய்து, அவருடைய கண் நோக்கை அரும்பாகவும், நகைமுகத்தை மலராகவும், இன்மொழியைக் காயாகவும், வண்மையைப் பழமாகவும் அமைத்து அதனை அழகிய முற்றுருவகம் ஆக்கியுள்ளார் சுவாமிகள். 'சேய்மைக்கண்ணே இரவலரைக் கண்டபோது இனிமையாகப் பார்த்தலே அரும்பாக, நெருங்கிய வழி மலர்ச்சியோடு கூடிய முகமே அன்று அலர்ந்த மலராக, இன்மொழி ஆகிய உண்மையே இனிய காயாக, ஈகையே பழமாகக் கொடுத்தலில் இளைத்தல் இல்லாத, நற்குணங்கள் மிக்க வள்ளலே உண்மையில் கற்பக தரு ஆவார்; மற்றபடி, தெய்வ லோகத்தில் உள்ள கற்பகம், கற்பகம் அன்று. எனவே, மனம், வாக்கு, காயம் என்றும் மூன்றாலும் விரும்பிச் செய்யப்படுவதே ஈகை ஆகும்' என்னும் நீதிக் கருத்தினை உருவக அணி நலம் அமையப் புலப்படுத்துவதில் முழு வெற்றி பெற்றுள்ளார் சுவாமிகள்.

இயல்பாக உள்ள காரணம் ஒன்று இருக்க, கவிஞர் வேறொரு காரணத்தைக் கற்பித்துக் கூறுவது - வேறொரு குறிப்பை ஏற்றிக் கூறுவது - தற்குறிப்பேற்ற அணி ஆகும். சுவாமிகளின் பாடல்களில் இவ்வணி பல இடங்களில் அமைந்துள்ளது.

திருவாரூரில் உள்ளார் யாவரும் சிவகணங்களாகத் தோற்றுவர் என்பது புராண வரலாறு. அவர்கள் தம் கையிலே மழுப்படையை வைத்திருப்பது, ''இத்தலத்தில் பிறந்தார் இனிப் பிறவியையே அடையார்'' என்று மழுவேந்திச் சத்தியம் செய்வது போல் விளங்கும் என்கிறார் சுவாமிகள்.

'இத்தலத்து உற்றவர் இனித்தலத்து உறார்எனக்
கைத்தலத்து ஏந்திய கனன்மழு உறழும்
மழுவுடைக் கையராகி...' (336)

'திருவாரூர் நான்மணி மாலை'யில் வரும் பிறிதொரு பாடலிலும் சுவாமிகள், ''திருவாரூர் வன்மீகநாதர் ஒரு புற்றில் குடிகொண்டிருந்தார்; பாம்பைப் பூணாக அணிந்தார்; விடத்தையும் உண்டார்; இவ்வாறு அவர் அச்சமின்றிப் பாம்பு முதலியவற்றொடு பழகிவருவது தம் பக்கத்தில் ஒரு மயில் இருக்கும் துணிவு கொண்டே'' எனத் தற்குறிப்பேற்ற அணிநயம் பொருந்தக் கூறுகின்றார்.

'கரும்புற்ற செந்நெல் வயற்கமலேசர் கண்டார்க்கும் அச்சம்
தரும்புற்றினில் குடிகொண்டி ருந்தார்அது தானும்அன்றி
விரும்புற்று மாசுணப் பூண் அணிந்தார் வெவ்விடமும் உண்டார்
சுரும்புற்ற கார்வரைத் தோகை பங்கான துணிவு கொண்டே' (342)

என்பது அணிநயம் ததும்பி நிற்கும் அப்பாடல் ஆகும்.

வேற்றுமை அணி அமையச் சுவாமிகள் தம் பிரபந்தங்களில் படைத்துள்ள கற்பனைகள் பலவாகும். சான்றாக, புலவரின் தனிப்பெருமையைப் புலப்படுத்தும் 'நீதிநெறி விளக்க'ப் பாடல் ஒன்றை இங்கே எண்ணிப்பார்க்கலாம்.

'கலைமகன் வாழ்க்கை முகத்தது எனினும்
மலரவன் வண்டமிழோர்க்கு ஒவ்வான் - மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றுஇவர் செய்யும் உடம்பு.' (212)

குமரகுருபர சுவாமிகளின் வாக்கில் மடக்கு (130, 142, 159, 628, 696) முதலான சொல்லணிகளும் ஆங்காங்கே விரவி வந்துள்ளன. அவற்றுள் சிறப்பாகக் குறிப்பிடத்தகுந்த ஓர் இடம் வருமாறு:

'..... ..... ..... நற்கமலை
ஊரிற் குறுகினேன் ஓர்மாத் திரைஅளவுஎன்
பேரிற் குறுகினேன் பின்.' (588)

இங்கே 'என்பேர்' என்பது சீவன் என்பதைக் குறிக்கும். அஃது ஒரு மாத்திரை குறைந்ததாவது சிவன் என்பது சிவமானேன் என்றபடி; மலமறுத்துச் சிவமாக்கி அருளினார் என்பது கருத்து. ''சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட, அத்தன்''

என்னும் மணிவாசகர் வாக்கு இங்கே ஒப்புநோக்கத்தக்கது. இதில் 'மாத்திரைச் சுருக்கம்' என்னும் சொல்லணி அமைந்துள்ளது.

இவை தவிர, சிலேடை, இலேசம், புணர்நிலை, திரிபதிசயம், சொற்பின்வருநிலை, சொற்பொருட் பின்வருநிலை, வேற்றுப் பொருள் வைப்பு, ஒப்புமைக் கூட்டம், ஒட்டு, பரிவருத்தனை, உறுப்புக்குறை விசேடம் முதலிய அணி வகைகளும் குமரகுருபர சுவாமிகளின் பாடல்களில் ஆங்காங்கே அமைந்திருக்கக் காண்கிறோம்.

## 2. ஆன்றவிந்து அடங்கிய கொள்கைச் சான்றோர்

பழுத்த புலமை பெற்ற குமரகுருபர சுவாமிகள் தம்முடைய இன்சுவை மிக்க பாடல்களை, 'சிறிய எனது புன்மொழி' (4) என்றும், 'என் பொருளில் புன்மொழி' (312) என்றும், 'என் புன்மொழிக் கடு' (விடம்; கடுக்காயுமாம்) (600) என்றும், 'செஞ்செவி கைப்ப யான் தெரித்த சின்மொழி' (699) என்றும் நான்கு இடங்களில் கூறிக் கொள்ளுகின்றார்; கல்விச் செருக்கு என்பது சுவாமிகளிடம் எள்முனை அளவு கூட இல்லை என்பதை இதனால் உணரலாம். விதிவிலக்காக ஓர் இடத்தில் மட்டும், 'குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவும் என் கொழிதமிழ்க் கவி' (349) என்று தம் கவிதையைக் குறித்துச் சுவாமிகள் உயர்வாகச் சுட்டியுள்ளார். இந்த உயர்வும் முருகனைப் பரவுவதால் தம் கவிதைக்கு கிட்டியது என்றே சுவாமிகள் கருதியிருத்தல் வேண்டும்.

அவாவறுத்துத் தவம் புரிந்து மெய்யறிவு பெற்ற சுவாமிகள், 'உரனில் காட்சி இழுதையன்' (கீழ்மகன்) (457), 'செய்தவ வேடம் மெய்யில் தாங்கிக், கைதவ ஒழுக்கம்உள் வைத்துப் பொதிந்தும்' (460), 'உய்தற்கு ஒருபெருந் தவமும் உஞற்றிலன்' (460), 'யானே புலனும் நலனும் இலன்' (502), 'என்வசமாக நில்லாத நெஞ்சாம் இரும்பை' (580), 'தவமில் பேதையேன்' (581) என்றெல்லாம் தம்மைப் பற்றிக் கூறிக்கொள்ளுகிறார்.

'சிதம்பர மும்மணிக்கோவை'யில் குற்றம் பலபொறுத்து என்னையும் ஆண்டுகொண்டோன்' (459) எனச் சுவாமிகளின் கூற்றாக வரும் பகுதியும் அவரது அடக்கத்தைப் புலப்படுத்துவதாகும். ''அடிகள் திருவருட் பேற்றிற்கு ஆளான பெருமை அளவிடற்கரியது. அங்ஙனமாகவும், தம்மையும் தம் செயல்களையும் மிக இழிவாகக் கூறிய இடங்கள் பலவாகும். அப்படிக் கூறிய நிகழ்ச்சிகளுக்கு எல்லாம் அடிகளை ஆளாக்கல் நம்மனோர்க்குத் தகுதியன்று. மற்றை அடியார்களும், பொதுவான

மக்கள் இயல்புகளை ஒரோவிடங்களில் தம்மேல் ஏற்றிக் கூறியிருப்பதை அறிகின்றோம்' (திருவாசகம் - திருச்சதகம், கதிர்மணி விளக்கம், ப. 293-294) எனப் பண்டிதமணி மு. கதிரேசனார், மாணிக்கவாசகரைப்பற்றிக் கூறியிருக்கும் கருத்தே குமரகுருபர சுவாமிகளுக்கும் பொருந்திவருவ தாகும்.

### 3. உயரிய உள்ளப் பாங்கினர்

கடவுளிடம் அல்லது பெரியவரிடம் ஒருவர் கேட்கும் வரத்தினைக் கொண்டு அவரது உள்ளப் பாங்கினை உய்த்துணரலாம். சான்றாக, கம்பராமாயணத்தில் யுத்த காண்டத்து மீட்சிப் படலத்தில், 'ஆயினும், உனக்கு அமைந்தது ஒன்று உரை' என்று வலியுறுத்திய தயரதனிடம் இராமன் கேட்ட வரத்தை இங்கே சுட்டிக் காட்டலாம்:

'தீயள் என்றுநீ துறந்தஎன் தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம்வரம் தருக!' *(128)*

இராமன் தன் தந்தையான தயரதனிடம் உயரிய இவ்வரத்தைக் கேட்டதும், 'வாய் திறந்து எழுந்து ஆர்த்தன உயிர்எலாம் வழுத்தி' எனக் கூறுவார் 'கவிச் சக்கரவர்த்தி' கம்பர். இதுபோல், குமரகுருபர சுவாமிகள் தம் பிரபந்தங்களில் ஆங்காங்கே கேட்டிருக்கும் வரங்கள் எத்தகையவை என்றும், அவை அவரது உயரிய, விழுமிய உள்ளப் பாங்கை எங்ஙனம் வெளிப்படுத்துகின்றன என்றும் இங்கே எண்ணிப் பார்க்கலாம்.

குமரகுருபர சுவாமிகள் உள்ளத் துறவும் உண்மை ஞானமும் ஒருங்கே பெற்ற செந்நாப் புலவர்; 'சிந்தையின் நிறைவே செல்வம்' என்றும், 'அவாவே நல்குரவு' என்றும் முடிந்த முடிபாக உணர்ந்தவர். அரச பதவியில் உள்ள ஒருவர், சிந்தை நிறைவின்றி அவாவினால் கவலையுற்றுத் துன்புறுதலும் உண்டு; அதேபோல், வறியவனே ஆயினும் சிந்தை நிறைவுடைய ஒருவன் இன்பம் பெறுதலும் உண்டு. எனவே, சிந்தையின் நிறைவே உண்மையான செல்வம் ஆகும்; உண்மையிலேயே 'கேடில் விழுச் செல்வம்' ஆகும்; அவாவே வறுமை ஆகும்.

'..... ..... ..... நின்
அருள்பெற்று உய்தற்கு உரியன்யான் எனில்
பல்லுயிர்த் தொகுதியும் பவக்கடல் அழுந்த
அல்லல் செய்யும் அவாஎனப் படும்அவ்
வறுமையி னின்றும் வாங்கி
அறிவின் செல்வம் அளித்துஅருள் எனக்கே' *(475)*

என நடராசப் பெருமானை வேண்டுகின்றார் குமரகுருபர சுவாமிகள், 'அறிவுடையார் எல்லாம் உடையார்' (குறள், 430) என்பராதலின், இங்கே அறிவினைச் செல்வமாகக் கூறியுள்ளார் சுவாமிகள். 'அல்லல் செய்யும் அவா எனப்படும் வறுமை' என்னும் அவரது வாக்கும் இங்கே மனங்கொளத் தக்கதாகும்.

சுவாமிகள் தில்லைவாணரிடத்தில் கேட்கும் செவ்விய வரம் ஒன்று உண்டு. அது வருமாறு:

'பெருங்குளிர்க் குடைந்த காலைக் கருந்துணி
பலதொடுத்து இசைத்த ஒருதுணி அல்லது
பிறிதொன்று கிடையா தாக, வறுமனைக்
கடைப்புறத் திண்ணை அல்லது கிடக்கைக்கு
இடம்பிறிது இல்லை யாக, கடும்பசிக்கு
உப்பின்று அட்ட புற்கையூண் அல்லது
மற்றோர் உண்டி வாய்விட்டு அரற்றினும்
ஈகுநர் இல்லை யாகநா ணாளும்
..... ..... ..... இத்திறம்
உடல்நீங் களவும் உதவிக் கடவுள்நின்
பெரும்பதம் அன்றியான் பிறிதுஒன்று
இரந்தனை வேண்டினும் ஈந்திடா ததுவே.' (457)

சுவாமிகளின் உள்ளப்பாங்கு எத்தகையது என்பதைச் 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் இடம்பெறும் இப்பாடற் பகுதி தெளிவாகக் காட்டும். கடுமையான குளிரில் உடுத்துவதற்கு அழுக்கடைந்து கரிதாகிய, தைத்து மூட்டிய ஒரு கந்தல் துணி; பாழடைந்த வீட்டில் படுப்பதற்கு வாயிற் புறத்துத் திண்ணை; உண்பதற்கு உப்பில்லாமல் காய்ச்சிய புல்லரிசிக் கூழ்; இறக்கும் வரையிலும் இவற்றை உதவினாலே போதும். சுவாமிகள் இரந்து வேண்டுவது கடவுளின் பெரும்பதம் தவிரப் பிறிதொன்று இல்லை; பதமே முத்தியாதலின் அதனை அளிக்குமாறு வேண்டுகின்றார்.

குமரகுருபர சுவாமிகள் 'பண்டார மும்மணிக்கோவை'யில் தம் ஞானாசிரியரிடம் வேண்டும் வரமும் இங்கே மனங்கொளத்தக்கதாகும். இந்திரன், பிரமன், திருமால் என்பார் பதவிகளிலே சுவாமிகளுக்குச் சிறிதும் விருப்பம் இல்லை. அவை 'வாரா வல்வினை வருவிப்பன' என்பது அவரது அழுத்தமான கருத்து. பின் அவர் எதனை விரும்புகின்றார்?

'ஈண்டுஉனைத் தமியனேன் வேண்டுவது யாதெனின்...
..... ..... .,.... ..... இங்குஒரு
சனனம்யான் வேண்டுவது இனிதுஅருள் எனக்கே .....
..... ..... ..... தெருக்கடை எறிந்த
பரிகல மாந்திஇப் பவக்கடல் உழக்கும்
வரனுடை ஞமலி யாகிநின்
அருளையும் அயராது அவதரிப் பதுவே.' (569)

'கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு' என்னும் திருவாசகக் கருத்து இங்கே ஒப்புநோக்கற்கு உரியதாகும்.

'பண்டார மும்மணிக்கோவை'யில் வரும் பிறிதொரு பாடலில் பேரின்பவுணர்ச்சியைச் சிற்றின்பம் போலத் தோன்றும் வண்ணம் சொற்றொடர் அமைத்துச் செல்லும் சுவாமிகள், முடிவில் தமது ஞானாசிரியரிடம் வேண்டுவது வருமாறு:

'பரமா னந்தப் பரவையுள் படிந்து
பேரா இயற்கை பெற்றுஇனித இருப்ப
ஆரா இன்பம் அளித்துஅருள் எமக்கே.' (572)

என்ஞான்றும் ஒரு நிலையம் இயல்பு பெற்ற வீட்டினைப் 'பேரா இயற்கை' என்றும், அதில் கிடைக்கும் தெவிட்டாத ஆனந்தத்தை 'ஆரா இன்பம்' என்றும் சுட்டுகின்றார் சுவாமிகள்.

இங்ஙனம் சுவாமிகள் கேட்கும் வரங்கள் யாவும் அவரது உயரிய, விழுமிய உள்ளப் பாங்கினைப் புலப்படுத்தி நிற்கின்றன எனலாம்.

### 4. கலைமகள்பால் பேரன்பு பூண்ட பெருங்கவிஞர்

குமரகுருபர சுவாமிகள் முருகக் கடவுளுக்கு உரிய திருநாமங்களுள் ஒன்றான 'குமரகுருபரன்' என்பதைத் தம் பெயராகப் பூண்டவர்; முருகப் பெருமானையே தம் வழிபடு கடவுளாகக் கொண்டவர்; இன்னும் ஒரு படி மேலே சென்று, 'என் உயிர்க்கு ஒக்கும் இளஞ்சேய்' (326) என்று முருகப் பிரானைச் சுட்டியவர். முருகனுக்கு இணையாகச் சுவாமிகள் பேரன்பு பூண்ட பிறிதொரு தெய்வம் கலைமகள். இளமையில் முருகக் கடவுளின் அருளால் பேசும் திறம் பெற்ற சுவாமிகள், முதுமையில் துறவு பூண்ட நிலையில் இந்துஸ்தானி மொழியை விரைவில் அறிந்து கொள்ளும் நோக்குடன் கலைமகளின் அருளை வேண்டிப் பாடினார். 'சகலகலாவல்லி மாலை' எனப் பத்துப் பாடல்களாலும்,

இரண்டு பிள்ளைத்தமிழ்களிலும் உள்ள இரண்டு பாடல்களாலும் அப்பிராட்டியை நாவாரப் போற்றிப் பாடிய சுவாமிகள், தம் பிரபந்தங்களில் வேறு சில இடங்களில் சார்த்து வகையானும் கலைமகளின் பெருமையைப் புலப்படுத்தியுள்ளார்.

''தெள்ளித் தெளிக்கும் தமிழ்க் கடலின் அன்பின் ஐந், திணைஎன எடுத்த இறைநூல், தெள்ளமுது கூட்டுணும் ஓர் வெள்ளோதிமம் (வெள்ளையன்னம்)'' (10) என்றும், ''மதுரம் ஒழுகும், கொழிதமிழ்ப் பனுவல் துறைப் படியும் மடநடைக், கூந்தல்அம் பிடி (பெண்யானை)'' (55) என்றும் 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழி'ல் இரண்டு இடங்களில் சுவாமிகள், கலைமகள் தமிழின்பால் தனியுரிமை பூண்டிருத்தலைச் சிறப்பித்துக் கூறுகின்றார். அதேநேரத்தில், 'துறைத் தமிழொடும் தொன்மறை தெளிக்கும் கலைக்கொடி' (88), 'முதுபாடல் எழுதா மறையோடும் இசைமுத் தமிழ்பாடும் இளமான்', 'வடநூற் கடலும் தேக்கும் செழுந்தமிழ்ச் செல்வமும் காப்பவள்' (703) என்றாற் போல் இரு மொழிக்கும் உரிமையுடையவளாகக் கலைமகள் விளங்குவதைச் சுட்டிக்காட்டவும் சுவாமிகள் தவறவில்லை. மேலும், 'புலவோர் கவிமழை சிந்தக் கண்ட களிக்கும் கலாப மயில்' (702) என்றும், 'அன்பர் கண்ணும் கருத்தும் நிறைந்து' (705) இலங்குபவள் என்றும், 'ஒருகாலமும் சிதையாமை நல்கும் கல்விப் பெருஞ்செல்வப் பேறு' (707) என்றும், 'ஞானத்தின் தோற்றம் என்ன நிற்கின்றவள்' (708) என்றும் 'சகலகலாவல்லி மாலை'யில் பொதுநிலையில் கல்விக்குத் தெய்வமாகக் கலைமகள் விளங்குவதைச் சுவாமிகள் எடுத்துரைக்கின்றார்.

'மீனாட்சியம்மை பிள்ளைத்தமி'ழில் ஊசற் பருவத்தில் இடம்பெறும் பாடல் ஒன்றில், ''புண்டரிக, வீட்டில் பொலிந்து மதுரச், சொற்பொலி பழம்பாடல் சொல்லுகின்றவளுநின் சொரூபம்'' (95) என்று அம்பிகையை நோக்கிக் கூறுவதன் மூலம் கலைமகளை அம்பிகையின் ஒரு கூறாகவே சுவாமிகள் கருதுவதை அறிய முடிகின்றது.

''நளினப் பொகுட்டு எமது, நன்னெஞ்செனக் குடிபுகும் ஞானப் பிராட்டி'' (357) என்பதில் தம் நெஞ்சிலும், ''என், நாவில் உறைந்த வெள்ளை, வள்ளக் கமலத்தவள்...'' (597) என்பதில் தம் நாவிலும் கலைமகள் குடிகொண்டமையைப் புலப்படுத்துகின்றார் சுவாமிகள். இவற்றால் இவர் கலைமகளின் திருவருளையும் அதன்

பயனாய் நாவன்மையையும் ஒருங்கே பெற்றவர் என்பதை அறியலாம். உ.வே. சா. குறிப்பிடுவதைப் போல்,

''இல்லையெனிற் பரம சைவராகிய இவர்,
'விண்கண்ட தெய்வம்பல் கோடிஉண்
டேனும் விளம்பில்உன் போல்
கண்கண்ட தெய்வம் உளதோ
சகல கலாவல்லியே' (709)

என்பதற்கு நியாயமில்லையன்றோ?'' (ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, 'ஆராய்ச்சி', ப. CXX )

## 5. திருத்தொண்டர்கள்பால் பெருமதிப்புக் கொண்ட தெய்வக் கவிஞர்

குமரகுருபர சுவாமிகள் திருத்தொண்டர் கூட்டத்தின்பால் பெருமதிப்பும் பேரன்பும் கொண்டவராக விளங்குகின்றார்; தொன்றுதொட்டு இறைவனிடம் அடிமைத்திறம் பூண்டு வாழும் அவர்களைப் 'பழைய அடியார்' (1) என்னும் பெயரால் 'கந்தர் கலி வெண்பா'வில் சுட்டுகின்றார்; ஏழு பிறப்பும் தொடர்ந்து வரும் அவர்களது அன்பினை 'உழுவலன்பு' (45, 76) என இரண்டு இடங்களில் போற்றுகின்றார்; அவர்களுடைய திருவுள்ளத்தை,

'சிவ மணங் கமழ விண்ட தொண்டர்
மானதத் தடமலர்ப் பொற்கோயில்' (55)

என்று 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழி'ல் பாராட்டுகின்றார்; 'அடித் தொழும்பர் சார்பு பெற்று உய்ந்ததாகத்' (324) 'திருவாரூர் நான்மணிமாலை'யில் இறைவனிடம் மொழிகின்றார்; 'இனம் ஒக்கும் தொண்டரொடு என்னையும் ஆட்கொண்ட ஈசர்' (462) என்று 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் கூறுகின்றார்; 'மெய் விரிக்கும் தொண்டர்' (363) என்றும், 'சலியாது முயன்ற தவப்பெருந் தொண்டர்' (454) என்றும், 'விண்மிசை உலகும் வேண்டார்' (530) என்றும், 'யம தண்டனைக்கு ஆளாகார்' (333) என்றும் தொண்டர்களைப் பலவாறு புகழ்கின்றார்.

முத்தாய்ப்பாக,

'எம்ம னோரையும் இடித்துவரை நிறுத்திச்
செம்மைசெய்து அருளத் திருவுருக் கொண்ட
நற்றவத் தொண்டர் கூட்டம்
பெற்றவர்க்கு உண்டோ பெறத்தகா தனவே?' (460)

எனச் 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் வினவுகின்றார் சுவாமிகள்.

சுவாமிகள் இங்ஙனம் தொண்டர்களைப் போற்றுவதோடு நில்லாமல், அவர்களது உறவைப் பெரிதும் விரும்புகிறார். மதுரேசர்பால் அவருடைய ''சிற்றடியர்க்கே குற்றேவல் தலைக்கொண்டு, அம்மா கிடைத்தவா என்று செம்மாப்பு உறூஉம் திறம்'' (105) வேண்டி நிற்கின்றார். அடியவர்க்குக் குற்றேவல் செய்து நிற்பதைத் தலையாய பணியாகவும், எண்ணி எண்ணி இறுமாப்பு கொள்ளத்தக்க பெறலரும் பேறாகவும் கருதுகின்றார் சுவாமிகள்.

'சிதம்பர மும்மணிக்கோவை'யில் நடராசப் பெருமானிடம் வரம் கேட்கும் போதும் சுவாமிகள்,

'ஒழுக்கம் நிறைந்த விழுப்பெருங் கேள்வி
மெய்த்தவர் குழாத்தொடும் வைக' (457)

உதவிட வேண்டும் என்றும், இத்திறம் உடல் நீங்களவும் - இறக்கும் வரையிலும் - தமக்கு வேண்டும் என்றும் கூறுகின்றார்.

'பண்டார மும்மணிக்கோவை'யில் தம் ஞானாசிரியரிடம் 'யான் வேண்டுவது இனிது அருள் எனக்கு' என்று கேட்கும் போதும் சுவாமிகள், ''நின், பொன்னடித் துணைசேர் நின்னடித் தொண்டர், திருவமுது ஆர்ந்து'' (569) வாழ விரும்புவதாகவே குறிப்பிடுகின்றார். திருத்தொண்டர்கள்பால் சுவாமிகள் வைத்திருக்கும் இமாலயப் பற்றினை இதனால் நன்கு உணரலாம்.

### 6. உண்மையறிவு பெற்ற நற்றவ முதல்வர்

குமரகுருபர சுவாமிகள் இளமையிலேயே துறவு பூண்டவர்; தம் வாழ்நாள் முழுவதும் தூய தவ வாழ்க்கையையே மேற்கொண்டிருந்தவர். துறவும் தவமும் குறித்து அவர்தம் பாடல்களில் ஆங்காங்கே அரும்பெருங் கருத்துக்கள் காணப்படுவது இயல்பினும் இயல்பே ஆகும். ஆயின், இல்லற வாழ்வின் இன்றியமையாத தருணங்கள் பற்றியும் சுவாமிகள் தம் பாடல்களில் நுட்பமாகப் பதிவு செய்திருப்பது உண்மையில் வியப்பினும் வியப்பே ஆகும். நுண்ணிய நூலறிவோடு உண்மை அறிவும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற ஒருவராலேயே இது சாத்தியம் ஆகும். 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் ஒரே பாடலில் (451) இல்லறம், துறவறம் என்னும் இரண்டன் இலக்கணங்களையும் சுவாமிகள் சுருக்கமாகவும் செறிவாகவும் உரைத்திருப்பது இவ்வகையில் மனங்கொளத்தக்கதாகும்.

ஊனினை உருக்கி, உள்ளொளி பெருக்கி வாழும் தவ வாழ்விலும், ஒட்டுப் பற்றற்று உலக வாழ்வை விட்டுத் துறந்து

நிற்கும் துறவு நெறியிலும் தோய்ந்த அனுபவம் மிக்கவர் குமரகுருபரர் என்பதற்குக் 'காசிக் கலம்பக'ப் பாடல் ஒன்று கட்டியம் கூறுவதாகும். அப்பாடலில் காசிப் பிரான் எத்தகையவன் என்பதற்குச் சுவாமிகள் தரும் விடை இதோ:

" தான்என் றவர்முன் ஒளித்து ஓடித்
தன்னை இழந்தவர் முன்
யான்என்று சென்றிடும் காசிப்
பிரான் ...'' (682)

காசிப் பிரான் 'தான்' என்ற அகங்காரத்தை உடையவர்களுக்கு முன் நில்லாமல் ஓடி ஒளிவான்; 'யான்', 'எனது' என்னும் செருக்கு அறுத்தவரை நோக்கித் தானே சென்று முன்னிற்பான்.

இக்கருத்தினை இரத்தினச் சுருக்கமாகக் 'கந்தர் கலிவெண்பா'விலும் ''யான்எனது என்று அற்ற இடமே திருவடியா'' (1) என எடுத்துரைக்கின்றார் சுவாமிகள்.

இனி, இல்லற வாழ்வு குறித்துச் சுவாமிகள் தம் பிரபந்தங்களில் ஆங்காங்கே தீட்டியிருக்கும் சில அழகிய சொல்லோவியங்களைக் காண்போம். குறிப்பாக, சிறுகுழந்தைகளின் செயற்பாடுகளைச் சுவாமிகள் தம் இரண்டு பிள்ளைத் தமிழ்களிலும் ஒன்று விடாமல் அழகுறப் பதிவு செய்துள்ளார்.

இதேபோல் ஒரு தாய் தன் ''மழலைவாய் முத்து உண்டும், உச்சி மோந்தும், திருமடித் தலத்தினில் இருத்திப் பாராட்டியும், இப்பாலரொடும் விளையாடப் பணித்தும்'' (449) களிப்படைவதைச் சுவாமிகள் 'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழி'ல் வரும் பிறிதொரு பாடலில் நயமாகப் பதிவு செய்துள்ளார்.

குழந்தையின் குடர் மருந்தைச் சீரணிக்கும் சக்தியற்றது என்று தான் உண்டு அதன் பயனைப் பாலின் வழியே அக்குழந்தை பெறும்படி செய்யும் தாயைப் போல, அம்பிகை நடராச மூர்த்தியின் திருநடனத்தைத் தான் தரிசித்து அதன் பயனை உயிர்கள் நுகர வைப்பவள் எனச் 'சிதம்பர மும்மணிக்கோவை'யில் இல்லறம் சார்ந்த நுண்ணிய கருத்து ஒன்றினைக் கையாண்டுள்ளார் சுவாமிகள்.

'பாலுண் குழவி பசுங்குடர் பொறாதுஎன
நோயுண் மருந்து தாய்உண் டாங்கு...' (451)

என்பது அப்பாடலில் இடம்பெறும் ஓர் நுட்பமான உவமை ஆகும்.

இன்னாருக்கு இன்னார் தெய்வம் என்பதை எடுத்துரைக்கும் 'நீதிநெறி விளக்க'ப் பாடலில் சுவாமிகள், கற்புடைய பெண்ணுக்கு அவளுக்கு வாய்த்த கணவனே கண்கண்ட தெய்வம் என்றும், புதல்வர்க்குத் தந்தையும் தாயுமே முன்னறி தெய்வம் என்றும் குறிப்பிடுகின்றார்.

'குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும்' (232)

என்பது அப்பாடற் பகுதி ஆகும்.

பிறிதொரு பாடலில் சுவாமிகள் நன்மக்கட் பேற்றின் சிறப்பை நயமாக உணர்த்துகின்றார். ஒரு பெண்ணுக்கு அவளது நற்குண நற்செய்கைகளே அணிகள். கற்பாகிய ஆடையை உடுத்தி, அன்பாகிய மலரைச் சூடி, நாணமாகிய சந்தனத்தை மெய்யின்கண் பூசித் திகழ்வாள் அவள். இல்லற வாழ்வின் இனிய பயனாய் மக்கட் பேறு என்னும் செல்வமும் வாய்த்தது என்றால், அவளது கணவனுக்குச் செய்யத்தக்க தவம் வேறு இல்லை என்றே கூறலாம். இக்கருத்தினைத் தாங்கி நிற்கும் சுவையான பாடல் வருமாறு:

'கற்புடுத்து அன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு - மக்கட்பேறு
என்பதோர் ஆக்கமும் உண்டாயின் இல்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு.' (286)

மிக்க வறுமையுற்ற நிலையில் ஒரு குடிசையில் சிறுகுழந்தைகள் பசியால் அலறித் துடிக்கக் கவலை மிகுதியில் தன் கன்னத்தை உள்ளங்கையால் தாங்கி நிற்கும் பிறிதொரு குடும்பத் தலைவியைச் சுவாமிகள் 'காசிக் கலம்பக'ப் பாடல் ஒன்றில் நம் மனக்கண் முன்னே கொண்டு வந்து நிறுத்துகின்றார்:

'சிறுசிறார் அலறப் பெருமனைக் கிழத்தி
குடங்கையில் தாங்கிய கொடிற்றினள்...' (656)

தம் மனைவி திருமகளைக் காட்டிலும் அழகில் மிக்கவள் ஆயினும், விலங்குகளைப் போல் பிறன்மனையை நயந்து பீடழிந்து நிற்பவரைக் கடுமையாகச் சாடவும் சுவாமிகள் தவறவில்லை.

'திருவினும் நல்லாள் மனைக்கிழத்தி யேனும்
பிறன்மனைக்கே பீடழிந்து நிற்பர்' (285)

என்பது 'நீதிநெறி விளக்க'த்தில் இடம்பெறும் ஒரு பாடற் பகுதி ஆகும்.

இங்ஙனம் தம் உண்மையறிவு பளிச்சிடும் வண்ணம் சுவாமிகள் படைத்துள்ள இடங்கள் பலவாகும்.

## 7. பைந்தமிழ் நவின்ற செந்நாப் புலவர்

'பிரபந்தம்' என்னும் வட சொல்லுக்கு 'நன்கு கட்டப்பெற்றது' என்ற பொருளைக் கூறுவர் அறிஞர். இக்கருத்திற்கு ஏற்ப, குமரகுருபர சுவாமிகளின் பிரபந்தங்கள் யாவும் நல்ல கட்டமைப்பும் கவிதை நலமும் உடையனவாய் விளங்குகின்றன. அவை ஒவ்வொன்றும் அதனதன் அளவில் தனித்தன்மை பெற்றனவாகவும், அந்தந்தப் பிரபந்த இலக்கணத்திற்குப் பொருந்தி வருவனவாகவும் திகழ்கின்றன.

சுவாமிகளின் முதல் படைப்பான 'கந்தர் கலிவெண்பா' சாத்திர மணம், தோத்திர மணம், வரலாற்று மணம் ஆகிய மும்மணங்களும் ஒருங்கே கமழும் வழிபாட்டு நூல்.

சுவாமிகள் படைத்துள்ள பிள்ளைத்தமிழ்கள் இரண்டு. ஒன்று, 'மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்'; இன்னொன்று, 'முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்'. பெண்பால் பிள்ளைத்தமிழ், ஆண்பால் பிள்ளைத்தமிழ் என்னும் இரு வகையிலும் நூல்கள் படைத்திட்ட சிறப்பு சுவாமிகளுக்கு உண்டு.

கலம்பக வகையைச் சார்ந்தனவாகச் சுவாமிகள் இயற்றிய பிரபந்தங்கள் இரண்டு. ஒன்று, 'மதுரைக் கலம்பகம்'. மற்றொன்று, 'காசிக் கலம்பகம்'. முன்னது, தென்திசையில் அமைந்த ஊரின் பெயரால் அமைந்தது; பின்னது, வடதிசையில் இருக்கும் ஊரின் பெயரால் எழுந்தது. இவ்வகையில் தெற்கையும் வடக்கையும் இணைத்த பெருமை குமரகுருபர சுவாமிகளுக்கு உண்டு. கலம்பக இலக்கணம் இவ்விரு பிரபந்தங்களிலும் சுவாமிகளால் செம்மையாகப் பின்பற்றப்பட்டிருப்பது கூடுதல் சிறப்பு ஆகும்.

குறுகத் தறித்த குறளின் சுவையான பெருக்கமாய் அமைந்தது சுவாமிகளின் 'நீதிநெறி விளக்கம்'. இந்நூலைக் கசடறக் கற்று, கற்றதன்படி நிற்போர் மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வர். இவர்கள் எண்ணும் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை என்பது ஒருதலை. இன்னொரு சிறப்பும் இந்நூலுக்கு உண்டு. சுவாமிகளின் நூல்களுக்குள்ளே 'நீதிநெறி விளக்கம் ஒன்றே சமயஞ் சாராத நூலாகும்'(கு.வெ. பாலசுப்பிரமணியன், ஆய்வுக் களங்கள், ப. 77)

திருவாரூரில் எழுந்தருளி யிருக்கும் தியாகேசப் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு சுவாமிகள் புனைந்துள்ள

பிரபந்தம் 'திருவாரூர் நான்மணிமாலை'. இந்நூல் அழகிய அகத்துறைப் பாடல்கள் பல விரவி வரும் அருமையான படைப்பு ஆகும்.

தமது ஞானாசிரியரான மாசிலாமணி தேசிகரின் கட்டளையை ஏற்றுச் சிதம்பரம் சென்ற சுவாமிகள், அங்கே படைத்திட்ட இரு பிரபந்தங்கள் 'சிதம்பர மும்மணிக்கோவை'யும் 'சிதம்பரச் செய்யுட்கோவை'யும் ஆகும். முன்னது, நடராசப் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டது; பின்னது, சுவாமிகளின் யாப்பிலக்கணப் புலமையைப் பறைசாற்றுவது. 'சிதம்பரச் செய்யுட்கோவை'யில் ஒவ்வொரு பாடலுக்கும் உரிய யாப்பிலக்கணக் குறிப்புக்கள் சுவாமிகளாலேயே எழுதி அமைக்கப்பெற்றுள்ளன. ''இலக்கணத்தை இலக்கியமாக்கி வழங்கிய பெருமை குமரகுருபர முனிவரைச் சாரும்'' என்பர் அறிஞர் சி.சு. மணி (குமரகுருபர முனிவர் உணர்த்தும் சைவ சித்தாந்தம், ப. 8).

சுவாமிகளின் குரு பக்தியைத் தெற்றெனப் புலப்படுத்தும் பிரபந்தம் 'பண்டார மும்மணிக்கோவை'. சைவ சித்தாந்தத்தில் சுவாமிகளுக்கு இருந்த பயிற்சியையும் புலமையையும் உலகிற்குக் காட்டும் உயரிய படைப்பு இது.

பத்தே பாடல்களில் அமைந்த 'சகலகலாவல்லி மாலை' சுவாமிகளின் முத்தாய்ப்பான படைப்பு. கலைமகள்பால் சுவாமிகள் கொண்டிருக்கும் 'மலையினும் மாணப் பெரிய' அன்பினைப் புலப்படுத்தும் அற்புதப் பனுவல் இது.

'அவனரு ளாலே அவன்தாள் வணங்கி' என்பது போல், சுவாமிகளின் வாக்கினைக் கொண்டே நாமும் அவரைக் குறித்து இப்படி இரத்தினச் சுருக்கமாகச் சொல்லலாம்.

'ஐயநின் தன்மை அளப்பரிது எமக்கே.' (336)



## சான்றோர்களைப் பற்றி எழுதிய அறிஞர்கள்

**1**
திருஞான சம்பந்தர் *(மரபின் மைந்தன் முத்தையா)*
திருநாவுக்கரசர் *(பேராசிரியர் இராம.இருசுப்பிள்ளை)*
சுந்தரர் *(புலவர்மணியன்)*

**2**
மாணிக்கவாசகர் *(முனைவர் தெ.ஞானசுந்தரம்)*
காரைக்கால் அம்மையார் *(முனைவர் தரணி பாஸ்கர்)*
சேக்கிழார் *(முனைவர் செல்வக்கணபதி)*

**3**
ஆண்டாள் *(முனைவர் நிர்மலா மோகன்)*
குலசேகர ஆழ்வார் *(முனைவர் கா.அரங்கசாமி)*
திருமங்கையாழ்வார் *(முனைவர் அமுதன்)*

**4**
பெரியாழ்வார் *(முனைவர் தரணி பாஸ்கர்)*
நம்மாழ்வார் *(முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்)*
வேதாந்ததேசிகர் *(முனைவர் பிரேமா நந்தகுமார்)*

**5**
ஸ்ரீமத்வர் *(டாக்டர் சுதா சேஷையன்)*
ஸ்ரீராமானுசர் *(முனைவர் ம.பெ. சீனிவாசன்)*
வள்ளலார் *(முனைவர் ம.ரா.போ.குருசாமி)*

**6**
திருமூலர் *(முனைவர் அ.அறிவொளி)*
மெய்கண்டார் *(முனைவர் ந.இரா.சென்னியப்பன்)*
தாயுமானவர் *(முனைவர் இ.சுந்தரமூர்த்தி)*

**7**
வீரமாமுனிவர் *(முனைவர் ம.செ.இரபிசிங்)*
குணங்குடி மஸ்தான் *(முனைவர் தக்கலை பஷீர்)*
மகாகவி பாரதியார் *(முனைவர் சிற்பி பாலசுப்பிரமணியம்)*

**8**
சாந்தலிங்க சுவாமிகள்
*(தவத்திரு.சாந்தலிங்க இராமசாமி அடிகளார்)*
கந்தசாமி சுவாமிகள் *(புலவர் ப.வெ.நாகராசன்)*
சுவாமி சித்பவானந்தர் *(வழக்கறிஞர் மு.மாரியப்பன்)*

**9**
சிவப்பிரகாசர் *(முனைவர் ம.மனோன்மணி)*
சிவஞான முனிவர் *(முனைவர் வே.செல்லாத்தாள்)*
வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்
*(முனைவர் நெல்லை ந.சொக்கலிங்கம்)*

**10**
ஆதிசங்கரர் *(எஸ்.வைத்தியநாத கிருஷ்ணன்)*
அருணகிரியார் *(முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன்)*
குமரகுருபரர் *(முனைவர் இரா.மோகன்)*